223

இம்மண்ணில் தோன்றிய

# ஸீதைக்கே

அர்ப்பணம்



கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
KAMBAN ADIPPODI SAW GANESAN

கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
KAMBAN ADIPPODI SAW. GANESAN

# பொருளடக்கம்

கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
KAMBAN ADIPPODI SAW. GANESAN

# முன்னுரை

வால்மீகி முனிவர் ராமாயணம் இயற்றியது முதல் இன்று வரை ராமன் கதையைப் பலர் சொல்லியிருக்கின்றனர்; பல நூல்களும் வெளிவந்துள்ளன. பலமுறை கேட்டுக்கேட்டு நம் எல்லோருக்கும் கதை தெரியும்.

நாளடைவில் ராமாயணம் ஒரு புனித நூல் ஆகிவிட்டது. எனினும் மக்கள் மனதில் ராமாயணம் வேரூன்றி நிற்பதற்குக் காரணம் அது தரும் இலக்கிய இன்பமே. கதையும் மனித இயல்பை ஒட்டியே அமைந்திருக்கிறது. ராமன் கதை 'அம்ருத ஸாகரம்' எனத் திகழ்வதும் இதனுலேதான்.

சொல்நயம், ஆழ்ந்த கருத்து, அழகிய நடை, எல்லாம் சேர்ந்து பழங்கவிதையை அழியா இலக்கியமாக ஆக்கிவிட்டன. அதனுலே இந் நூலுக்கு காவ்யம் என்று பெயர். அந்தக் காவ்யத்தை ரசிப்பதே இப் புத்தகத்தின் நோக்கம் என்பது 'காவ்ய ராமாயணம்' என்ற தலைப் பில் தெரியும்.

ராமன் கதையையும் இலக்கியச் சுவையையும் பருகிப் பருகி அனுபவித்த மாபெரும் தமிழர் கம்பன். அனுபவித்ததோடல்லாமல் தமிழிலே ஆக்கிவிட்டார். ஆனுல் அவர் சொல்லும் ராம கதை தனிச் சுவை கொண்டது. வடமொழியில் வால்மீகி ஆதிகவி யென்ற கௌரவம் பெற்றவர். தமிழிலோ கம்பனுக்கு முன் பல கவிகள் தோன்றியிருக்கிறுர்கள். ராமன் பெருமையைப் பாடியவர்கள் ஆழ் வார்கள். ஆதலால் மிகுந்த அடக்கத்துடன் பணியைத் தொடங்கு கிறுர். 'மூங்கையான் பேசலுற்றேன்' என்கிறுர். 'நான் பாடுவதே வால்மீகி இயற்றிய தெய்வீகக் கவிதையின் மாட்சிமை தெரியச் செய்வதற்காக' என்கிறுர்.

**பொய்மையில் கேள்விப் புலமையினேர் புகல்**
**தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே**

ஆனுல் போகப் போகத் தெரிகிறது கம்பன் பெருமை. கருத் திலும் சொல்லிலும் சிறப்பு வாய்ந்த கவிதை எளிதிலே விளங்கு

கிறது. ஆழ்ந்த பக்தியோடு பாடுகிறார்; ஆனால் உணர்ச்சி கவிதையின் வேகத்தைத் தடைப்படுத்தாமல் பாத்திரங்களைப் பேச வைக்கிறார். அவரே 'சொல்லின் செல்வன்.'

வடமொழியில் சிறந்த வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு பல பதிப்புகளில் வந்திருக்கிறது. கம்பராமாயணத்தையும் உரையோடு பிரசுரம் செய்திருக்கிறார்கள். ஆனால் இரு கவிகளையும் ஒன்றாய்ப் பாட வைத்து ரசிக்கும் வாய்ப்பு நமக்கு சாதாரணமாகக் கிடைப்பதில்லை. உபந்யாசம் செய்யும்போது சிலர் கம்பன் பாடல் கள் ஓரிரண்டைக் கையாண்டபோதிலும் புராணமே பிரதானம். கதையே முக்யம்; கவிதை அல்ல.

மொழிகள் வேறு, சொல்லும் திறன் வேறு. ஆனால் கதை ஒன்று தான், கருத்தும் ஒன்றுதான். இருமொழிகளுக்கும் உடமையாளராகிய நாம் இரண்டையும் ஒன்றாய் வைத்துப் படித்தால் என்ன? ரசனை பெருகுமே ஒழியக் குறையாது. இச்சுவையை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதே எனது அவா.

கவிதையைச் சுவைத்து மகிழ ஒரே ஒரு நிபந்தனை: இலக்கிய உணர்ச்சி ஓங்கி நிற்க வேண்டும். வாசகராகிய நம் ஒவ்வொருவருக் கும் இது இல்லாமலில்லை. ஆனால் தலையெடுக்காமல் அமுங்கிக்கிடக் கிறது. அதை அமுக்கி வைக்கும் எதுவானாலும் இலக்கிய ரசனைக்குப் பகையானது என்றே சொல்லலாம். உதாரணமாக, ராமாயணத் தைக் கையிலெடுத்தால் ராமனே கடவுள் என்ற கருத்து தோன்றுவது இயல்பு. ஆனால் அதுவே ஓங்கி நின்றால் இலக்கியம் குலைந்துவிடக் கூடும்.

வால்மீகியே தனது நூலைக் காவ்யம் எனவே இயற்றி உலகோ ருக்குத் தந்தார். அது இன்றும் 'ஆதி காவ்யம்' எனத் திகழ்கிறது. அவர் ராமனை மனிதன் (நர:) என்கிறார். உயர்குணங்கள் ஒருங்கே கொண்ட உத்தமன், ஆயினும் மனிதன். அவரது வழியைப் பின்பற்றினால் கவிதையை நன்கு சுவைக்கலாம்.

தலைமுறை தலைமுறையாய்க் கடவுளென வணங்கி வரும் ராமனை நம்முள் ஒருவனாய்க் கருதுவது சாத்தியமா? 'முறையா?' என்றுகூடத் தோன்றலாம்.

கொள்கைகளை மாற்றிக் கொள்வது எளிதல்ல; அவசியமுமல்ல. ஆனால், கடவுள் என்பதற்கும் அவதாரம் என்பதற்கும் உள்ள வித்

தியாசத்தை உணருதல் சாத்தியமானல் போதும்; மிகுந்த பயன் உண்டு. இலக்கியத்தை ரசிக்கலாம். கதையின் போக்கையும் பாத்திரங்களின் இயல்பையும் ரசிக்க வேண்டிய நிலையில் 'கடவுள் இப்படிச் செய்திருப்பாரா? இத்தகைய சொல் இறைவனுக்குத் தகுமா?' என்றெல்லாம் மனதைக் குழப்பிக் கொள்ள வேண்டியதில்லை. கடவுளுக்கு எது அடுக்கும் எது அடுக்காது என்று நாமாகத் தீர்மானித்து அதற்குத் தக்கபடி விளக்கம் கூற வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. மண்ணுலகில் மனிதனுய் அவதரித்த விவரம் மனதிலே ஊன்றி நின்ருல், ராமனே திருமாலின் அம்சம் என்ற நம்பிக்கை இலக்கிய ரசனைக்கு இடைஞ்சலாய் நிற்காது. கடவுளுக்கும் காவ்யத்துக்கும் விரோதம் இல்லாமலே கவிகளைப் பாராட்டி ரசிக்கலாம்.

ஒரு உதாரணம். ஹனுமான் ஸீதையை அசோகவனத்தில் கண்டு ராமனைப் பற்றிச் சொல்லி மனதில் தைரியம் ஊட்டுகிருன். 'பிரிவால் தவிக்கும் நாயகன் மாமிசம் உண்பதில்லை, மது அருந்துவதில்லை. எளிய உணவையே உண்டு எப்போதும் உன் நினைவாயிருக்கிருன்' என்று சொல்லுகிருன். ஸீதையின் உள்ளம் பெருமிதம் கொள்ளுகிறது.

ஆனுல் புராண ரீதியில் உரை சொல்பவருக்கு 'ராமன் மாமிசம் சாப்பிடவாவது? மது அருந்துவது கடவுள் செய்யும் காரியமா?' என்று தோன்றுகிறது. வால்மீகியின்

ந மாம்ஸம் ராகவோ யுங்தே ந சாபி மது ஸேவதே

என்ற ச்லோகத்துக்கு வேறு ஏதோ பொருள் இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கிருர். தேடிக் கண்டு பிடிக்கிருர். 'மாம்ஸம்' என்ருல் மாம்பழத்தின் கதுப்பு; 'மது' என்ருல் தேன். 'இவ்விரண்டையும் எம் பெருமான் தவிர்க்கிருர்' என்று பொருள் கூறுகிருர்.

இதன் விளைவு என்ன? 'உடலுக்கு ஊட்டம் தரும் உணவைத் தவிர்த்து உன்னையே நினைந்து உருகினுன் உன் கணவன்' என்ற அழகிய கருத்து அடியோடு மறைந்துவிட்டது.

கம்பன் கவிதைக்கு சுற்றி வளைத்து உரை சொல்பவரும் இம் மனப்பான்மைக்கு அடிமையானவர்கள்தான். சுந்தரகாண்டத்தில் மேற்சொன்ன நிலையில் ஸீதை பதிலுக்கு சேதி சொல்லி அனுப்பும் பொழுது ஒரு பாடலில் உணர்ச்சிமிக்க ஒரு கருத்தை அமைக்கிருர் கம்பன். 'நான் இங்கே காத்திருந்து ராமன் வராமலே உயிர் துறந்தாலும், மீண்டும் பிறந்து வந்து, பிறன் என்னைத் தீண்டினுன் என்ற

பழியைத் தீர்த்துக் கொள்ள அருள வேண்டும்' என்று ராமனிடம் சொல்லச் சொல்லுகிறுள். மாளாப் பழியைத் தீர்த்து மாசுதுடைக் கத் துடிக்கிறது உள்ளம்.

**ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்**
**மீண்டு பிறந்து வந்து தன்மேனியைத்**
**தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்**
**வேண்டினுள் தொழுது என விளம்புவாய்**

இதற்கு வழங்கிவரும் விளக்கம் : 'இறந்து போனபிறகு, மறுபடி இந்த உலகில் வந்து பிறந்து ராமனது மேனியை அணையும் படியான, பாவங்களைப் போக்கும்படியான வரத்தைப் பிரார்த்தித் தாள்'

'தன் மேனியைத் தீண்டல்' என்பதுதான் தீவினை. துடிக்கிருள் மனம் கொதித்த சீதை.* 'ராமனது மேனியை' என்று விளக்கப் படுத்தினுல் விபரீதமாகப் பொருள்படும். இலக்கணமும் சிதைவுறும்.

ஆனுல் வியாக்யானம் செய்பவர்கள் ராவணன் தீண்டினுன் என்று பொருள் கொண்டால் அது ஸீதைக்கு இழுக்காகும் என்று நினைக் கிருர்கள் போலும். 'வால்மீகி சொல்லலாம், கம்பனும் கதறலாம். ஆனுல் நாம் அப்படி நினைக்கலாமா?' என்று விவாதிக்கும் 'பக்தர்' களின் அரும்பணி. வஞ்சம் தீர்த்துக் கொள்ளச் குமுறிக் கொண் டிருக்கும் நாயகி தன் நாயகனுக்குச் சேதி சொல்லியனுப்பும் வகையை ரசிக்க முடியாத பக்தி. ஆனுல், ஸீதையின் துயரம் எங்கே?, கவியின் உள்ளப் பெருக்கு எங்கே?, இலக்கியம் எங்கே?

ராமாயணத்தில் முதன்மையான அம்சம் இலக்கியம். இதைத் தயக்கமின்றி ஒப்புக் கொண்டு காவ்யத்தைப் படித்தால், பல ஒளி கள் தோன்றும். நேற்றுவரை கண்ணுக்குப் புலப்படாத நிறங் களுடன் தோன்றும். வால்மீகி கதை சொல்லும் அழகுதான் என்ன! சம்வங்களை விறுவிறுப்பாகச் சொல்வதும், முக்ய நிகழ்ச்சிகளை நாடக முறையில் கையாளுவதும், பாத்திரங்களின் பேச்சில் உட்கருத்தை வைப்பதும் அவரது நடையின் போக்கு. ராமனுக்குப் பட்டம் கட்ட

---

*இளம் வயதில் வேதவதி யென்ற ஒரு பெண்ணைக் கற்பழித்தான் ராவணன். அவள் 'இன்னெரு பிறவி யெடுத்து உன்னை அழிப்பேன்' என்று சபதம் செய்து தற்கொலை செய்து கொண்டாள். அவளே ஸீதை யென்பது வால்மீகியின் வாக்கு. அக்கருத்து கம்பனின் 'மீண்டு பிறந்து வந்து' என்ற சொற்களில் ஒலிக்கிறது.

நிச்சயித்தபின், அதைத்தானே கைகேயிக்கு சொல்லப்போவதாக நினைத்து அவளது இல்லத்துக்குச் செல்லும் தசரதனுக்கு காமம் மேலிட்டு நின்றது என்ற பீடிகையுடன் ஒரு காட்சியை ஆரம்பிக்கும் திறமைதான் என்ன! வாலியைப்பற்றி அறியாமலே அவனைக் கொல்ல வாக்களித்தபின் மறைந்து நின்று வீழ்த்தி, அவனிடம் 'நான் வசமிழந்துவிட்டேன்' என்று ராமன்வாயாரச் சொல்லும் நாடகத்தைப் படிப்படியாய் வளர்க்கும் வன்மைதான் என்ன!

கவியின் பெருமையை அவ்வப்போது காண்போம். அவர் படைத்த பாத்திரங்களின் விசேஷத்தை மட்டும் இங்கு சொல்ல வேண்டும். ஏனென்றால் அவை தனித்துவம் வாய்ந்தவை. ராமன் பல குணங்களும் ஒருங்கே பொருந்திய பெருமகன். ஆனால் தனித்து நிற்கும் பெருமகன். அரச குலத்தில் பிறந்து, முனிவரிடம் வித்தை பெற்று, தருமமே பெரிதென்ற கொள்கையை ஏற்று, தருமத்துக்கென வாழ்ந்தவன். தருமம் அவனை எங்கெல்லாம் இழுத்துச் செல்கிறது என்பதைக் காட்டுகிறார் கவி.

ராவணனும் பெருமை வாய்ந்தவன். கடுந்தவம் செய்து வரம் பெற்று அரக்கர் வேந்தனென முடிசூடியவன். தாய் அரக்கி; தந்தை தவத்தில் மிக்க அந்தணர். எனவே, பாமர இயல்பும் கற்ற பண்பும் ஒன்றாய் நின்று மாறி மாறித் தோன்றுகின்றன. அவனது பெருமைகளைத் தயக்கமின்றிப்பாடுகிறார் வால்மீகி. (இவ்விதம் பகைவனின் பெருமையைப்பாராட்டுவதே காவ்யத்துக்கழகு என்று தண்டியின் 'காவ்யாதர்சம்' என்ற நூல் கூறுகிறது). ராமனே வியந்து பாராட்டும் பொருள் ராவணனது ஒளிமிகுந்த தோற்றம், வீரம்.

ஆனால் அவனது குறை செருக்கு. தனது அழகிலும் மேன்மையிலும் அளவிலா நம்பிக்கை! அதை நம்பியே ஸீதையை வஞ்சித்துச் சிறை வைத்தபோதிலும் வலிமையால் கொள்ளாமல் காதலால் வெல்ல நினைக்கிறான். பேதையெனத் தோன்றியவள் தன்னைத் துச்சமாய்க் கருதுவது கண்டு மனம் வெம்புகிறான். வானவர் யாவரையும் வென்ற வீரன் ராமனிடம் போரில் அடைந்த தோல்வியைவிட ஸீதையிடம் காதலில் அடைந்த தோல்வியே பெரிது. யாருக்கும் வணங்காத ராவணன் அவளுக்காகவே உயிரைவிடுகிறான்.

போர் நிகழக் காரணமான ஸீதையும் தனிப்பட்டவள். பிறவியே தனி; நிலத்தில் கண்டெடுத்த பெண். களங்கமற்ற உள்ளமும் பேச்சிலே சற்று துடுக்கும் நிறைந்த மங்கை, இன்னல்கள் வர

வரக் கொஞ்சம் கொஞ்சமாய் வளர்ந்து இறுதியில் பெருந்தேவி யெனக் காட்சியளிக்கிருள். ராவணன் சிறையில் வைத்து வசப்படுத்த முயன்ருன். ஆனல் சிறையே அவளது விடுதலேக்குக் காரணம். நடுங்கி நின்ற பேதை அச்சத்திலிருந்து விடுதலே பெற்றுவிடுகிருள். அச்சம் குறையக் குறைய ஆன்மீக வலிமை ஓங்குகிறது.

கணவன் அவளே சோதனேக்குள்ளாக்கி தருமத்தை நிலேநாட்ட முற்பட்டான். உண்மையே உருவாகி, உண்மைக்கென வாழ்க்கையை அர்ப்பணம் செய்த உத்தமி கணவனிடமிருந்தே விடுதலே பெற்றுக் கொண்டு சென்றுவிடுகிருள். தருமமூர்த்தி நிமிர்ந்து அண்ணுந்து வியந்து, செயலற்று நிற்கிருன்.

ஒரு குறிப்பு. ஸீதையின் உருவத்தழகை வால்மீகி வர்ணிப் பதில்லே. ராவணன் போன்ற பிற பாத்திரங்கள் அவளழகைப் பற்றிப் பேசுகிருர்களே ஒழியக் கவி சொல்லுவதில்லே. மணப்பெண்ணுய் நிற்கும்போதுகூட குணத்தையே குறிக்கிருர். பலநிலேயிலும்தோற் றும் அவளது உள்ளத்தழகை நாம் காண வேண்டுமென்றே இம்முறை யைக் கையாளுகிருர் போலும்.

பிற்காலத்துக் கவிகள் தலேவியை அங்க அங்கமாய் வர்ணிப்ப தென்ற வழக்கத்தை ஏற்படுத்தினர். காளிதாஸன் இம்மரபில் தோன்றியவன். கம்பனும் அதையனுசரிக்கிருர். ஆனல் இத்தகைய நடைமுறையில் ஒரு எதிர்பாரத விளேவு என்னவென்ருல் எல்லாரும் ஒன்றுபோல் காட்சியளிப்பர். ஒரு தலேவிக்கும் மற்ருெரு தலேவிக்கும் வித்தியாசம் காண முடியாது. (எல்லோரும் எல்லாப் பெருமைகளும் ஒருங்கே அமைத்தவர்களாயிற்றே!). இதே போல் தலேவனும்: ஆஜானுபாகு, போரில் வீரன், குணசாலி, எல்லாம் தெரிந்தவன். காளிதாஸனது 'ரகுவம்சம்' என்ற காவ்யத்தைப் படித்தால் திலீபனுக்கும் ராமனுக்கும் வித்தியாசம் தெரியாது. இதை மனதில் கொண்டு நாம் வால்மீகியைப் படிக்கும்போது அவருக்கு ஏன் 'ஆதி கவி' என்ற பட்டம் கிடைத்தது என்று விளங்கும்.

வால்மீகியின் நடையைப் பற்றி ஒரு வார்த்தை. பண்டைய இலக்கியத்துக்குரியபடி மிகக் குறைந்த சொற்களேயே உபயோகிக் கிருர். எளிய சொற்கள் அவரது கவிதையின் முக்யலக்ஷணம். பல சொற்கள் ஒருங்கே பிணேந்து ஒரு பெருஞ் சொல்லாக நிற்பது பிற் காலத்து வடமொழி இலக்கியத்தின் சின்னம். இந்த அம்சம் அபூர்வ மாயிருப்பதால் வால்மீகியின் ச்லோகங்களே எளிதாய்ப் பதம் பிரிக்க லாம், புரிந்து கொள்ளலாம்.

இன்னொரு அம்சம் மிகைபடக் கூறாமை. எதையும் சற்று நிதானமாகவே சொல்வது வால்மீகியின் இயல்பு. சொற்களை மிதமாய் உபயோகித்து அதன் மூலமே நமது ரசனையைப் பெருக்குவது அவருக்கே உரித்தான திறமை. சில சொற்களைத் திரும்பத் திரும்ப உபயோகித்து ச்லோகத்தின் அழகைப் பன்மடங்காக்கும் உத்தி சங்கீதத்தில் ஜீவஸ்வரங்களைக் கையாளுவது போல் இருக்கும்.

இதனாலேயே வால்மீகியின் நடை காம்பீர்யம் பெற்று விளங்குகிறது. கம்பீரநடை என்றால் என்ன? ஆங்கில விமர்சகர் ஆர்னால்ட் சொன்னதுபோல், 'மாண்பும் கவிதையுணர்வும் நிறைந்த உள்ளம் சிந்தனைக்குரிய பொருளை எளிய முறையிலே, அல்லது நிதானத்தோடு கையாளும்போது கவிதையில் கம்பீரநடை பிறக்கும்'* வால்மீகியின் கவிதையில் எளிமையும் உண்டு, நிதானமும் உண்டு.

கம்பன் காலத்துக்குள் ராமன் திருமாலின் அவதாரம் என்பது மக்கள் மனதில் வேரூன்றிவிட்டது. அதற்கேற்றபடி அமைந்திருக்கிறது அவரது காவ்யம். ஆயினும் விண்ணோரின் லீலையென உருவாக்காமல் உயிர்த்துடிப்புள்ள இலக்கியமாகவே நூலை அமைத்தது கம்பன் பெருமை.

கதையில் அதிக மாறுபாடில்லை; வால்மீகியின் கதையை ஒட்டியே பாடியிருக்கிறார் கம்பன். (தினமும் இரவில் வால்மீகி ராமாயணத்தை சொல்லக் கேட்டு, மறுநாள் பகலில் அவ்வத்யாயங்களைப் பாடலாயமைத்தார் என்று ஐதிகம்.) (x) ஆயினும் சில இடங்களில் தன் கருத்துக்கும் தனது கால நிலைக்கும் தக்கபடி மாற்றத் துணிந்திருக்கிறார். பாத்திரங்களின் குண விசேஷத்தையும் சற்று மாற்றியமைக்கிறார். இதன் பயனாக இலக்கியம் மேன்மையடைகிறது. அன்பும் அரசபக்தியும் பொங்கியோடும் கும்பகர்ணன் கம்பன் படைப்புக்கு ஒரு சான்று. ஒரு பெண்ணுக்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து 'வஞ்சனேன் எனக்கு நானே' என்று தெரிந்தும் மீள வழியில்லாமல் தவித்து 'தோற்பித்தீர்' என்று வாய்விட்டுச் சொல்லி அவள் காலில் விழும் ராவணனும் நமது அனுதாபத்தைப் பறிக்கும் வீரன். அவனுக்குத் தோல்வி தந்த சீதையோ 'வாழ்வின் கற்பு' என ஓங்கி நிற்கிறாள்.

---

*The grand style arises in poetry when a noble nature, poetically gifted, treats with simplicity or with severity a serious subject :- Mathew Arnold.



(x) ஐதிகம் = உயர்ந்தோர் உரை.
இது அறியார் உரை; அல்லது சம்ஸ்கிருதம் பிராமணர்
அன்றி மற்றையோர் கற்றல் கூடாது என்ற

கம்பன் கவித்திறன் பெயர் பெற்றது. சொல்நயம் மட்டுமன்றி உணர்ச்சி ததும்பும் வகையில் சொற்களேயமைக்கும் அவரது திறமை முயற்சியினுல் அடையும் திறமையல்ல. தமிழ் மொழிக்குள்ள வேகத்தை உணர வேண்டுமானுல் நாம் கம்பனிடம் போக வேண்டும். சொற்கள் அவர் சொல்படி ஆடுகின்றன.

இரு மொழிகளில் சிறந்த காவியங்களே ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமென்ற பணியில் இறங்கும்போது அதிலெழும் பிரச்சினைகள் சிலவற்றைக் கூறவேண்டும். இரண்டும் பெரிய நூல்கள். எந்தெந்தப் பகுதிகளேப் பொறுக்கியெடுப்பது? எந்தவகையில் வடமொழி ச்லோகத்தையும் தமிழ்ப் பாடலேயும் ஒன்ருய் வைத்துப் பார்ப்பது? அப்படி இலக்கியத்தை ரசித்துக் கொண்டிருக்கும்போது கதையின் போக்கு தடைபடாமலிருக்குமா? வாசகருக்குச் சுவை குன்ருமலிருக்குமா?

வடமொழியும் தேவநாகரி எழுத்தும் அறிமுகமில்லாவிட்டாலும் அதிலுள்ள கருத்தையும் சொல்லழகையும் எல்லோரும் அனுபவிக்கலாம். சொற்களில் பல தமிழ் மொழியில் கலந்து உபயோகத்தில் உள்ளவை; ஆகவே, ச்லோகங்களேத் தமிழ் எழுத்தில் தருவதெனத் தீர்மானித்தேன். அவற்றை தேவநாகரியில் படித்து மகிழ விரும்புவோர்க்கென மூலச்லோகங்களே இறுதியில் அனுபந்தமாகச் சேர்த்திருக்கிறேன்.

ச்லோகங்களே உபயோகிக்கும்போது மிக முக்கியமான ச்லோகங்களே மட்டும் கோட்கண்டு தருவதென்ற முறையை அனுசரித்திருக்கிறேன். அதாவது, சொல் நயம், கவிதையழகு, உவமைச் சிறப்பு முதலிய இலக்கியப் பொருள் நிறைந்த ச்லோகங்கள் இப்புத்தகத்தில் இடம் பெறுகின்றன. பேச்சின் மூலம் கதாபாத்திரத்திரங்களின் உணர்ச்சியும் இயற்கையும் வெளிப்படுவதாலுல் அந்த ச்லோகங்களும் சான்ருக உதவுகின்றன. ஆகவே, ஆதிகவியின் பெருமையும், கதை சொல்லும் திறனும், நாடக இயலோடு சம்பாஷணே அமைக்கும் வகையும் புலப்படுவதற்குப் போதிய அளவு ச்லோகங்களேக் காணலாம்.

ஆனுல் ச்லோகங்களேயும் பாடல்களேயும் பொறுக்கியெடுத்து எழுதும்போது ‘எது மூலம், எது இடைச்செருகல்?’ என்ற கேள்வி அடிக்கடி மனதில் எழும். இருமொழிகளிலும் கவிகளின் பின்னேர் பல பகுதிகளேச் செருகியிருக்கிருர்கள்.

(இது நம் நாட்டுக்கே உரித்தான பழக்கம். யாருக்காவது ஏதாவது சொல்ல வேண்டுமானுல் தனது கருத்தை ஒரு பழங்கதை யிலோ நூலிலோ புகுத்திவிட வேண்டியது. பின்னர் 'ராமாயணத் திலேயே இருக்கிறது,' 'கீதையிலேயே சொல்லியிருக்கிற பிரகாரம்... என்று அடித்துப் பேச அத்தாட்சி கிடைக்குமல்லவா?)

பிறர் எழுதியதைத் தனதாகக் காட்டுவது சகஜம். அதற்கு நேர் மாருக, தன் எழுத்தைப் புகழ் பெற்ற ஒருவரின் நூலில் சேர்த்து விடும் பழக்கத்தின் விளைவு இன்று நாம் அடையும் குழப்பம். சுமார் இரண்டாயிரம் வருடங்களுக்குமுன் எழுத்தில் தோன்றிய வால்மீகி ராமாயணத்தில் எது மூலம்? தென்னிந்தியாவில் வழங்கிவரும் கும்ப கோணப் பிரதி பெருமளவில் சுத்தமானது. ஆனுல் அதிலும் இடைச் செருகல் இருக்கிறது. இதுபோல் நாடெங்கும் நூற்றுக்கணக்கான பிரதிகள் வழங்கி வருகின்றன. ஒன்றுபோல் இல்லை மற்ருென்று. எது வால்மீகி ராமாயணம்?

உலகெங்கும் புகழ் பெற்ற காவ்யம் ராமாயணம். அதன் உண்மை உருவென்ன என்று தெரியாமல் இருப்பதா? இதை ஆராய்ந்து செருகல்களை நீக்கி, மூலத்தைக் கண்டு தரும் பணியை பரோடா சர்வகலாசாலை ஏற்றுக் கொண்டிருக்கிறது. சுமார் 19 வருடங்களாக ஆராய்ச்சி செய்து, பத்து லிபிகளில் உள்ள ஏட்டுப் பிரதிகளை ஒப்பிட் டுப் பார்த்து வால்மீகியின் மூல ச்லோகங்களை Oriental Institute வெளியிட்டு வருகிறது. (உத்தரகாண்டம் இன்னும் வெளிவரவில்லை.) பதினெுன்ரும் நூற்ருண்டில் தொகுக்கப்பட்ட கையெழுத்துச் சுவடி ஒன்று எல்லாவற்றிலும் மிகப் புராதனமானது.* அது முதல் 19ம் நூற்ருண்டில் எழுதிய சுவடிகள் வரை நாட்டிலுள்ள எல்லாவற் றையும் திரட்டிப் பரிசீலனை செய்து பிரசுரம் செய்யப்பட்ட ஆதார பூர்வமான பிரதி (Critical edition) இது ஒன்றுதான். ஆகவே, முதலில் கும்பகோணப் பிரதியை வைத்துக்கொண்டு எழுதிய காவ்ய ராமாயணத்தை இந்த ஆதார பூர்வமான பிரதியைக் கொண்டு சோதித்துச் சீர்படுத்தியிருக்கிறேன்.

கம்பராமாயணம் இயற்றி சுமார் ஆயிரம் ஆண்டுகள் ஆகின் றன. வால்மீகியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இது சமீப கால இலக் கியம். ஆயினும் இதில்கூடப் பல செருகல்கள். வெள்ளியம்பலத் தம்பிரான், வாணிதாசன் என்ற இருவர் இத்தகைய பல செருகு

* இன்று இது நேபாளத்தில் பொருட்காட்சிசாலையில் இருக்கிறது.

கவிகளுக்குப் பொறுப்பாளிகள் என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆனுல் எது உண்மை, எது போலி?

கம்பன் பெயரால் வழங்கிவரும் பாடல்கள் அனேத்தையும் தொகுத்துப் பிரசுரம் செய்திருக்கிருர் வை. மு. கோபாலகிருஷ்ணமா சாரியார். ஆனுல் டி. கே. சியோ பாடல்களேயெல்லாம் ''சுண்டிப் பார்த்து,' 1510 மட்டும் கம்பனுக்குரியவை என்கிருர். மீதி அனேத் துமா இடைச் செருகல்?

'தமிழ் வளருகிறது' என்று சொல்லும் இந்நாளில் கம்ப ராமாயணத்துக் கொரு ஆதாரமான பிரதி கிடைக்காத நிலேயில் இருக்கிறேம். தமிழ்நாட்டிலுள்ள ஏட்டுச் சுவடிகளேத் தேடியெடுத்து ஆராய்ந்து ஒரு கம்ப ராமாயணம் தொகுப்பது கடினமல்ல. ஊக்கம் வேண்டும். கம்பன் கவிதையில் பெருமிதம் கொள்ள வேண்டும். அது வரை? கோபாலகிருஷ்ணமாச்சாரியார் பதிப்பித்த நூலே மூலமெனக் கொண்டு அதிலிருந்து பாடல்களேப் பொறுக்கியெடுப்பதே உசிதம் என முடிவு செய்தேன்.

இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள ச்லோகங்களும் பாடல் களும் கவிகளின் பெருமையையும் இலக்கியத்தின் சிறப்பையும் எடுத் துக் காட்டப் போதிய அளவு பயன்படுமென நம்புகிறேன். கதை யைப் பொறுத்தமட்டில் ச்லோகங்களேச் சான்று காட்டாதநிலேயி லும் வால்மீகியை ஒட்டியே எழுதியிருக்கிறேன். வடமொழியில் பரிச் சயம் உள்ளவர்கள் மொழி பெயர்ப்பை ஆங்காங்கு எளிதில் காண லாம். மற்றபடி, கவிகளின் கருத்தையும் நடையையும் எடுத்துக் காட் டுகிறனே இல்லேயோ, குலேக்காமல் எழுத முயன்றிருக்கிறேன். எனது கருத்தும் விமரிசனமும் எங்குவருகிறதோ அது தனியாய் நிற்கும். அதை முற்றிலும் ஆமோதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லாமலே கவிகளே ரசிக்கலாம்.

ச்லோகங்களேத் தமிழ் எழுத்தில் தரும்போது பதம் பிரித்து எழுதியிருப்பது வசதியாயிருக்குமென நம்புகிறேன். 'சந்தம் இல் லேயே' என்று குறை காண்பவர் இறுதியில் தேவநாகரியிலுள்ள மூலத் தைப் படித்து மகிழலாம். கம்பன் பாடல்களிலும் சொற்களேப் பிரித்தே எழுதியிருக்கிறேன். இலக்கணத்தில் ஆர்வமுள்ளவர்கள் மன்னிப்பார்களாக.

ஒரு சிறு குறிப்பு : 'ஸீதை'யும் 'சீதை'யும் மாறி மாறி வருவது சற்று இடைஞ்சலாயிருக்கலாம். அநேகமாக வடமொழி நூலுக்கு உரைசொல்லும்போது 'ஸீதை'யென்ற சொல்லேயும் கம்பன் பாடலே

விளக்கும்போது 'சீதை'யென்ற சொல்லையும் உபயோகிக்கிறேன். இதே போல் 'கௌஸல்யை'யும் 'கோசலை'யும்.

'காவ்ய ராமாயணம்' உருவாக உதவிய பத்திரிகை 'கணையாழி.' சுமார் நான்கு ஆண்டுகள் எனது இலக்கியக் கட்டுரைகளைத் தொடர்ந்து பிரசுரித்த 'கணையாழி'க்கு எனது நன்றி. அதன் வாசகர்கள் அவ்வப்போது விமரிசனம் செய்து என்னை உற்சாகமூட்டியதற்கு அவர்களுக்கும் நன்றி.

நாட்டின் பெருங்காவ்யங்களைத் தத்தம் மனதுக்கேற்ப ரசித்து ஊட்டம் பெற ஒவ்வொரு தலைமுறைக்கும் உரிமையுண்டு. மேல் நாட்டிலே ஒரு ஷேக்ஸ்பியர் தோன்றி முன்னூறு வருஷ காலத்துக்குள் எத்தனை விமரிசனங்கள், எத்தனைவித விளக்கங்கள்! நமது அரும் பொக்கிஷமாகிய ராமாயணத்தை எவ்விதக் கட்டுப்பாடுமின்றி—'தெய்வபக்தி'யைப் புகட்டும் ஆர்வம் கொண்ட ஒருவரின் தயவின்றி—இலக்கியம் என்ற வகையில் ஏன் ரசிக்க முடியாது? முடியும் என்ற நம்பிக்கை வலிமை பெற்றுவிட்டது. அதன் விளைவே இப்புத்தகம்.

ராமாயணத்தையணுகும் முறையில் எனக்கு வழிகாட்டியாய் இருந்தது கனம் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் 1944ல் செய்த பிரசங்கங்கள். ஆனால் வால்மீகியை எனக்கு அறிமுகம் செய்துவைத்த பெரியோன் சமீபத்தில் காலஞ் சென்ற சங்கீத கலாநிதி டி. கே. ஜயராமய்யர். அவருக்கு அஞ்சலி செலுத்தி அவரது ஆசி பெற்ற இவ்வுரையை முடிக்கிறேன்.

**கே. எஸ். ஸ்ரீனிவாஸன்**

புதுடில்லி.
*4–10–'71*

கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
KAMBAN ADIPPODI SAW. GANESAN

# கதையின் கதை

ராமன் கதை தொன்று தொட்டு மக்களிடையே கர்ண பரம்பரையாக வந்தபோதிலும் அதைக் காவ்யமாக உருவாக்கிய பெருமை வால்மீகியைச் சேரும். அவர் இப்பெருங் காவ்யத்தை எப்படி இயற்றினர்?

மனித சக்திக்கு மீறிய அருள் அவருக்குத் துணையாய் நின்றது போலும். இல்லையேல் ஆயிரமாயிரம் ஆண்டுகள் நிலைக்கத்தக்க காவியம் உருவாகியிருக்குமா? இக்கருத்தை அடிப்படையாகக் கொண்ட முன்னுரை பாலகாண்டத்தில் அமைந்திருக்கிறது. (வால்மீகியைப் பற்றியே சொல்லும் உரையான இப்பகுதி பின்னர் அவரது சீடர்களால் சேர்க்கப்பட்டது என்றே சொல்ல வேண்டும்.)

ஒரு நாள் வால்மீகி நாரதரைப் பார்த்துக் கேட்டாராம், 'இவ்வுலகில் குணமும் வீரியமும் பொருந்திய உத்தமன் யார்? தருமமும் சத்தியமும் உறுதி குலையாமல் கடைப்பிடித்து நிற்பவன் யார்?'

**கோன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான் கஸ்ச வீர்யவான்**
**தர்ம ஞஸ்ச க்ருதஞஸ்ச ஸத்ய வாக்யோ த்ருட வ்ரத : 1***

இன்னும் பல உயர்குணங்களை அடுக்கிக் கொண்டே போகும் வால்மீகியை இடைமறித்து நாரதர் 'பல அறிய குணங்களை ஒன்றுய்ச் சொல்லிவிட்டீர். ஆயினும் நான் அத்தகைய மனிதனைப் பற்றிச் சொல்லுகிறேன். இக்ஷ்வாகு வம்சத்தில் சிறந்தவன் ராமன் என்னும் பெயர் கொண்டவன்' என்றுகூறி ராமன் கதையைச் சுருக்கமாய்ச் சொன்னர்.

---

* ச்லோகங்கள் அனுபந்தத்தில் தேவநாகரி லிபியில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

பஹவோ துர்லபாஸ்சைவ யே த்வயா கீர்த்திதா குணா :
முனே வக்ஷ்யாம் யஹம் புத்வா தைர்யுக்த : ச்ரூயதாம் நர :
இக்ஷ்வாகு வம்ச ப்ரபவோ ராமோநாம ஜனைச்ருத : 2

அரிய குணங்கள் பொருந்திய மனிதன் (நர :) என்றது குறிக்கத்தக்கது.

நாரதர் சென்றபின் தனது சீடனுடன் வால்மீகி கங்கையில் நீராடுவதற்காக நடந்து சென்று கொண்டிருக்கும்போது இரு க்ரௌஞ்ச பக்ஷிகளைப் பார்த்தார். அழகிய ஜோடி. (க்ரௌஞ்சம் என்றால் ஒருவகை நாரை).

திடீரென்று ஒரு வேடன் அவற்றில் ஒன்றை அம்பால் அடித்து வீழ்த்திவிட்டான். விழுந்து துடிக்கும் கணவனைப் பார்த்து ஈனமான குரலில் அழுதது பெண் க்ரௌஞ்சம்.

இதைப் பார்த்தார் முனிவர். மனதில் கருணை பிறந்தது. அன்பு செய்யும் நேரத்திலே பறவையை அடித்துக் கொன்றது அதர்மம் என்று தோன்றிற்று. வேடனைப் பார்த்து, 'க்ரௌஞ்ச பக்ஷிகள் காமத்திலீடுபட்ட சமயம் நீ ஒன்றைக் கொன்றுவிட்டாய். ஆகையால் நெடுநாள் மன நிம்மதியின்றித் தவிப்பாயாக' என்றார்.

மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம : சாச்வதீ : ஸமா :
யத்க்ரௌஞ்ச மிதுனத் ஏகம் அவதீ : காமமோஹிதம் 3

பிறகு, நடந்ததை எல்லாம் பற்றி சிந்திக்கலானார். 'நான் சொன்னது அக்ஷரக்கோர்வையும் சந்தமும் சேர்ந்து அமைந்துவிட்டதே! சோகத்தில் பிறந்த வாக்கு ச்லோகமாக அமையட்டும்' என்று சிடனிடம் சொன்னார்.

பாதபத்தோக்ஷ ரஸமஸ் தந்த்ரீலய ஸமன்வித :
சோகார்த்தஸ்ய ப்ரவ்ருத்தோ மே ச்லோகோ பவது ந அன்யதா 4

நீராடித் தன் ஆச்ரமத்தையடைந்தார் வால்மீகி. ஆனால் மனதில் இதே சிந்தனை.

அப்போது நான்முகனாகிய பிரமன் அங்கு வந்தார். அவரை உபசரித்து ஆசனம் அளித்த பின்னர் மீண்டும் த்யானத்தில் ஈடுபட்டுப் போனார் முனிவர். பக்ஷியை நினைத்து வருந்தினார். காரணமின்

றித் துயரம் விளைவித்த பாவியை நினைத்தார். 'இனிய குரலையும் லக்ஷியம் செய்யாமல் கொன்றுவிட்டானே' என ஏங்கினார்.

அருகிலிருந்த பிரமன் புன்னகை செய்தார். 'என் விருப்பப் படியே உனக்கு வாக்கு பிறந்தது. ராமனது கதையை ச்லோகமாகச் சொல்லுவாயாக. உனது காவ்யத்தில் உண்மை நிலவும். உலகில் மலையும் நதியும் உள்ளளவும் நீ இயற்றிய ராமன் கதை நிலைக்கும்' என்று கூறி மறைந்தார்.

ந தே வாகன்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி
குரு ராம கதாம் புண்யாம் ச்லோகபத்தாம் மனோரமாம்
யாவத் ஸ்தாஸ்யந்தி கிரய : ஸரிதஸ்ச மஹீதலே
தாவத் ராமாயண கதா லோகேஷு ப்ரசரிஷ்யதி 5

வியப்பும் மகிழ்ச்சியும் மேலிட, முனிவர் தம் பணியில் ஈடுபட்டார். ராமன் வாழ்க்கையில் நடந்ததெல்லாம் நேரில் காண்பதுபோல் தெரிந்தது. ராமன் பிறந்து வளர்ந்ததும், வில்லொடித்து வைதேகியை மணந்ததும், நாடிழந்து காடு சென்றதும், மனைவியிழந்து மனம் கலங்கியதும், வஞ்சகனைக் கொன்று வஞ்சம் தீர்த்ததும், ஊர்வந்து முடி சூடியதும், கதையில் வரும் பாத்திரங்கள் பேசியதும் சிரித்ததும்கூட நேரில் காண்பதுபோல் தெரிந்தது.

அதன் பயனே ராமாயணம்.



# 1

## அருந்தவப்புதல்வன்

ஸரயூ நதிக்கரையில் அயோத்தி என்றொரு பட்டணம். அதற்கு அரசன் தசரதன். நெடுநாள் தவம்கிடந்தும் புத்திரப் பேறு இல்லாததால் முறைப்படி வேள்வி செய்ய நிச்சயித்து ரிச்யச்ருங்க முனிவரை வரவழைக்கிறான். அவரது ஆசி பெற்று அச்வமேத யாகம் நடத்துகிறான். அதன் பயனாக தசரதன் மனைவியர் மூவரும் கருவுற்று ஆண் குழந்தைகளைப் பெறுகின்றனர். கௌஸல்யைக்கு ராமனும் கைகேயிக்கு பரதனும் பிறக்கின்றனர். லக்ஷ்மணன், சத்ருக்னன் இருவரும் சுமித்ரையின் புதல்வர்கள். தான தர்மங்கள் நிறையச் செய்து மனம் மகிழ்ந்திருக்கிறான் மன்னன்.

குழந்தைகள் நற்குணமும் அறிவும் பெற்று வித்தைகளிலும் வல்லவராய்த் திகழ்கின்றனர். மக்களின் நன்மையைப் பேணுவதில் கவனம் உள்ளவராய் வளருகின்றனர். எனினும் அவர்களில் ராமன் ஒளிமிகுந்து விளங்குகிறான். உண்மையும் பராக்ரமமும் நிறைந்தவன் என்று வர்ணிக்கிறார் வால்மீகி.

தேஷாம் அபி மஹாதேஜா ராம: ஸத்யபராக்ரம: 1

மேலும், ராமனுக்கு நெருங்கிய துணைவன் லக்ஷ்மணன்; ராமன் இல்லாவிடில் உறங்கவும் மாட்டான், உண்ணவும் மாட்டான் தம்பி என்கிறார். இதேபோல் பரதனும் சத்ருக்னனும் இணைபிரியாதவர்.

இவர்கள் இப்படி வளர்ந்துவரும் சமயம் புதல்வருக்குத் திருமணம் செய்து வைப்பதுபற்றி சிந்திக்கத் தொடங்கிவிட்டான் தசரதன். ('பால காண்டம்' என்று பெயரே ஒழிய, இளமைப் பருவத்தை அநாவசியமாக வளர்த்தவில்லை கவி. 'ராமன் பிறந்தான்' என்ற 18-வது ஸர்க்கத்திலேயே இவ்வளவு தூரம் கதை வளர்ந்துவிடுகிறது.)

மந்திரிகளுடன் கலந்து விவாகப் பேச்சு நடத்திக்கொண் டிருக்கையில் தசரதன் சபைக்கு விச்வாமித்ர முனிவர் வருகிறார். முனிவர் வருகையால் உவந்த மன்னன், 'வருக. இன்றே என் வாழ்வு பயன்பெற்றது. என்ன வேண்டும்? சொல்லுங்கள், சந்தோஷ மாய்ச் செய்கிறேன்' என்கிறான்.

உடனே 'ராமனைத் தருவாய்' என்று கேட்கிறார் முனிவர். 'என் தவத்தைக் கலைக்கும் அரக்கரை அழிக்க வல்லவன் இவனே; இவனது பராக்ரமம் மனிதருக்கு அப்பாற்பட்டது என்பதை நான் அறிவேன். இவன் திறமைக்கு மாரீசனும் ஸுபாகுவும் ஈடாக மாட்டார்கள்' என்று உறுதி கூறுகிறார். திகைத்து நிற்கும் தசரதனுக்கு ராமனது பெருமையை எடுத்துரைக்கிறார் அவனுக்கு மேலும் புகழ் தேடித் தருவதாகச் சொல்லி, 'பத்து நாள் இரவு மட்டும் யாகத்தைக் காக்க ராமனைத் தருவாய்' என்கிறார். அப்பொழுதும் மனம் வரவில்லை தகப் பனுக்கு என்பதைக் கண்டு, 'பிள்ளைமேல் பாசமும் அக்ஞானமும் வைத்துக் கொள்ளாதே' என்று குறிப்பாகத் தெரிவிக்கிறார்.

ந ச புத்ரக்ருத ஸ்நேஹம் கர்த்துமர்ஹஸி பார்த்திவ 2

பின் நடக்கப் போகும் சம்பவங்களின் முன்னெச்சரிக்கை போல் அமைகிறது பேச்சு

'நான் வந்து என் சேனையுடன் உதவுகிறேன். அரக்கருடன் போர் செய்து வேள்வியைக் காப்பேன்' என்று மன்றாடுகிறான் மன் னன். ('இடையூற்றுக்கு இடையூறாய் யான் காப்பேன்' என்று அழுத்த மாகச் சொல்லுகிறார் கம்பன்.)

'ராமனை அழைத்துச் செல்வது அவசியமானால் சதுரங்க சேனை யுடன் நானும் வருகிறேன். ராமன் இல்லாமல் நான் ஒரு கணமும் உயிர் வாழ மாட்டேன். நான்கு புதல்வருக்குள் ராமன் எனக்கு மிகுந்த அன்புக்குரியவன். அவனை அழைத்துச் செல்வது முறையல்ல' என வேண்டுகிறான்.

சதுர்ணும் ஆத்மஜானாம் ஹிப்ரீதி: பரமிகாமம
ஜ்யேஷ்டம் தர்மப்ரதானம்ச ந ராமம் நேதுமர்ஹஸி 3

முனிவர் அசையவில்லை. தசரதன் தன் மகனுக்கு நேரும் அபாயத்தை அளவறியப் பார்க்கிறான். 'அரக்கர்களின் வலிமை என்ன? மறைந்து போர் செய்பவர்களாயிற்றே' என்கிறான். விச்வாமித்ரர், 'புலஸ்திய வம்சத்தில் தோன்றியவன் ராவணன் என்ற அரக்கன். பிரும்மாவிடம் வரம் பெற்று உலகோரையெல்லாம் துன் புறுத்தி வருகிறான். அவன் பெரிய வீரன் என்று கேள்விப்படுகிறேன். குபேரனின் தம்பி அவன். தானாக வராவிட்டால், மாரீசன் ஸுபாகு

என்ற இருவரை ஏவுகிறுன்' என்கிறுர். அனுயாஸமாக வர்ணிக்கிறுர் ஆபத்தை.

உடனே தசரதன், 'முனிவரே, தயவுசெய்ய வேண்டும். என்ஞல் அவனை எதிர்த்து நிற்க முடியாது. தேவ தானவ கந்தர்வ யக்ஷ பன்னக ஜாதியினரால்கூட போர் செய்ய முடியாத அரக்கனை மனிதர் எப்படி எதிர்ப்பர்? போரில் அநுபவமற்ற என் சிறுவனை நான்அனுப்ப மாட்டேன்' என்று மன்றுடுகிறுன்.

முனிவரோ, சினம்கொண்டு நிற்கிறுர். 'முதலில் வாக்களித்து விட்டு, விஷயம் என்னவென்று தெரிந்தபின் மறுக்கப் பார்க்கிறுயே, இது குலத்துக்கே அழகல்ல. சரி, உனது முடிவு இதுவானுல் நான் போகிறேன். பொய்யனென்ற பெயரொடு சுகமாய் வாழ்வாயாக' என்கிறுர். வாழ்த்துவதுபோல் வீழ்த்துகிறுர். அன்புக்கும் மரியாதைக்கும் உகர்ந்தவர்களைத் திருப்தி செய்ய நினைக்கப்போக, நமது தாக்ஷிண்ய குணத்தையே அவர்கள் நம்மீது விரோதமாகத் திருப்ப முற்பட்டால்? கலங்கி நிற்கிறுன் மன்னன். வஸிஷ்டர் சமாதானம் சொல்லுகிறுர். ''உங்கள் குலத்தில் தருமமே பிரதானம் என்பது மூவுலகிலும் தெரிந்த விஷயம். 'கேளுங்கள், கொடுக்கிறேன்' என்று சொல்லிவிட்டபின் அதன்படி செய்யாமலிருந்தால் அது பெரிய பாவம்; ஆதலால் ராமனை விடுதலே நன்று.''

ஸம்ச்ருத்ய ஏவம் கரிஷ்யாமி இதி அகுர்வாணஸ்ய ராகவ
இஷ்டாபூர்த்த வதோ பூயாத் தஸ்மாத் ராமம் விஸர்ஜய 4

('விஸர்ஜய' என்றுல் 'விட்டுவிடு, தியாகம் செய்துவிடு' என்றே பொருள். உட்கருத்தடங்கிய பதங்களை உபயோகிக்கிறுர் கவி.)

ராமன் கிளம்புகிறுன் என்று தெரிந்ததும் லக்ஷ்மணன் தயாராக நிற்கிறுன். முனிவர் வேண்டியது ராமனைத்தான்; இளையவனைப் பற்றிப் பேச்சே கிடையாது. எனினும், 'ராமனுடன் லக்ஷ்மணனையும் அனுப்பினுன் அரசன்' என்று துவங்குகிறது அடுத்த ஸர்க்கம். முனிவரைக் காக்க ராமன் சென்றுல் ராமனைக் காக்க நிழல்போல வருகிறுன் தம்பி; இன்ப துன்பங்களில் தானுகவே பங்கெடுத்துக் கொள்பவன்.

புதல்வர் இருவரையும் முனிவர் கையில் ஒப்படைத்து 'நன்றுய் கவனித்துக் கொள்ளுங்கள்' என்கிறுன்.

**தந்தை நீ, தனித் தாயும் நீ இவர்க்கு,**
**எந்தை! தந்தனன். இயைந்த செய்க என்றுன்**

இத்தகைய பெரும் பாரத்தை ஏற்றுக்கொண்ட முனிவர் அவர்களுக்கு வில் வித்தை கற்பித்து அறிவூட்டுவதோடு அல்லாமல் பெற்ரோர் நிலையில் நின்று விவாகத்தையும் ஏற்பாடு செய்துவிடுகிருர். தசரதனுக்கு பாரம் குறைந்தது!

மிதிலைக்குச் செல்லுமுன் வழியிலே இரண்டு பெண்களைச் சந்திக்கிருன் ராமன். ஒருத்தி கொடியவள், மற்ருெருத்தி உத்தமி. ஒருவளைக் கொன்று பழி தேடிக் கொள்கிருன். மற்ருெருவளை உய்வித்துப் புகழ் தேடிக் கொள்கிருன். இரண்டும் முக்ய சம்பவங்கள்.

தாடகையைக் கொல்லக் கூசும் ராமனுக்குப் பல காரணங்கள் கூறி அவனை ஏவுகிருர் விச்வாமித்ரர். ஆயினும் அரக்கர் வஞ்சம் மூளக் காரணமாக அமைகிறது இதுவே. (தாடகை மாரீசன் தாய்; ராவணனின் பலத்தை நம்பியே அவர்கள் பிறரைத் துன்புறுத்தி வந்தனர் என்று விச்வாமித்ரரே சொன்ஞரல்லவா?)

அகலிகைக்குக் கிருபை செய்த நிகழ்ச்சி ஆழ்ந்த கருத்தமைந்தது— நமக்கு மட்டுமல்ல, ராமனுக்கும்தான்!

மிதிலைக்கு அருகில் பாழடைந்து நிற்கும் குடிசையைக் கண்டதும் அதைப்பற்றி ராமன் கேட்க, அகலிகையின் வரலாற்றைக் கூறுகிருர் விச்வாமித்ரர். ''தவத்தில் மிக்க கோதம முனிவரின் ஆச்ரமம் இது. ஒருநாள் அவர் வெளியே சென்ற சமயம், அகலிகையின் முன்வந்து நின்ருன் இந்திரன். அவள்மேல் தனக்கிருக்கும் காதலைத் தெரிவித்தான். முனிவர் வேடத்தில் தோன்றிய இந்திரனைப் பார்த்தாள். 'தேவேந்திரனே தன்னை நேசிக்கிருன்' என்ற குதூகலத்தில் மதியிழந்து மனமிசைந்தாள்.

மதிம்சகார துர்மேதா தேவராஜகுதூஹலாத் 5

'சீக்கிரம் போய்விடுங்கள். ஜாக்கிரதை. ஆபத்து ஏதேனும் நேர்ந்தால் என்னைக் காப்பாற்றுவீராக' என்று கூறி வழியனுப்பினுள். ஆனுல் முனிவர் விரைவிலே வந்துவிட்டார். பார்த்ததும் விஷயம் புரிந்தது. இந்திரனுக்கு சாபம் இட்டார், மனைவிக்கும் தண்டனை அளித்தார். 'அன்ன ஆகாரமின்றி, பிறர் கண்ணில் படாமல் இங்கேயே நெடுநாள் விழுந்துகிட.

வாயுபக்ஷா நிராஹாரா தப்யந்தீ பஸ்மசாயினீ
அத்ருச்யா ஸர்வபூதானும் ஆச்ரமே அஸ்மின் நிவத்ஸ்யஸி 6

'ராமன் இங்கு வந்தால் உன் பாவம் நீங்கும்' என்றுகூறி இமயமலைச் சாரலில் தவம் செய்யப் போய்விட்டார். ஆகையால், ராமனே, அந்த உத்தமியான அகலிகை இக்குடிசையில் இருக்கிருள். அவளைக் கரையேற்றுவாயாக'' என்றுகூறி முடிக்கிருர் விச்வாமித்ரர்.

ஆச்ரமத்துக்குள் நுழைந்து, பிறர் கண்ணில் படாமல் வசித்து வரும் அகலிகையைப் பார்க்கிறார்கள். பிரமிப்பு ஏற்படுகிறது. பிரமன் சிரமப்பட்டுப் படைத்த அழகியாம் அவள்!' 'ப்ரயத்னாத் நிர்மிதாம் தாத்ரா' என்கிறார் வால்மீகி.

வெள்ளைத் துகிலுடுத்த தபஸ்வினியைக் கண்டதும் அடிபணிந்து வணங்குகிறான் ராமன். கண்விழித்து ராமனைப் பார்க்கிறாள். முனிவர் தனக்கு அளித்த தண்டனை முடிந்ததென உணர்ந்து உபசாரங்கள் செய்து ராமனை நமஸ்கரிக்கிறாள். 'தவத்தின் பெருமையால் உடல் தூய்மை பெற்றாள் அகலிகை. கோதமரும் அங்கு வந்து சேர, தம் பதிகள் மகிழ்வோடு ராமனை வணங்கினர். அதனால் உயர்ந்த ராமன் மிதிலைக்கு நடந்தான்' என்று கதையை முடிக்கிறார் வால்மீகி.

'அகலிகை கல்லாய்ச் சமைந்து போனாள். ராமன் பாதம் பட்ட மாத்திரத்தில் கல் வெடித்து உயிர்பெற்று எழுந்தாள்' என்பது வால்மீகியின் கருத்து அல்ல. அகலிகை கல்லானாள் என்று பத்ம புராணத்தில் கூறப்பட்டுள்ள கதையை ஒட்டியே கம்பனும் 'தையலும் கிடந்தாள் கல்லாய்' என்கிறார்.

மேலும், இந்திரனை முனிவர்தானென்று நினைத்து ஏமாந்துவிட்டாள் அகலிகை என்று சொல்லுபவர் சிலர். 'பெரியவர்களின் தவறுகளைச் சொல்லக்கூடாது' என்ற கருத்துப்படி கதையை மாற்றத் துணிந்தவர்களின் கைத்திறன் இது. புராண இதிகாசங்களில் தோன்றும் தெய்வீக பாத்திரங்கள் தவறு செய்ய முடியுமோ? நல்லெண்ணத்தின் கோளாறு!

கதையின் போக்கைச் சற்று மாற்றின போதிலும் பாத்திரங்களின் குண வர்ணனையை மாற்றவில்லை கம்பன். அகலிகை இந்திரன் வந்திருக்கிறான் முனிவர் வேடத்தில் என்று உணர்ந்தும் 'தகாது, என்று விலக்காமல் இசைந்தாள் . என்கிறார். அதனால் தாழ்மையடைந்தாள் என்ற கருத்தும் கடைசி வார்த்தையில் ஒலிக்கிறது.

**உணர்ந்தனள், உணர்ந்த பின்னும்**
**தக்கதன்று என்ன ஓராள் தாழ்ந்தனள்.**

தவத்தினால் பரிசுத்தமடைந்தாள் ('தபோபல விசுத்தாங்கீ') என்ற வால்மீகியின் வாக்யப்படி, 'மாசறு கற்பின் மிக்க அணங்கு' என்று வர்ணிக்கிறார் அகலிகையை. கோதமர் வந்து சேர்ந்ததும் தம் பதிகளைச் சுற்றி வணங்கினான் ராமன் என்கிறார். 'வலம்கொண்டு ஏத்தி மாசறு கற்பின் மிக்க அணங்கினை அவன் கை ஈந்து நெஞ்சினால் பிழைப்பிலாளை நீ அழைத்திடுக' என்றான்.

வால்மீகியின் கதையில் விசேஷ அம்சம் அதில் அடங்கிய தத்துவம். 'தவறு செய்வது மனித இயல்பு. தெரிந்தே குற்றம் செய்த

போதிலும் அதை உணர்ந்து வருந்தினுல், தவத்தின் மூலம் பழியை நீக்கிக்கொள்ள முடியும்.' உலகத்தைத் துறந்து அல்லும் பகலும் ஆண்டவனை வழிபட்ட முனிவர்களே காமத்தினுல் மதியிழந்து வழி தவறினுர்கள். ஆனுல் அவர்களை உலகமோ, தெய்வமோ நிராகரிக்க வில்லை. மீண்டும் தவம் இயற்றி உயர்நிலையை அடைய முடிந்தது. இதற்குப் புராணங்களில் பல உதாரணங்கள் உண்டு; (விச்வாமித் ரரே அத்தாட்சி!) அத்தகைய உரிமை பெண்ணினத்துக்கும் உண்டு என்பதே இக்கதையின் படிப்பினை.

இதையே 'பஞ்ச கன்யா ஸ்மரேந்நித்யம்' என்ற சுலோகத்தின் கருத்தாக அமைத்துள்ளனர். புகழ்பெற்ற ஐந்து கன்னிகைகளுக்குள் அகலிகைக்கு ஏன் முதல் ஸ்தானம்? முறை தவற நேர்ந்தால் விரதம் காத்து, நெஞ்சினுல் வருந்தி நிவர்த்தி அடையலாம் என்ற கொள் கைக்கு அவளே சான்று. இதை விட்டு அவள் கல்லானுள், பின் வெடித்துப் பெண்ணுனுள் என்று சொல்வது மனித உள்ளத்தின் பெருமையைக் குறிப்பதாகாது.

தவறு செய்த ஒருவருக்கு நியாயம் வழங்கும்போது நாம் தவறே செய்யாதவர் போல் நடந்துகொள்வதும் நீதியை ஏடுத்துரைப்பதும் எளிது. அவர்களுக்கு உய்யும் வழி சொல்லி நம்மில் ஒருவராய் ஏற் றுக் கொள்வது உயர்வின் அறிகுறி.

அகலிகைக்கு அருள் தந்தபோது தன் கால் மகிமையைக் காட் டினுன் ராமன் என்கிறுர் கம்பன். தாடகையைக் கொன்றபோது கை வலிமை தெரிந்ததாம். முற்றிலும் மாறுபட்ட இவ்விரு சம்பவங் களையும் ஒரே பாடலில் பிணைக்கிறுர் கவி.

**இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் இனி**
**இந்த உலகுக்கெல்லாம்**
**உய்வண்ணம் அன்றி மற்ருேர் துயர்வண்ணம**
**உறுவதுண்டோ?**
**மைவண்ணத்தரக்கி போரில் மழைவண்ணத்து**
**அண்ணலே உன்**
**கைவண்ணம் அங்கு கண்டேன், கால் வண்ணம்**
**இங்கு கண்டேன்.**

'வண்ணம்' என்ற வார்த்தையை எவ்வண்ணம் பிரயோகிக் கிறுர் புலவர்! வரிக்கு இரண்டு வண்ணம்.

வாலிபனுன ராமன் வாழ்க்கையில் இரண்டு முக்கிய நிகழ்ச்சிகள் விச்வாமித்ரர் மேற்பார்வையில் நிகழ்கின்றன. அவர் திட்டப்படி இவற்றை நடத்தி வைக்கிறுர். இதிலும் ஓர் கருத்து அடங்கியிருக்

கிறது. கொடுமையான பெண்ணை தயையின்றி தண்டனை செய்ய லாம்; மனத்தில் தூயவளை, உலக ரீதியில் மாசு இருப்பினும், போற்றி மதிக்க வேண்டும். நடத்தையின் மூலம் முனிவர் சொல்லிக் கொடுத்த படிப்பினை; பின்வரும் நிலைகளில் உதவக்கூடிய படிப்பினை. 'வனம் போ'வென்று சொல்லிய கைகேயியையும் (அசோக) வனத்திலிருந்து வந்த ஸீதையையும் எப்படி நடத்த வேண்டும் என்பதற்கு மறைமுக மான எச்சரிக்கை

ஆயினும், முனிவர் எச்சரிக்கையைப் பயன்படுத்திக் கொள்ள வில்லை ராமன். தகப்பனைப்போல் மைந்தன்!

2

# மண்ணில் தோன்றிய மங்கை

மிதிலைக்கு அருகில் விச்வாமித்ரர் வந்து தங்கியிருக்கிறார் என்று கேள்விப்பட்டதும் அவரை வரவேற்று உபசரிக்க விரைந்து செல்லுகிறான் ஜனகன். 'உங்கள் வருகையால் புனித மானேன். ஒளி வீசும் இந்த யுவர்கள் யார்?' என்றதும், முனிவர் பெருமையோடு முழுவிருத்தாந்தங்களைக் கூறுகிறார். 'தசரதன் புதல்வர். உன் வில்லைக்காண ஆவலாய் இருக்கின்றனர்' என்று முடிக்கிறார். வில்லின் பெருமையும், அதை நாணேற்றுபவனே ஸீதைக்கு உரியவன் என்பதும் முனிவருக்குத் தெரியும். தெரிந்து தான் அழைத்து வந்திருக்கிறார்!

'சிவனருளால் என் மூதாதையருக்குக் கிடைத்த வில் இது. பூமியில் கண்டெடுத்த மாணிக்கமான ஸீதை* வளர்ந்து கன்னி கையானதும் இவ் வில்லைக் கையாளும் வீரனுக்கே அவளைக் கொடுப்பதென்று தீர்மானித்தேன். இதை அறிந்த மன்னர் பலர் முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால் வில்லைத் தூக்கி நிறுத்தவும் சக்தியற்று, தோல்வியுற்றதால் கோபம் அடைந்தனர்' என்று பீடிகை போட்டு, வில்லை எடுத்துவர உத்தரவிடுகிறான் ஜனகன்.

வில்லைக் கண்டதும் 'குழந்தாய் ராமா, வில்லைப் பார்' என்று குறிப்பாகச் சொல்லி நிறுத்துகிறார் விச்வாமித்ரர். உடனே எழுந்து சென்று விளையாட்டாக அதை எடுத்து நாண் ஏற்றுகிறான்; நடுவிலே ஒடிகிறது வில்.

---

* 'ஸீதா' என்றால் கலப்பை உழும் கோடு. அதில் கிடைத்ததால் அவளுக்கே காரணப் பெயர்.

'குழந்தாய்' என்று விச்வாமித்ரர் அழைத்தது கவனிக்க வேண்டியது. அயோத்தியைவிட்டுக் கிளம்பியபோது 'ராமனுக்கு 16 வயது நிரம்பவில்லை' என்று கவலைப்பட்டான் தசரதன். ஆதலால் 18 வயதுக்கு உட்பட்ட இளைஞனாகவே கருத வேண்டும். ஸீதையும் சிறு பெண். இத்தகைய விவாகத்துக்குப் 'ப்ரும்மம்' என்று பெயர்.

கம்பன் கவிதையில், மிதிலைக்கு வரும்போது ராமன் நன்கு வளர்ந்த வாலிபன். ஆகையால் காந்தர்வ மணத்தின் அம்சத்தைச் சிறிது கலக்கிறார் கவி. தெருவோடு நடந்து செல்லும்போது கன்னி மாடத்தில் நிற்கும் ஸீதையைப் பார்க்கிறான். கண்டதும் காதல். ஒருவருக்கொருவர் யார் என்று தெரியாது!

ஸீதை மிக ரூபவதி. அவள் அழகை எப்படி வர்ணிப்பது? அழகுத் தெய்வமான மன்மதனே அவளைச் சித்திரத்தில் வரைந்து பார்க்க ஆசைப்பட்டானும். அதற்காக அமுதம் கொண்டுவந்து அதில் எழுதுகோலைத் தோய்த்து, வரைய ஆரம்பித்தான். ஆனால் அந்த வனப்பைச் சித்தரிக்கச் சக்தியற்றவனாகித் திகைத்து நின்றான் என்கிறார் கம்பன்.

**ஆதரித்து அமுதில் கோல் தோய்த்து அவயவம்**
**அமைக்குந் தன்மை**
**யாதெனத் திகைக்குமல்லால் மதனற்கும் எழுத**
**ஒண்ணச்**
**சீதை.**

இவளைக் கண்டு நெஞ்சம் பறிகொடுத்தால் அதில் என்ன ஆச்சரியம்? நிலைகொள்ளவில்லையாம்.

**எண்ணரு நலத்தினள் இனையள் நின்று உழிக்**
**கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்று**
**உண்ணவும் நிலைபெருதுணர்வும் ஒன்றிட**
**அண்ணலும் நோக்கினன், அவளும் நோக்கினள்.**

இப்படி இணை கவ்வி ஒருவரையொருவர் பார்த்ததும் ஒருவர் மனதில் மற்றொருவர் பரஸ்பரம் குடிபுகுந்தனர்.

**இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்.**

இந்தக் கோலத்தை வர்ணிக்கும்போது கம்பன் அதிமானுஷ அம்சம் ஒன்றைப் புகுத்துகிறார். திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட தெய்வத் தம்பதிகள் அவதரிக்க வேண்டிய காரணமாகப் பிரிந்து,

பின்னர் கூடினுல் பேசவும் வேண்டுமோ என்கிருர். 'பார்வையே போதாதோ' என்பது அடங்கியிருக்கிறது. (கல்யாணத்துக்கு முன்பே கண்டு காதல் கொள்வது உகந்ததல்ல என்று எண்ணுபவர்க்கு சமாதானமாக அளிக்கும் கற்பனையோ?)

**கருங்கடற் பள்ளியில் கலவிநீங்கிப் போய்ப்**
**பிரிந்தவர் கூடினுல் பேசல் வேண்டுமோ?**

ராமன் மேலே நடந்து செல்லுகிருன். கூட விச்வாமித்ரர் இருக்கிருரே! ஆனுல் நோய் தந்து செல்லுகிருன். காதல் வெப்பத்தால் தவிக்கிருள் ஸீதை. தோழிகள் செய்யும் உபசரணையெல்லாம் நோயைப் பெருக்குவதாய் இருக்கிறது. புஷ்பங்கள் நிறைந்த மஞ்சத்தில் படுக்க வைத்தால், பூக்கள் கருகிவிட்டனவாம், காமத் தீயினுல். விவரம் தெரியாத சில பெரியோர் திருஷ்டி கழித்து ஆரத்தி சுற்றினுர்களாம்! 'போதுடன் அயினிநீர் சுழற்றிப் போற்றினர்.' ஆனுல், 'ஆசை நோய்க்கு மருந்துமுண்டாம் கொல், ஓ?' என்று முடிக்கிருர்.

படுக்கையில் உறக்கமின்றிப் பலவாருகச் சிந்தனை செய்யும் ஸீதை தெருவோடு போன வாலிபனை உள்ளங் கவர்ந்த கள்வன் என்கிருள். ஆம், கண் வழியே கன்னம் வைத்து நெஞ்சில் புகுந்துவிட்டான் அல்லவா?

**கண்வழி நுழையுமோர் கள்வனே கொல், ஆம்.**

உயர்ந்த காதலருக்கு உரியபடி, ராமனும் 'தனது இருப்பிடத்தில் தனிமையில் ஏங்கி நிற்கிருன். உறக்கம் இல்லை. 'வானத்திலிருந்து பிரிந்து பெண் உருவம் கொண்ட மின்னலைப் போல் அல்லவா இருக்கிருள்! ஆஹா, என்ன அழகு! ஆனுல் அவளுக்கு என்பால் கருணை இல்லை. காமநோய் அளிக்கும் விஷக் கண்களால் என்னை விழுங்குவதுபோல் பார்த்தாள். அதன் பயன் நான் தெள்ளறிவு இழந்து நிற்கிறேன். எங்கு பார்த்தாலும் அவளது பொன்மயமான உருவம் தோன்றுகிறதே, என்ன செய்வேன்?' என்று தவிக்கிருன்.

**அருள் இலாள் எனினும் மனத்தாசையால்**
**வெருளும் நோய் விடக்கண்ணின் விழுங்கலால்**
**தெருளிலா உலகிற் சென்று நின்றுவாழ்**
**பொருளெலாம் அவள் பொன்னுரு ஆயவே!**

(வெருளும் நோய்—எல்லாரும் அஞ்சுவதற்குரிய காமநோய். தெருள்—தெளிவு.)

இரண்டாம் அடி திருக்குறளில் (காமத்துப்பால்) 'ஒரு நோக்கு நோய் நோக்கு,' 'கண்டார் உயிர் உண்ணும் தோற்றம்' முதலிய அடைமொழிகளை நினைவுறுத்துகிறது.

இரவு இப்படிக் கழிகிறது. மறுநாள் ராஜசபையில் வில்லைக் காண ராமன், லக்ஷ்மணன், முனிவர் மூவரும் போகின்றனர். குலப் பெருமையை எடுத்துரைத்து அறிமுகப்படுத்துகிருர் விச்வாமித்ரர். 'என் உயிரைவிட இவன்மேல் அதிக வாஞ்சை எனக்கு' என்று பெரு மையோடு கூறி முடிக்கிருர் பெரியவர்.

வில்லின் வரலாற்றை நேரடியாகச் சொல்லாமல் இங்கு ஒரு அழகிய கருத்தை அமைக்கிருர் கம்பன். 'மாய சக்தி யுடைய வில்லை, ஏதோ தெரியாத்தனமாக சுல்கமாக வைத்துவிட்டுத் தோற்றுப்போய்த் தவிக்கிறேன். இந்த அழகிய வாலிபன் வில்லையேற்றினுல், (அது முறிந்துபோவதன் மூலம்) முறிந்துபோன என் மனத்தைத் தேற்றி இடையூறு எனும் கடலி லிருந்து கரையேற்றியவனுவான். என் பெண்ணும் தவப்பயனை அடை வாள்' என்கிருன் ஜனகன். பெண்ணைப் பெற்றவன் கவலை ஒலிக் கிறது.

**மாற்றம் மாறு உறைப்பதென்? மாயவிற்கு நான்**
**தோற்றவாறு என மனம் துளங்குகின்றதால்**
**நோற்றனள் நங்கை, நொய்தின் ஐயன் வில்**
**ஏற்றுமேல், இடர்க்கடல் ஏற்றும் என்றனன்.**

*(நொய்தில்—விரைவில்)*

சபையில் பெருந்திரள். பலர் சுமந்து எடுத்து வருகின்றனர் வில்லை. ஆண்கள் வில்லைப் பார்த்தனர்; கைவிரித்தனர். ஆனுல் பெண்கள் ராமனைப் பார்த்தார்கள். ஜனகனுக்கு அறிவில்லையே என்று ஏங்கினராம். 'இப்படி ஒரு பிள்ளை கிடைத்தால் உடனே பெண்ணைக் கொடுப்பதைவிட்டு, வில்லை எடுத்து அவன்முன் வைத்து விட்டானே; என்ன ஆகுமோ? பெண்களுக்கே உரித்தான உணர்ச்சி

**வள்ளன் மணத்தை மகிழ்ந்தனன் என்ருல்**
**கொள்ளென முன்பு கொடுப்பதையல்லால்**
**வெள்ளைமனத்தவன் வில்லையெடுத்து இப்**
**பிள்ளைமுன் இட்டது பேதைமை என்பார்.**

மக்களின் மனப்பான்மையைக் குறிக்கும் இப்பாட்டு நாட்டுப் பாடல் மெட்டில் அமைந்திருக்கிறது.

விளையாட்டாக எடுத்து வில்லை ஒடித்தான் என்கிருர் வால்மீகி. 'எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்' என்று வர்ணிக்கிருர் கம்பன். எடுத்தபின் நடந்தது எல்லாம் பார்ப்பதற்குள் முடிந்துவிட்

டது; ஒடிந்த சப்தம்தான் காதில் கேட்டது! கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தும் அதைக் கவனிக்க முடியவில்லையாம், அவ்வளவு வேகம்!

எப்படி இவ்வளவு எளிதில் காரியம் நடந்தது? கம்பன் கற்பனை செய்கிறார். வில்லை ஒடித்தால்தானே ஸீதை கிடைப்பாள்? அவளுக்கே சூட்டும் மாலையென நினைத்து அதை எடுத்தான் என்கிறார். ('ஏடவிழ் மாலை இது என எடுத்தான்.')

இக்காட்சியைக் கண்ட ஒரு தோழி விரைந்து ஓடுகிறாள் ஸீதையிடம். ஊசலாடிய மனத்தோடு இருக்கும் தேவிக்கு சேதி சொல்லுகிறாள். ஆனால், சந்தேகம். 'வில்லொடித்தவன் நேற்று தெருவோடு போன இளைஞன்தானோ? முனிவரோடு வந்த வாலிபன் வில்லொடித்தான் என்பதால் அவனாகத்தான் இருக்கும்' என்று எண்ணுகிறாள். இதுபோல் ராமனுக்கும் விவாகப் பந்தலில் பார்க்கும் வரை 'மாய வில்' சுல்கம் வைத்த பெண் யாராயிருக்குமோ என்ற சந்தேகம்.

மகிழ்ந்த ஜனகன் உடனே தசரதனுக்குச் சேதி அனுப்புகிறான். பெரிய ஜனத் திரள் சூழ மிதிலைக்கு வந்து சேருகிறான் தன் மகனின் வலிமையைக் கேட்டுப் பூரித்து, உவகை மேலிட்ட மன்னன்.

மணப் பெண்ணை அலங்கரித்து வருகிறார்கள். அவள் அணிந்திருக்கும் ஆபரணங்கள் எல்லாம் அவளுக்கு அழகு தருவன அல்ல; அவளால் அழகு பெறுவனவாக ஆகின்றன. 'அழகெனும் அணியும் ஓரழகு பெறவே' என்கிறார் கம்பன். எல்லோரும் வெளியே வந்து பார்க்கிறார்கள். ஒன்றும் பேச முடியாமல் பிரமித்துப்போய்ப் பார்த்த வண்ணமே நிற்கிறார்கள். அழகென்றால் எப்படிப்பட்ட அழகு? தாங்க முடியாத அழகு என்று வர்ணிக்கிறார். 'அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்?'

சபாமண்டபத்தை நோக்கி நடந்து செல்லுகிறாள் ஸீதை. பூமிதேவியானவள் தான் பெற்ற கொடியான பெண் வெறும் தரையில் நடந்தால் அவள் பாதம் நோகுமே எனக் கருதி வழியெல்லாம் புஷ்பங்களை நிறைத்து விடுகிறாளாம்!

**வல்லியை உயிர்ந்த நிலம் மங்கையவள் பாதம்**
**மெல்லிய, உறைக்குமென அஞ்சி வெளியெங்கும்**
**பல்லவ மலர்த்தொகை பரப்பினள் எனத்தன்**
**நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.**

ஸீதை பூமியில் தோன்றியதால் 'உயிர்த்த நிலம்' என்ற அடைமொழி. கொடி போன்ற ஸீதையை 'வல்லி' என்கிறார். கொடி பூமியில்தானே தோன்றும்?

இந்த அழகி நடந்து செல்லும் அழகைப் பாருங்கள்.

**பொன்னின் ஒளி, பூவின்வெறி சாந்துபொதி சீதம்,**
**மின்னின் நிழல் அன்னவள்தன் மேனியொளி மான,**
**அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண**
**மன்னவை இருந்த மணிமண்டபம் அடைந்தாள்.**

தங்கத்தின் பிரகாசம், பூவின் மணம், சந்தனத்தின் குளிர்ச்சி, மின்னல் போன்ற பளபளப்பு இவை அனைத்தும் ஒன்ருய்ச் சேர்ந்த அவள் மேனி ஒளி வீசி விளங்காமல் என்ன செய்யும்? நடையைக் கண்டு அன்னமும் வெட்கமடைந்ததாம். மற்ற தேவ கன்னிகையரும் நாணமடைந்தனர். இதையெல்லாம்விட அம்ருதமும் தோற்கும்படி இனிமையானவள் ஸீதை என்று மண்டபத்தை நோக்கிச் செல்லும் கொடியை வர்ணிக்கிருர். இப்படி வரும் பெண்ணைப் பார்த்துக் கண் இமைக்காமல் சித்திரம்போல் நிற்கிருர்கள் ஜனங்கள்.

கவிகள் நாயக, நாயகிகளைச் சமமாகப் படைப்பது விசேஷம். அவர்களை அவ்வப்போது தக்கபடி வர்ணிப்பது கவனிக்கத்தக்கது. ஸீதையின் அழகு இவ்வாறு என்ருல் ராமன் எப்படி?

**தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலம்**
**அன்ன**

**தாள் கண்டார் தாளே கண்டார். தடக்கை கண்டாரும்**
**அஃதே.**

முன்பு வீரன் வில்லில் அம்பைப் பூட்டி நிற்கும் சமயம், எதிர்த்து நிற்கும் தாடகையையும் லட்சியம் செய்யாது ராமனது அழகிலே லயித்து விட்டாராம் உலகம் துறந்த விச்வாமித்ரர். ''உன் தோளைக் கண்டால் ஆண்களுக்கே 'ஐயோ, பெண்ணுய்ப் பிறக்காமல் போனேமே' என்ற ஏக்கமுண்டாகும்'' என்ருராம். 'ஆடவரும் பெண்மையை அவாவும் தோளினுய்' என்று அழைத்தார் அன்போடு. (வால்மீகியின் 'பும்ஸாம் மோஹனரூப:' என்ற வாக்கின் எதிரொலி.)

ஸீதையைக் கண்டதும் 'ஆஹா, கன்னிமாடத்தில் கண்ட பெண் என் உள்ளத்திலேயே இருக்கிருள் என்றல்லவா நினைத்தேன்? புறத்திலும் இருக்கிருளா?' என்று வியக்கிருன் ராமன். விச்வாமித்ரருக்கும் கற்பனை உண்டாகிறது. 'இப்படி ஒரு பெண் கிடைப்பதானுல் இந்த வில் என்ன, ஏழுமலைகளையும் முறிக்க மாட்டானு என் ராமன்?' என்று நினைக்கிருர்.

223

நச்சுடை வடிக்கண் மலர் நங்கை இவளென்ருல்
இச்சிலைகிடைக்க, மலை ஏழையும் இருனே?

இதையெல்லாம் பொருட்படுத்தாத ஸீதை தன் சந்தேகத்தை நிவர்த்தி செய்வதில் ஈடுபட்டிருக்கிருள். குனிந்த தலை நிமிராமல் கைவளையை ஒழுங்கு செய்யும் பாவனையிலே, கடைக்கண்ணுல் பார்த்து விடுகிருள் ராமனே. அவனே இவன் என்றுணர்ந்து உடல் பூரிக்கிருள்.

ஐயனை அகத்து வடிவேயல, புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்.

வளையல்களைச் சரிசெய்வதும், அவற்றை அடிக்கடி பார்ப்பதும் காதலை வெளிப்படுத்தும் புராதனச் சின்னங்கள். (தன் வளையலைப் பார்த்து, தோளைப் பார்த்துப் பாதங்களையும் பார்த்துக் குறிப்பை அறிவுறுத்தினுள் காதலி என்ருர் வள்ளுவர்.

'தொடிநோக்கி, மென்தோளும் நோக்கி, அடி நோக்கி
அஃதாண்டு அவள் செய்தது.')

ஸீதையை ராமன் கையில் தாரை வார்த்துக் கொடுக்கிருன் ஜனகன். 'திருமாலும் லக்ஷ்மியும்போல் நீயும் என் மகளும் நீடூழி வாழ்க' என்று ஆசீர்வதிக்கிருன்.

பூமகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னெடு மன்னுகி.

இங்கு அவதார மகிமையைக் கருத்தில் கொண்டு எழுதுகிருர் கம்பன் எனினும் கடவுளை உவமையாகச் சொன்னது கவனிக்கத் தக்கது. எளியதான ஒரு மொழியால் ஸீதையை வர்ணிக்கிருர் வால்மீகி.

'இவள் என் மகள்; உனக்கு உடன்நின்று உதவும் துணைவி' என்று கூறிக் கன்னிகாதானம் செய்கிருன் ஜனகன்.

இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ
ப்ரதீச்ச சைனம் பத்ரம்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா
பதிவ்ரதா மஹாபாகா சாயேவானுகதா ஸதா

பொறுக்கியெடுத்த சொல்'ஸஹதர்மசரீ' என்பது. பின் நடக்கும் சம்பவங்களில் இது எடை பெற்று விளங்குவது தெரியும்.

‘வலங்கொடுதீயை வணங்கி,’ ‘அம்மி மிதித்து,’ ‘அருந்ததி கண்டனள்’ என்று மணச் சடங்குகளைக் குறிக்கிறார் கம்பன்.

தம்பதிகள் வந்திருக்கும் பெரியோர்களை வணங்கி ஆசி பெறுகின்றனர். ராமன் கைகேயிக்கு முதல் ஸ்தானம் கொடுக்கிறான். ‘கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம், தாயினும் அன்போடு தாழ்ந்து வணங்கி’ என்று அழகாகச் சொல்லிக் கல்யாணச் சிறப்பை முடிக்கிறார் கம்பன்.

ஒரே நாளில் நான்கு சகோதரர்களுக்கும் விவாகம்; ஒரே குடும்பத்தில். ஜனகன் பெற்ற சொந்த மகள் ஊர்மிளை; மற்றும் அவன் சகோதரன் குசத்வஜன் புத்ரிகள் இருவர், ஆக மூவரையும் தம்பிமார் மூவரும் மணக்க, மிதிலை அமோகமாய் விளங்குகிறது.

வில்லொடித்து வலிமை காட்டித் தான் வீரனென்பதை நாட்டினன் ராமன். உடனே தன் மகளைக் கொடுக்க நாள் குறித்தான் ஜனகன். இச்சேதி அறிந்த தசரதன் மனம் பூரித்து விரைந்து வந்தான். எல்லாவற்றையும் நடத்தி வைத்தது விச்வாமித்ரர். வித்தை கற்பித்த குரு. அவருக்கு அவ்வளவு உரிமை!

# 3

# தூயவள் தீயவளானுள்

மிதிலையிலிருந்து அயோத்திக்குப் போகும் வழியிலே பரசுராமன் வருகிருர். செருக்குற்ற அந்தணர் பரசு ராமன். அநாவசியமாகக் குறுக்கிட்டு ராமனை ஏசி அவனிடம் சிறு மைப்பட்டுத் தன் தவ வலிமையை இழந்து விநயமாய்த் திரும்புகிருர். ராமனின் பெருமை ஓங்குகிறது. எனினும் இச்சம்பவத்தின் முக்யத் துவம் தெளிவாக இல்லை. அந்தணர் வில் ஏந்திச் செல்வது முறை யல்ல என்பதைக் குறிக்கவோ?

அயோத்தியில் ராமனும் ஸீதையும் மற்ற இளந் தம்பதிகளும் சந்தோஷமாய் இருக்கின்றனர். ஒரு நாள் கேகய நாட்டிலிருந்து பரதனின் தாய்மாமனுகிய யுதாஜித் வந்து அழைக்க, தசரதன் பரதனை அனுப்பி வைக்கிருன். சத்ருக்னனும் உடன் செல்லுகிருன்.

பிறகு, தந்தையின் சொல்படி ராமன் சிறிது சிறிதாகப் பொதுப்பணியில் ஈடுபடுகிருன். பெரியோரும் ஊராரும் ராமனின் நற்குணத்தைப் பாராட்டுகின்றனர்.

அயோத்யா காண்டம் ஆரம்பிக்கும்போதே கதையில் சுவை உண்டாகிறது. பரதன் கேகய நாட்டுக்குச் சென்றவுடன் வயது முதிர்ந்த தசரதன் ராமனது எதிர்காலத்தைப்பற்றி நினைக்க ஆரம் பிக்கிருன். 'மனதுக்குகந்த மகனுக்கு முடிசூட்டிப் பார்க்க வேண்டும். அதை எப்போது காண்பேனே' என்று சிந்திக்கிருன்.

கதா நாம ஸுதம் த்ரக்ஷ்யாமி அபிஷிக்தம் அஹம்ப்ரியம் 1

மக்களையும் வேந்தர் பலரையும் அழைப்பித்துச் சபை கூட்டு கிருன். 'எனக்கோ வயதாகிவிட்டது. ஓய்வெடுத்துக்கொள்ள விரும்பு

கிறேன். குணத்தில் சிறந்தவன் ராமன்; என் மூத்த மகன். அவனை யுவராஜாவாக நியமிக்கப் போகிறேன். அப்போதுதான் என்கவலை தீரும்' என்கிறான். (கதக்லேசோ பவிஷ்யாமி ஸுதே தஸ்மின் நிவேச்ய வை.)

சபையினர் அரசனது கருத்தை அறிந்து (மனஸா ஞாத்வா) 'யானும் அவ்வண்ணமே கோருகிறேன்' என்று ஆமோதிக்கிறார்கள். (தலைவரின் நோக்கம் அறிந்து தலையை ஆட்டுவது புதிய வழக்கம் அல்ல.)

உடனே தசரதன் 'இது புனிதமான சித்திரை மாதம். பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் சீக்கிரம் நடக்கட்டும்' என்கிறான்.

சைத்ர: ச்ரீமானயம் மாஸ: புண்ய: புஷ்பிதகானன:
யௌவராஜ்யாய ராமஸ்ய ஸர்வமேவோபகல்ப்யதாம் 2

குருவான வஸிஷ்டரும் 'நாளை காலை சூர்யோதயத்துக்குள் எல்லா ஏற்பாடுகளும் ஆகட்டும்' என்று அறிவிக்கிறார். வெகு துரித மாக ஏற்பாடுகள் நடக்கின்றன. சோதிடர் 'பொருந்து நாள் நாளை உன் புதல்வருக்கு' என்றார்களாம்.

சபையில் தன் கருத்தை எப்படித் தெரிவிக்கிறான் மன்னன்? 'என் அருமை மகனுக்கு ஒரு கல்யாணம் செய்து பார்த்துவிட்டேன்; அவனுக்குப் பட்டாபிஷேகமும் செய்து பார்த்துவிட்டால் என் மனம் மகிழ்ச்சி பெறும்' என்கிறான்.

**பெருமகன் என்வயின் பிறக்கச் சீதையாம்**
**திருமகள் மணவினை தெரியக் கண்டயான்**
**அருமகன் நிறை குணத்து அவனி மாது எனும்**
**ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்.**

ராமனுடைய குணங்களைப் புகழ்ந்து ஆமோதிக்கும் வஸிஷ்டர் 'அவன் மட்டுமல்ல, அரசியாக வரப்போகும் பெண் மிகவும் நல்ல வள்' என்கிறார்.

**மண்ணினும் நல்லள் மலர்மகள் கலைமகள் கலையூர்**
**பெண்ணினும் நல்லள் பெரும்புகழ்ச் சனகியோ நல்லள்**
**கண்ணினும் நல்லன் கற்றவர் கற்றிலாதவரும்**
**உண்ணுநீரினும் உயிரினும் அவனையே உவப்பர்.**

பூதேவி, லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி முதலியவர்கள் எல் லாரையும்விட நல்லவள் என்கிறார். மூன்று தடவை 'நல்லள்' என்ற

சொல் உபயோகிக்கிறர். பூமியிலிருந்து தோன்றிய ஸீதை தாயை விட மேலானவளாகிவிட்டாள். ('வல்லியை உயிர்த்த நிலம்' என்ற பாடல் ஒலிக்கிறது.) 'கற்றவர் கல்லாதவர் எல்லோரும் தம்முயிரை யும்விட, உயிர் தரும் நீரையும்விட மேலாக மதிப்பர் ராமனை.' இத் தகைய தம்பதிகள் நலமைக்கு உகந்தவர் என்பது கருத்து.

அரசன் ஸுமந்திரனை அனுப்பி ராமனை அழைத்து வரச் சொல்லு கிறன். சபை நடுவே ராமனைப் பார்த்து மனம் பூரிக்கிறன்; பார்க்கப் பார்க்கத் திருப்தி அடையாமல் இருக்கிறன். வணங்கி நிற்கும் ராமனை அணைத்துக் கொள்ளுகிறன். ராஜ்ய பாரம் வகிக்கத்தக்க வலிமையும் தகுதியும் உளதோவென்று, தனது மார்பையும் தோளை யும் அளவுகோல் போல உபயோகித்து அளந்து பார்த்தான் என் கிறர் கம்பன்.

**நலம்கொள் மைந்தனைத் தழுவினன் என்பது என் ? நளிநீர்**
**நிலங்கள் தாங்குறும் நிலையினை நிலயிட நினைத்தான்**
**விலங்கல் அன்ன திண்தோளையும் மெய்த்திரு இருக்கும்**
**அலங்கல் மார்பையும் தனது தோள் மார்பு**
**கொண்டளந்தான்.**

மகாஜனங்கள் முன்னிலையில் தசரதன் ராமனைப் பார்த்துச் சொல்லுகிறன் : 'எனது மூத்த மகிஷியின் புதல்வன் நீ. குணத்தில் சிறந்தவன், அவளுக்கு ஒப்பானவன். எனக்குப் பிரியமான புத்ரன். ஆதலால் உனக்கு நாளை புஷ்ய நக்ஷத்திர தினத்தில் முடிசூட்டப் போகிறேன்.'

**ஜ்யேஷ்டாயாம் அஸி மே பத்ன்யாம் ஸத்ருச்யாம் ஸத்ருச: ஸுத:**
**உத்பன்னஸ்த்வம் குணச்ரேஷ்டோ மம ராமாத்மஜ: ப்ரிய**
**தஸ்மாத் த்வம் புஷ்யயோகேன யௌவ ராஜ்யம் அவாப்னுஹி** 3

மூத்த மனைவியின் மகன் என்பதால் உயர்நிலை. மற்றபடி, நான்கு புதல்வரும் ஒரே சமயத்தில் பிறந்தவர்கள்தானே? இப்படி ஒரு அறிக்கை வெளியானவுடன் ராமனுடைய ஆப்த நண்பர்கள் (அரண்மனையில் கட்சிப் பிரிவினைகள் இல்லாமலிருக்குமா?) விரைந்து சென்று நற்செய்தியைக் கௌஸல்யைக்குத் தெரிவிக்கின்றனர். உவகை மேலிட்டு அவள் பசுக்களையும் பொன்னையும் வாரி வழங்கி மனம் குளிர்கிறள். மன்னர் செய்த முடிவும் சபையில் நிறைவேற்றிய தீர்மானமும் அரண்மனையில் ஒருவருக்கும் தெரியாது. தான தர் மங்கள் செய்தபின் தன் அந்தரங்க அன்புக்கு உரியவளான சுமித்திரையோடுகூட கோயிலுக்குச் சென்று வணங்கினள் என்கிறர் கம்பன்.

**தன்துன்னு காதல் சுமித்திரையோடும் போய்**
**மின்னு நேமியன் மேவிட மேவினுள்.**

கைகேயி உடன்வராதது ஏனோ? இவர்கள் இருவரும் அவளைத் தனித்து வைத்திருந்தார்கள் போலும்! பட்டாபிஷேகம் நடக்கப் போவதைப் பற்றித் தசரதன் தன் மனைவியரிடம் பிரஸ்தாபமேசெய்யாமல் ராஜசபையில் விஷயத்தை முடிவுசெய்து அறிக்கை வெளியிட்டது ஏனோ? புத்ரர்கள் இருவர் வெளியூர் போயிருக்கும் சமயம் அவசரமாக மறுநாளே முகூர்த்தம் வைத்தது ஏனோ?

சபை கலையுமுன் 'நாளைக்கே பட்டாபிஷேகம்' என்று மீண்டும் அறிவித்துத் தனது மாளிகைக்குச் செல்லுகிறுன் தசரதன். குரு வஸிஷ்டர் ராமனுக்குச் சபை நடுவே ஒரு புத்திமதி கூறுவதாகக் கம்பன் வர்ணிக்கிறுர். 'எவரோடும் மன விரோதம் இல்லையென்றல் போர் உண்டாவதற்கே வழியில்லை. புகழ் குன்றுது நிற்கும். படைகளுக்கும் சேதம் ஏற்படாது. அப்படிப்பட்ட நிலையில் நாம் வேரோடு அழிய வேண்டுமென்று எவராவது வேண்டும்படியான நிலை ஏற்படுமா?'

பகை

**யாரொடும் பகைக்கோள் இலது என்ற பின்**
**போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது. தன்**
**தார் ஒடுங்கல் செய்யாது, அது தக்கபின்**
**வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ ?**

அற

'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்' என்ற பழமொழியைக் கருத்தில் கொண்ட பாடல். இதிலும் ஒரு தத்துவம் அமைந்துள்ளது. பின்னர் சூர்ப்பனகையைக் குரூபியாக்கிப் பகை தேடிக்கொள்ளும் நிலையில் இந்த அரிய போதனை நினைவில்லாமல் போய் விடுகிறது.

மாளிகையில் தனிமையில் இருக்கும்போது தசரதனுக்கு மன அமைதியில்லை. ஸுமந்திரனை அழைத்து 'ராமனை மீண்டும் வரச்சொல்' என்கிறுன். இது கேட்ட ராமன் 'என்ன ஆயிற்று? ஏன் மறுபடி கூப்பிடுகிறுர்?' என்கிறுன். சந்தேகம் ஏற்படுகிறது. ('சங்கான் விதோ அபவத்') அரசனுக்கு மனம் மாறிவிட்டது என்று நினைக்கிறுன் போலும்.

த்வா:ஸ்தைராவேதிதம் தஸ்ய ராமாயாகமனம் புன:
ச்ருத்வைவ சாபி ராமஸ்தம் ப்ராப்தம் சங்கான்விதோஅபவத் 4

பரபரப்புடன் வந்து சேருகிறுன் ராமன். மகனுடன் தனிமையில் இருக்கும்போது வாய்விட்டுப் பேசுகிறுன் தந்தை. 'எனக்கோ

வயதாகிவிட்டது. எல்லா வித சுகங்களையும் கண்டுவிட்டேன். உவமையில்லாப் புத்ரனாக உன்னையும் பெற்றேன். இனி நான் செய்ய வேண்டியது உன் மகுடாபிஷேகம் ஒன்றுதான். இப்போது நீ என் சொல்படிக் கேட்க வேண்டும். இன்றைய தினம் எல்லோரும் உன்னையே யுவராஜாவாக்க விரும்புகிறார்கள். ஆதலால் உடனே உனக்குப் பட்டம் கட்டத் தீர்மானித்திருக்கிறேன். நாளைக்கே நன்னாள் என்று புரோகிதர்கள் சொல்லுகிறார்கள். நாளை நீ முடி சூடுவாயாக. என் மனம் விரைவினில் காரியத்தை முடிக்கத் தூண்டுகிறது. இத்தகைய காரியங்களுக்கு இடையூறுகள் பல ஏற்படும். பரதன் வெளியூர் போயிருக்கிறான். இதுவே உன் மகுடாபிஷேகத்துக்குத் தக்க சமயம் என்று நினைக்கிறேன். பரதன் மிகவும் நல்லவன், உன்மேல் அபிமானம் நிறைந்தவன். ஆயினும் மனித புத்தி ஸ்திரமில்லாதது. யாரை நம்ப முடியும்?' என்று பலவாறாக உள்ளத்தில் புதைந்து கிடக்கும் குமுறலையும் பீதியையும் வெளியிடுகிறான்.

விப்ரோஷிதஸ்ச பரத; யாவதேவ புராதித:
தாவதேவாபிஷேகஸ்தே ப்ராப்தகாலோ மதோ மம
கிம் து சித்தம் மனுஷ்யாணாம் அநித்யமிதி மே மதி: 5

இது கேட்ட ராமன் தந்தையை வணங்கித் தன் இல்லத்துக்குச் சென்றான் என்று குறிப்பாகச் சொல்லுகிறார் வால்மீகி. கைகேயிக்கு அளித்தவாக்கு — 'உன் வயிற்றில் பிறக்கும்மகனே அரசாள்வான்' என்று அவளை மணக்கும்போது அளித்த வாக்கு — மன்னன் மனத்தில் உறுத்திக்கொண்டே இருப்பது விந்தையல்ல. இவ்விவரம் அரண்மனையில் எல்லோருக்கும் தெரிந்திருப்பதும் சகஜமே. ஆனால் அரசியல் தந்திரத்தால் நிலையைக் கையாண்டுச் சபையில் தீர்மானத்தை நிறைவேற்றியதும், திட்டத்தை ராமனிடம் தெரிவித்ததும் அதற்கு அவன் ஆக்ஷேபனை சொல்லாததும், அரண்மனையில் நிலவிய பூசல்களைக் குறிக்கின்றன. வாய்விட்டுத் தந்தையின் கருத்தை ஆமோதிக்காமல், ராமன் மௌனமாகத் தன் இசைவைத் தெரிவித்தது கவனிக்கத் தக்கது.

அங்கிருந்து நேராகத் தன் தாயின் அந்தப்புரத்துக்குப் போய் நற்செய்தி சொல்லி நல்வாழ்த்து வேண்டுகிறான். நெடுநாள் ஆவலுடன் எதிர்பார்த்த செய்தியைக் கேட்டு மகிழ்ந்த கோசலை 'சந்தோஷம் மகனே, நீடூழி வாழ்க. உன் விரோதிகள் ஒழிந்தனர். ராஜ்யலக்ஷ்மியை அடைந்தபின் எனக்கும், சுமித்திரைக்கும், எங்கள் உறவினருக்கும் சந்தோஷம் உண்டாகும்படி செய்' என்று பதிலளிக்கிறாள்.

வத்ஸ ராம சிரம் ஜீவ ஹதாஸ்தே பரிபந்த்தின:
ஞாதீன்மே த்வம் ச்ரியா-யுக்த: சுமித்ராயாஸ்ச நந்தய 6

கைகேயியை மட்டும் தவிர்த்துப் பேசுகிறாள். அவள்தான் விரோதியா?

இதை ஆமோதிப்பதுபோல் ராமனும் லக்ஷ்மணனைப் பார்த்து 'என்னுடன்கூட இப்புவியை நீயும் ஆள்வாயாக. எனது உயிருக்குயிரான உனக்கு யோகம் வந்திருக்கிறது. என் வாழ்வும் ராஜ்யமும் உன்பொருட்டே போற்றத்தக்கது' என்று புன்னகையுடன் கூறுகிறான்.

இங்கு குதூகலம் மேலிடுகிறது. ஜனங்களின் ஆரவாரம். தான தர்மங்கள் தடபுடல். இதையெல்லாம் எதிர்மாளிகையின் உப்பரிகையிலிருந்து கவனிக்கிறாள் கூனி.

எப்போதும் தன் யஜமானியின் நலத்தையே கோருபவள். வெளி தேசத்திலிருந்து வந்த கைகேயி உஷாராய் இருக்க வேண்டுமென்பது அவள் கருத்து. (கேகய நாடு என்பது பஞ்சாப்.) கொண்டாட்டத்தின் காரணம் அறிந்தவுடன் அவளுக்கு விஷயம் புரிகிறது; பல எண்ணங்கள் அலைபோல் உதிக்கின்றன. ராமனுக்கு மன்னன் முடிசூட்டினால் அதன் விளைவு என்னவென்பது அநுபவம் முதிர்ந்த தாதிக்குத் தெரியும். தன் யஜமானியின் நலன் ஒன்றையே நோக்கும் அவள் கண்ணுக்கு விபரீதம் தென்படுகிறது. 'சக்களத்தி மகன் அரசனானால் இவள் கதி என்ன?' என்ற ஒரே பிரச்னை அவள் மனத்தில் புகுந்து தூண்டுகிறது.

கூனியைப் 'பாபதர்சினி' என்று வர்ணிக்கிறார் வால்மீகி. பாபியாகத் தோன்றுபவள் என்று அர்த்தம். எதிலும் கெடுதலையே காண்பவள் என்றும் சொல்லலாம். 'கொடுமனக் கூனி' என்கிறார் கம்பன். (கொடு மனக்கூனி என்று பிரித்தால் மனமே கூனலானது என்றும் பொருள்.) அவள் நிலை எப்படி இருக்கிறது?

பொறாமை மிகுதியால் நெஞ்சம் துடிக்கிறது. தன் நிலை குறையுமே என்ற பயத்தினால் வேதனை. கண்களில் கோபம், பேச்சில் தொடர்பு இல்லை. மூவுலகுக்கும் ஆபத்தை உண்டாக்குபவள்போல் தோன்றினாள் என்கிறார் கம்பன்.

**தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினாள்**
**ஊன்றிய வெகுளியாள் உளைக்கும் உள்ளத்தாள்**
**கான்ற எரி நயனத்தாள் கலிக்கும் சொல்லினாள்**
**மூன்றுலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்.**

பரபரப்புடன் சென்று, உறங்கும் கைகேயியை எழுப்புகிறாள். (பழைய தாதியின் ஸ்வாதீனம்.) 'எழுந்திரு. முட்டாள். வந்துவிட்டது ஆபத்து. உன் பெருமை, செல்வாக்கு, எல்லாம் ஆற்று வெள்ளம் கோடையில் வற்றிப் போவதுபோல் குறைந்துவிட்டது' என்று விஷயத்தைச் சொல்லாமல் உணர்ச்சியைப் பெருக்குகிறாள்.

உத்திஷ்ட மூடே கிம் சேஷே பயம் த்வாம் அபிவர்த்ததே
................
................
சலம் ஹி தவ ஸௌபாக்யம் நத்யா: ஸ்ரோத இவோஷ்ணகே 7

கைகேயிக்கு ஒன்றும் விளங்கவில்லை. சற்று கவலையுடன் 'என்ன ஆயிற்று? எல்லாரும் க்ஷேமம்தானே?' என்று கேட்கிறாள். கைகேயியின் இனிய பேச்சும் அறியாமையும் அவளுக்குக் கோபத்தை மேலும் ஊட்டுகின்றன. யஜமானியின் நன்மையைக் கோரும் தாதி, மேலும் சொல்லுகிறாள் : 'அழிவில்லாப் பெருமை அழிந்து போகும் சமயம் நெருங்கிவிட்டது. நாளைக்கே ராமனை அரசனாக்கப் போகிறார் தசரதன். இதைக் கேட்டதும் துயர்க் கடலில் முழுகினேன். எனக்குக் கோபம் தாங்கவில்லை. உன் நலத்தை நாடி இங்கு ஓடி வந்தேன்.'

கைகேயி ஒன்றும் சொல்லாமல் கேட்டுக் கொண்டிருக்கிறாள். கூனி மேலும் அடுக்குகிறாள். 'நீ சுகமாய் இருந்தால்தான் எனக்கு நன்மை. உனக்குத் துக்கம் நேர்ந்தால் அது எனக்குத் துக்கம். நீயோ அறியாப் பெண்ணாய் இருக்கிறாய். அரசகுலத்தில் பிறந்து, அரசனை மணந்தும் அரசியல் தந்திரங்களின் கொடுமையை உணரவில்லையே.'

நராதிபகுலே ஜாதா மகிஷீ த்வம் மஹீபதே:
உக்ரத்வம் ராஜதர்மாணாம் கதம் தேவீ ந புத்யஸே 8

அநுபவம் பேசுகிறது. வால்மீகியின் ச்லோகத்தை வார்த்தைக்கு வார்த்தை பாடலில் அமைக்கிறார் கம்பன்.

**அரசர் இல் பிறந்து பின்னரசர் இல் வளர்ந்து**
**அரசர் இல் புகுந்து பேரரசியான நீ**
**கரை செயற்கருந்துயர்க்கடலில் வீழ்கின்றாய்**
**உரை செயக் கேட்கிலை, உணர்தியோ? என்றாள்.**

தசரதன் தந்திரம் என்ன என்று விளக்குகிறாள். 'பரதனை உன் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டு அக் கொடியவன் நாளைக்கே ராமனை ராஜாவாக்குகின்றான். இந்தக் கணவனைச் சத்ருவென்று கருதாமல் கணவனாக நினைப்பது பாம்பை அணைத்துக் கொள்வது போலாகும். உன் கணவன் பேச்சில் இனியவன், செய்கையில் தீயவன். வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கும் அபலை நீ. அன்பை உன்னிடத்தில் சொரியும் கணவன், நடத்தையில் கௌசல்யைக்கு மேன்மை அளிக்கிறான்.' கைகேயி முகத்தில் ஒன்றும் மாறுதலில்லை போலும்.

மேலும் விளக்குகிறாள். 'ராமன் அரசனாகிவிட்டால் நீயும் உன் உறவினரும் அழிந்துபோவது திண்ணம். எப்படியாவது உன் மகனையும் உன்னையும் என்னையும் காப்பாற்ற வழிதேடு. தாமதிப்பதற்கு நேரம் இல்லை. சீக்கிரம். திகைத்து நிற்கிறாயே?' என்று தூண்டுகிறாள்.

த்ராயஸ்வ புத்ரமாத்மானம் மாம் ச விஸ்மயதர்சனே 9

'என்னையும்' என்று சேர்த்துக் கொண்டது தன்னையறியாமல் வெளிப்படும் இயற்கைக் குணம். எந்நிலையிலும் சுயநலத்தைக் கலக்காமல் பேசுவது கடினம் என்பதைக் குறிப்பாகச் சொல்லுகிறார் வால்மீகி.

இந்த சுயநலப்பான்மையைப் புரிந்துகொண்டுவிட்டாள்போலும் கைகேயி. ஒரு பொன் ஆபரணத்தை எடுத்துக் கொடுக்கிறாள் கூனிக்கு. வேலைக்காரிக்கு வெகுமதி! உளறுகிறாள் என்று தெரிந்தும் தன்மேல் வாஞ்சையால் பேசுகிறாள் என்ற சலுகை. 'இதைவிட மகிழ்ச்சியான சேதி யார் சொல்லப் போகிறார்கள்? இன்னும் என்ன வேண்டும், கேள், ராமனும் பரதனும் எனக்கு ஒன்றுதான்.

ராமே வா பரதே வாஅஹம் விசேஷம் நோபலக்ஷயே 10

ராமன் அரசனானால் எனக்கு சந்தோஷம்தான். ஆகையால் உனக்கு இன்னும் என்ன வேண்டுமோ சொல்' என்று மீண்டும் வெகுமதி தருவதாகச் சொல்லுகிறாள்.

**தூயவள் உவகை போய் மிகச் சுடர்க்கெலாம்**
**நாயகம் அனையதோர் மாலை நல்கினாள்.**

கைகேயியைத் 'தூயவள்' என்று குறிப்பிடுகிறார் கம்பன். ஏன்?

வெகுமதி அளித்தபின் அநீதியான பேச்சைக் கண்டிக்கிறாளாம். 'நீ என்ன உளறுகிறாய்? உன் பேச்சு எனக்கோ, என் மகன் பரதனுக்கோ இதமானதன்று. உனக்கும் சேர்ந்து ஏதோ ஆபத்து வந்துவிட்டதாக நினைத்தாயல்லவா? நீ உனக்குமே நன்மையைத் தேடுபவளல்ல, விதி உன்னைத் தூண்டுகிறது. வாய்க்கு வந்தபடி பேசுகிறாய்' என்று கடிந்து கொள்கிறாள்.

**எனக்கு நல்லையும் அல்லை நீ என் மகன் பரதன்**
**தனக்கு நல்லையும் அல்லை, அத்தருமமே நோக்கின்**
**உனக்கு நல்லையும் அல்லை. வந்தூழ்வினை தூண்ட**
**மனக்கு நல்லன சொல்லினை, மதியிலா மனத்தோய்.**

பெருந்தன்மை, உயர்குலப் பண்பு, ராமன்பால் அன்பு எல்லாம் ஒருங்கே ஒலிக்கின்றன.

கூனிக்கோ ரோஷம் பொங்குகிறது. 'பொன்மாலை யாருக்கு வேண்டும்? என்னை என்ன நினைத்தாய்?' என்று கேட்பவள்போல

அதை விட்டெறிகிருள். தரையே குழியாகும்படி வேகமாய் எறிந்தாள் என்கிருர் கம்பன்.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தால் அதன் விளைவு என்ன என்பதை உணர்ந்து கொள்ளாமல் தனக்கு வெகுமதி அளித்த கைகேயிமீது கோபம் உண்டாகிறது. புரிந்துகொள்ள முடியாவிட்டால் மறுபடி சொல்லலாம். ஆனுல் வேலைக்காரியெனக் கருதி துச்சமாய் நடத்தினுல்?

'நீ எதைக் கண்டு மகிழ்கிருய், அறியாப் பெண்ணே! துயர்க் கடலில் அமிழ்ந்து போவதை உணராமல் உவகை காட்டும் உன் அசட்டுத்தனம் பார்க்கப் பார்க்கச் சிரிப்பாய் இருக்கிறது. நீ மதியற்றவள் என்றே நினைக்கிறேன். போட்டியாயுள்ள ஒரு சக்களத்தியின் மகன் மேன்மையைக் கேள்வியுற்று அறிவுள்ளவள் எவளாவது மகிழ்வாளா? கோசலை கெட்டிக்காரி. பிழைக்கும் வழி தெரிந்தவள்' என்று இடித்துக் காட்டுகிருளாம்.

**வீழ்ந்தது நின் நலம் திருவும் வீழ்ந்தது**
**வாழ்ந்தனள் கோசலை மதியினுல் என்ருள்.**

பிறரைத் தூண்டிவிட இகழ்ச்சி ஒரு நல்ல கருவி. புத்தியில்லாதவள் என்று இடித்துக் காட்டினுல் புத்தி உள்ளவளென்று நிரூபிக்க ஏதாவது செய்து காட்ட வேண்டும் அல்லவா?

'கௌஸல்யை அதிர்ஷ்டசாலி. மகன் நாளை முடி சூடியதும் அவள் அளவிலா ஆனந்தமும் செல்வமும் அடையப் போகிருள். நீ அவளை அணுகி, கைகட்டி நின்று வேலைக்காரிபோல் சேவை செய்யப் போகிருய்.'

உபஸ்த்தாஸ்யஸி கௌஸல்யாம் தாஸீவ த்வம் க்ருதாஞ்ஜலி: 11

'ராமனுக்கு உகந்த மங்கையர் மகிழ்வர். பரதன் தாழ்வடைந்து, அவனைச் சூழ்ந்த பெண்களெல்லாம் மகிழ்விழந்து நிற்பர்!' என்று சொல்லிக்கொண்டே போகிருள்.

கைகேயியின் மனம் வேறு எங்கோ இருக்கிறது. ராமனைப்பற்றிக் கேட்டவுடன் அவனது குணங்களையே மேலும் புகழத் தொடங்குகிருள். 'அவன் தருமம் அறிந்தவன். நல்வாக்கு நிறைந்தவன். நன்றி உள்ளவன். சகோதரரையும் ஊழியரையும்கூடத் தன் மக்களைப்போல் பராமரிக்கும் தன்மை உடையவன். அவனுக்கு மகுடாபிஷேகம் என்று கேள்வியுற்று உனக்கு எரிச்சல்?

ஸந்தப்யஸே கதம் குப்ஜே ச்ருத்வா ராமாபிஷேசனம் 12

ராமன் ஆண்டபின் தன்னுலே பரதனுக்குப் பட்டம் கிடைக்கப் போகிறது. நீ ஏன் வீணில் தவிக்கிருய்? கௌஸல்யையிடம் இருப்பதைவிட என்னிடம் ராமனுக்கு அன்பு அதிகம்.'

கௌஸல்யாதோ அதிரிக்தம்ச ஸது சுச்ரூஷதே ஹிமாம் 13

வெகுளியைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விடுகிருள் கூனி. 'பெருந்துயர் வரப்போகிறது. அதை உணராத உன் மூடத்தனம் பெரிதுதான். ராமன் அரசனுவான், அதற்குப் பின் அவன் மகன், பின் அவன் மகன், இப்படித்தான் வரிசைக் கிரமம். அரசனுடைய பிள்ளைகள் எல்லோரும் ராஜாவாக முடியுமா? மூத்தவனுக்குத்தான் உரிமை. அரச பரம்பரையிலிருந்து அடியோடு விலக்கப் பார்க்கிருர்கள் பரதனை. இதைப் பற்றிய கவலையுடன் உன்னிடம் விரைந்து வந்தால், நீ உன் சக்களத்தியின் மேன்மையை முன்னிட்டு எனக்கு வெகுமதி அளிக்கிருயே?

'பதவிக்கு வந்தவுடன் ராமன் பரதனை நாட்டைவிட்டே ஓட்டி விடுவான். ஏன், உலகிலிருந்தே நீக்கிவிடலாம். யார் கண்டது? சிறு பிராயத்திலிருந்தே அநேகமாகத் தாய்மாமன் வீட்டில் வளர்ந்து வருகிருன் பரதன். அருகில் இருந்தால் அல்லவோ பிரியம் ஏற்படும்? பரதனுக்கு ஏதேனும் ஆபத்து விளைவிப்பான் ராமன். இதில் சந்தேகமில்லை. ஆகையால் நான் சொல்வதைக் கேள். கேகய நாட்டிலிருந்து அப்படியே எங்காவது காட்டுக்குப் போகட்டும் உன் மகன். உயிரோடாவது இருப்பான். இதுதான் நலம். உனக்கும் இதமானது.'

விஷமமாய்ப் பேசுகிருள் என்று நமக்குத் தோன்றலாம். ஆனுல் அவள் பேச்சில் கோர்வையும் அரசியல் அறிவும் அடங்கியிருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. மேலும் அறிவு புகட்டுகிருள். 'ஒருவேளை நியாயமாகவே பரதன் ராஜ்யத்தை அடைந்தாலும் ராமனுக்கு மனவிரோதம் இருக்குமல்லவா? செல்வத்தை அடைந்தவன்கீழ் எப்படி செல்வமிழந்தவன் சகஜமாய் வாழ முடியும்? பரதன் நிலையைக் கவனி. நடுக்காட்டில் சிங்கத்திஞல் ஓடஓட விரட்டப்படும் யானைபோல் தவிக்கிருன். அவனைக் காப்பாற்று. தவிர, முன்பெல்லாம் தசரதன் அன்பும் தயவும் நிறையப் பெற்று அந்த கர்வத்திஞல் எவ்வளவு தடவை கௌஸல்யைக் கேவலமாக நடத்தியிருக்கிருய்? அதை அவள் மறப்பாளா? நாளைக்கே அவள் மகன் அரசனுனவுடன் உன்னையும் உன் மகனையும் கொடுமைப்படுத்துவாள். நன்ருய் யோசித்துப் பார். உன் மகன் அரசு பெறுவது எப்படி, ராமனை அப்புறப்படுத்துவது எப்படி என்று யோசித்துப் பார். அதற்குத் தக்க வழிதேடு.'

மனதில் பீதியைக் கிளப்பிவிட்டாள். இதுவரை லக்ஷியம் செய்யாத கைகேயி மனம் குமுறுகிறது.

ஆபத்து உண்மையில் ஏற்படவேண்டிய அவசியமில்லை. அகக் கண்முன், கற்பனையில் ஆபத்து தோன்றினால் போதும். நிலை தடுமாறி விடும்.

தனக்குத் தாழ்வு வரப் போவதாகச் சொன்னாள் கூனி. அதைப் பொருட்படுத்தவில்லை கைகேயி. பரதனுக்கு ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்று தூண்டினாள். பலிக்கவில்லை. பரதன் உயிருக்கு ஆபத்து என்றாள். தாய் உள்ளம் நடுங்குகிறது.

மேலும், அரசன் உள்ள வரை தன் நிலைக்குக் குறைவில்லை என்ற முழு நம்பிக்கையுள்ள இளம் மனைவி, அரசன் பதவி துறந்தால் என்ன ஆகும் என்று யோசிக்கிறாள். புதல்வரில் எவன் அரசனோ அவன் தாயல்லவா ராஜமாதா? இதுவரை உயர் நிலையிலிருந்துவிட்டு இனி கௌஸல்யைக்கு முதல் ஸ்தானம் வாய்க்க அதைப் பார்த்துக்கொண்டுக் கைகட்டி நிற்பதா? சக்களத்தி உள்ளம் கொதிக்கிறது. மனம் மாறிவிட்டது!

இந்த மூன்று நிலைகளையும் படிப்படியாகச் சொல்லுகிறார் கம்பன்.

கூனி சொல்லுகிறாள், 'நீயும் உன் மகனும் வேண்டுமானால் துயரப்படுங்கள். ஆனால் உன் சக்களத்தியின் தாதியர்க்கும் தாதியாய் என்னால் இருக்க முடியாது.'

**பேதை நீ, பேதின்றிப் பிறந்த சேயொடு**
**மாதுயர் படுக. நான் நெடிது உன் மாற்றவள்**
**தாதியர்க்காட் செயத் தரிக்கிலேன் என்றாள்.**

அடுத்தபடி பரதனுக்காக உருகுகிறாள். 'சீதையும் ராமனும் உயர்ந்த ஆசனத்தில் இருப்பர். உன் மகன் வெறுந்தரையில் நிற்பான்.' புதல்வரைப்பற்றிப் பேசும்போதுத் தாய்மாரையும் ஒப்பிட்டுக் கூறுகிறாள் கூனி. 'கோசலை எடுத்த காரியத்தைக் கைவிடாமல் மகனுக்காகப் பெரிய காரியம் சாதித்துவிட்டாள். ஆனால் உன் வயிற்றில் பிறந்த பரதன் பிறந்து என்ன பயன்? அரசையிழந்து, இருக்கவும் இறக்கவும் மாட்டாமல் தவிப்பான்.'

**மறந்திலள் கோசலை உறுதி, மைந்தனும்**
**சிறந்தனன் திருவில். திருவு நீங்கினான்**
**இறந்திலன், இருந்திலன், என் செய்தாற்றுவான்?**
**பிறந்திலன் பரதன் நீ பெறுதலால் என்றாள்.**

'தகப்பன்தான் கொடியவனென்றால், தாயுமா தீயவளாய் இருக்கவேண்டும்? ஐயோ, பாவம்! பரதனே, நீ எப்படி வாழப் போகிறாய்?' என்று பிரலாபிக்கிறாள்.

**தந்தையும் கொடியன் நற்ருயும் தீயளால்**
**எந்தையே, பரதனே, என் செய்வாய்? என்ருள்.**

(வெகுளியாய் ஒன்றும் செய்யாமல் நிற்பதே தீமையென்று குறிப்பு.) பரதனிடம் எவ்வளவோ நல்ல குணங்கள் இருந்தும் அவை யெல்லாம் புல் தரையில் வார்த்த அமுதம்போல் வீணுகின்றனவே என்று வருந்துகிருள் கூனி.

**எல்லையில் குணங்களும் பரதற்கே, அது**
**புல்லிடையுகுத்த அமுதேயும் போல் என்ருள்.**

நாடகம் வளர்கிறது. கற்பனையைத் தூண்டியதும் கைகேயி மனம் பேதலிக்கிறது. அது கண்டு சொல்வன்மை வளர்கிறது கூனிக்கு. 'இனிமேல் உனக்கும் உன் மகனுக்கும் இங்கு என்ன உரிமை? அவள் (கோசலை) மனமிரங்கி ஏதாவது கொடுத்தால் உண்டு, அவ்வளவு தான்' என்கிருள்.

**பரியும் நின்குலப் புதல்வற்கும் நினக்கும் இப்படிமேல்**
**உரியதென், அவள் உதவிய பொருள் அல்லால்?**

வரப்போகும் தாழ்வைச் சித்தரிக்கிருள். 'உன்னை வந்தடைந்து யாராவது தானம் கேட்டால் அவர்களுக்குக்கூட நீ அவளைக் கேட்டுத் தான் பிச்சையிடுவாயோ?'

**ஈண்டுவந்துனை இரந்தவர்க்கு இருநிதி அவளை**
**வேண்டி ஈதியோ?**

ஒரு வீட்டில் பிச்சை போடவும் உரிமை இல்லாதவர் எல் லோருக்கும் கீழ்ப்படிந்தவர்கள் தானே? இது மட்டுமல்ல. எந்தப் பெண்ணுவது தன் பிறந்த வீட்டு உறவினரின் மதிப்பை இழக் கலாமா? 'இனி வருங்காலத்தில் உன் பிறந்த வீட்டுக்காரர்கள் பார்த்து மகிழ்வது உன் சக்களத்தியின் செல்வாக்குத்தான்' என்று இடித்துக் காட்டுகிருள்.

**உந்தை, அன்னை, உன்கிளைஞர், மற்றுன் குலத்துள்ளோர்**
**வந்து காண்பது உன் மாற்றவள் செல்வமோ? மதியாய்!**

இப்படிப் பலவாருகச் சொல்லி இதமாகப் பேசி கைகேயியைத் தன்னம்பிக்கை இழக்கச் செய்தது கூனியின் வெற்றி. 'தூயசிந்தையும் திரிந்தது' என்கிருர் கம்பன்.

மகனுக்குப் பட்டம் கிடைக்க வேண்டுமென்ற யோசனையை நிராகரித்தவள், சக்களத்திக்கு வரப் போகும் மேன்மையை நினைத்து

அஸூயைப்பட்டு, தனக்கு வரப்போகும் தாழ்வைக் கற்பனை செய்துப் பயந்தது இக்காட்சியின் விசேஷம். 'தாயினுமன்பொடு தாழ்ந்து வணங்கினன்' ராமன். அவன்பால் அதிக அன்பு கொண்டிருந்தாள் சிற்றன்னை. அத் தூயவள் 'தன்னேரில்லாத் தீயவள்' என்று மாறி விடுகிறாள். அந்த அளவுக்கு அவளது நெஞ்சில் கொடுமை உண்டாகிறது.

சாதாரண நிலையில் பதுங்கிக் கிடக்கும் தீய குணம் ஆபத்து வந்ததும் தலைதூக்கி விடுகிறது. பிறர் கொடுமை செய்வாரோ என்ற எண்ணமே பயத்துக்குக் காரணம். அந்த பயமே கொடுமையின் காரணம்!

சந்தர்ப்பங்களுக்கு உட்பட்டுச் சுய இயல்புக்கு மாறாக, பிறர் நினைப்பதற்கு விபரீதமாகச் சில சமயம் நாம் நடக்கிறோம். ஆனால் தீமையிலும் நன்மை பயக்கும் என்பது கம்பன் கருத்து. கைகேயி அன்று செய்த கொடுமையாலன்றோ இன்று ராமன் புகழ் உலகெல்லாம் ஓங்கி நிற்கிறது, நாம் ராமாயண அமுதைப் பருகுகிறோம்? என்கிறார். கைகேயியைத் 'தூமொழி மடமான்' என்கிறார். அவளது பேதை மனத்தைக் குறிக்கிறார்.

மனம் மாறிவிட்டது. ஆனால் என்ன செய்வது, எப்படிச் செய்வது என்று தெரியவில்லை. உணர்ச்சிதான் மேலோங்கி நிற்கிறது.

'நீ சொன்னபடியே செய்கிறேன். ராமனைக் காட்டுக்கனுப்பி பரதனை அரசனாக்குவேன். ஆனால் அதை எப்படி சாதிப்பது? நீதான் உபாயம் கூறவேண்டும்' என்று கூனியை வேண்டிக் கேட்கிறாள் கைகேயி. 'ஏன், உனக்கு நினைவில்லையா? முன்பு மன்னன் கொடுத்த வரம் இரண்டையும் உபயோகிக்க இதுவே தருணம். சம்பரனை எதிர்த்துப் போர் செய்த சமயம் நீ செய்த உதவிக்கு மகிழ்ந்து மன்னன் வரமளித்தார் என்று நீ சொல்லித்தான் எனக்குத் தெரியும். நீ மறந்துவிட்டாய், உன் மேலுள்ள அன்பினால் நான் ஞாபகம் வைத்திருக்கிறேன்.

'ராமனுடைய அபிஷேகத்துக்கான ஏற்பாடுகளை நிறுத்து. உன் வரத்தைக் கேள். பரதன் அரசாள வேண்டும். ராமன் வனம் போக வேண்டும். பதினான்கு வருடம் ராமன் காட்டில் இருந்தால் அதற்குள் உன் மகன் பிரஜைகளின் அன்பைப் பெற்று வேரூன்றி விடுவான்.

'சரி, அரசன் வரும் சமயமாயிற்று. நீ கோபமாக இரு. நகைகளை அகற்றி, பழைய ஆடையணிந்து, தரையில் விழுந்துகிட. உன் துயரைக் கண்டுத் தவிப்பார் உனக்காகத் தீயில் குதிக்கத் துணிந்த மன்னன். ஆனால் அவரிடம் பேசாதே. திரும்பியும் பார்க்காதே. பலபல அணிகளையும் பொன்னையும் உன் காலடியில் சொரிவார். அவற்றில் மனத்தைச் செலுத்திவிடாதே!

'மன்னன் வாக்கை நினைவுறுத்தி வரம் கேள். காட்டையடைந்தால் ராமன் இருந்த இடம் தெரியாமல் போய்விடுவான். விரோதி தொலைந்தபின் பரதன் சுகமாய் வாழலாம். ஒருவேளை 14 வருடம் கழித்து ராமன் திரும்பி வந்தாலும் வேரூன்றிய பரதனை அசைக்கவும் முடியாது' என்று முழு விவரங்களுடன் திட்டம் போட்டுக் கொடுக்கிறாள் கூனி. (ஏழு வருடம் ஒருவர் காணுமல்போய் அவரைப்பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லையென்றால் அவரைஇறந்துவிட்டதாகக் கருதலாம் என்பது ஸ்மிருதி. சந்தேகத்துக்கு இடமின்றி வன வாஸத்தை இரண்டு மடங்காக்கி விட்டாள் கூனி!)

கூனியின் பேச்சைக் கேட்கக் கேட்க அவள் மகா புத்திசாலி யென்று தோன்றுகிறது கைகேயிக்கு. வியப்பு மேலிட, அவள் அழகாகவும் தோற்றமளிக்கிறாள் என்கிறார் வால்மீகி.

'நீ இவ்வளவு ஹிதமானவள் என்று உணராமல் போனேனே, கூனி.

த்வமேவ து மமார்தேஷு நித்யயுக்தா ஹிதைஷிணீ 14

நீ எவ்வளவு அழகாய் இருக்கிறாய்! பரதன் நாளை முடி சூடட்டும். உடனே உனக்கு எப்படி அலங்காரம் செய்து வெகுமதி அளிக்கிறேன், பார். உனக்கு எத்தனை தாதிமார் அமர்த்துகிறேன், பார்' என்று மனம் தடுமாறிப் பேசுகிறாள்.

பாதௌ பரிசரிஷ்யந்தி யதைவ த்வம் ஸதா மம 15

''எனக்கு நல்லையும் அல்லை, என் மகன் பரதன் தனக்கு நல்லையுமல்லை' என்று சினந்து கூறிய கைகேயி மனம் மாறியவுடன் 'இனியை என் மகனுக்கு' என்கிறாள்.

**எனை உவந்தனை, இனியை என் மகனுக்கு**

அது மட்டுமல்ல. 'இவ்வளவு நல்ல யுக்தி சொன்ன நீதான் இனி பரதனுக்குத் தாய்' என்கிறாளாம்!

**உலகமென் ஒரு மகற்கீந்தாய்,**
**தரைக்கு நாயகன் தாய் இனி நீ**

புகழுரையால் தடுமாற்றம் அடையாத கூனி 'ராமன் முடி தரித்தால் நீயும் உன் மகனும் தவிப்பீர்கள்' என மறுபடி நினைவுறுத்தி வெளியேறுகிறாள். அவளை நிறுத்தி மீண்டுமொரு முறை அணைத்துப் புகழ்ந்து 'கவலைப்படாதே. இனி என்னை அசைக்க முடியாது' என்று உறுதி கூறுகிறாள் அரசி.

இவ்விரண்டும்
இன்று எய்தாவெனில் அரசன்முன் என்னுயிர்துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென் யான், போதி நீ என்றுள்.

உடனே அரசன் வருகையை நினைத்துத் தன் திட்டப்படி அலங் கோலம் செய்து கொள்கிறுள். நகையெல்லாம் கழற்றி எறிந்ததுமின்றி ஒற்றைப் பின்னலைப் பற்றிக் கிடந்தாள் என்கிறுர் வால்மீகி. (பழங் காலத்தில் ஒற்றைப் பின்னல் சோகத்தைக் குறிக்கும்.) 'திலதமும் அழித்தாள்' என்கிறுர் கம்பன் பின்வரும் அவலத்தைக் குறிக்கும் வண்ணம்.

பாம்பைப்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு கோபமே உரு வாய்க் கிடக்கும் கைகேயியைப் பார்த்து மனமகிழ்கிறுள் கூனி. காரியம் கைகூடி விட்டதென்றே தோன்றுகிறது.

# 4

## தருமம் எங்கே?

மாலையில் கைகேயியை நோக்கி வருகிறான் தசரதன். ராமனுக்குப் பட்டம் கட்ட ஏற்பாடுகளை எல்லாம் உத்தரவிட்டு, காதலிக்கு நற்செய்தி சொல்ல வேண்டுமென வருகிறான்.

அலங்கோலமாய்க் கீழே புரண்டு கிடக்கும் மனைவியைப் பார்த்துத் திகைக்கிறான். 'வயோதிகன் உயிருக்குயிரான இளம் மனைவியைப் பார்த்தான். குற்றமற்றவன் தீமையில் முனைந்துவிட்டவளைத் தரையிலே கண்டான்' என்கிறார் வால்மீகி.

ஸ வ்ருத்தஸ் தருணீம் பார்யாம் ப்ராணேப்யோபி கரீயஸீம்
அபாப: பாபஸங்கல்பாம் ததர்ச தரணீதலே 1

'உனக்கு என்ன, உடம்பு சரியில்லையா?' என்கிறான். பதிலில்லை. யாரோ அவமதிப்பாய்ப் பேசியிருப்பார்கள் என்று ஊகித்துக் குற்றவாளியைத் தண்டிப்பதாக வாக்களிக்கிறான்.

அன்போடு அணைத்து எடுத்துச் சமாதானம் செய்யப் பார்க்கிறான். 'நீ ஏன் துக்கப்பட வேண்டும்? அழாதே. உனக்கு என்ன வேண்டுமானாலும் செய்கிறேன். தூக்கு தண்டனைக்கு உள்ளாயிருப்பவனை விடுவிக்க வேண்டுமா? அல்லது நிரபராதியைக் கொல்ல வேண்டுமா? ஏழையைக் குபேரனுக்கவா, தனவானை ஆண்டியாக்கவா?' என்று முகவாய்க்கட்டையைப் பிடித்துக் கேட்கிறான்.

அவத்யோ வத்யதாம் கோ வா வத்ய: கோ வா விமுச்யதாம்
தரித்ர: கோ பவத்வாட்யோ த்ரவ்யவான் வாப்யகிம்சன: 2

தகாததைச் செய்யவும் தயாராயிருப்பது காமத்தின் சின்னம்.

‘உன்னை இகழ்ந்தவர் யார்? சொல் நீ சொன்னபின் என்ன செய்கிறேன், பார்’ என்கிறானும்.

**உன்னை இகழ்ந்தவர் மாள்வர், உற்றதெல்லாம்**
**சொன்னபின் என் செயல் காண்டி, சொல்லிடு என்றான்**

‘என்னை ஒருவரும் அவமதிக்கவில்லை. ஆனால் ஒன்று சொல்லுவேன். கேட்பீர்களா? உங்கள் பிரதிக்ஞையை நினைத்துப் பாருங்கள்’ என்று மெதுவாக ஆரம்பிக்கிறாள். வரப்போகும் அதிர்ச்சியை உணராத மன்னன் அவளை உச்சி முகந்து சொல்லுகிறான்; ‘அட, அசடே. என்ன வேண்டுமோ, கேள். உன்னைவிட எனக்கு மேலானவர் யார், ராமனைத் தவிர? இது உனக்குத் தெரியாதா? என் நெஞ்சை இனியும் பதைக்க வைக்காதே. சொல்.’

இதையே ‘சுருக்’கென்று தைக்கும் வண்ணம் விவரிக்கிறார் கம்பன்.

**வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை, என்றான்.**

‘உன் மைந்தன்’ என்று கைகேயிக்கு ராமன்பால் உள்ள அன்பைச் சுட்டிக் காட்ட நல்ல தருணம்!

ஆவேசம் வந்தவள்போல் எழுந்து நின்று உரக்கக் கூவுகிறாள் : ‘ஏ. தேவதைகளே, நீங்கள் சாட்சி. அரசன் வரம் அளிக்கிறார். அவர் வாய்மை தவறாதவர், கேளுங்கள்.’ பின் தசரதனைப் பார்த்து ‘முன்பு சம்பரனை அழித்த சமயம் தந்த வரம் நினைவிருக்கிறதா? அதை இப்போது கேட்கிறேன்’ என்று பீடிகை போடுகிறாள்.

‘நாளைய தினமே ராமனுக்குப் பதிலாக என் மகன் முடி சூட வேண்டும். இரண்டாவதாக, பதினான்கு வருடங்கள் ராமன் தவவேடம் தாங்கிக் காட்டில் வாழவேண்டும். அவன் இன்றே புறப்பட வேண்டும். அதை நான் பார்க்க வேண்டும்’ என்று முடிக்கிறாள்.

திகைத்து நிற்கிறான் தசரதன். நற்செய்தி சொல்லப் போவதாக நினைத்து வந்தான். இவளோ உளவு அறிந்து சதி செய்துவிட்டாள்!

இரண்டாவது கோரிக்கையின் அநீதியை நினைத்துக் கலக்கம் உண்டாகிறது அரசனுக்கு. ‘எந்தக் குற்றத்துக்காக என் மகனை வெளியேற்றுவேன்?’ என்று தவிக்கிறான். பட்டாபிஷேகத்தைப்பற்றி மறந்துவிட்டான். ‘கௌஸல்யை, சுமித்திரை, என் அரசு எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராயிருக்கிறேன். ஆனால் ராமனைப் போகச் சொல்லாதே. உன் காலில் விழுந்து கும்பிடுகிறேன். தயவு செய், ‘பெண்ணே’ என்று மீண்டும் மீண்டும் கெஞ்சுகிறான்.

'என் கண்ணே வேண்டுமா, அல்லது உயிர் வேண்டுமா? அது உனதேயன்றோ? ராஜ்யத்தை முழுதும் எடுத்துக்கொள். ஆனால் மற்றொன்று சொன்னாயே, அதை மறந்துவிடு' என்று கெஞ்சுவதாகச் சித்தரிக்கிறார் கம்பன்.

கண்ணே வேண்டும் என்னினும் ஈயக் கடவேன் என்
உள் நேர் ஆவி வேண்டினும் இன்றே உனதன்றோ?
பெண்ணே, வண்மைக் கேகயன் மானே, பெறுவாயேல்
மண்ணே கொள், நீ மற்றையதொன்றும் மற என்றான்.

பரதனுக்கு மகுடம் வேண்டினாள். அதைப் பொருட்படுத்தவில்லை தசரதன். அதில் ஓரளவு நியாயம் இருக்கிறது என்பது தெரியும். மற்றொரு கோரிக்கையை நினைக்கும்போது இது சிறு பொருளாகத் தோன்றுகிறது. அருமைப் புதல்வன், ஒரு பிழையும் அறியாதவன், அவனை வீட்டைவிட்டு வெளியேற்றுவது அடுக்குமா? அரசு பெற இருக்கும் நிலையில் வனம் போக உத்தரவா?

'ராமனைப் பிரிந்து என்னால் உயிர்வாழ முடியாது. ஆகையால் இந்த எண்ணத்தை விட்டுவிடு' என்று மன்றாடுகிறான். 'கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் வாதாடுகிறீரே, அது தருமமா?' என்று ஏசுகிறாள்.

ராமனைப்பற்றி நினைந்து நினைந்து மனம் பதைக்கிறான். ராமன் வனம் போனால் தானும் இறந்து அரண்மனை பாழடைந்து போகும் என்று எச்சரிக்கை செய்கிறான்; நியாயம் எடுத்துரைக்கிறான்; 'மாட்டேன். உன் சொல்படி செய்ய மாட்டேன். நிரபராதிக்கு ஒரு தீங்கிழைக்க மாட்டேன்' என்று அரற்றுகிறான். 'தயவு செய். நீ இளகிய மனம் உடையவளாயிற்றே' என்கிறான். மறுபடி அவள் காலைத் தொடுகிறான்.

ஒன்றும் பயனில்லை. 'கணவன் இறந்தால் அவனோடு உயிர் துறப்பது பெண்கள் வழக்கம். ஆனால் வேண்டுமென்று கணவனைக் கொன்றவர் ஒருவருமில்லை. அப்பழியை நீ ஏற்பாயா?' என்கிறான்.

இன்னோர் காணும் எல்லவளையார் தம் இறையோரைக்
கொன்றார் இல்லை, கொல்லுதியோ நீ? கொடியாளே.

நாணம் நீங்கிய கைகேயி, மன்னனுக்குத் 'தருமநீதி' எடுத்துரைக்க ஆரம்பிக்கிறாள்! 'சிபிச் சக்கரவர்த்தி ஒரு புறுவுக்காகத் தன் உடலையே அறுத்துக் கொடுத்தார். அக்குலத்துதித்த நீர் சத்தியத்தைக் கைவிடலாமா? எல்லாத் தருமமும் சத்தியத்தில் அடக்கம். சத்தியத்தைவிட மேலானதில்லை'

**ஆஹு : ஸத்யம் ஹி பரமம் தர்மம் தர்மவிதோ ஜனு :** 4

'கொடுத்த வரத்தை மாற்றுவது உம் வலிமையைக் காட்டி என்னை வசப்படுத்துவதாகுமேயன்றி தருமம் ஆகுமோ?' என்கிருளாம்.

**தந்த வரத்தை 'தவிர்க' என்றல்**
**உரம் தானல்லால் நல்லறமாமோ? உரை என்ருள்.**

இவள் நெஞ்சில் உரம் ஏறியிருப்பது கண்டு தசரதன் மனதில் வேற்றுமை தோன்றுகிறது. 'நீ, நான்' என்று பிரித்துப் பேசுகிருன்.

பரதனையும் கைகேயியையும் தனித்துச் சொல்லி ராமனை 'என் மகன்' என்று குறிப்பிடுகிருன். அன்பு மேலிட்டு, அவனுக்கு இழைக்க நினைத்த தீங்கை நினைத்து உள்ளம் நைந்து, 'என் கண், என் உயிர்' என்று கதறுகிருன். 'எல்லா உயிர்களுக்கும் அவன் நல்லவனுயிற்றே' என்று புலம்புகிருன். எனினும், 'அவனுக்குத் தீமை நிகழாமல் செய்வது உன் தயவுதான்' என்று முடிக்கிருன். 'நய' என வேண்டுகிருன் என்கிருர் கம்பன்.

**நின்மகன் ஆள்வான், நீ இனிது ஆள்வாய் நிலமெல்லாம்**
**உன்வயம் ஆமே, ஆளுதி, தந்தேன், உரை குன்றேன்,**
**என் மகன், என் கண், என் உயிர் எல்லா உயிர்கட்கும்**
**நன் மகன் இந்த நாடு இறவாமை நய, என்ருன்.**

அசையவில்லை அவள். 'தன் நேரில்லாத் தீயவள் உள்ளம் தடுமாருள்.' என்கிருர் கம்பன் 'கொடுத்த வாக்கை நிறைவு செய்யாவிட்டால் உயிரை விடுவேன்; பாவம் உம்மைச் சேரும் என்று மிரட்டுகிருள். பதிலுக்குத் தசரதன், 'இனி நீ என் மனைவியல்ல. உன்னைத் துறந்தேன், உன் மகனையும் துறந்தேன்' என்று கதறுகிருன். இது கேட்டுக் கைகேயி வெகுண்டு, ரோஷத்துடன் பேசுகிருள். 'இது என்ன உளறல்? என் மகனை அரசனுக்கி, ராமனைக் காட்டுக்கனுப்பி என் சக்களத்தியின் தொல்லையை நீக்கினுல்தான் சொன்ன சொல் தவருதவர் ஆவீர்.'

**ஸ்தாப்ய ராஜ்யே மம ஸுதம் க்ருத்வா ராமம் வனேசரம்**
**நிஸ்ஸபத்னும் ச மாம் க்ருத்வா க்ருதக்ருத்யோ பவிஷ்யஸி** 5

விஷயம் முற்றிவிட்டது. மேலும் பேச ஒன்றுமில்லை. 'ராமனைப் பார்க்க வேண்டும்' என்று முணுமுணுக்கிருன். ஸுமந்திரன்தான் மறுபடி போகிருன்.

அலங்காரம் நிறைந்த கூடத்தில் குதூகலம்மிக்க ஜனங்களிடையே நிற்கும் ராமனை அழைக்கிருன் ஸுமந்திரன். 'அன்னை கைகேயியோடுக் கலந்து ஆலோசித்துப் பட்டாபிஷேகத்தைப்பற்றி ஏதோ முக்கிய விஷயம் சொல்லவே தந்தை அழைத்திருக்கிருர்.

அவள் எனக்காக ஏதோ விசேஷமாகச் செய்யப் போகிறுள்' என்று சந்தோஷத்தோடு தேரில் ஏறிச் செல்லுகிருன் ராமன். வழியில் தெருவெல்லாம் ஜனங்கள் அவன் அழகையும் குணங்களையும் புகழ்கிருர்கள். சிற்றன்னைபால் உள்ள மதிப்பையும் மெச்சுகிருர்கள்.

'கைகேயிக்கு இல்லாத பெருமையா? உலகம் இவன் ஆள உவகை கொள்பவள் வளர்த்த கைகேயியே அன்றி, பெற்ற தாயல்ல' என்று மக்கள் பேசிக் கொண்டார்களாம்.

**தாய் கையில் வளர்ந்திலன் வளர்ந்தது தவத்தால்**
**கேகயன் மடந்தைகிளர் ஞாலம்இ வன்ஆள**
**ஈகையில் உவந்தனள், இயற்கைஇது வென்ருல்**
**தோகையவள் பேருவகை சொல்லல் அரிது என்பார்.**

பாராட்டிப் புகழும் ஜனங்களைத் தாண்டி உள்ளே நுழைந்ததும் வணங்கி நிற்கிருன் ராமன். கண்ணீர் நிறைந்த கண்ணேடு மன்னன் 'ராமா' என்கிருன். மேலே பேச முடியவில்லை. நிமிர்ந்து பார்க்கவும் முடியவில்லை என்கிருர் வால்மீகி. அவமானம் அமுக்குகிறது.

தந்தையின் உருவம் பயங்கரமாய் இருக்கிறது. பாம்பை மிதித்ததுபோல் திடுக்கிட்டு விழிக்கிருன் ராமன். 'ஏன் கலக்கம்?' என்று கேட்கிருன். ராமனுக்குப் பதில் கூற முன்வருகிருள் நாணமகற்றிய கைகேயி. 'மன்னனுக்கு வியாதியுமில்லை, கோபமுமில்லை. அன்புக்குரிய உன்னிடம் துன்பம் தரும் விஷயம் ஒன்று சொல்ல அவருக்கு நா எழவில்லை. எனக்கு வரம் அளித்துவிட்டு இப்போது பாமரன் போல் வருந்துகிருர். சரி, நன்மையோ, தீமையோ, அரசன் ஒரு பேச்சு சொன்னுல் கேட்பாயா? கேட்பதானுல் நானே சொல்லுகிறேன்' என்று ஆரம்பிக்கிருள்.

'அன்னையே, இப்படிச் சொல்லலாமா? அரசன் கட்டளை எதுவானுலும் செய்வேன். இது சத்தியம். ராமன் ஒருகாலும் பேச்சை மாற்ற மாட்டான்' என்கிருன். (விஷயம் என்னவென்று தெரியாமலே 'செய்கிறேன்' என்று ஆணையிடுவது பரம்பரை வழக்கமோ?)

'முன்பு தந்த வரம் இரண்டையும் இன்று கேட்டேன். தந்தார். பரதன் நாடு ஆள, நீ காடு செல்வாயாக. இதுவே அரசன் தந்த வரம். அதை நிறைவேற்றி உன் தந்தையை மெய்யனுக்குவது உன் கடமை' என்று கண்டிப்பாகச் சொல்லுகிருள். பதட்டமின்றிப் பேசுகிருன் ராமன். 'கோபம் வேண்டாம், தேவீ. நான் இன்றே போகிறேன். உனக்கு மகிழ்ச்சியாயிருக்கும். ஆனுல் ஒன்று மட்டும் என் நெஞ்சை வாட்டுகிறது. பரதனுக்கு முடி சூட்ட வேண்டுமென்றிருந்தால் அரசன் தானே ஏன் என்னிடம் சொல்லவில்லை? ஏன் இந்தக் கபடம்? பிறர் சொல்லாமலே நான் எதுவும் கொடுப்பேன்

பரதனுக்கு. தந்தையின் விருப்பம் அதுவானுல் கேட்கவும் வேண்டுமோ? ஏன் சொல்லவில்லை?'

யாஸ்யாமி பவ ஸுப்ரீதா வனம் சீரஜடாதர:
அலீகம் மானஸம்து ஏகம் ஹ்ருதயம் தஹதீவமே
ஸ்வயம் யன்னுஹ ராஜா பரதஸ்யஅபிஷேசனம் 6

தந்தையின் நடத்தை விந்தையாக இருக்கிறது ராமனுக்கு. முதல் நாளே தனிமையில் பேசும்போது சற்று சந்தேகம் ஏற்பட்டது. ஆனுல் அப்போது 'பரதன் ஊரிலில்லை. உனக்கு முடி சூட்ட இதுவே தக்க சமயம்' என்று கூறினவர், இன்று அதற்கு நேர்மாருகத் தீர்மானம் செய்து அதைச் சிற்றன்னையின் மூலம் தெரிவித்தால் மகனுக்கு எப்படி இருக்கும்? மாற்ற உரிமை இருப்பினும் சேதியைத் தானே ஏன் தெரிவிக்கக் கூடாது? இதுவே குறை.

கைகேயிக்கோ அவசரம். 'அவருக்குக் கூச்சமாயிருக்கிறது. அதனுல்தான் சொல்லவில்லை. ஆனுலும் நீ புறப்பட்டுப்போனுலொழிய அவர் அன்ன ஆகாரம் செய்யமாட்டார். ஸ்நானம்கூடச் செய்யமாட்டார்' என்கிருள்! இதைக் கேட்டுக் கொண்டிருக்கும் தசரதன் பெருமூச்சு விடுகிருன். வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை.

ராமனுடைய சந்தேகம் ஊர்ஜிதமாகிறது போலும். சிற்றன்னையைப் பார்த்துச் சொல்லுகிருன், ஆனுல் தகப்பனுக்குத்தான் இந்த வார்த்தை. 'பொருளாசை கொண்டு உலகில் வாழ எனக்கு விருப்பமில்லை. தருமமே பெரிது என்று நினைப்பவன் நான்.'

ந அஹம் அர்த்தபரோதேவி லோகம் ஆவஸ்தும் உத்ஸஹே
வித்தி மாம் ரிஷிபிஸ்துல்யம் கேவலம் தர்மம் ஆஸ்திதம் 7

'உன்போல் அல்ல' என்பது தொக்கி நிற்கிறது. விச்வாமித்ரரிடம் சிட்சை பெற்றது வீண்போகுமா?

தசரதன் தருமத்தின் பெயரால் மன்றுடுகிருன். கைகேயியும் தருமத்தைச் சான்று காட்டி வாதாடுகிருள். தர்க்கத்தில் ஈடுபடாத ராமன் தருமத்தை மேற்கொண்டு வெளியேறுகிருன். எது தருமம்?

துரிதப்படுத்துகிருள் கைகேயி. 'என் தாயிடம் அநுமதி பெற்று, ஸீதைக்கு ஆறுதல் சொல்லி, இன்றே கானகம் செல்வேன். என்னை நன்கு அறியவில்லை நீ. அரசன் சொல்லாவிட்டாலும் நீ உத்தரவு செய்தால் நான் உடனே போக மாட்டேனு?' என்று கேட்கிருன் ராமன்.

மன்னவன் பணியன்ருகில் நும்பணி மறுப்பனே? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றே?

தசரதனை வலம் வந்து, கைகேயியையும் தொழுது, அங்கிருந்து நேராகத் தன் தாயின் விடுதிக்குச் செல்லுகிருன். மனதில் துக்கத்தை அடக்கித் தன் புலன்களையும் கட்டுப்படுத்தி நடக்கிருன். முகத்தில் ஒரு மாறுதலும் காணவில்லை.

தசரதனின் மனநிலை ஒரு புதிர்தான். கைகேயியின் காலில் விழுந்து கெஞ்சினுனே ஒழிய 'ராமனுக்கு முடிசூட்ட நிச்சயித்து ராஜ சபையில் அறிக்கையாகிவிட்டது' என்று ஏன் சொல்லவில்லை? கைகேயி ராமனிடம் 'நீ வனம் போவது மன்னன் கட்டளை' என்று கூறியபோது 'அது உண்மை இல்லை' என்று மறுத்துக் கூறவும் தைரிய மில்லாமல் போனது ஏனே?

கைகேயி, ராமனை வெளியே அனுப்பி அதே நாளில் பரதனுக்கு முடி சூட்டத் திட்டம் போட்டது, பரதன் வெளியூருக்குப் போயிருக் கும் சமயம் அவசரமாக மறுநாளே முகூர்த்தம் வைத்து ராமனுக்கு முடிசூட்டத் தான் திட்டம் போட்டதற்கு பதில். இதை உணர்ந்து விட்டான் தசரதன். அதனுல் நிமிர்ந்து பேசவும் துணிவு இழந்தான்.

எனினும், குற்றமற்றவனைக் காட்டுக்கு அனுப்புவதென்ற அநீதியை ஏற்கவில்லை அரச உள்ளம். அதற்காக வாதாடுகிருன். மேலும் 'அருமை மகனை ஆசை காட்டி மோசம் செய்தேனே' என்ற எண்ணம் தந்தை உள்ளத்தை வாட்டுகிறது. குற்றமுள்ள நெஞ்சு அவனை வதைக்கிறது. தனிமையில் கண்டு 'ராமா, சுழலில் சிக்கித் தவிக்கிறேன். என் மனதார உன்னை வஞ்சிக்கவில்லை, அப்பா. என்னை மன்னித்துவிடு' என்று கதறியிருந்தால் உயிர் பிழைத்திருக்குமோ?

'முடி உன் மகனுக்கு; என் மகன் காடு செல்லாமல் காப்பாயாக' என்று கைகேயியைத் தனிமையில் வேண்டினுன் தசரதன். ராமன் முன்னிலையில் சொல்லத் துணியவில்லை. அவன் அதை ஏற்க மாட் டானென்று தெரியும் போலும்.

உலகறிய அறிக்கையிட்டான் மன்னன், 'ராமனுக்கு நாளை மகுடம் தருவேன்' என்று. இன்று அது இல்லையென்ருல்? முடிசூட இருந்தவன் பாமர மக்களில் ஒருவனுக வசிக்க முடியுமா? பதவியடைந் தவன் கீழ், பதவியிழந்தவன் வாழ முடியாதென்று கூனியே சொன் னுளே!

இந்நிலையில் ராமன் செய்யக் கூடியது என்ன? அரசனையோ, பரதனையோ எதிர்த்துப் போராடலாம், அல்லது மனக் கடுப்போடு துறந்து செல்லலாம். மனமுவந்து மகுடம் தந்த தந்தை பேச்சை மாற்றினுல் போராட மனமிருக்குமா ஓர் உயர்ந்த மனிதனுக்கு?

கைகேயி சொல்லாவிட்டால்கூட அயோத்தியைவிட்டு வெளியேறு வதைத் தவிர வேறு வழியில்லை மானம் உள்ளவனுக்கு. அவளே சொன்னது நல்லதாயிற்று. பழி அவள் மேல்! தியாகம் என்பது பிறருடைய குற்றத்தை வலியுறுத்திக் காட்ட உதவும் கருவி. மானம் பெரிதென்று நினைப்பவருக்கு இதுவே முறை.

ராமனை 'தந்தை சொல் தவருத பாலகன்' என்று கருதினால் இந்த அற்புத ரஸங்கள் நமக்குக் கிடைக்காது.

# 5

# விதியின் பிழை

மங்களமான சூழ்நிலையில் ராமனை எதிர்பார்த்து நிற்கிறார்கள் பெண்கள். கோசலை மகனைக் கண்டதும் வரவேற்று, 'ராமா, உன் தந்தையைப் பார். நேற்று சொன்ன வாக்குப்படி இன்று உன்னை அரசனாக்குகிறார்' என்கிறாள். 'சாப்பிட வா, மகனே' என்று அழைக்கிறாள்.

அர்த்தமற்ற பேச்சு, இருண்ட சூழ்நிலை. ராமனுக்குச் சிறிது லஜ்ஜை உண்டாகிறது. 'தாயே, பேராபத்து வந்துவிட்டது. நீ அறியாய். உனக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் துக்கம் நேரப் போகிறது' என்கிறான்.

> **தேவி நூநம் ந ஜானீஷே மஹத்பயமுபஸ்த்திதம்**
> **இதம் தவ ச து:காய வைதேஹ்யா லக்ஷ்மணஸ்ய ச** 1

தனது சுக துக்கங்களில் யார் யாருக்குப் பங்கு உண்டென்பதை அறிவான்.

'எனக்கெதற்கு அலங்காரம்? நான் காட்டில் வசிக்கப் போகிறேன். அரசன் பரதனுக்கு ராஜ்யம் கொடுத்துவிட்டார். என்னைப் பதினான்கு வருடம் தண்டகாவனத்தில் இருக்கச் சொல்லி அனுப்பிவிட்டார்' என்கிறான். வெட்டுண்ட வாழைபோல் விழுகிறாள் கோசலை. அருகில் நின்று அன்போடு தடவிக் கொடுக்கிறான் ராமன். அவளோ, 'பிள்ளையே பிறக்காமல் இருந்திருந்தால் ஒரே வருத்தத்தோடு நின்றிருக்கும். மலடி என்ற ஒரே பழி. ஆனால் இதை நான் எப்படிப் பொறுப்பேன்? கணவனிடம் நான் ஒரு சுகமும் கண்டதில்லை. உன்

மூலமாவது நல்வாழ்வு பெற எண்ணினேன். இப்படி ஆயிற்றே! இனி என் சக்களத்திமாரின் கொடுமைப் பேச்சைக் காதால் கேட்க வேண்டுமே. என்ன கஷ்டம்! நீ இருக்கும்போதே என்னை லட்சியம் செய்யாதவர்கள் நீ வனம் போனபின் என்னைக் கொல்லாமல் கொல்லு வார்கள். இன்று எனக்கு கைகட்டிச் சேவை செய்பவர்கள் நாளை அந்தக் கைகேயி மகனைக் கண்டதும் என்னோடு பேசவும் மாட்டார்கள்' என்று புலம்புகிறாள்.

யோஹிமாம் ஸேவதே கஸ்சித் அதவாபி அனுவர்த்ததே
கைகேய்யா புத்ரம் அன்வீக்ஷ்ய ஸஜனோ நாபிபாஷதே 2

தன்னைப் பற்றிய கவலை, சக்களத்திமீது அசூயை. மகன் ஒரு கருவி! கைகேயி ஒரு தனிப் பிறவியல்ல என்பதை எடுத்துக் காட்டுகிறார் வால்மீகி.

அநீதியை நினைத்துக் குமுறுகிறான் அருகில் இருக்கும் லக்ஷ்மணன். 'அரசனுக்கு வயதோ முதிர்ந்துவிட்டது. ஆயினும் காமத்தில் ஈடுபட்டவர். அவர் என்னதான் சொல்லமாட்டார்? அவர் பேச்சைக் கேட்டு நடப்பது எனக்குப் பிடிக்கவில்லை' என்கிறான்.

விபரீத: ச வ்ருத்த: ச விஷயை: ச ப்ரதர்ஷித:
ந்ருப: கிமிவத ப்ருயாத் சோத்யமான ஸமன்மத: 3

'ராமன் என்ன தவறு செய்தான்?' என்கிறான். பேசிக்கொண்டே இருக்கும்போது கோபம் மேலிட்டுக் கதறுகிறான். 'அண்ணா, உன்னை அரியாசனத்தில் அமர்த்துவேன். எவரேனும் பரதன் பக்கம் பேசி எதிர்த்தால் அயோத்தி முழுவதையும் மனித சஞ்சாரமற்றதாக ஆக்கிவிடுவேன். நம் இருவரையும் விரோதித்துக்கொண்டு பரதனுக்கு அரசு அளிக்க அவ்வளவு சக்தி இருக்கிறதா நம் தந்தைக்கு? பார்ப்போம்.'

த்வயாசைவ மயாசைவ க்ருத்வா வைரம் அனுத்தமம்
காஸ்ய சக்தி: ச்ரியம்தாதும் பரதாய அரிசாஸன 4

இதைக் கேட்டுக் கோசலை மீண்டும் ராமனை வேண்டுகிறாள். 'தருமம் அறிந்த மகனே, நீ தருமப்படி வாழ விரும்பினால் உன் தம்பி சொல்வதைக் கேள். என் சக்களத்தியின் அதர்மத்துக்கு உட்படாதே. இங்கேயே இருந்து என்னைப் போற்றுவாயாக. அதுவே தருமம்.'

தர்மக்ஞ யதி தர்மிஷ்டோ தர்மம் சரிதுமிச்சஸி
சுச்ருஷமாம் இஹஸ்தஸ்த்வம் சர தர்மம் அனுத்தமம் 5

ராமன்மீது அன்பா, அல்லது தன்னிலையைக் காத்துக்கொள்ளக் கரிசனமா?

'தந்தை சொல்லை மீறி நடக்க எனக்கு அதிகாரமில்லை, அம்மா. அவர் சொல்வதே தருமம். இவ்வுலகில் எல்லாவற்றையும்விட மேலானது தருமம். அதில்தான் எல்லா உண்மையும் அடங்கியிருக்கிறது. சண்டையிட்டு அரசு பெறுவதென்ற பாமர க்ஷத்ரிய புத்தியைவிட்டு, லக்ஷ்மணா, என் விருப்பப்படி நட. தருமத்தை நிலை நாட்டு' என்கிறான் ராமன்.

ததேனாம் விஸ்ருஜானார்யாம் க்ஷத்ர தர்மாச்ரிதாம் மதிம்
தர்மமாச்ரய மா தைக்ஷ்ண்யம் மத்புத்திரனுகம்யதாம் 6

உண்மையில் எல்லாத் தருமங்களும் அடங்கியிருக்கின்றன என்ற உபநிஷத் வாக்குக்கு நேர்மாறாகத் தருமத்தில் எல்லா உண்மைகளும் அடக்கம் என்று கூறியது ராமனுடைய மனப்போக்கையும் தருமத்தில் உள்ள ஈடுபாட்டையும் குறிக்கும்.

லக்ஷ்மணனைப் பார்த்து மேலும் சொல்லுகிறான் : 'தாமதம் செய்யாதே. எனக்கு மகுடாபிஷேகம் நடக்கப்போகிறதென்று மனம் கொதிக்கின்ற கைகேயி சிறிதும் என்னைச் சந்தேகிக்காத முறையில் நடந்துகொள்ள வேண்டும். நான் இன்றே போனால்தான் அவள் மனோரதம் நிறைவேறும். மகனுக்கு உடனே முடிசூட்டி மகிழ்வாள்.'

'நான் இன்று அரண்மனையைவிட்டு வெளியேறுவது விதியின் செயல். இல்லாவிட்டால் என்னை ஏன் கைகேயி இப்படி ஹிம்ஸை செய்யவேண்டும்? அவளுக்கு என்மேல் உள்ள வாஞ்சை உனக்கே தெரியுமல்லவா? விதியை எதிர்த்துப் போராட யாரால் முடியும்?'

க்ருதாந்தஸ்த்வேவ ஸௌமித்ரே த்ரஷ்டவ்யோ மத்ப்ரவாஸனே
கஸ்சித் தைவேன ஸௌமித்ரே யோத்துமுத்ஸஹதே புமான் 7

விதியின்மேல் பழியைப் போட்டு மனிதர் செய்யும் அநீதியைப் பொறுக்க முடியாமல் தவிக்கிறான் தம்பி. புருவத்தை நெறித்து, சீறிக்கொண்டு, சினத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு சொல்லுகிறான் : 'வலிமைமிக்க உன்போன்றவர் வலிமையற்ற விதியை மதிப்பரோ? அந்தப் பாவிகள் இருவர் மேலும் உனக்குச் சந்தேகமே பிறக்கவில்லையா? பலஹீனமானவன்தான் விதியை நம்பி வாழ்வான். இன்று நீ வேண்டுமானால் பார், விதியின் செயலையும் அதற்கு எதிராக ஒரு மனிதனின் என் செயலையும் உலகமறியக் காட்டுகிறேன். பொய்யை மெய்யாக்கி உன்னை விரட்ட நினைப்பவர் பதினான்கு வருடம் காட்டில் வசிக்கப் போகின்றனர். மதயானைபோல் திமிர்பிடித்த விதியை அடக்குகிறேன், பார்.'

அத்ய மத்பௌருஷ ஹதம் தைவம் த்ரக்ஷ்யந்திவை ஜனா:
யத்தைவாதாஹதம் தே அத்ய த்ருஷ்டம் ராஜ்யா பிஷேசனம் 8

'தெய்வத்துக்கும் மனிதனுக்கும் உள்ள வலிமை இன்று இரண்டிலொன்று ஆகிவிடும்' என்று கதறுகிறான்.

இக்காட்சியைச் சித்திரிக்கும்போது, தெருவிலே நின்று லக்ஷ்மணன் வீரமுழக்கம் செய்வதாக வர்ணிக்கிறார் கம்பன். வில்லின் நாண் ஒலி கேட்டு ராமன் அங்கு வருகிறான். கோபமாயிருக்கும் தம்பியைப் பார்த்து, 'நீ யாரையாவது தண்டிக்க வேண்டுமானால் எனக்கே தண்டனை உரியது. என்னை அரசன் அழைத்து முடிசூடச் சொன்ன போது அது பின்னர் மிகுந்த கெடுதியை விளைவிக்கும் என்பதை உணர்ந்து கொள்ளாமல் அரசு பெற முயன்றது என் குற்றம் அல்லவா?' என்கிறான்.

பின்குற்றம் மன்னும் பயக்கும் அரசு என்றால் பேணேன்
முன் கொற்றம் மன்னன் முடிகொள்க எனக் கொள்ள
மூண்டது
என் குற்றமன்றோ? இகல் மன்னவன் குற்றம் யாதோ?

'நதியில் நீர் இல்லாமல் வற்றிப்போனால் அது நதியின் பிழையாகுமா? (மழையில்லாமை காரணம்.) அதுபோலவே இப்போது நடக்கும் விபரீதம் அரசரின் குற்றமன்று. நம்மைப் பிரியமாய் நடத்தி வந்த சிற்றன்னையின் மதிக் கோளாறு அல்ல. அவள் மகன் பரதனுடைய குற்றமும் இல்லை. இது விதியின் பிழை. ஆகையால் உனக்கேன் இந்தக் கோபம்?' என்கிறான்.

நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை அற்றே
பதியின் பிழையன்று, பயந்து நமைப்புரந்தாள்
மதியின் பிழையன்று, மகன் பிழையன்று, மைந்த!
விதியின் பிழை. இதற்கென்னை வெகுண்டது?

விதியென்ற சொல் கேட்டதும் குதிக்கிறான் லக்ஷ்மணன். 'உலைக்களத்துத் தீயைப்போலப் பொங்கிவரும் மனக் கொதிப்பை எப்படி அடக்குவேன், அண்ணா? கோள் செய்துவிட்டாளே. அவள் மதிக்கும் மேல் மதியாக, மும்மூர்த்திகளின் வலிமைக்கும் மேலான வலிமையாக, விதிக்கும் மேல் விதியாக உள்ள எனது வில் வலிமையை இன்று காண்பாயாக.'

உதிக்கும் உலை உள்ளுறுதீயென ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென்? கோள்
இழைத்தாள்
மதிக்கும் மதியாய் முதல் வானவர்க்கும் வலீ இதாம்
விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி.

அக்கிரமத்தை எதிர்த்து நிற்கத் துணிந்துவிட்டால் அதிமானுஷ்ய சக்தி பிறக்கும். இடையூறுகள் அலட்சியம்.

லக்ஷ்மணன் ஆத்திரம் கொண்டது இயற்கைதான் என்று உணர்ந்து ராமன் நியாய விசாரணையைவிட்டு அன்பினால் அவனைச் சமாதானம் செய்கிறான். நீர் வழியும் கண்களோடு அவனை அணைத்து, 'நான் தந்தையின் விருப்பப்படி நடக்கத் தீர்மானித்து விட்டேன், இதை உணர்ந்துகொள்' என்கிறான்.

மகனின் உறுதியைக் கண்ட கோசலைக்குத் தாயுள்ளம் விரிகிறது. இதுவரை தன்னைப் பற்றியே பேசியவள் மகனைப்பற்றிச் சிந்திக்கிறாள். 'எவ்வளவோ சுகத்தில் வசித்த நீ எப்படிக் காட்டில் ஏழைபோல் அநாதையாய் வசிக்கப் போகிறாய்?' என்று தவிக்கிறாள். 'என்னையும் அழைத்துச் செல்' என வேண்டுகிறாள்.

'கைகேயியால் வஞ்சனை செய்யப்பட்ட மன்னன், நானும் வனம் சென்று நீயும் கைவிட்டால், மரணமடைவது திண்ணம். ஆகையால் நீ இங்கு இருந்துகொண்டு அவரைக் கவனிக்க வேண்டும். அதுதான் முறை' என்று சமாதானப்படுத்துகிறான் ராமன்.

**கைகேய்யா வஞ்சிதோ ராஜா மயி சாரண்மாச்ரிதே**
**பவத்யா ச பரித்யக்தோ ந நூனம் வர்தயிஷ்யதி** 9

'இனி உன்னைத் தடுக்க முடியாது. க்ஷேமமாய்ப் போய் வா, மகனே. நீ இடைவிடாது உறுதியோடு போற்றிவரும் தருமமே உன்னைக் காக்கட்டும்' என்று ஆசி கூறி அனுப்புகிறாள்.

**யம் பாலயஸி தர்மம் த்வம் த்ருத்யா ச நியமேன**
**ஸ வை ராகவசார்தூல தர்மஸ்த்வாம் அபிரக்ஷது** 10

அங்கிருந்து தனது மாளிகைக்குச் செல்லுகிறான் ராமன், வழியெல்லாம் அலங்காரம். மகிழ்ச்சி நிறைந்த முகங்களைப் பார்க்கிறான்; சிறிது தலை குனிந்து நடக்கிறான்.

வியாகூலம் படிந்த முகத்தைப் பார்க்கிறாள் ஸீதை. ஒன்றும் விளங்கவில்லை. அவளை நிமிர்ந்து பார்த்ததும் துக்கத்தை அடக்க முடியாமல் தவிக்கிறான் ராமன்.

'இன்றுதானே புஷ்ய நட்சத்திரம்? ஏன் கவலையுற்றிருக்கிறீர்கள்?' என்று கேட்கிறாள். நேர்ந்ததை எல்லாம் சுருங்கச் சொல்லி, 'உன்னிடம் விடை பெற்றுப் போக வந்தேன். நீ ஜாக்ரதையாக நடந்துகொள்ள வேண்டும். பரதன் அரசனாவான். அவன் முன்னிலையில் என்னைப் புகழ்ந்து பேசாதே. செல்வாக்கில் உள்ளவர்கள்பிறருடைய பெருமையைப்பற்றிக் கேட்கச் சகிக்கமாட்டார்கள்' என்று புத்திமதி கூறுகிறான்.

**ருத்தியுக்தா ஹி புருஷா: நஸஹந்தே பரஸ்தவம்**
**தஸ்மான்னதே குணா: கத்யா பரதஸ்யாக்ரதோ மம** 11

கஷ்டம் வந்தபோதும் அன்பு குன்றாமல் இப்படிப் பேசும் கணவனைப் பார்த்து, அன்பு மிகுதியால் கோபம் அடைந்தவளாய்ச்

சொல்லுகிறாள் : 'என்ன இது? சுலபமாய்ச் சொல்லிவிட்டீர். ஆனால் எனக்கே சிரிப்பாயிருக்கிறது உங்கள் பேச்சு. தாய், தந்தை, தனயன், சுற்றத்தார் யாரும் வேண்டியதில்லை பெண்களுக்கு. கணவன் ஒருவனே வேண்டும். இன்று நீங்கள் வனம் போவதானால், முன்னே நடந்து செல்பவள் நான்.'

**யதி த்வம் ப்ரஸ்திதோ துர்க்கம் வனம் அத்யைவ ராகவ**
**அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்கந்தீ குசகண்டகான்** 12

'நீ இங்கேயே இரு என்று என்னை எப்படிச் சொல்லலாம்?' இதை நினைத்து நினைத்துத் தன் உயிரையே போக்கிக் கொள்பவள் போலத் தோன்றி நின்றாள் என்கிறார் கம்பன்.

**என்னை, என்னை இருத்தி என்றாய்? என்றாள்**
**உன்ன உன்ன உயிரும் இழா நின்றாள்.**

மனம் மாறாத ராமன் கானகத்தின் கொடுமையையும் துயரையும் எடுத்துரைக்கிறான். அவளோ, 'உம்மைப் பிரிவதைவிடக் கொடுமையானதோ காடு?' என்கிறாள். என்ன சொல்லியும் பயனில்லை என்று அறிந்ததும் பெண்களுக்கே உரித்தான ஆயுதம் ஒன்றைக் கையாளுகிறாள். 'நீ ஒரு ஆண்பிள்ளையா?' என்று இடித்துக் காட்டுகிறாள்.

'என்னை உடனழைத்துச் செல்லத் துணிவில்லாமல் நீர் மட்டும் சென்றால் என் தந்தை ஜனகர், ஆணுருவில் ஒரு பேடிக்குப் பெண்ணைக் கொடுத்தேனே என்றல்லவோ ஏங்குவார்? ஒரு கூத்தாடியைப் போல மனைவியைப் பிறரிடம் ஒப்படைத்துச் செல்ல நினைக்கிறீரோ?'

**கிம் த்வா மன்யத வைதேஹ: பிதாமே மிதிலாதிப:**
**ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்** 13

அன்புகொண்டு பிணங்கியே, 'தூக்கியெறிந்து பேசினாள்' என்கிறார் வால்மீகி!

**ப்ரணயாத் ச அபிமானாத் ச பரிசிக்ஷேப ராகவம்** 14

துடுக்கான சொல்லுக்கு மாற்று செய்பவள்போல மேலும் சொல்லுகிறாள் : 'என்னைவிட்டுத் தனியே செல்லலாகாது. வனத்தில் கனி, கிழங்குகள் எதுவானாலும் சரி, குறைவோ நிறைவோ, உங்கள் கையால் கொண்டுவந்து கொடுக்கும்போது அமிர்தத்துக்கு ஒப்பாகும். ஆனால், என்னைவிட்டுச் செல்லுவீராயின் நான் விஷம் குடித்து உயிர் விடுவேன்' என்று முடிக்கிறாள்.

**பத்ரம்மூலம் பலம் யத் த்வம் அல்பம்வா யதிவா பஹு**
**தாஸ்யஸி ஸ்வயமாஹ்ருத்ய தன்மே அம்ருத ரஸோபமம்** 15

ராமன் மனம் இளகுகிறது. 'நீ மனம் நொந்தால் எனக்கு ஸ்வர்க்க போகமும் வேண்டாம். என்னுடன்கூட வனவாஸம் செய்

யவே நீ ஜன்மம் எடுத்திருக்கிறாய் போலும். உன்னைவிட்டுச் செல்ல மாட்டேன். உனது பொருளையெல்லாம் ஏழைகளுக்குத் தானம் செய். என்னுடன் புறப்படத் தயாராக இரு' என்கிறான் ராமன்.

ந தேவி தவ துக்கேன ஸ்வர்க்கமப்யபிரோசயே
நஹி மே அஸ்தி பயம் கிஞ்சித் ஸ்வயம்போரிவ ஸர்வத:
யத் ஸ்ருஷ்டா அஸி மயா ஸார்த்தம் வனவாஸாய மைதிலி
அனு கச்சஸ்வ மாம் பீரு ஸஹதர்மசரீ பவ 16

'என்னுடன் வா' என்று சொன்னதோடு, 'எனது வழியைப் பின்பற்றுவாய்' என்கிறான். 'ஸஹதர்மசரீ' என்ற சொல் விவாகத்தின்போது ஜனகன் ஸீதைக்கு அளித்த அடைமொழி. அதை இந் நிலையில் உபயோகித்து நம் நெஞ்சை உருக்குகிறார் கவி.

இதை எல்லாம் கேட்டுக்கொண்டே அருகில் நிற்கும் லக்ஷ்மணன் (ராமனைத்தனிமையில் விடமாட்டான்!) மறுபடியும் 'என்னை அழைத்துப் போ' என வேண்டுகிறான். 'நீயும் ஸீதையும் போவதானால் நான் கட்டாயம் வரவேண்டும். அல்லும் பகலும் உங்களைக் கட்டிக் காப்பதற்கு நான். வேலை எல்லாம் கவனிப்பதற்கு நான். நீயும் ஸீதையும் கவலையற்றுப் பட்சிகள்போலத் திரிந்து களிக்கலாம். என்னால் இங்கு இருக்க முடியாது' என்கிறான்.

'நீ இல்லாமல் நானும் ஸீதையும் நீரிலிருந்து வெளியே எடுத்த மீனைப்போல் துடித்து உயிர்விடுவோம்' என்கிறான். இந்தச் சுலோகத்தின் உவமையை நுட்பமாகக் கேள்வி உருவத்தில் அமைக்கிறார் கம்பன். 'நீர் உள்ள இடத்தில் மீனும் நீலோத்பல புஷ்பமும் இருக்கும். உலகம் இருந்தால் ஜீவராசிகள் இருக்கும். நானும் ஸீதையும் யார் இருந்தால் உயிர் வாழ்வோம், சொல்?' என்கிறான்.

**நீர்உள எனின் உள மீனும் நீலமும்**
**பார்உள எனின் உளயாவும் பார்ப்புறின்**
**நார்உள தனுஉளாய்! நானும் சீதையும்**
**யார்உளர் எனின் உளேம்? அருளுவாய் என்றான்.**

தன்னை மீனுக்கும் ஸீதையைப் புஷ்பத்துக்கும் ஒப்பிட்டுக் கூறியது கவனிக்கத்தக்கது.

அவனைப் பார்க்கிறான் ராமன். கண்ணில் நீர் மறைக்கிறது. மார்போடு அணைத்துக் கொள்கிறான். அதுவே அநுமதி. அவனும் வரவேண்டியதுதான்.

நகரத்தைவிட்டுச் செல்வதென்று தீர்மானித்தவுடன் மனதில் சற்று பாரம் நீங்கியது போலாகிறது. இருந்தால்தானே ஆசை, பொறாமை, போட்டி, வருத்தம், ஏமாற்றம்?

உள்ள பொருளை எல்லாம் தானம் செய்வதற்கான ஏற்பாடுகள் நடக்கின்றன. அநாதைக் குழந்தைகளையும் அந்தணர்களையும் வர வழைக்கின்றனர். கூட்டம் நிறைகிறது. மகிழ்ச்சியால் கொடுத்தா லென்ன, சோகத்தில் கொடுத்தாலென்ன?

செய்தி கேட்ட ஒரு பெண் தன் வயது முதிர்ந்த கணவனிடம் 'ராமனைப் போய்ப் பாரும். நம் வறுமை நீங்கும்' என்று சொல்லி அனுப்புகிறாள். கிழிந்த வேஷ்டியைக் கச்சம் கட்டிக்கொண்டு அவ்வந் தணர் ராமனிடம் போய் 'நான் ஏழை. பெரிய குடும்பம். என்னைக் கொஞ்சம் கவனித்துக் கொள்' என்கிறார். ராமனுக்குச் சிரிப்பு வரு கிறது. 'சரி, இந்தக் கழியை நீர் வீசி எறியும். எங்கு போய் விழு கிறதோ அது வரையில் உள்ள பசுக்களை எல்லாம் உமக்குத் தரு கிறேன்' என்கிறான் ராமன்.

ஆசை மேலிட்ட அந்தணர், வறுமையால் மெலிந்தபோதிலும் மூச்சைப் பிடித்துக்கொண்டு கழியை வீசுகிறார். நெடுந்தூரம் போய் விழுகிறது! கோதானம் பெற்று மகிழ்ச்சியோடு திரும்புகிறார். 'ஏதோ வேடிக்கை செய்தேன், பொருட்படுத்த வேண்டாம்' என்று சமா தானம்கூறி அனுப்புகிறான் ராமன்.

**மன்யுர்ந கலு கர்த்தவ்ய: பரிஹாஸோஹி அயம் மம** **17**

ரஸமான சம்பவம். வாலிபன் ஒருவன் அரசு பெற இருந்து, அதே நாளில் எல்லாம் துறந்து செல்கிறான். அதனால் சிறிதும் பாதிக் கப்படாமல் வயோதிகன் அடங்காத பேராசையைக் காண்பிக்கிறான். மனப் புயலில் சிக்கிய நிலையிலும் வீரன் இதைக் கண்டு நகைக்கிறான்.

புலன்களை அடக்கிப் பெருந்தன்மையோடு நடந்துகொள்ளும் திறமை; துயரத்திலும் ஹாஸ்யம்! எந்நிலையிலும் நகைச்சுவை குன் றாதிருப்பதை வற்புறுத்துகிறார் வால்மீகி.

# 6

## ஐயன் இனி மீளான்

பொருளை எல்லாம் வழங்கி, பெரியோரை வணங்கி, தம்பியும் தாரமும் சூழ, தந்தையிடம் விடை பெற்றுக்கொள்ள அரண்மனைக்கு வருகிறான் ராமன். இதை அறிந்த தசரதன் ஸுமந்திரனை அனுப்பி 'என் மனைவியர் புடைசூழ, மகனைக் காண விரும்புகிறேன்' என்கிறான். உணர்ச்சிமிக்க நிலையில் கூட்டத்தை விரும்புவது சிலர் இயற்கை.

அவர்கள் கூடினதும் 'ராமனை வரச் சொல்' என்கிறான். கூப்பிய கையோடு வரும் ராமனைப் பார்த்தவுடன் எழுந்து செல்லுகிறான் அணைத்துக்கொள்ள. வழியில் 'ஐயோ, ராமா' என்று மூர்ச்சித்து விழுகிறான். தந்தையை எடுத்து மடியில் இருத்தி, 'போய் வருகிறேன். விடை தாருங்கள். எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் என்னுடன் கிளம்பிய ஸீதையும் லஷ்மணனும் இதோ நிற்கிறார்கள், பாருங்கள்' என்கிறான் ராமன்.

ஒருவனுக்குப் பதில் மூவராக வனம் போகத் துணிந்தது கண்டு கலங்குகிறான் தசரதன். 'நான் கைகேயிக்கு வரம் கொடுத்து அதனால் கட்டுப்பட்டிருக்கிறேன். நீ என்னை நிராகரித்து அயோத்திக்கு அரசனாகிவிடு' என்று நிலை தடுமாறிப்பேசுகிறான். 'நீர் ஸத்யம் தவறக் கூடாது. நான் காட்டில் வசிப்பேன். நெடுநாள் நீரே அரசனாயிருக்க வேண்டும். நான் பதினான்கு வருடங்கள் கழித்து மீண்டும் வந்து உமதடி பணிவேன்' என்று பதில் அளிக்கிறான் ராமன்.

தசரதன் மேலும் ஏதாவது சொல்லிவிடப் போகிறானே என்று பயந்து கைகேயி ரகஸ்யமாக ஜாடை காட்டுகிறாள். உடனே 'சரி,

போய்வா, மகனே. உனக்கு வழியில் ஆபத்து ஒன்றும் நேராதிருக்கட்டும். உறுதிகொண்ட உன்னை இனி நிறுத்த முடியாது' என்கிருன்.

கச்சஸ்வ அரிஷ்டமவ்யக்ர: பந்தானமகுதோ பயம் 1

ஆனால், 'இன்னும் ஒரு நாள் கழித்துப் போ' என்று பிதற்றுகிருன்.

'நான் உன்போல் அல்ல. இளகிய மனமும் அன்பினுல் உயிரையே விடக்கூடிய தன்மையும் பொருந்தியவன். நீ ஸீதையை மணந்து நகருக்குள் புகுந்த காட்சி எனக்கு மறக்கவில்லை. நீங்கள் இப்போது போவதைக் காணச் சகிக்க முடியாது' என்கிருன் எனக் கம்பன் வர்ணிக்கிருர்.

நெகுதற்கு ஒத்த நெஞ்சும் நேயத்தாலே ஆவி
உகுதற்கு ஒத்த உடலும் உடையேன், உன்போல்
அல்லேன்

தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றி
புகுதக் கண்ட கண்ணுல் போகக் காணேன் என்ருன்.

'இன்று கிடைக்கும் பெருமை நாளை கிடைக்குமா? இங்கிருந்து வெளியேறுவது ஒன்றையே நான் விரும்புகிறேன். நான் துறந்து செல்லும் இந்த ராஜ்யத்தைப் பரதனுக்கே கொடுக்கலாம்' என்கிருன் ராமன்.

இயம் ஸராஷ்ட்ரா ஸஜனு தனதான்ய ஸமாகுலா
மயா விஸ்ருஷ்டா வஸுதா பரதாய ப்ரதீயதாம் 2

தன்னையும் மீறிச் சற்று ரோஷத்தோடுதான் பேசுகிருன். 'பரதனுக்கே கொடுக்கலாம்' என்று மும்முறை கூறுகிருன். ஏளனமும் ஒலிக்கிறது.

வனம் போக இருக்கும் ராமனைப் பார்த்து 'உன் தந்தை வாயால் உன்னைப் போவென்று சொல்லவில்லையே' என்று வஸிஷ்டர் சொன்னதாகக் கற்பனை செய்கிருர் கம்பன். அப்போது ராமன் 'அரசன் சம்மதித்ததை அவர் முன்னிலையில் அவள் கூறினுள். நான் அதற்கு உட்பட்டேன். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த நீர் இப்போது தடுக்கிறீரா?' என்கிருன்.

ஏன்றனன் எந்தை இவ்வரங்கள் ஏவினுள்
ஈன்றவள் யான்அது சென்னி ஏந்தினேன்
சான்று எனநின்ற நீ தடுத்தியோ? என்ருன்
தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினுன்.

'எனக்கு சுகமும் வேண்டாம், அரசும் வேண்டாம். நீர்வளம், நிலவளம் பொருந்திய இந்நாட்டைப் பரதனே ஆளட்டும். உமது

வார்த்தை நிலைக்கட்டும். நான் உமது கட்டளைப்படி காட்டில் வசிக்கப் போகிறேன்' என்கிறான் ராமன்.

> புரம் ச ராஷ்ட்ரம் ச மஹீச கேவலா மயாநிஸ்ருஷ்டா
> ப்ரதாயதீயதாம்
> அஹம் நிதேசம் பவதோனுபாலயன் வனம் கமிஷ்யாமி
> சிராயஸேவிதும் 3

ஒருவர் முன்சொன்ன சொல்லுக்கு முரணாக, நிரபராதிபோல் பேசினால் அதை எதிர்த்து வாதாடுவதைவிட, எதிர்பாராதபடி அதை ஏற்றுக்கொண்டு 'தாங்கள் சொல்வதே சரி' என்றால் 'சரியல்ல' என்று அவரது மனச்சாட்சி பறைசாற்றும். அது சவுக்கடியிலும் மேலாகப் புண்படுத்தும்.

கோள் இழைத்தவரிடம்கூடப் பெருந்தன்மையோடு நடந்து கொண்டு ராமன் முடிதுறந்த செயலே தன் உயிரை மாய்க்கும் என்று தசரதன் சொன்னதாக வர்ணிக்கிறார் கம்பன்.

> **கள்ளக் கைகேசிக்கே யுதவிப் புகழ்கைக் கொண்ட**
> **வள்ளல்தனம் என்னுயிரை மாய்க்கும், மாய்க்கும் என்றான்.**

ஸுமந்திரனைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறான் தசரதன். 'நிறையப் பொன்னோடு நமது சதுரங்க சேனைகளை ராமனுக்குத் துணையாக அனுப்பு. துணைவர்களும் தனிகர்களும் நிறைய தான்யங்களையும் தனங்களையும் எடுத்துச் செல்லட்டும்' என்கிறான். இதைக் கேட்ட கைகேயிக்குப் பயம். 'ஏன், எல்லாவற்றையும் சுரண்டிக் கொடுக்கலாம் என்று பார்க்கிறீர்களா? சாராயம் குடித்தவன் காலிப் பாத்திரத்தை அளிப்பதுபோல் நிர்ஜனமான நாட்டையா என் மகனுக்குக் கொடுக்கப் போகிறீர்?' என்று சீறுகிறாள்.

> ராஜ்யம் கதஜனம் ஸாதோ பீதமண்டாம் ஸுராமிவ
> நிராஸ்வாத்யதமம் சூன்யம் பரதோ நாபிபத்ஸ்யதே 4

'அக்கிரமம் என்கிற பார வண்டியில் பூட்டி என்னை எருதுபோல் ஓட்டுகிறாய். மேலும் என்னை அடிக்க வேண்டுமா?' என்கிறான் தசரதன்.

இதைக் கேட்டு இரு மடங்கு சினந்த கைகேயி, 'அக்கிரமம் என்ன? உங்கள் வம்சத்திலே ஸகரசக்ரவர்த்தி அஸமஞ்சன் என்ற மூத்த மகனை நிராகரிக்கவில்லையா? அப்படி இவனும் போகட்டும்' என்கிறாள். ('உங்கள் வீட்டு வழக்கம்' என்று இடித்துக் காட்டுவது பெண்களுக்கு இயற்கை அல்லவா?)

சுற்றி நிற்கும் ஜனங்களுக்கு வெட்கமும் ஆத்திரமும் வருகிறது. மஹாமாத்ரர் என்ற வயோதிகர் சொல்லுகிறார் : 'மூத்த

பிள்ளை என்பதைத் தவிர வேறு எவ்விதம் உவமை பொருந்தும்? அஸமஞ்சன் ஊரிலுள்ள குழந்தைகளைப் பிடித்து ஸரயூ நதியில் அமுக்கி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அதனால் ஊரார் முறையிட ஸகரன் மூர்க்கனான மகனைத் துரத்தவேண்டி வந்தது.* ராமன் அப்படி ஏதேனும் பாபம் செய்தானா? சொல்.'

இந்த வாக்குவாதத்தில் கலந்து கொள்ள விரும்பாத ராமன், 'தந்தையே, போகம் வேண்டாம் என்று துறந்து செல்லும் எனக்கு உடன்வர சேனை எதற்கு? ஒருவன் விலையுயர்ந்த யானையைக் கொடுத்துவிட்டு அதைக் கட்டியிருந்த கயிற்றின்மீது ஆசை வைப்பது போல் இருக்கிறது. வேண்டாம். எனக்கு மரவுரி கொண்டுவரச் சொல்லுங்கள்' என்கிறான்.

**யோஹி தத்வா கஜச்ரேஷ்டம் கக்ஷ்யாயாம் குருதே மன :**
**ரஜ்ஜுஸ்நேஹேன கிம் தஸ்ய த்யஜத : குஞ்சரோத்தமம். 5**

நாணமற்ற கைகேயி சபை நடுவே, தானே கொண்டுவந்து கொடுக்கிறாள் மரவுரியை. மெல்லிய பட்டாடையைக் களைந்து முனிவர் அணியும் நார் ஆடையை உடுக்கிறான் ராமன். அதேபோல் லக்ஷ்மணனும் செய்கிறான். ஸீதையின் முறை. வேடன் விரித்த வலையைக் கண்டு நடுங்கும் மானைப்போல் நடுங்குகிறாள். ராமனைப் பார்த்துக் கேட்கிறாள் : 'இதை அணிந்து முனிவர்கள் எப்படி வாழ்கிறார்கள்?'

**கதம் நு சீரம் பத்னந்தி முனயோ வனவாஸின :**
**இதி ஹ்யகுசலா ஸீதா ஸா முமோஹ முஹுர்முஹு : 6**

மரவுரியைக் கண்டிராத ஸீதை மீண்டும் மீண்டும் பெருமூச்சு விட்டாள் என்கிறார் கவி. கஷ்டம் வரும்போது பிறர் துன்பத்தை நினைப்பது உயர்ந்த ஆத்மாவின் இயல்பு.

அவள் தவிப்பதைக் கண்ட ராமன் தானே அதை வாங்கி அவளுக்கு அணிவிக்கிறான். கூடியிருக்கும் ஜனங்கள் எல்லாம் கண் கலங்கி நிற்கின்றனர். அரசனையே நிந்திக்கின்றனர்.

தசரதன், 'போதும், கைகேயீ! இவள் என்ன தீங்கு செய்தாள்? ராமன் போனால் போதாதா? இவளுக்கு மரவுரி கொடுக்காதே. மக்களையும் மனம் நோக அடிக்காதே' என வேண்டுகிறான்.

ஏதாவது ஒரு பேச்சில் உறுதி இருக்கிறதா? ஆத்மீக வலிமை இருந்தால்தான் அடித்துப் பேச முடியும். இல்லாவிட்டால் படிப்படியாகத் தோல்விதான். கெஞ்ச வேண்டியதுதான்!

---

* இக் கதையிலிருந்துதான் அசட்டுத்தனம் செய்யும் குழந்தைகளுக்கு 'அஸமஞ்சம்' என்று பெயர் வந்தது.

சொல்லில் வேகமில்லை, நெஞ்சில் ஆண்மையில்லை. வரம் கேட்ட வுடன் 'ராமனுக்கு முடிசூட்ட அரசவையில் முடிவாகிவிட்டது. வேறு ஏதாவது கேள்' என்று சொல்லித் தீமையைக் கண்டிக்கத் துணிவற்றுப் போனதால் வரவர சறுக்கிக் கொண்டே போகிறது. ராமனுக்குத் தனிமையில் அளித்த வாக்கு, சபையில் செய்த தீர் மானம், மூத்தவன் பட்டத்துக்கு உரியவன் என்ற வழக்கம் இவை யெல்லாம் தசரதன் பக்கம் இருந்தும், பரதன் ஊரில் இல்லாத சமயம் அவசரமாகச் செய்தது சரியல்ல என்ற உணர்வும் உள்ளூர உறுத்துவதால் ஆத்மீக வலிமை இல்லாமல் போய்விட்டது போலும். அரசனும் மந்திரிகளும் முனிவரும் செயலற்று நின்றதற்கு இதுவே காரணம். அவள் கை வலுத்து நிற்கிறதென்பது இவர்கள் கெஞ்சுவ திலேயே விளங்கும்.

குற்றம் யாருடையதாயினும், விதியைக் கடிந்துகொள்வது இயல்பு. மரவுரி தரித்து நின்ற ராமனைப் பார்த்து வஸிஷ்டர், 'அரசு பெற இருந்த புண்ணிய தினத்தில் மரவுரி தரித்து வெளியேறும் நிலை வந்ததே. விதியை பிரமனாலும் தடுக்க முடியாது' என்கிறார்.

வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்
தாழ்வினை அதுவரச்சீரை சாத்தினான்
சூழ்வினை நான்முகத்தொருவன் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ?

'பொருந்து நாள் நாளை உன் புதல்வருக்கு' என்று முடிசூட்டு விழா வுக்கு முகூர்த்தம் வைத்த வஸிஷ்டருக்கு மறுநாள் நடக்கப்போவது தெரியவில்லை. அவர் வாயாலே 'ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ?' என்று சொல்வதாக வர்ணிக்கிறார் கம்பன்.

இதிலெல்லாம் சிறிதும் கவனத்தைச்செலுத்தாமல் ராமன், 'விடை தாருங்கள், வரம் அளிக்கும் தந்தையே, என் தாய் என்னைப் பிரிந்து துயரப்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கூறிக் கிளம்புகிறான். அதுவே அவன் கேட்கும் வரம்! புறப்படும் மூவருக்கும் ஆசி கூறி அனுப்புகின்றனர் மன்னனின் மனைவியர். கோசலை ஸீதை யிடம் சொல்லுகிறாள் : 'கஷ்ட காலத்தில் கடுமையாகப் பேசுவது பெண்கள் சுபாவம். நாட்டைவிட்டு அகற்றப்பட்டான் என்று என் மகனை அவமதிக்காதே.'

ராமன் வனம் போகத் தசரதன் இசைந்தான் என்று கேட் டதும் 'கணவனிடம் நான் ஒரு சுகமும் கண்டதில்லை' என்று குறை கூறிய கோசலை கூறும் வார்த்தை இது! தான் கணவனிடம் எப்படி இருந்தாலும் மகனிடம் மருமகள் இதமாக இருக்க வேண்டுமென்று கருதும் தாயின் புத்திமதி.

'அன்னையே, தந்தி இல்லையென்றால் வீணை வாத்யமாகாது. சக்கரம் இல்லையென்றால் தேர் வாகனமாகாது. அதுபோல், நூறு பிள்ளைகள் இருந்தாலும் பதி இல்லையென்றால் பெண்ணுக்குச் சுகமில்லை. எனக்கு அவரே தெய்வம்' என்று பதில் அளிக்கிறாள் ஸீதை.

நாதந்த்ரீ வாத்யதே வீணா நாசக்ரோ வர்த்ததே ரத:
நாபதிஸ்ஸுகம் ஏதேத யாஸ்யாதபி சதாத்மஜா 7

மேலும், 'தந்தையும் தாயும் பெற்ற மகனும் அளவோடு செய்வார்கள். அளவிலா அன்பு காட்டும் கணவனை எவள்தான் கும்பிடமாட்டாள்?' என்கிறாள் ஜனகன் மகள்.

லக்ஷ்மணனை அருகில் அழைத்துச் சுமித்திரை சொல்லுகிறாள்: 'நீ வன வாஸத்துக்கென்றே பிறந்தாய் போலும். வனமே உனக்கு அயோத்தி. ராமனே உனக்குத் தந்தை. ஸீதையே தாய். க்ஷேமமாய்ப் போய்வா.'

ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜனகாத்மஜாம்
அயோத்யாம் அடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம் 8

இதே கருத்துடைய பாடலில் 'இனி இங்கு தாமதிப்பது தகாது' என்று சேர்க்கிறார் கம்பன்.

**ஆகாதது அன்றால், உனக்கவ்வனம் இவ்வயோத்தி**
**மாகாதல் இராமன் அம்மன்னவன், வையம் ஈந்தும்**
**போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை என்றே**
**ஏகாய் இனிஇவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்.**

ரதம் தயாராக இருக்கிறது என்று அறிவிக்கிறான் ஸுமந்திரன். ஜனத் திரளை விலக்கிக்கொண்டு தேரில் ஏறிக் கொள்ளுகிறார்கள் மூவரும். வாய்விட்டு அழும் அனைவரையும் தாண்டிச் செல்லுகிறது தேர். 'ராமா' என்று அலறும் கௌஸல்யை பிடிக்கடங்காமல் ஓடுகிறாள். உப்பரிகையிலிருந்து பார்க்கும் தசரதன் 'நிறுத்து, சற்று நில்' என்று கூவ, 'வேகமாய் ஓட்டு, சோகத்தை வளர்த்தாதே' என்று ராமன் சொல்ல, ஸுமந்திரன் இரு சக்கரங்களுக்குமிடையே அகப்பட்டுக்கொண்ட பிராணிபோல் தவித்தான் என்று முடிக்கிறார் வால்மீகி.

திஷ்டேதி ராஜா சுக்ரோச யாஹியாஹீதி ராகவ:
ஸுமந்த்ரஸ்ய பபூவாத்மா சக்ரயோரிவ வாந்தரா 9

ஊரெல்லாம் துயரம், எங்கும் இதே பேச்சு. நேரடியாக சம்பந்தப்படாத பாமர மக்கள் மேதாவிகளுக்கு எட்டாத உண்மையை எடுத்துரைக்கிறார்கள். 'அரசனுக்கு அறிவில்லை. பெண் பேச்சைக்

கேட்டு மகனைத் துரத்தலாமா? அதுவும் எப்பேர்ப்பட்ட மகன்? நடந்து கொள்ளும் தன்மையிலேயே எல்லோரையும் வெல்லும் இயல்புடையவன். அவனையா போகச் சொல்வது? அசடாயிருந்தால்கூடத் தன் மகனை எவன் காட்டுக்கு அனுப்புவான்?'

**நிர்குணஸ்யாபி புத்ரஸ்ய கதம் ஸ்யாத் விப்ரவாஸனம்**
**கிம் புனர்யஸ்ய லோகோயம் ஜிதோ வ்ருத்தேன கேவலம்** 10

வாக்கு கொடுத்துச் சங்கடத்தில் சிக்கிக் கொண்டான் என்ற சமாதானம் மக்களுக்கு ஏற்கவில்லை. 'இது என்ன அரசன் சுபாவம்? முதலில் கொடுத்துவிட்டுப் பின்னர் முறைவிட்டு அதையே தம்பிக்குத் கொடுத்தால் அது மட்டும் குற்றமில்லையா?' என்கிறார்கள்.

**என்னே நிருபன் இயற்கை இருந்தவாறு !**
**தன்னேரிலாத தலைமகற்குத் தாரணியை**
**முன்னே கொடுத்து முறை திறம்பத் தம்பிக்குப்**
**பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய் ? என்பார்.**

'பரதன் வந்தால்கூட அவன் ஆளமாட்டான். ஆயினும் ராமன் மீண்டுவர மாட்டானே! நம் தலைவிதி' என்று நொந்து கொள்ளுகிறார்கள். 'சும்மா இருந்தவனை அழைத்துப் பட்டாபிஷேகம் செய்கிறேன் என்று சொன்னதே விபரீதமாக முடிந்தது.' என்கிறார்கள்.

**ஆளான் பரதன் அரசு என்பார் ஐயன்இனி**
**மீளான், நமக்கு விதி கொடிதே காண் என்பார்**
**கோளாகிவந்தவா கொற்றமுடிதான் என்பார்**
**மாளாத நம்மின் மனம்வலியார் ஆரென்பார்.**

தூசியைக் கிளப்பிக் கொண்டு தேர் விரைந்து செல்லுகிறது. கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருப்பவர்களில் பெண்கள் சிலர்; அவர்களுக்கு உடலெல்லாம் நடுங்குகிறதாம்.

ஒரு நந்தா விளக்கு. அதில் எண்ணெய் தீரப் போகும் சமயம். எண்ணெய் விடவில்லை, திரியைத் தூண்டிவிடவுமில்லை. 'படபட' வென்று காற்று வீசுகிறது. அப்போது நடுங்கி ஆடும் தீபச் சுடர் போல் நடுங்கினார்களாம் பெண்கள். 'தாமரைக் கண்ணனின் அருள் நோக்கம் மீண்டும் காணக் கிடைக்குமோ? ஆ, விதியே, ஓ' என்று கதறுகிறார்களாம்.

**உந்தாது நெய்வார்த்து உதவாது கால் எறிய**
**நந்தா விளக்கின் நடுங்குகின்ற நங்கைமார்**
**'செந்தாமரைத் தடங்கண் செவ்வி அருள்நோக்கம்**
**அந்தோ பிரிதுமோ, ஆ விதியே, ஓ' என்பார்.**

தொலைவில் சென்று மறைந்துவிட்டது தேர்.

# 7

# உயிர் துறந்த தூயவன்

தேர் சென்ற தெருவை நோக்கி ஏங்குகிறான் தசரதன். அவனைத் தாங்கி நிற்கிறாள் கௌஸல்யை. மற்றொரு புறம் வந்து நிற்கும் கைகேயியைப் பார்த்து, 'என்னைத் தொடாதே. உன்னைக் காணவும் சகிக்கவில்லை. நீ என் மனைவியல்ல. அரசு பெறுவது அவனுக்குச் சம்மதமானால் பரதனும் என் மகனல்ல. உன்னைத் துறந்தேன்' என்று சொல்லுகிறான்.

இப்படி நேற்று வரை தன் பிரிய நாயகியாய் இருந்தவளைத் துறக்க எத்தகைய வெறுப்பு ஏற்பட்டிருக்க வேண்டும்? அதைக் குறிக்க ஒரு அபூர்வமான கருத்தைக் கையாளுகிறார் கம்பன். 'நான் இறந்துவிடுவேன். உடனேயே பரதனுக்கு முடிசூட்டிவிடுவாள்' என்று நினைக்கிறானும் தசரதன். ஆத்திரத்தோடு நிந்தனை செய்கிறான். 'உன் கழுத்திலிருக்கும் தாலிச் சரடு அறுபட்டு அதுவே உன் மகனுக்குப் பட்டாபிஷேகத்தின்போது ரட்சைக் கயிறாக உதவும். நீ பழிச் சொல்லுக்கு அஞ்சாதவள்.'

**பழிக்கு நாணாய். மாணாப்பாவீ ! இனி என் பல ? உன்**
**கழுத்தின்நாண் உன் மகற்குக் காப்பின்நாண் ஆம் என்றான்,**

என்ன குரூரமான நிந்தனை! இலக்கியத்தில் உவமையில்லாத கருத்து. (ஐநூறு வருடங்களுக்குப் பின் ஷேக்ஸ்பியர் எழுதிய 'ஹாம்லெட்' நாடகத்தில்தான் இதன் பிரதி பிம்பத்தைக் காண்கிறோம். கணவனை வஞ்சகமாகக் கொன்று அவன் தம்பியை மணந்தாள் கெர்ட்ரூட். இதை நினைத்து மனம் கொதிக்கும் மகன் ஹாம்லெட் தன் நண்பனிடம் சொல்லுகிறான் : 'பிரேதக் கிரியைக்கெனத் தயாரித்த உணவு மணப் பந்தலில் உபயோகமாயிற்று. என்ன சிக்கனம்!')

தசரதனைப் பிடித்துக்கொண்டு தன் மாளிகைக்கு அழைத்துச் செல்லுகிறாள் கௌஸல்யை. நள்ளிரவில் விழித்துக்கொண்டுப் பிதற்றுகிறான் மன்னன். 'ராமனைத் தொடர்ந்து சென்ற என் பார்வை இன்னும் மீளவில்லையே. நீ இருப்பது என் கண்ணுக்குப் புலப்படவில்லை. என்னைத் தொட்டு உன் இருக்கையை உணர்த்து ' என்று வேண்டுகிறான்.

நத்வா பச்யாமி கௌஸல்யே ஸாதுமாம் பாணிநா ஸ்ப்ருச 1

அருகிலே நிற்கும் மனைவி கண்ணுக்குத் தெரியவில்லை. பார்வை மங்குகிறது. (ரத்த அழுத்தம் அதிகமாகி மண்டையில் ரத்தக் குழாய்கள் வெடித்துவிட்டன போலும்.)

ஆறுதல் கோரிய கணவனுக்கு என்ன சொல்லுகிறாள் பிரிய மனைவி? 'ராமனுக்குத் தீங்கு இழைத்த பாவி விஷத்தைக் கக்கிய நாகம்போல் அலைகிறாள். இனி என்னை வாட்டியெடுக்கப் போகிறாள். அவள் பேச்சைக் கேட்டு இப்படிச் செய்யாமலிருந்தால் என் மகன் பிச்சை எடுத்தாவது பிழைத்திருப்பான். அதற்கு ஒரு வரம் தந்திருக்கலாம்!' என்று புலம்புகிறாள்.

ஒரு சம்பவம் நடந்த பின்னர் அனுதாபத்திற்கு உரியவரையும் கூடச் சீர்தூக்கிப் பார்த்து அவர் நடத்தையைப்பற்றி நியாய விசாரணை செய்வது இயற்கை. 'ஏதோ, நடந்துவிட்டது' என்று இருக்க முடியவில்லை. கோசலையின் மனப்பான்மை இத்தகையதே. அவளைவிடத் தன்னடக்கமும் பொறுமையும் அதிகம் கொண்ட சுமித்திரை அவளுக்கே ஆறுதல் கூறுகிறாள்.

ராமனோ தமஸா நதியைத் தாண்டிப் போய்க்கொண்டிருக்கிறான். வழியெல்லாம் ஜனங்கள் தசரதனையும் கைகேயியையும் தூற்றுவதைக் காதால் கேட்கிறான். ஸரயூ நதிக்கரையை அடைந்து கோஸல ராஜ்யத்தின் எல்லையைக் காட்டுகிறான் ஸீதைக்கு. 'திரும்பி வந்து என் ராஜ்யத்தை எப்போது காண்பேனோ' என்று ஸுமந்திரனிடம் பிரலாபிக்கிறான்.

முதல் நாள் இரவு, லக்ஷ்மணனிடம் ஸீதையைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லுகிறான். 'ஊரில் எல்லோரும் நம்மைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். பரதன் தாய் தந்தையருக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருப்பான். ஆனால் அதையெல்லாம்பற்றி என்ன பேச்சு?' என்கிறான்.

கங்கையின் அழகைக் கண்டு மகிழ்ந்து கரையோரம் உள்ள ச்ரிங்கிபேரபுரம் என்ற ஊரை அடைகிறார்கள். கிராமத் தலைவனான குகன், வந்தவர்களை உபசரித்து வரவேற்கிறான். பலவித உணவுகளையும் பானங்களையும் கொண்டுவந்து வைக்கிறான். ராமனுக்கு இதிலெல்லாம் மனம் செல்லவில்லை. 'என் தவ வேடத்தைப் பார். இதெல்

லாம் எனக்கெதற்கு? இந்தக் குதிரைகளுக்கு ஆகாரம் கொடு. அவை தான் என் தந்தைக்குப் பிரியமானவை. அதுவே எனக்குப் போதும்' என்கிருன். 'அரசனுக்குகந்த குதிரைக்கு உணவு அளி' என்பதில் சிறிது ஏளனமும் மனக் கசப்பும் பிரதிபலிக்கிறது.

அச்வாஞம் காதனேஞஹமர்த்தீ நான்யேன கேனசித்
ஏதாவதா அத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:
ஏதேஹி தயிதா ராக்ஞ: பிதுர்தசரதஸ்யமே 2

லக்ஷ்மணன் கங்கை ஜலம் கொண்டு வருகிருன். அதைப் பருகித் தரையில் படுத்து உறங்குகிருன் ராமன். அருகில் ஓர் மரத்தடியில் நின்று காவல் இருக்கிருன் லக்ஷ்மணன். அவனுக்குத் துணைவனுய் நிற்கும் குகன் அவனே இளேப்பாற்றிக் கொள்ளும்படி வேண்டுகிருன். 'இங்கு ஒன்றும் பயமில்லே' என்கிருன். இளேப்பாற மறுத்துத் தங்கள் வரலாற்றைக் கூறுகிருன் லக்ஷ்மணன். தந்தையும் கோசலேயும் சுமித் திரையும் சோகத்தால் வருந்துவர் என வர்ணிக்கிருன். 'வாய்மை பிழையாத மன்னன் எங்கள் தந்தை. திரும்பி வந்து அவரை நாங்கள் காண்போமோ?' என ஏங்குகிருன். கேட்டு நின்ற குகன் உணர்ச்சி மேலிட்டுக் கண்ணீர் விடுகிருன்.

ஆத்திரத்தை உண்டுபண்ணும் சம்பவங்கள் அவை நிகழும் இடத்தைவிட்டு அப்பால் சென்று சற்று விலகிய மனப்பான்மை யோடு பார்த்தால் வேறு விதமாய்த் தோன்றும். தவிர, அந்நியனுன குகனிடம் உள்ளே குமுறிக் கொண்டிருக்கும் கோபத்தை அடக்கிப் பேசியது உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவனின் பண்பாடு.

மறுநாள் கங்கையைக் கடக்க ஏற்பாடாகிறது. ஸுமந்திரனுக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டிய நிலே. அவன் திரும்பிச் செல்ல மனமின்றித் தவிக்கிருன். அவனேத் தேற்றி 'அரசன் மெய்யனுக வேண்டும். ஆதலால் நீ திரும்பிச் செல்ல வேண்டும். உடனே பரதனே வரவழைத்து அரசன் எண்ணப்படி மகுடம் சூட்ட வேண்டுமென்று சொல். பரதனிடம் தன் தாயைப்போல் என் தாயையும் கவனித்துக் கொள்ளும்படி சொல்' என்று கூறுகிருன்.

ஸுமந்திரன் போக மறுக்கிருன். 'யாகம் செய்து தவப்பயனுல் பிறந்த உன் மகன் நாட்டைவிட்டு அகன்ருன் என்று நான் தசரதனுக் குச் சேதி சொன்னுல், வாய்ச் சொல்லால் மட்டும் உன்னே அகற்ற விரும்பிய கைகேயியைவிடக் கொடியவனுவேன்' என்கிருன்.

**அங்கிமேல் வேள்விசெய்து அரிதிற்பெற்ற நின்**
**சிங்கவேறு அகன்றது என்றுணர்த்தச் செல்கேனே?**
**எங்கள் கோமற்கினி என்னில் கேகயன்**
**நங்கையே கடைமுறை நல்லள் போலுமால்!**

அவனுக்குத் தருமத்தின் வலிமையை உணர்த்துகிருன் ராமன். 'முன் நின்று புகழைக் கொடுக்கும். பின்பு இறுதியில் நற்கதியளிக்கும்.

இன்பம் வந்தபோது இனியதாயிருக்கும் அறத்தைத் துன்பம் வந்த போது துறக்கலாமோ?' என்கிறான்.

முன்புநின்று இசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின்று உறுதியைப் பயக்கும் பேர்அறம்
இன்பம் வந்துறுமெனில் இனியதாய் இடைத்
துன்பம் வந்துறுமெனில் துறக்கலாகுமோ?

தயங்கி நிற்கும் ஸுமந்திரனிடம் மேலும் சொல்லுகிறான் : 'உன்னைத் திருப்பி அனுப்புவதில் ஒரு நுட்பம் இருக்கிறது. உன்னைப் பார்த்ததும் ராமன் காட்டுக்குப் போய்விட்டான் என்று உறுதி ஏற்படும். கைகேயி மனம் மகிழும். அரசனைப் பொய்யன் என நினைக்க மாட்டாள். பரதனுக்காகப் பாடுபட்டு வாங்கிய அரசு அவளுக்கே உரியதாகட்டும்.'

பரிதுஷ்டாஹி ஸா தேவி வனவாஸம் கதேமயி
ராஜானம் நாதிசங்கேத மித்யாவாதீதி தார்மிகம் 3

ஸுமந்திரன் போனபின் படகு தயாராகிறது. 'லக்ஷ்மணா, மெள்ள ஏறிக் கொள். பிறகு ஸீதையைப் பிடித்து ஏற்றி வை' என்று ராமன் சொல்லிப் பின் தானும் ஏறுகிறான்.

ஆரோஹ த்வம் நரவ்யாக்ரஸ்திதாம் நாவம்இமாம் சனை :
ஸீதாம் ச ஆரோபய அன்வக்ஷம் பரிக்ருஹ்ய மனஸ்வினீம் 4

ஓடக்காரர்கள் இரு புறமும் துடுப்பைப் போட்டு நீரைத் தள்ள ஓடம் கங்கையின்மீது மிதந்து போவது நண்டு செல்வது போலிருந்தது என்கிறார் கம்பன். இன்மொழிச் சீதையும் சூரியனை ஒத்த ராமனும் கங்கை நீரைக் கையால் எடுத்து ஒருவர்மேல் ஒருவர் வீசி விளையாடினராம்.

பாலுடை மொழியாளும் பகலவன் அனையானும்
சேலுடை நெடுநீர் சிந்தினர் விளையாட
தோலுடை நிமிர்கோலில் துழவிய நெடுநாவாய்
காலுடை நெடுஞெண்டிற் சென்றது கடிதம்மா.

நதியைக் கடந்ததும் தம்பியிடம் ஸீதையை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறான். 'நீ முன்னும் நான் பின்னுமாக நடந்து பாதுகாக்கவேண்டும். இது அடர்ந்த கானகம். வனவாஸத்தின் தொல்லைகளை இனித்தான் ஸீதை உணருவாள்' என்கிறான்.

அக்ரதோ கச்ச ஸௌமித்ரே ஸீதா த்வாம் அனுகச்சது
ப்ருஷ்டதோஹம் கமிஷ்யாமி த்வாம் ச ஸீதாம் ச பாலயன்
அத்ய துக்கம்து வைதேஹீ வனவாஸஸ்ய வேத்ஸ்யதி 5

வீரர்கள் இருவரும் வேட்டையாடிக் காட்டுப் பன்றி, புள்ளி மான், வெள்ளைக் குளம்புடைய மான் முதலியவற்றைக் கொன்றுதர, மூவரும் மரத்தடியில் ஆகாரம் செய்கின்றனர்.

இருண்ட வனத்தில் திறந்த வெளியில் வெறும் தரையில் படுத் திருக்கும் ராமனுக்குக் கவலை ஏற்படுகிறது. 'ஸீதையை நாம் மிக ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும். இன்று நம்முடன் ஒருவரும் இல்லை. இரவு விழித்திருக்க வேண்டியதுதான்' என்று சொல்லுகிறான். உடனே நடந்ததெல்லாம் நினைவுக்கு வருகிறது. தனிமையில் தம்பியிடம் வாய்விட்டுப் பேசுகிறான். 'அரசன் உறக்க மின்றித் தவித்துக் கொண்டிருப்பார். ஆனால் காரியம் கைகூடி விட்ட தென்று ஆனந்தத்தில் இருப்பாள் கைகேயி. பரதனுக்கு ராஜ்யம் உறுதியாய்க் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தால் அவன் வந்த தும் அரசனைக் கொன்றாலும் கொல்லுவாள்.'

த்ருவம்அத்ய மஹாராஜோ துக்கம் ஸ்வபிதி லக்ஷ்மண
க்ருதகாமாது கைகேயீ துஷ்டா பவிதும் அர்ஹதி
ஸாஹி தேவி மஹாராஜம் கைகேயீ ராஜ்ய காரணாத்
அபிந ச்யாவயேத் ப்ராணான் த்ருஷ்ட்வா பரதம் ஆகதம் 6

மனதில் கசப்பு இருந்தாலும், தசரதனுக்குத் தூக்கம் வராது என்பதை உணர்ந்து பேசுகிறான். கைகேயி எதற்கும் துணிந்த நிலையில் இருக்கிறாள் என்பதையும் வெளிப்படையாய்ச் சொல்லு கிறான்.

'அவர் தனிமையில் இருக்கிறார். வயது முதிர்ந்துவிட்டது. ஆயினும் காமத்தினால் அவளுக்கு வசப்பட்டவர். என்ன செய்வார், பாவம்? எனக்கு நேர்ந்த கஷ்டத்தையும் அரசனின் மதியீனத்தையும் பார்த்தால் தர்ம, அர்த்த, காமங்களில் காமமே வலுத்ததென்று சொல்லுவேன். இல்லாவிட்டால், ஒரு பெண்ணின் பேச்சைக் கேட்டு எந்த முட்டாளாவது பெற்ற மகனை விரட்டுவானா? அதுவும் ஒவ் வொரு சமயமும் சொல்லுக்குச் சொல் முகம் கோணாது அனுசரிக்கும் என்னையா விரட்டுவது?' என்கிறான்.

இதம் வ்யஸனமாலோக்ய ராஜ்ஞஸ்ச மதிவிப்ரமம்
காம ஏவஅர்த்த தர்மாப்யாம் கரீயானிதிமே மதி:
கோஹ்யவித்வானபி புமான் ப்ரமதாயா: க்ருதே த்யஜேத்
சந்தானுவர்த்தினம் புத்ரம் ததோ மாமிவ லக்ஷ்மண. 7

பரதனை நினைக்கிறான். அவன் கொடுத்து வைத்தவன் என்கிறான். 'ஏகபோகமாக அரசாளப் போகிறான். மனைவியுடன் வாழப் போகிறான்' என்கிறான்.

ஸுகீபத ஸபார்யஸ்ச பரத : கைகயீ ஸுத :
முதிதான் கோஸலான் ஏகோ யோ போக்ஷ்யதி அதிராஜவத் 8

'தர்மார்த்த வழிகளைவிட்டு எவன் காமத்தை நாடுகிறானோ அவன் நம் தந்தையின் கதியை அடைய வேண்டியதுதான்' என்கிறான் ராமன்.

பின் கைகேயியை நினைக்கிறான். 'செல்வத்தினால் செருக்கடைந்தவள். என்னை நினைத்துக்கொண்டு என் தாயைத்துன்புறுத்துவாள். உன் அன்னை சுமித்திரைக்கும் சங்கடம்தான். நீ பேசாமல் திரும்பிப் போய் நம் தாய்மார்களைப் பாதுகாத்துக்கொள். நான் ஸீதையோடு தனியே செல்லுகிறேன்' என்று சொல்லிப்பின் தன் நிலையை நினைந்து நொந்து கொள்ளுகிறான். 'உலகிலே எவளுக்கும் என் போன்ற பிள்ளை பிறக்க வேண்டாம். தாய்க்குச் சோகம்தான் உண்டாக்குகிறேன். என்னால் என்ன சுகம் அவளுக்கு?'

மாஸ்ம ஸீமந்தினீ காசித் ஜனயேத் புத்ரமீத்ருசம்
ஸௌமித்ரே யோஹமம்பாயா தத்மி சோகமனந்தகம் 9

உடனே ரோஷம் உண்டாகிறது. 'நான் செயலற்றவனா?' என்று நினைக்கிறான். 'நான் என் வில்லின் துணைகொண்டு அயோத்தி முழுவதையும் வெல்லுவேன். ஆனால் அதர்மத்தைக் கண்டு அஞ்சும் இயல்புடையவன் நான். தவறு செய்தால் பரலோகம் கிடைக்காதென்ற பயம் வேறு. இல்லையேல் இன்று நான் எனக்கே அபிஷேகம் நடத்தி முடிசூட்டிக் கொள்ளுவேன்' என்று கூறிக் கண்ணீர் வடிக்கிறான் ராமன்.

ஏகோ ஹ்யஹம் அயோத்யாம்ச ப்ருதிவீம் சாபி லக்ஷ்மண
தரேயம் இஷுபி : க்ருத்தோ நனுவீர்யம் அகாரணம்
அதர்ம பயபீதஸ்ச பரலோகஸ்ய சானக
தேன லக்ஷ்மண நாத்யாஹம் ஆத்மானம் அபிஷேசயே. 10

'இப்படி வருந்துவது உனக்கு அழகல்ல. என்னையும் ஸீதையையும் அல்லவா அதைரியப் படுத்துகிறாய்?' என்று கூறித் தேற்றுகிறான் லக்ஷ்மணன்.

காட்டில் தனி வழி செல்லும் ராமனுக்கு யார் துணை? உற்றாரை விட்டு வந்தான், ஊரார் திரும்பிச் சென்றனர். இந் நிலையில் தம்பியும் தன் வில்லுமே துணை என்கிறார் கம்பன். ஆனால் இவை போதாது. ஆபத்தில் உதவுவது மனிதனின் நற்குணம். ராமனின் உயர்ந்த குணமும், கருணையும், அறிவும், சொல் தவறாமையும் துணை. எல்லாவற்றுக்கும் மேலாக, எந்தப் பெண்ணைப் பாதுகாக்க நினைக்கிறார்களோ அவளது கற்பே சிறந்த துணை என்று அதற்கு முதலிடம் கொடுக்கிறார் கம்பன்.

**தையல் தன் கற்பும், தன் தகவும், தம்பியும்**
**மையறு கருணையும், உணர்வும், வாய்மையும்**
**செய்யதன் வில்லுமே சேமமாகக்கொண்டு**
**ஐயனும் போயினுன் அல்லின் நாப்பணே**

இப்படி நடந்து செல்லும் ராமனைப் பார்த்து 'அஞ்சனமோ, மரகதமோ, கடலோ, கார்முகிலோ' என்று எல்லோரும் வியந்தார்களாம். 'ஐயோ, என்ன அழகு! அழியா அழகு' என்று சொன்னுர்களாம்.

**மையோ, மரகதமோ மறி**
**கடலோ மழைமுகிலோ**
**ஐயோ! இவன் வடிவென்பதோர்**
**அழியா அழகுடையான்.**

'ஐயோ' என்பது அதிசயத்தைக் குறிக்கும் அசைச் சொல்.

காட்டில் வாழும் முனிவர்கள் ராமனை வரவேற்று உபசரிக்கின்றனர். ஆனுல் அவர்களிடம் பொருள் ஏது? இனிய சொல்லும் அன்புமே அவர்களுக்குச் சாதனம். ஆனந்தக் கண்ணீரால் நீராட்டினர், இன்சொலால் மலர் சூட்டினர், அன்பெனும் அமுது ஊட்டினர், வழி நடந்த வருத்தம் நீக்கினர் என்று வர்ணிக்கிருர்.

**பொழியும் கண்ணில் புதுப்புனல் ஆட்டினர்**
**மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்**
**அழிவில் அன்பெனும் ஆரமிழ்து ஊட்டினர்**
**வழியின் வந்த வருத்தம் தணியவே.**

அழகிய கருத்து. எளியவராயினும் அதிதியை வரவேற்கும் பாங்கு வெகு நேர்த்தியானது.

முனிவர்கள் ஆசி கூறி பரத்வாஜர் இருக்கும் இடத்தைக் காட்டுகின்றனர். கங்கையும் யமுனையும் சங்கமமாகும் ப்ரயாகையில் இருக்கும் ஆச்ரமத்துக்குச் செல்லுகிருர்கள். வழியில் கங்கையில் நீராடுகிருர்கள். ஸீதை கங்கா நதியில் மூழ்கி எழுவதை வர்ணிக்கிருர் கம்பன். நீரில் அமுங்கி எழுந்தால் அலையில் நீர்மேலுள்ள வஞ்சிக்கொடி, தாமரை, அன்னப் பட்சி முதலியன அசைந்து ஆடும் அல்லவா? ஸீதையின் இடையைக் கண்டு வஞ்சி நாணம் அடைந்ததாம். அவள் நடைக்குத்தான் நிகரில்லை என உணர்ந்து அன்னம் ஒதுங்கிச் சென்றதாம். பாதத்துக்கு நிகரில்லை என்று கருதித் தாமரை நீரில் ஒளிந்து கொண்டதாம். கண்ணுக்குத்தான் இணையாக முடியாது என்றுகயல் மீன் ஓடி ஒளிந்ததாம்!

**வஞ்சி நாண இடைக்கு, மடநடைக்கு**
**அஞ்சி அன்னம் ஒதுங்க, அடியன்ன**
**கஞ்சம் நீரில் ஒளிப்ப, கயல் உர**
**பஞ்சி மெல்லடிப் பாவையும் ஆடினுள்.**

பரத்வாஜ முனிவரை வணங்கித் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளுகிருன் ராமன். 'நான் தசரதன் புதல்வன். குற்றமற்ற இவள் என் மனைவி. தந்தை என்னை வெளியேற்றியதும் என்னைப் பின்தொடர்ந்து வரும் தம்பி இவன்' என்கிருன். 'ஆம். அகாரண மாக உன்னை அனுப்பிவிட்ட வரலாறு நான் கேள்வியுற்றேன். நீ இங் கேயே தங்கியிருக்கலாம்' என்று சொல்லுகிருர் முனிவர்.

ச்ருதம் தவ மயா சேதம் விவாஸன மகாரணம் 11

'நான் தனிமையான இடத்தில் இருக்க விரும்புகிறேன். இங்கு தங்கினுல் எங்களைத் தேடிக்கொண்டு ஊரார் வந்துவிடக்கூடும்' என்று ராமன் சொன்னதும் சித்ரகூட மலையைப்பற்றிச் சொல்லி அங்கு வசிக்கும்படி கூறுகிருர் முனிவர்.

பரத்வாஜர் பற்றற்ற மனதுடன் நடந்து கொண்டார் என்பது வால்மீகியின் கருத்துபோலும். ஆனுல் துறவியின் மனத்தையும் உலுக்கும் நிலை இது என்பது கம்பன் கருத்து. ராமன் சொன்னதை யெல்லாம் கேட்டு 'ஐயோ, விதியின் கொடுமை இது' என்று சொன் ஞராம் பரத்வாஜர்,

**உற்றுள பொருளெல்லாம் உணர்வுற உரை செய்தான்**
**நற்றவமுனி ' அந்தோ விதி தரும் நவை ' என்பான்**

தசரதனின் இயற்கையை அறிந்த முனிவர், 'உன் போன்ற மகனை அனுப்பிவிட்டு எப்படி உயிர் வாழுகிருன் என் நண்பன்?' என்று கேட்கிருராம்.

**ஒப்பறு மகன் நின்னை உயர்வனம் உற ஏகு என்று**
**எப்பரிசு உயிர் உய்ந்தான் என் துணையவன் ? என்ருன்.**

யமுனையைக் கடந்து செல்லுகின்றனர்.பரத்வாஜர் அடையாள மாகச் சொன்ன ஆலமரம் தென்படுகிறது. அதை வலம் வந்து வணங்கி 'க்ஷேமமாகத் திரும்பிச் சென்று கோசலையையும் சுமித் திரையும் காணவேண்டும்' எனப் பிரார்த்திக்கிருள் ஸீதை.

ராமன் லக்ஷ்மணனிடம் ஸீதையை அழைத்துக்கொண்டு முன்னே செல்லும்படி கூறுகிருன். 'அவள் என்னென்ன விரும்பிக் கேட்கிருளோ அந்தப் புஷ்பங்களையும் பழங்களையும் பறித்துக் கொடு'

என்கிறான். முன்பு கண்டிராத செடி கொடி வகைகளை வியப்போடு பார்த்து 'இது என்ன, இது என்ன?' என்று ராமனைக் கேட்கிறாள். ஒவ்வொன்றாகக் கொண்டுவந்து காட்டுகிறான் லக்ஷ்மணன்.

சித்ரகூடத்தை அடைந்து அழகியதோர் இடத்தில் பர்ணசாலை அமைக்கின்றனர். ஸீதை முகம் கோணாது நடந்து வருவதையும் லக்ஷ்மணன் வெகு சாமர்த்தியமாகப் பர்ணசாலை அமைத்ததையும் நினைத்து வியக்கிறான் ராமன். சூழ்நிலைக்கு ஏற்ப அனுபவமில்லாதவற்றைக் கூடச் செய்யும் திறமை திக்கற்றபோதுதான் வெளிப்படுகிறது. 'ஒன்றும் இல்லாத ஏழைகளுக்கு எதுதான் கடினம்?' என்று நினைக்கிறானும் ராமன்.

**மேவு கானம் மிதிலையர் கோன்மகள்**
**பூவின் மெல்லிய பாதமும் போர்தன**
**தாவில் எம்பி கை சாலை சமைத்தன**
**யாவை யாதுமிலார்க்கு இயையாதவே?**

முறைப்படி பூஜை எல்லாம் செய்து இல்லத்தில் புகுந்து நாட்டைவிட்டு வெளியேறிய துக்கத்தையெல்லாம் மறந்து இருக்கிறார்கள்.

ஜஹௌ ச துக்கம் புரவிப்ர வாஸாத் 12

ஆனால் அயோத்தி நகரமோ களையற்று இருக்கிறது. வீடுதோறும் இதே பேச்சு. 'நாம் எல்லோரும் வருந்துகிறோமே ஒழிய உண்மையில் லக்ஷ்மணன் ஒருவன்தானே அனுதாபம் காட்டி உடன் சென்றான்?' என்று சொல்லுகிறார்கள் சிலர். அவனே ஸத்புருஷன் என்கிறார்கள்.

**ஏகஸ் ஸத்புருஷோ லோகே லக்ஷ்மண: ஸஹ ஸீதயா**
**யோனுகச்சதி காகுத்ஸ்தம் ராமம் பரிசரன் வனே.** 13

'இவ்வூரில் லக்ஷ்மணன் ஒருவனே அவனுக்கு உறவோ?' என்றார்களாம்.

**இருவரைப் பயந்தவள் ஈன்ற கான்முளை**
**ஒருவனோ இவற்கு இவ்வூர் உறவு? என்றார் சிலர்.**

ராமனோடு சென்ற ஸுமந்திரன் ராமனின்றி வருகிறான். நேராக தசரதன் இருப்பிடம் செல்லுகிறான். அவனைக் கண்டதும் நினைவிழந்து கிடக்கும் தசரதனிடம் கோசலை கூறுகிறாள்: 'ஸுமந்திரன் திரும்பி வந்திருக்கிறான். ஏன் பேச மாட்டேன் என்கிறீர்? ராமனைப்பற்றி விசாரிக்காமல் இருக்கிறீரே, பயமா? கைகேயி இங்கு இல்லை. தைரியமாகப் பேசலாம்.'

தேவ யஸ்யா பயாத்ராமம் நானு ப்ருச்சஸி ஸாரதிம்
நேஹ திஷ்டதி கைகேயீ விஸ்ரப்தம் ப்ரதிபாஷ்யதாம் 14

உள்ளடங்கிக் கிடக்கும் ஆத்திரம் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பொங்கி வருவதைக் குறிக்கிறார் வால்மீகி.

அரசன் ஸுமந்திரனைப் பார்த்துப் பல கேள்விகள் கேட்கிறான் அருமை மகனைப்பற்றி. 'ராமன் என்ன சொன்னான்? ஸீதை என்ன சொன்னாள்? எப்படி நடந்து சென்றனர்?' என்று கேட்கிறான். 'எல்லோருக்கும் வணக்கம் தெரிவிக்கச் சொன்னான். லக்ஷ்மணன் கோபத்துடன் 'காரணமின்றி ராமனை வனத்துக்கு அனுப்பினீர்' என்று நிந்தித்தான். 'அரசனிடம் தந்தையென்ற உறவு இல்லையே' என்றான்.'

இப்படி விவரித்துக்கொண்டு போகையில் ஸீதையைப்பற்றிச் சொல்லுகிறான் ஸுமந்திரன். 'துக்கம் என்னவென்று அறியாதவள் இந்நிலையில் துக்கத்தால் அழுது நின்றாள். முகம் ஒளியற்று இருந்தது. ராமனைப் பார்த்தாள். பின் என்னையும் தேரையும் மாறிமாறிப் பார்த்தாள். ஒன்றும் பேசவில்லை.' உள்ளத்தை உருக்கும் மௌனம்.

அத்ருஷ்டபூர்வ வ்யஸனா ராஜபுத்ரீ யசஸ்வினீ
தேன துக்கேன ருததீ நைவமாம் கிஞ்சிதப்ரவீத் 15

கள்ளம் அறியாத பேதை என்ற கருத்துக்கு இணங்க, ஸீதை தன் கிளியையும் பொன்னிறப் பட்சியையும் கவனமாகப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லி அனுப்பினாள் என்கிறார் கம்பன். 'மன்னருக்கும் மாமியருக்கும் வணக்கம் சொன்னாள்' என்கிறார், மறக்காமல்.

**அன்னவள் கூறுவாள் அரசர்க்கு அத்தையர்க்கு**
**என்னுடை வணக்கம் முன் இயம்பி யானுடைப்**
**பொன்னிறப் பூவையும் கிளியும் போற்றுக என்று**
**உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய் என்றாள்.**

மேலும் ஸுமந்திரன் பேசிக்கொண்டேபோகிறான். தசரதனுக்குத் தன் செயல் விபரீதம் ஆகிவிட்டதே என்ற உணர்வு ஏற்படுகிறது. 'பாவி கைகேயி என்னை ஏவினாள், நான் இசைந்தேனே. மந்திரிகளையோ, பெரியோர்களையோ ஒரு வார்த்தை கேட்காமல் போனேனே. சபை கூட்டி ஆலோசனை கேட்டிருக்கலாம். (சபையில் தானே ராமனுக்கு முடிசூட்ட நிச்சயித்தது?) இதெல்லாம் செய்யாமல் பெண் பேச்சால் மோகமடைந்து அவசரப்பட்டு விட்டேனே' என்று புலம்புகிறான்.

கைகேய்யா விநியுக்தேன பாபாபிஜன பாவயா
மயாந மந்த்ரகுசலைர் வ்ருத்தை: ஸஹஸமர்த்திதம்
நஸுஹ்ருத்பிர்ந சாமாத்யைர் மந்த்ரயித்வாச நைகமை :
மயாயமர்த்த: ஸம்மோஹாத் ஸ்த்ரீ ஹேதோ: ஸஹஸா க்ருத: 16

சிக்கலிலிருந்து விடுபட அப்படியும் ஒரு வழி இருந்ததென இப்போது தெரிகிறது!

'நான் இட்ட கட்டளைப்படி ராமன் போனுன் என்றே இருந்தாலும் அவனைத் திருப்பி அழைத்து வா. அல்லது என்னை அங்கு அழைத்துச் செல். அவனைப் பார்க்காமல் இருக்க முடியாது' என்கிறுன் தசரதன். இவன் இப்படி வருந்திக் கொண்டிருக்க, கௌஸல்யைக்கு மகனைப் பிரிந்த துக்கத்தால் ஆவேசம் வருகிறது. கணவனைப் பலவாறு நிந்திக்கிருள். 'என்னையும் காட்டுக்கு அழைத்துச் செல்' என்று ஸுமந்திரனிடம் வேண்டுகிருள். 'மீன் தன் குஞ்சையே விழுங்குவதுபோல் மகனையே துலைத்துவிட்டீரே. ராஜ்யம் பாழாகிவிட்டது. நான் அழிந்து போனேன். உம் மனைவியும் அருமை மகனும் மட்டும் மகிழட்டும்' என்று கணவனை ஏசுகிருள்.

ஹதா ஸபுத்ராஸ்மி ஹதாஸ்சபௌரா: ஸுதஸ்ச பார்யாச
தவப்ரஹ்ருஷ்டௌ. 17

ஹிதமானவள் அவள் ஒருவளே என்ற நிலையில் அவள் நிந்தனை வேதனையை அதிகரிக்கிறது. 'கையெடுத்துக் கும்பிடுகிறேன். நல்ல சுபாவமுள்ளவள் நீ. உன் மனம் நொந்து கிடக்கிறது. ஆயினும் என் மனமும் அப்படியே. என்னை மேலும் நோக அடிக்காதே' என வேண்டுகிறுன். (நார்ஹஸே விப்ரியம் வக்தும் து:க்கிதாபி ஸுது:க்கிதம்.)

'சோகத்தில் பிதற்றிவிட்டேன்' என்றுகூறி மன்னிப்புக் கேட்கிருள். 'சோகம் கொடிது. தைரியத்தை அழிக்கும். கல்வியைக் குலைக்கும். எல்லாவற்றையும் கெடுக்கும். சோகத்தைப் போன்ற பகைவன் இல்லை' என்கிருள்.

சோகோ நாசயதே தைர்யம் சோகோ நாசயதே ச்ருதம்
சோகோ நாசயதே ஸர்வம் நாஸ்தி சோகஸமோ ரிபு : 18

இந்நிலையில் தசரதனுக்குப் பழைய நினைவுகள் தோன்றுகின்றன. தான் செய்த வேறொரு தவறு நினைவுக்கு வருகிறது. முன்னொரு நாள் காட்டிலே வேட்டையாடச் சென்றபோது இருட்டில் நீர் எடுக்கும் இளைஞனை அம்புகொண்டு கொன்றதும் அவன் தந்தையிடம் வசைமொழியும் சாபமும் கேட்டதும் நெடுநாளைய சம்பவம். இப்போது நினைக்கிறுன். 'எனக்கு ஏன் இக்கதி நேர்ந்தது என்று யோசித்

தேன். முன்பு நான் செய்த தவறு நினைவுக்கு வருகிறது' என்கிறான். 'நான் ராமனை இவ்விதம் நடத்தியது குற்றம். எனக்கே அடுக்காது.'

**நதன்மே ஸத்ருசம் தேவி யன்மயா ராகவே க்ருதம் 19**

செய்த தவறை நினைத்து நினைத்துப் பச்சாத்தாபப்படுகிறான். நிரபராதிக்குத் தீங்கு இழைத்ததற்குத் தன்னையே நொந்து கொள் கிறான். ராமனின் பெருந்தன்மையை நினைத்து அவமானப்படுகிறான். அவனது தாயிடம் மன்னிப்புக் கோருகிறான். பார்வை மங்குகிறது; 'நினைவு தப்புகிறதே' என்கிறான். உயிர் நீங்குகிறது. ('தன்வினை தன்னைச் சுடும்' என்பது பழமொழி.)

ஸுமந்திரன் அயோத்திக்குத் திரும்பி வந்து தசரதனைப் பார்க்கும் காட்சியை விவரிக்க விருப்பமில்லை போலும் கம்பனுக்கு. ரதம் வந்துவிட்டது என்று எல்லோரும் சொன்னதும் திடீரென்று விழித்துப் பார்த்தானும் தசரதன். எதிரே வஸிஷ்டரைக் கண்டான். 'வீரன் வந்தானே?' என்று கேட்டான். தந்தை உள்ளத்தில் சபலம்!

**பொருக்கென விழித்து நோக்கி**
**விரத மாதவனைக் கண்டான், 'வீரன் வந்தனனே' என்றான்.**

'இல்லை'யென்று வாயால் சொல்லக் கூசிய முனிவன் முகத்திலேயே தெரிகிறதாம் பதில். அதை உணர்ந்து சோர்வடைகிறான் மன்னன். அல்லலைக் காணச் சகியாத வஸிஷ்டர் அகன்று செல்லுகிறார்.

சிறிது தெளிந்ததும், 'அருகிலாவது இருக்கிறானா ராமன், அல்லது தொலை தூரம் போய்விட்டானா?' என்று கேட்கிறான். 'அடர்ந்த கானகத்துள் ராமனும் தம்பியும் மைதிலியும் போயினர்' என்று ஸுமந்திரன் சொல்லக் கேட்ட உடனே ஆவி நீங்கிற்று என்கிறார் கம்பன்.

**நாயகன் பின்னும் நற்றேர்ப் பாகனை நோக்கி நம்பி**
**சேயனோ அணியனோ? என்றுரைத்தலும் அனையான் செய்ய**
**வேயுயர் கானில் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்**
**போயினன் என்றான், என்றபோழ்த்தே ஆவி போனான்.**

புத்ர சோகத்தால் இறந்தான் தசரதன் என்பது குறுகிய நோக்கு. ராமன் முடிதுறந்து உலகோரின் நன்மதிப்பைப் பெற்றான், தசரதன் உயிர் துறந்து தன் மானத்தைக் காப்பாற்றிக் கொண்டான் என்பது முக்கிய கருத்து. 'கள்ளக் கைகேசிக்கே உதவிப் புகழ் கைக்கொண்ட வள்ளல்தனம் என்னுயிரை மாய்க்கும்' என்று ராமனிடம் சொன்னானல்லவா?

8

# மைந்தன் மாண்பு

இறந்த தசரதனைச் சுற்றி அரண்மனையில் எல்லோரும் புலம்புகின்றனர். கௌஸல்யை கைகேயியைப் பார்த்துச் சொல்லுகிறாள் 'திருப்தியாயிற்றா? ராஜ்யம் முழுதும் இனி உனக்கே. சுகமாய் அனுபவி.'

**ஸகாமா பவ கைகேயி புங்க்ஷ்வ ராஜ்யம் அகண்டகம்.** 1

'உன் புத்தி சாதுர்யத்தால் அரசைக் கைப்பற்றிவிட்டாய், பெறுதற்கரிய வரம்பெற்றாய், உன் திட்டத்தை நன்கு முடித்தாய்' என்று சொல்லுகிறாள். ஒவ்வொரு சொல்லிலும் என்ன ஏளனம்!

**வடித்தாழ் கூந்தல் கேகயன் மாதே! மதியாலே**
**பிடித்தாய் வையம், பெற்றனை பேராவரம். இன்னே**
**முடித்தாய் அன்றே மந்திரம்!**

'ஒரு கூனியின் பேச்சைக் கேட்டு இக்ஷ்வாகு வம்சத்தையே தொலைத்துவிட்டாயே' என்று புலம்புகிறாள். கூடியிருப்பவரெல்லாம் கைகேயியை நிந்திக்கிறார்கள். அவளை 'பரதனின் தாய்' என்று குறிப்பிடுகிறார் வால்மீகி. மக்களின் கவனம் அவன் மேல் திரும்பிவிட்டது!

மந்திரிகளும் முனிவர்களும் வந்து கூடுகின்றனர். எல்லோரும் வஸிஷ்டரை அணுகி, மேல் நடக்க வேண்டிய காரியங்களைப்பற்றிப் பேசுகின்றனர். தசரதனின் பிரேதத்தைப் பார்த்து ஒரு கணம் செயலற்றுத் திகைத்து நின்றார் வஸிஷ்டர் என்று வர்ணிக்கிறார் கம்பன். எப்படி?

ஒரு பெரிய கடல். அதில் போய்க் கொண்டிருக்கும் பெரிய கப்பல் உடைந்து விடுகிறது. கப்பலின் தலைவன் மூழ்கி இறந்துவிட்டான். இந்நிலையில் தனித்து நிற்கும் ஒரு மாலுமியின் கதி என்ன? அது போலிருந்ததாம் வஸிஷ்டரின் நிலை.

**வந்த முனிவன் வரங்கொடுத்து மகனை நீத்தவன்கண்மை**
**எந்தை தீர்ந்தான் என உள்ளத்தெண்ணி எண்ணி**
**இரங்குவான்.**
**உந்து கடலில் பெருங்கலமொன்றுடையா நிற்கத் தனி**
**நாய்கன்**
**நைந்து நீங்கச் செயலோரா மீகாமனைப்போல் நைவுற்றான்.**

திரைகடலில் கப்பலோட்டிய தமிழரின் அனுபவத்தை அள்ளி அளிக்கும் உவமை. வரம் கொடுத்து, மானம்காத்து. உயிர்துறந்த தசரதனைக் கப்பல் தலைவனுக்கு ஒப்பிடுகிறார்.

''யாராவது ஒருவனை இக்குலத்திலிருந்து பொறுக்கியெடுத்து இன்றே அரசனாக்க வேண்டும். அரசனில்லா அரசு பாழ்' என்று வற்புறுத்துகிறார்கள் மந்திரிகள். கேகய நாட்டுக்கு விரைந்து சென்று பரதனை அழைத்து வரும்படி வஸிஷ்டர் கட்டளையிடுகிறார். ஆனால் ராமன் வனம் சென்றதாகவோ மன்னன் இறந்ததாகவோ தெரிவிக்கக்கூடாது என்று சொல்லியனுப்புகிறார்.

திடீரென்று அழைத்த காரணம் யாதென அறியாத பரதன் பலவாறு வியாகூலமடைந்து வழியெல்லாம் நிம்மதியின்றிப் பிரயாணம் செய்கிறான். கெட்ட கனவுகள் மனதை சஞ்சலப்படுத்துகின்றன.

வந்ததும் நேராகத் தந்தையின் விடுதிக்குச் செல்லுகிறான் பரதன். அவரை அங்கு காணாது தன் தாயின் மாளிகைக்குப் போகிறான். அவனைக் கண்டதும் எழுந்து அணைத்து மடியிலிருத்தி 'ஊரில் எல்லோரும் சௌக்கியமா? பிரயாணம் சிரமமின்றி இருந்ததா?'' என்று விசாரிக்கிறாள்.

கைகேயி பரதனுக்கு இங்கு நடந்த விஷயமெல்லாம் மெள்ள மெள்ளக்கூறும் காட்சியை நாடகம் போல் காட்டுகிறார் வால்மீகி.

'ஊரில் மாமாவெல்லாம் சௌக்யம்தான். எனக்குப் பரிசு எல்லாம் தந்தார். அது கிடக்கட்டும். நான் கேட்பதற்கு பதில்சொல். உன் வீடு ஏன் சூன்யமாயிருக்கிறது? ஊர் களையற்றிருக்கிறதே? எப்போதும் இங்கே இருக்கும் தந்தை எங்கே?'' என்று கேட்கிறான்.

ஒருவாறு சமாளித்துக்கொண்டு, 'எல்லோருக்கும் ஆகும் கதி அவருக்கும் ஆகிவிட்டது. பரலோகம் அடைந்துவிட்டார்' என்கிறாள்.

அரசு மீதுள்ள ஆசையால், அறிவீனத்தால் பேசினுள் என்கிருர் வால்மீகி.

**தம் ப்ரத்யுவாச கைகேயீ ப்ரியவத்கோரம் அப்ரியம்**
**அஜானந்தம் ப்ரஜானந்தீ ராஜ்யலோபேன மோஹிதா**
**யாகதி: ஸர்வபூதானும் தாம் கதிம் தேபிதா கத:** 2

ராஜ்ய மோகம் தலைக்கேறியிருப்பதைக் கம்பன் இன்னெருவிதமாய்க் குறிப்பிடுகிருர். 'அரசன் இறந்துவிட்டார். ஆனுல் நீ வருந்த வேண்டாம்' என்கிருளாம் அதே மூச்சில்!

**'வானகம் எய்தினுன், வருந்தல் நீ' என்ருள்.**

செய்திகேட்டுத் துடிக்கிருன் பரதன். புலம்புகின்ற மைந்தனை எடுத்தணைத்து 'எழுந்திரு, உன் போன்றவர் உணர்ச்சி வசமாகக் கூடாது நீ அரசகுமாரன்' என்கிருள். பரதனை 'அரசே' என்றழைக்கிருள். மனதிலிருப்பதை அடக்க முடியவில்லை.

**உத்திஷ்டோத்திஷ்ட கிம் சேஷ ராஜபுத்ர மஹாயச:** 3

பரதன் வாய்விட்டு அலறுகிருன், 'ராஜா ஏதோ ராமனுக்கு அபிஷேகம் செய்விக்கிருர் அல்லது பெரிய யாகம் செய்கிருர் என்றல்லவோ நினைத்து ஓடி வந்தேன்! எந்த வியாதியால் திடீரென்று இறந்தார் தந்தை? ராமன் முதலியோர் கொடுத்து வைத்தவர்கள், ஈமக்ரியைகள் செய்ய. நான் போய் அவனைப் பார்க்கிறேன். அவன் எங்கே? தந்தைக்கடுத்தபடி தமையன் அல்லவா? கடைசியாக என்ன சொன்னுர் மன்னன்?'' என்கிருன்.

'அதை ஏன் கேட்கிருய்' என்று சொல்பவள் போல், 'ராமா வென்று அலறிக்கொண்டுதான் ப்ராணனை விட்டார். ராமன், லக்ஷ்மணன், ஸீதை, மூவரையும் அவர்கள் திரும்பி வந்ததும் பார்க்கப் போகிறவர்கள் கொடுத்து வைத்தவர்கள் என்பதுதான் அவரது கடைசி வார்த்தை' என்கிருள்.

**ராமேதி ராஜா விலபன் ஹாஸீதே, லக்ஷ்மணேதிச**
**ஸமஹாத்மா பரம்லோகம் கதோ கதிமதாம் வர:** 4

கூடியவரை நாஸூக்காகத்தான் பேசுகிருள். அதிர்ச்சி ஏற்படாதபடி சிறிது சிறிதாக வெளியிடுகிருள். ஆனுல் பரதனுக்கு ஒன்றும் புரியவில்லை முன்னுக்குப்பின் தாறுமாருகப் பேசும் பேச்சு. 'அவன் எங்கு போனுன்?' என்று துடிப்போடு கேட்கிருன். மகனுக்கு ப்ரீதியாயிருக்குமென்ற சபலத்தால் மிகக் கொடிய சேதியைச் சொன்னுள் என்கிருர் கவி. 'ராமன் காவியுடுத்தி, ஸீதையோடும் லக்ஷ்மணனேடும் தண்டகாரண்யம் போய்விட்டான்' என்கிருள்.

தண்டகான் ஸஹ வைதேஹ்யா லக்ஷ்மணானு சரோகத: 5

'அவனை அனுப்பிவிட்டோம்' என்று சொல்லவில்லை; நா எழவில்லை!

'ராமன் என்ன தவறு செய்திருக்க முடியும்?' என்று சிந்தனை செய்கிறான் பரதன். 'பிறர் பொருளையோ, மனைவியையோ அபகரித்தானா? ஏன் வனம் போக நேர்ந்தது?' என்று கேட்கிறான்.

கஸ்சின்னாட்யோ தரித்ரோவா தேனாபாபோ விஹிம்ஸித:
கஸ்சின்ன பரதாரான் வா ராஜபுத்ரோ பிமன்யதே. 6

இக்கருத்தையுடைய பாடலில் தெய்வத்துக்கிழைத்த குற்றத்தையும் விதியின் கொடுமையையும் காரணங்களாக சேர்க்கிறார், கம்பன் 'பின் எதனால்?' என்கிறான் பரதன்.

**ஏங்கினன் விம்மலோடிருந்த ஏந்தல், 'அப்**
**பூங்கழற் காவலன் வனத்துப் போயது**
**தீங்கிழைத்ததனினோ ? தெய்வம் சீறியோ ?**
**ஓங்கிய விதியினோ ? யாதினோ' எனா.**

பெண் புத்தியினால் கைகேயி, தன் செயலைத் தானே உரைக்க ஆரம்பித்தாள் என்கிறார் வால்மீகி.

'ராமன் பிறர் பொருளை விரும்பாதவன். பரஸ்த்ரீகளைக் கண்ணெடுத்தும் பார்க்காதவன். நான்தான் உன் பொருட்டு ராமனை ராஜ்யத்தைவிட்டு வெளியேற்றும்படி வேண்டினேன். அரசனும் தன் வாக்கைக்காத்து அப்படியே செய்தார். ராமன் போகும்போது லக்ஷ்மணனும் ஸீதையும் உடன் சென்றனர். அவனைக் காணாது புத்ர சோகத்தால் உயிர் மாண்டார் மன்னன். இதெல்லாம் உனக்காகத்தான் செய்தேன். அரசு வீற்று நீ ஆளவேண்டும். வீணில் சோகம் அடைய வேண்டாம். தைரியத்தை வரவழைத்துக் கொள். சீக்கிரம் முறைப்படி முடி சூடிக்கொள், மகனே!' என்று விடாமல் பேசி முடிக்கிறாள்.

த்வத்க்ருதே ஹிமயா ஸர்வம் இதம் ஏவம் விதம் க்ருதம் 7

இக்கட்டான நிலையில் தனித்து நிற்கிறாள் கைகேயி. கிணறு வெட்ட பூதம் கிளம்பியதுபோல, சுலபமாகத் தன் மகனுக்கு ராஜ்யம் வாங்கிக் கொடுத்துவிடலாம் என்று எண்ணியவள் ஊன்றுகோலான கணவனை இழந்து, ஊரார் பழிக்கு ஆளாகி, அரசாங்கத்தில் ஒரு பெரிய குழப்பம் ஏற்பட்டதற்குக் காரணமாகிவிட்டாள். தசரதனின் ஆதரவோடு, தான் ராஜமாதா ஆகலாம் என்று எண்ணியவள் ஏளனத்துக்குரியவளாகிவிட்டாள். இந்நிலையில் கவலை, பயம், சபலம் எல்லாம் ஒருங்கே வெளிப்படுகின்றன.

பரதனுக்கு துக்கம் ஒருபுறம். தாயின் செயலைக்கண்டு திகைப்பு ஒருபுறம். இவை இரண்டுக்கும் மேலாக அநீதியான விளைவை நினைத்து ஆத்திரம் ஓங்கி நிற்கிறது. தாயைப் பலவாறு நிந்திக்கிறான். 'பேராசையால் என் இயற்கைக் குணத்தையும் மறந்து விட்டாயே. நானா ஆள்வேன்? உன் இஷ்டத்தை ஒரு காலும் பூர்த்தி செய்யமாட்டேன். நீ அச்வபதி ராஜனின் பெண்ணா? அரசனைப் பிணமாக்கி ராமனைத் துறவியாக்கிவிட்டாய். நீ காளி, குலத்தையழிக்க வந்த ராக்ஷஸியல்லவா?' என்று கதறுகிறான்.

'நீ இதை விட்டுப்போ. எங்காவது தொலை. நீ நரகத்துக்கே போவாய். தாயுருவில் சத்ருவாய்த் தோன்றினாயே? என்றெல்லாம் சொல்லுகிறான். 'இப்பொழுதே ராமனை திருப்பி அழைத்து வருகிறேன். அவனுக்கு ஊழியனாக இருந்து வாழ்வேன்' என்கிறான். சிறிது நேரம் கழித்து மறுபடி 'ராமனைக் கொண்டு வருகிறேன். அவனுக்குப் பதிலாக நான் காவி பூண்டு வனம் போவேன்.'

**ஆனயயித்வாதனயம் கௌஸல்யாயா மஹாத்யுதிம்**
**ஸ்வயமேவ ப்ரவேக்ஷ்யாமி வனம் முனிநிஷேவிதம். 8**

கண்ணில் நீர்பெருக ஊர் ஜனங்கள் என்னை விழிக்கும் பார்வை என்னால் தாங்க முடியவில்லை. ராமன் அரசு பெற்றால்தான் அவனைக் காட்டுக்குத் துரத்திய மாசு என்மீதிருந்து அகலும்' என்கிறான்.

ஊரார் தன்னையும் கைகேயியின் சூழ்ச்சிக்கு உடந்தையென நினைப்பரோ என்று அஞ்சுகிறான் பரதன். மந்திரிகள் வந்து கூடுகிறார்கள். அவர்கள் முன்னிலையில் தாயை மீண்டும் ஏசுகிறான். 'எனக்கு ராஜ்யத்தில் ஆசையில்லை, நான் தாயோடுகூட திட்டம் போட்டவன் அல்ல (நான் தூரதேசத்தில் என் பாட்டனார் வீட்டில் இருந்தேன்) எனக்கு முடிசூட்ட வேண்டுமென்று அவள் செய்த யோசனையோ ராமன் காட்டுக்குச் சென்ற விவரமோ நான் அறியேன் லக்ஷ்மணனும் ஸீதையும் சென்ற விவரமும் தெரியாது' என்கிறான், பொதுஜன அபிப்ராயத்தை மதிக்கும் பரதன். அவன் பேசுவதே ஒரு அறிக்கை.

**ராஜ்யம் ந காமயே ஜாது மந்த்ரயே நாபி மாதரம்**
**அபிஷேகம்ந ஜானமி யோபூத் ராஜ்ஞா ஸமீக்ஷித:**
**வனவாஸம்ந ஜானமி ராமஸ்யாஹம் மஹாத்மன:**
**விவாஸனம் வா ஸௌமித்ரே: ஸீதாயாஸ்ச யதாபவத். 9**

பரதன் குரல்கேட்டு விரைந்து வருகிறாள் கோசலை. சக்களத்தி மேலுள்ள ஆத்திரத்தையெல்லாம் அவன் பால் செலுத்தி அவனையும் இடித்துக் காட்டுகிறாள். ''அரசு வேண்டுமென்று ஆசைப்பட்டாயே, உன் ஆசை நிறைவேறி விட்டது. உன் தீயஅன்னை விரைவிலே பெற்றுவிட்டாள். என் மகனைக் காட்டுக்கனுப்பி என்ன பலன் கண்டாள்? என்னையும் விரட்டி விடுவாள், அல்லது நானே

சுமித்திரையோடு கூடப் போய் விடுகிறேன். அல்லது நீ என்னை அங்கு கொண்டுபோய் விட்டுவிடு. பின் சுகமாய் இங்கு வாழலாம்'' என்கிறாள்.

**இதம் தே ராஜ்ய காமஸ்ய ராஜ்யம் ப்ராப்தம் அகண்டகம்**
**ஸம்ப்ராப்தம் பத கைகேய்யா சீக்ரம் க்ரூரேண கர்மணா. 10**

கைகேயியை நிந்தித்தது பொருந்தும். தன்னையும் பதவிக்கு ஆசைப்பட்டவனென்று சொல்லிவிட்டாளே? பரதனுக்கு ரோஷம் பொங்கி வருகிறது. 'நான் ஒன்றுமறியாதவன், குற்றமற்றவன் தாயே' என்று கூறிப் பெரியதோர் சபதம் செய்கிறான். 'நான் மன தார ராமனை விரட்டுவதற்கு உடந்தையாயிருந்திருந்தால் பலவித பாபங்களும் என்னை வந்தடையட்டும்' என்று கூறித் தீய செயலனைத்தையும் அடுக்குகின்றான்.

இது கேட்டு மனம் தெளிந்து கோசலை 'போதும். உன் சபதத்தைக் கேட்டு என் நெஞ்சு மேலும் துடிக்கிறது. நீ தருமத்திலிருந்து வழுவாதவன்' என்று கூறி அவனை அணைத்துக் கொள்ளுகிறாள்.

நினைத்து நினைத்து அழுகிறானும் பரதன். அவனை அணைத்து 'உன் குலத்திலேயே உன்னைவிட மேலானவர் யார்?' என்று புகழ்ந்தாள் கோசலை என்கிறார் கம்பன். பரதனை 'மன்னர் மன்னவன்' என்கிறாளாம். உயர்குணத்துக்குப் பாராட்டு.

**முன்னையும் குல முதலோர்கள் தாம்**
**நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்,**
**மன்னர் மன்னவா? என்று வாழ்த்தினாள்**
**உன்னி உன்னி நைந்துருகி விம்முவான்.**

வருந்துகின்ற பரதனையணுகித் தந்தைக்கு ஈமக் கடன்களைச் செய்யுமாறு கூறுகிறார் வஸிஷ்டர். எண்ணெயிலிட்ட பிரேதத்தை எடுத்து முறைப்படி தகனக்ரியைகள் செய்கின்றனர்.

இந்நிலையில் உருக்கமான ஒரு கருத்தைப் புகுத்துகிறார் கம்பன். 'மனம் நொந்த தசரதன் உன் அன்னையையும் உன்னையும் துறந்துவிட்டான். ஆதலால் நீ ஈமக்ரியை செய்ய உரிமையற்றவன்' என்று கூறிப் பரதனைத் தடுத்து சத்ருக்னனைக் கொண்டு சடங்குகளை நிறைவேற்றினார் என்று கற்பனை செய்கிறார் கவி.

'உன்னை இக்கணமே துறந்தேன். மகுடம் சூட மகிழ்வோடு ஏற்பானேயானால் பரதனையும் துறந்தேன்' என்றான் தசரதன். இக்கருத்தை அதோடு விட்டுவிட்டார் வால்மீகி. ஆனால் துன்புற்ற நிலையில் சோகத்தைப் பெருக்க, 'துறந்து விட்டான்' என்றே சொல்லுகிறார் கம்பன்.

அன்னை தீமையால் அரசன் நின்னையும்
துன்று துன்பத்தால் துறந்து போயினன்
முன்னரே எனு முனிவன் கூறினன்

இது கேட்ட பரதன் 'தந்தைக்குக் கருமம் செய்ய விதியிலேன். அரசு புரியத்தான் உரிமையுள்ளவனானேன்' என்று தன்னை இழிவாகப் பேசி நொந்து கொள்ளுகிறான்.' என் அன்னை எனக்கு எவ்வளவு நன்மை செய்திருக்கிறாள்!' என்கிறான்.

பரதனுக்கு ஆறுதல் சொல்லுகிறான் சத்ருக்னன். பேசிக்கொண்டிருக்கும்போது கூனி வருகிறாள். ஒரே அலங்காரக் கோலம்! (வெகுமதிகள் நிறையக் கிடைத்துவிட்டனவோ?). 'இவளால் வந்தவினை' யென்று சொல்லித் தரதரவென்று இழுத்து வருகிறான், சத்ருக்னன். கைகேயி பயந்துவிடுகிறாள். பரதனிடம் வந்து அண்டிக் கொள்ளுகிறாள். 'அவளை மட்டுமல்ல, என் தாயான இவளையும் கொல்லலாம். ஆனால் பெண்ணைக் கொல்லலாகாது. ராமன் ஒருகாலும் மன்னிக்க மாட்டான்' என்கிறான் பரதன். பிழைத்தாள் கூனி!

ஈமச்சடங்குகள் முடிந்த பதினான்காம் நாள் அரசாங்கத்து அதிகாரிகள் பரதனை அணுகி முடி சூடுமாறு வேண்டுகின்றனர். அபிஷேகத்துக்கான கலசத்தை வலம் வந்து ''நீங்கள் கூறுவது சரியல்ல. மூத்தவன் பட்டத்துக்குரியவன் என்பதே எங்கள் குலதர்மம். ராமன் அரசாள்வான். அவனுக்குப் பதிலாக நான் 14 வருஷம் காட்டில் வசிப்பேன். என் தாயின் ஈன புத்தியை அனுசரித்து அவளை மகிழ்விக்க இணங்கமாட்டேன். ராமனைத் தேடி அழைத்துவர ஏற்பாடுகள் நடக்கட்டும்'' என்கிறான் பரதன்.

ந ஸகாமாம் கரிஷ்யாமி ஸ்வாமிமாம் மாத்ருகந்தினீம்
வனே வத்ஸ்யாம்யஹம் துர்கே ராமோ ராஜா பவிஷ்யதி 11

வஸிஷ்டர் வந்து சொல்லுகிறார். ''தன் வாக்கைக் காப்பாற்றித் தருமத்தைக் கைப்பிடித்து உனக்கு அரசு அளித்து வானுலகம் சென்றார் உன் தந்தை. தந்தையின் சொல்லைக் கடைப்பிடித்து தருமத்தைக் காத்து வனம் சென்றான் ராமன். தந்தையும் தமையனும் அளித்த அரசை நீ ஏற்றுக்கொள்.'

தவறான நிலையில் இதமாகப் பேசினால் 'சுருக்'கென்றுதான் தைக்கும். 'அவர்களிருவரும் தருமத்தைக் காத்தவர்கள். நீ ராஜ்யத்தை எடுத்துக்கொள்' என்றால் தொக்கி நிற்பது என்ன? வஸிஷ்டரின் சொல் பரதனை நோகச் செய்கிறது. மிகுந்த வருத்தத்தோடு குலகுருவை சபை நடுவே ஏசினான் என்று வர்ணிக்கிறார் வால்மீகி.

விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம் 12

''தருமத்துக்கென வாழ்பவனிடமிருந்து நான் ராஜ்யத்தைக் கைப்பற்றுவேனோ? தசரதனின் மகனாய்ப் பிறந்த நானோ அவ்விதம்

செய்வேன்?'' என்று கதறுகிருன். மீண்டும் தாயின் நினைவு வருகிறது. தன்னை உடந்தையெனக் கருதியே இப்படிச் சொல்லியிருக்கலாம் என்று தோன்றுகிறது. ''தாய் செய்த தீவினையை நான் முற்றிலும் வெறுக்கிறேன். ராமனைத் தேடி அழைக்கப் போகிறேன். அவன் மூவுலகையும் ஆள யோக்யதை உள்ளவன்'' என்கிருன்.

ராமனைத் திருமாலின் உருவத்தில் கண்ட கம்பர் 'மூன்று உலகங் களுக்கும் ஆதி புருஷனுய் உள்ளவன் எனக்கு முன் பிறந்தவனுக இருக் கும்போது நான் எப்படி அரசாள்வேன்?'' என்று பரதன் சொல்வ தாக வர்ணிக்கிருர். 'இது தருமம் என்ருல் என் தாய் செய்த செய் கையில் தவறு ஒன்றுமில்லையே?'' என்று இடித்துக் காட்டுகிருன்.

மூன்றுலகினுக்கொரு முதல்வனுய் முதல்
தோன்றினனிருக்க யான் மகுடஞ்சூடுதல்
சான்றவர் உரை செயத் தருமம் ஆயதே
ஈன்றவள் செய்கையின் இழுக்குண்டாகுமோ?

கைகேயி செய்த குற்றத்தை அன்று ஊரார் நிந்தித்தபோதிலும் பின்னர் நடந்த சம்பவங்களால் அதை மறந்து, தற்போதைய சூழ் நிலையில் பரதன் முடிசூடுவது ஒன்றே முறையென்று பெரியோர் கருதுகின்றனர். ஆனுல் இதை பரதன் ஒப்புக்கொள்ள மறுக்கிருன். தவறைத் தவறு என்று ஸ்தாபித்துத் தனக்கு அதில் சிறிதேனும் பங்கு இல்லையென்று நிலைநாட்ட வேண்டும். இதுவே அவன் நோக்கம். அதனுல்தான் தாயைப் பலமுறை பிறர் முன்னிலையில் நிந் திக்கிருன். அவள் செய்த தீவினைக்குத்தான் எவ்விதத்திலும் பொறுப் பாளி அல்ல என்று உலகோர் நம்பவேண்டும். இதில் முனைந்து நிற் கிருன் மானம் நிறைந்த பரதன். சித்ரகூடத்துக்குப் போய் ராமனைத் திரும்பி அழைத்துவர முயற்சி செய்வதிலும் இந்நோக்கம் இருக்கிறது. வெறும் சகோதர வாஞ்சை மட்டுமல்ல. வயதுவந்த அரச குமாரன் தன் சுய கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிருன். மேலும், தருமத்தைப் போற்றுவதில் அவன் மட்டும் சளைத்தவனு?

இத்தகைய உறுதியே அவனுக்குப் புகழை அளித்து ராமனுடன் நல்லுறவு கொள்ள உதவுகிறது. சேனையோடு பரதன் வருகிருனென் றறிந்த குகன் அவனைச் சந்தேகித்துப் போருக்குத் தயாராகிருன். ஆனுல் விவரம் உணர்ந்த பின் 'உனக்கு ஆயிரம் ராமர் இணையா வாரோ?' என்று புகழுகிருன். 'தாய் சொல்ல, தந்தை கொடுக்க, பெற்ருேரின் பரிசான ராஜ்யத்தை தீவினையென்று கருதி, முகத்தில் கவலையோடு கானகம் வந்து சேர்ந்தாயே, உன் குணத்தைக் கண் டால் தந்தை சொல்படி வனம்போன ராமனைவிட நீ ஆயிரம் மடங்கு மேலானவன் என்று தோன்றுகிறது'' என்கிருனும் குகன். 'புகழி ஞேய்' என்று அழைக்கிருன் பரதனை.

**தாய் உரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னை
தீவினையென்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கி
போயினையென்ற போழ்து, புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் ராமர் நின் கேழ் ஆவரோ தெரியின் அம்மா**

'உனக்கு இணையாக இவ்வுலகிலே எவரையும் கண்டதில்லை. சிரமப்படாமல் கிடைத்த ராஜ்யத்தை உதறித் தள்ளுகிறாயே, நீ மேலானவன்' என்கிறான் குகன். பரதனின் நேர்மையும் புகழும் எங்கும் பரவுகிறது!

**தன்யஸ்த்வம் ந த்வயா துல்யம் பச்யாமி ஜகதீதலே
அயத்னாதாகதம் ராஜ்யம் யஸ்த்வம் த்யக்துமிஹேச்சஸி** 13

குகன் பரதனுக்கு ராமலக்ஷ்மணர்கள் தங்கிச் சென்ற விவரமெல்லாம் சொல்லுகிறான். கல்லும் கனியும்படியான துயருடைய பரதன் கேட்டுக் கேட்டுப் பெருமூச்சு விடுகிறான்.

கங்கையைக் கடக்குமுன் உடன் வந்த அன்னையரை குகனுக்கு அறிமுகப்படுத்துகிறானும் பரதன். 'ராமன் பிறந்ததால் பெறவேண்டிய செல்வத்தை நான் பிறந்ததால் இழந்தவள் இவள்' என்று கோசலையைக் காட்டுகிறான்.

**முன்னீன்றானைப்
பெற்றதால் பெறும் செல்வம் யான் பிறந்ததால் துறந்த
பெரியாள்.**

'ராமனுக்கு உடன் பிறந்தாரும் உண்டு என்று காட்டுவதுபோல் பிரியாதிருக்கும் லக்ஷ்மணனைப் பெற்றவள்' என்று சுமித்திரையைக் காட்டுகிறான்.

**இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தன்னைப்
பயந்த பெரியாள்.**

இவ்வுலகத்தில் சிறிதும் வருத்தமில்லாத முகத்தையுடையவளை நீ அறிந்துகொள்ள வில்லையானால், இவள்தான் என்னைப் பெற்றவள்' என்று கைகேயியைக் குறிக்கிறான்.

'உலகத்தே ஒருத்தியன்றே இடரிலா முகத்தாளை அறிந் ததிலையேல் இந்நின்ருள் என்னை ஈன்ருள்.'

அன்னையரை பரத்வாஜ முனிவருக்கு அறிமுகம் செய்விக்கும் போது இப்படிச் சொன்னதாக வர்ணிக்கிருர் வால்மீகி.

நதியைக் கடந்து பரத்வாஜாச்ரமம் அடைகின்றனர். 'நீ வந்த காரணம் என்ன? எனக்கு சமாதானம் ஏற்படும்படி விவரமாகச் சொல்லு' என்று சந்தேகத்தோடு கேட்கிருர். கைகேயி சூழ்ச்சியை நினைவுறுத்துகிருர். 'குற்றமற்றவன் ராமன். பெண் பேச்சால் விரட் டப்பட்டான். அவன் நிம்மதியாயிருக்கட்டும். அவனுக்கு மேலும் தீங்கிழைக்கவோ வந்திருக்கிருய்? ராஜ்யத்தைக் கவலையின்றி ஆள அவனையும் லக்ஷ்மணனையும் ஒழித்துவிட எண்ணமோ?' என் கிருர்.

கஸ்சின்ன தஸ்யாபாபஸ்ய பாபம் கர்த்துமிஹேச்சஸி
அகண்டகம் போக்துமனு ராஜ்யம் தஸ்யானுஜஸ்யச 14

மீண்டும் தாயின் தீவினை தன்னைச் சூழ்ந்து நிற்பதைக் காண் கிருன் பரதன். 'என் மேல் ஒரு குற்றமுமில்லை. நீங்களும் என்னை அப்படி நினைக்கிறீர்களா? என் தாய் செய்ததை நான் வெறுக்கிறேன். அவள் பேச்சை நான் ஏற்றுக் கொள்ளவில்லையே. ராமனைத் திருப்பி அழைத்து வரவே போகிறேன்' என்கிருன்.

நசைததிஷ்டம் மாதாமே யதவோசன் மதந்தரே
நாஹமேதேன துஷ்டஸ்ச நதத்வசனமாததே 15

மகிழ்ந்த முனிவர் 'இது வல்லவோ உன் குலத்தோருக்கழகு! உன் மனம் உறுதியாயிருக்கிறதாவென்று பார்க்கவே அப்படிச் சொன் னேன்' என்று கூறி ஆசீர்வதித்தனுப்புகிருர். வந்திருக்கும் பேர்களுக் கெல்லாம் பெரிய விருந்தும் பலவித உபசரணைகளும் ஏற்பாடு செய் கிருர். படையில் சிலர் 'பரதன் வேண்டுமானுல் போய் ராமனைத் தேடட்டும். நாம் இங்கேயே ஆனந்தமாய் இருப்போம்' என்கிருர் கள்!

நேர்மைமிக்க பரதன் பரத்வாஜரிடம் கடிந்து பேசியதாக வர் ணிக்கிருர் கம்பன். 'உனக்கே ராஜ்யம் கிடைத்துவிட்டது. கிரீடம் தரித்து ஆளுவதற்கு பதிலாக நீண்ட சடையோடு வந்த காரணம் என்ன?' என்று கேட்டாராம் முனிவர். உடனே மனம் கொதித்த தாம் பரதனுக்கு. கோபத்தால் சீற்றம் கொண்டுவிட்டான். அறிவில் சிறந்த முனிவரா இப்படிப் பேசுவது? 'நீர் சொன்ன சொல் எனக்கு அடுத்தது அன்று. உம்முடைய வயதுக்கும் அறிவுக்கும் அடுத்ததும் அன்று' என்று கசந்து கூறினனும்.

**சினக் கொடுந்திறல் சீற்ற வெம் தீயினுன்**
**மனக் கடுப்பினன் மாதவத்து ஓங்கலை**
**'எனக்கடுத்தது இயம்பிலை நீ'யெனு**
**'உனக்கடுத்தது மன்று உரவோய்' என்ருன்.**

(இப்பாடலில் கருத்தும் சொல்லும் இணையாக அமைந்திருப்பது தனி அழகு. முதலடியை உரக்கப் படித்துப் பாருங்கள். உங்களுக்கே கோபம் வரும்!)

இளைஞன் சொல்லைக் கேட்டதும் உடலும் உள்ளமும் சந்தனம் பூசினது போல் குளிர்ச்சியடைந்தனவாம் முனிவருக்கு. ஆசிகூறி அனுப்புகிருர் பரத்வாஜர்.

# 9

# 'அழுது அழுகண்ணினன்'

சித்ரகூடத்தைத் தேடி வருகிறுன் பரதன். அங்கு இருக்கும் ராமனே அயோத்தியைவிட்டு வந்த ஏக்கத்திலிருக்கிறுன். ஆனுல் சுற்றியிருக்கும் இயற்கையின் வனப்பையும் ஸீதையோடு அந்தரங்கமாய்ப் பேசும் இனிமையையும் நினேத்து அந்த ஏக்கத்தைத் தவிர்க்கப்பார்க்கிறுன். ''ராஜ்யத்தைவிட்டு விரட்டினுர்கள், உற்ருர் ஒருவருமின்றி இருக்கிறேன். ஆனுல் இங்கு இயற்கைக் காட்சி அதையெல்லாம் மறக்க உதவுகிறது. நான் காட்டுக்கு வந்ததும் பயனற்றதாய்ப் போகவில்லே. தந்தைக்கு தருமம் காத்த புகழும் பரதனுக்கு உகந்த பரிசும் வாய்த்தன! என்கிறுன். 'என்னேடு சற்று உலவவா' என்றழைத்துச் சென்று சித்ரகூடத்தின் அழகைக் காட்டுகிறுன். 'இந்த நதியில் என்னுடன் விளேயாடு. இதுதான் ஸரயூவென்று நினேத்துக்கொள். வனப்பிராணிகள்தான் ஊர்ஜனங்கள். இந்த மலேயே அயோத்தி' என்று சொல்லுகிறுன். மீண்டும் அயோத்தி நினேவே வருகிறது! இதையுணர்ந்து விடுகிறுன். உடனே, மாற்ற நினேப்பவன் போல், 'நீ என்னுடன் இதமாய் இருக்கும்போது அயோத்தியையும் அரசையும் மதிப்பேனே?'' என்கிறுன்.

**ந ராஜ்யாத் ப்ரம்சனம் பத்ரே ந ஸுஹ்ருத் பிர்விஞபவ:**
**மனேமே பாததே த்ருஷ்ட்வா ரமணீயம் இமம் கிரிம்** 1

ராஜ்யத்தைப் பொருட்படுத்தாமலில்லே. இழந்ததை அடிக்கடி நினேக்கிறுன். ஆனுல் அதுவே பெரும் ஏக்கமாகிவிடாமல் பாதுகாப்பது ஸீதையின் இதமான துணே. இதை வாய்விட்டுச் சொல்லுகிறுன் தன் நாயகியிடம்.

நாயோத்யாயை ந ராஜ்யாய ஸ்ப்ருஹயேத்ய த்வயா ஸஹ. 2

மலைப் பிரதேசங்களில் சுற்றி உலாவி, ஓரிடத்தில் அமர்ந்து சாப்பிடுகின்றனர் தம்பதிகள். பலவித மாம்ஸங்களை நெருப்பில் நன்ருய் வாட்டிச் சமைத்து ஸீதைக்குத்தந்து அவள் மனதைக் கவர்ந்து நிற்கிருன் ராமன்.

திடீரென்று பெரிய ஆரவாரம். நெடும் தூரத்தில் சேனைகளின் முழக்கம். சப்தமும் குழப்பமும் உண்டாகக் காரணம் என்னவென்று பார்க்கும்படி லக்ஷ்மணனை ஏவுகிருன் ராமன். மரத்தின்மேல் ஏறிப்பார்த்து கிழக்கேயிருந்து ஒரு பெரிய சேனை வருவதைக் கவனிக்கிருன் இளையவன்.

'சிக்கிரம் நெருப்பை அணைத்து, ஸீதையை குகைக்குள் ஒளித்து வை. கையிலே வில்லை எடு' என்கிருன். (எதிரிகள் தம் இருப்பிடம் அறியாமலிருக்க நெருப்பை அணைப்பது) 'கூர்ந்து கவனி. யாருடைய சேனை?' என்று ராமன் கேட்க, உள்ளக் கொதிப்புடன் லக்ஷ்மணன் சொல்லுகிருன், ''வந்து விட்டான் கைகேயி மகன், அண்ணு. நம்மைக் கொல்ல வந்துவிட்டான். பெரிய ராஜ்யத்தை அடைந்தும் திருப்தியில்லாதவன்!''

ஸம்பன்னம் ராஜ்யமிச்சன்ஸ்து வ்யக்தம் ப்ராப்ய அபிஷேசனம்
ஆவாம் ஹந்தும் ஸமப்யேதி கைகேய்யா பரதஸ்ஸுத: 3

உடனே, நடந்ததெல்லாம் நினைவுக்கு வருகிறது. ஆத்திரம் பொங்க, 'இவனுலல்லவோ உனக்கும் ஸீதைக்கும் எனக்கும் துன்பம் வந்தது? இத்தகைய சத்ருவை நேரில் கண்டால் கொல்லாமல் விடுவேனு? அதில் யாதொரு பாபமும் இல்லை' என்கிருன்.

அபி த்ரக்ஷ்யாமி பரதம் யத்க்ருதே வ்யஸனம் மஹத்
த்வயா ராகவ ஸம்ப்ராப்தம் ஸீதயாச மயா ததா
ஸம் ப்ராப்தோயம் அரிர்வீர பரதோ வத்ய ஏவ மே
பரதஸ்ய வதேதோஷம் நாஹம் பச்யாமி ராகவ. 4

'பரதனைக் கொன்று விடுவேன்' என்று சொன்னதும் அதன் விளைவு நன்மையே என்று தோன்றுகிறது. கைகேயி இழைத்த தீங்குக்கு பழிக்குப் பழி! ராஜ்யத்துக்குப் பேராசை பிடித்து அலைந்தவள் கிடந்து அலறட்டும் என்று நினைக்கிருன். 'அவளையும் கொன்றுவிடுகிறேன். உலகத்தில் மாசு அகலட்டும்' என்று உறுமுகிருன். கோபம் தாங்க முடியவில்லை.

அத்ய புத்ரம் ஹதம் ஸங்க்யே கைகேயீ ராஜ்யகாமுகா
மயா பச்யேத் ஸுதுக்கார்த்தா ஹஸ்திபக்னமிவ த்ருமம்
கைகேயீம் சவதிஷ்யாமி ஸாநுபந்தாம் ஸபாந்தவாம்
கலுஷேணுத்ய மஹதா மேதினீ பரிமுச்யதாம். 5

சினத்தால் சிவந்த சகோதரனை சமாதானம் செய்ய நினைத்து பரதனைப் புகழ்ந்து பேசுகிருன் ராமன். 'உத்தமனுன பரதன்

நேரிலே வருகிருனென்றபோது அம்பும் வில்லும் எதற்கு? அவன் நம்மை நாடி வருகிருன். நாம் தவருனதாக எதுவும் செய்ய லாகாது. பரதன்மேல் அபிமானம், அவன் நடத்தையில் நம்பிக்கை. 'அவன் எப்போதாவது தவருக நடந்திருக்கிருனு?' என்று கேட்கிருன். ஆகையால் பரதன்மேல் துவேஷம் காட்டக்கூடாது என்கிருன். 'அவனே வைதால் என்னே வைதது போலாகும்' என்கிருன்! 'ஒரு வேளே ராஜ்யத்தின்மேல் உள்ள ஆசையால் நீ அவனேக் கொல்லுவே னென்றெல்லாம் பேசுகிருயோ? அவனிடம் சொல்லி உனக்கே ராஜ் யம் கிடைக்கும்படி வழி செய்கிறேன்' என்கிருன்.

லக்ஷ்மணன் வெட்கித் தலேகுனிந்து நிற்கிருன். தன்னிலேயை சமாளித்துக்கொள்ள, 'அண்ணு, உன்னேப் பார்க்க ஆவலோடு தந் தையே நேரில் வருகிருர் என்று நினேக்கிறேன்' என்கிருன். ராமனும் அவனது நாணத்தைப் போக்க மேலும் பேச்சுக் கொடுக்கிருன். 'ஆம். அப்படியும் இருக்கலாம். வனவாஸம் போதுமென்று சொல்லி அரண் மனேக்கு அழைத்துச் செல்ல வருகிருர் போலும். அல்லது அருமை மருமகளேயாவது கூட்டிச் செல்லலாமென்று நினேக்கலாம்' என்கிருன் ராமன்.

லக்ஷ்மணன் கைகட்டி அருகில் வந்து நிற்கிருன். தம்பியைக் கண்டித்துக் கடிந்து பேசியபோதிலும் அவன் சிறுமைப்பட்டுத் தனித்து நிற்காத வண்ணம் நடந்து கொண்டதை நாஸூக்காக வர் ணிக்கிருர் கவி.

லக்ஷ்மணன் கோபத்தையும் ராமன் பொறுமையையும் நாடகம் போல் நம் கண்முன் காட்டுகிருர் கம்பன். பளிச்சென்ற வர்ணத்தால் சித்தரிக்கும் ஓவியக்காரர்போல் சொற்களேக் கையாளுகிருர்.

மரத்தின் மேலிருந்தபடி பரதன் சேனேயோடு வருவதைப் பார்த்த லக்ஷ்மணன், உடனே குதித்தான், தரையில் புழுதி கிளம்பும் படி வேகமாய் நடந்தான், ராமனிடம் சீக்கிரம் வந்து 'உன்னே மதிக்க வில்லே அந்த பரதன். பெரிய சேனேயோடு உன்னே எதிர்க்க வந்துவிட் டான்' என்று படபடப்போடு சொன்னுன் என்கிருர்.

**குதித்தனன் பாரிடைக்குவடு நீறுஎழ**
**மிதித்தனன் இராமனே விரைவின் எய்தினுன்**
**மதித்திலன் பரதன் நின்மேல் வந்தான் மதில்**
**பதிப்பெருஞ் சேனேயைப் பரப்பினுன் எனு.**

பரபரப்பு ஒவ்வொரு அடியிலும் முதல் வார்த்தையிலேயே தொனிக்கிறது.

பரதனைப் பற்றிப் பேசும்போது அவன் அரசனாகிவிட்டான் என்று நினைவு வருகிறது. அதனால் தோள் வலிமை கொண்டிருக்கலாம். ஆனால் தீவினையால் அடைந்த செல்வம் அவனுக்கு இம்மையும் மறுமையும் இல்லாமல் செய்துவிடும் என்கிறான். 'இருமையும் இழந்தவன்' என்று குறிக்கிறான். சேனையோடு வருகிறானல்லவா? அந்தப் பெருமை வேறு இருக்கும். ஆனால் இவையெல்லாம் எம்மாத்திரம்? 'எதிர்த்து நிற்க நான் ஒருவன் இருக்கிறேன். அவனைத் தோற்கடிக்கும் திறனைப் பார்த்து எனது ஒருமையை மெச்சுவாய்' என்கிறான்.

**இருமையும் இழந்த அப்பரதன் ஏந்துதோள்**
**பருமையும் மன்னவன் படைத்த சேனையின்**
**பெருமையும் நின்னொடு பின்புவந்த என்**
**ஒருமையும் கண்டு இனி உவத்தி உள்ளம் நீ.**

ராமனோடு தான் ஒருவனே வந்ததால் 'என் ஒருமையைக் காண்' என்கிறான். ஒப்பு உவமை இல்லாத ஆர்வத்தோடு காத்து நிற்கும் சகோதரவாஞ்சையும் தனிப்பட்ட ஒருமைதானே? அதன் பெருமையே ராமனுக்கு உவகை தரும் என்பது கவியின் கருத்து.

அரண்மனையில் நடந்ததையெல்லாம் நினைத்து தந்தையை 'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த பெருமகன்' என்று ஏளனமாகக் குறிக்கிறான். அத்தந்தையின் ஏவலால் வந்த பரதன் 'ராஜ்யத்திற்குப் பதிலாக நரகத்தை ஆளப் போகிறான் என் கையில் சிக்கியதும்' என்று உறுமுகிறான்.

**ஒரு மகள் காதலின் உலகை நோய்செய்த**
**பெருமகன் ஏவலிற் பரதன் தான்பெறும்**
**இருநிலம் ஆள்கைவிட்டு இன்றென்னேவலால்**
**அரு நரகுஆள்வது காண்டி ஆழியாய்.**

கைகேயி தன் மகன் மாண்டுபோவதைப் பார்க்கப் போகிறாள் என்று சொன்னதாக வால்மீகி வர்ணித்தார் 'புத்ரம்ஹதம் பச்யேத்' என்ற சொல்லில் அடங்கிய ரோஷத்தையும் பழிவாங்கும் மனப்பான்மையையும் எடுத்துக் காட்டுகிறார் கம்பன்.

மகன் காட்டுக்குப் போக வேண்டிய நிலை வந்ததேயென்று ஏங்கித் துடித்துக் கொண்டிருந்தாள் கோசலை. அன்று சக்களத்தியின் துயரம் கண்டு மனம் பூரித்துப் போனாளாம் கைகேயி. 'இன்று அவள் மகன் இறக்க, அவள் புரண்டு அழப்போகிறாள்' என்று வீராவேசத்தோடு சொல்லுகிறான் லக்ஷ்மணன். பிறர் துயரைக் கண்டு மகிழ்தலை விடக் கேவலமானது உண்டோ? தீமையில் செழித்தவள் கேகயன் மகள் என்கிறான்!

**வையகம் துறந்து வந்து அடவி வைகுதல்**
**எய்தியதுனக்கு என நின்னை ஈன்றவள்**
**நைதல் கண்டு உவந்தவள் நவையில் ஓங்கிய**
**கேகயன் மகள் விழுந்து அரற்றக் காண்டியால்.**

கோபம் தலைக்கேறிவிட்டது. 'முப்புரம் எரித்த ருத்ரமூர்த்தி போல் பரதனை சேனையோடு அழித்துவிடுவேன்' என்கிறான்.

ராமன் உள்ளம் பூரித்து நிற்கிறான். தம்பியின் வீரமும் வாஞ்சையும் மெய்சிலிர்க்கச் செய்கின்றன. ''லக்ஷ்மணா, நீ இந்த பதினான்கு லோகத்தையும் கலக்க வைக்க வல்லவன். அப்படிச் செய்யத் தீர்மானித்துவிட்டாயானால் உன்னைத் தடுப்பது அசாத்யம். அதைச் சொல்லவும் வேண்டுமா? ஆயினும் முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. அதைச் சொல்லுகிறேன், கேள்.'' என்கிறான்.

**இலக்குவ! உலகம் ஓர் ஏழும் ஏழும் நீ**
**கலக்குவன் என்பது கருதினால் அது**
**விலக்குவதரிது, அது விளம்பல் வேண்டுமோ?**
**புலக்குரித்து ஒரு பொருள் புகலக் கேட்டியால்.**

மிகுந்த கோபத்திலிருப்பவரை சாந்தப்படுத்த புகழ்ச்சி ஒரு சாதனம். சொல்லிலேயே சாந்தம் ஒலிக்கிறது.

உணர்ச்சி வசப்பட்டு உலகையே அழிக்கத் தொடங்கலாம். ஆனால் புலன் கொண்டு ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்பதையும் வற்புறுத்துகிறார் கவி.

பின் தங்கள் குலப்பெருமையை நினைவூட்டி 'குற்றமற்ற மன்னர்கள் அவர்கள். தருமத்திலிருந்து விலகினவர் எவருமில்லை' என்கிறான். 'இக்குலத்தில் பிறந்த பரதனை நாம் சந்தேகிக்கலாமா?' என்று முடிக்கிறான். நற்குணமாகிய தேர் நன்கு செல்ல அச்சாணி போன்றவன் பரதன் என்கிறான். ('செம்மையின் ஆணி')

'இப்படிப்பட்ட பரதன் என் மேல் உள்ள காதலால் இங்கு வருகிறான். எனக்கு ராஜ்யத்தை அளிக்கவே வருகிறான் என்று நினைப்பதைவிட்டு என்மேல் போர் தொடுக்க வருகிறான் என்று நினைப்பது அறிவுக்கு உகந்ததோ?' என்கிறான். கேள்வியில் விடை அடங்கியிருக்கிறது.

**பெருமகன் என்வயின்பிறந்த காதலின்**
**வருமென நினைகையும் மண்ணை என்வயின்**
**தருமென நினைகையும் தவிர, தானையால்**
**பொருமென நினைகையும் புலமைப் பாலதோ?**

'ப்ரஸாத்ய பிதரம் ஸ்ரீமான் ராஜ்யம் மே தாதுமாகத:' என்ற ச்லோகத்தின் விரிவுரை.

கோபத்தையடக்கி, அமைதியாக ஆராய்ந்து அறிவுக்கெட்டும் படி சொல்லும் அழகைப் பாருங்கள். முதலில் லக்ஷ்மணனைப் புகழ்ந் தான், பின் குலத்தைப் புகழ்ந்தான். கடைசியில் இக்குலத்துக்கே புகழ் தரும் 'பெருமகன்' யார் தெரியுமா? நீ பகைவனென்று நினைக் கும் பரதன் என்று முடிக்கிறான்.

இதற்குள் பரதன் வந்துவிட்டான். 'அண்ணா' என்கிறான். மேலே பேச முடியவில்லை. காலடியில் வீழ்கிறான். பாதத்தை எட்ட வில்லை. உணர்ச்சி வேகத்தில் அவசரம்!

வணங்கிய பரதனைப் பார்க்கிறான் ராமன். தலையிலே சடை. இடையிலே மரவுரி. முகத்திலே களையில்லை. அவனை வாரியணைத்து க்ஷேமலாபம் விசாரிக்கிறான்.

ஜடிலம் சீரவஸனம் ப்ராஞ்சலிம் பதிதம் புவி
ததர்ச ராமோ துர்தர்சம் யுகாந்தே பாஸ்கரம் யதா
கதம்கித் அபிவிஞாய விவர்ணவதனம் க்ருசம்
ப்ராதரம் பரதம் ராம: பரிஜக்ராஹ பாஹுனா 6

பரதனது நிலையை ஐந்து சொற்களில் தத்ரூபமாய் வர்ணிக் கிறார் வால்மீகி. 'ஜடிலம்,' 'சீரவஸனம்,' 'ப்ராஞ்சலிம்,' 'விவர்ண வதனம்,' 'க்ருசம்' என்ற இவ்வைந்து வார்த்தைகளைக் கொண்டு அவற்றைத் தமிழாக்கிய கம்பன் சித்திரத்தைப் பேச வைக்கிறார்.

பரதன் வருகிறான். தூரத்திலேயே அவனுடைய கூப்பிய கரம் தெரிகிறது. உடல் மெலிந்திருப்பதும் தென்படுகிறது. இன்னும் சற்று அருகில் வந்ததும் அவன் அழுது அழுது கண் சிவந்திருப்பதைப் பார்க் கிறான் ராமன். ஆயினும் ஒன்றும் புரியவில்லை. நன்கு உணர்வதற் காக, தன்னை நோக்கி வரும் பரதனைக் கூர்ந்து கவனிக்கிறான் என்று முடிக்கிறார் கம்பன். ஒரே பாடலில் பரதன் நடந்து வருவதையும் அவன் அருகில் வரவரத் தென்பட்ட விவரங்களையும் அடக்கிவிட் டார். 'அவலம் என்றால் இதுதான்' என்னும்படி எழுதிய ஓவியம் போல் இருந்தானாம் பரதன்.

தொழுதுயர் கையினன் துவண்ட மேனியன்
அழுதுஅழு கண்ணினன் அவலம் ஈதுஎன
எழுதிய படிவம் ஒத்து எய்துவான்தனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்.

'முழுதுணர்சிந்தையான்' என்பதற்கு 'முற்றும் உணர்ந்தறிந்த ராமன்' என்று விளக்கம் கூறுவதுண்டு. பொருத்தமற்ற நிலையில்

பக்தியைப் புகுத்தும் மனப்பான்மையின் விளைவு இதுதான். 'முழுதையும் உணர வேண்டும் என்ற சிந்தையோடு கூர்ந்து நோக்கினன்' என்பதே கவிதைக்குப் பொருந்தும். 'கதம்சித் அபிவிஞாய' என்ற வர்ணனையின் எதிரொலி. இதற்கேற்றபடி கம்பனே 'பன்முறை நோக்கினன், பலவும் உன்னினன்' என்கிறார் பின்பாடலில். எல்லாம் அறிந்தவல்லவனாயிருந்தால் கூர்ந்து கவனிக்க வேண்டிய அவசியமில்லையே?

தான் காவ்யம் எழுதுவது தெய்விகக் கவியான வால்மீகியின் மாட்சிமை எல்லோருக்கும் தெரியட்டும் என்ற நோக்கத்தோடுதான் என்கிறார் கம்பர் தன் துதிப்பாடலில். **(பொய்ம்மையில் கேள்விப் புலமையினோர் புகல் தெய்வமாக்கவி மாட்சி தெரிக்கவே.)**

ஆனால் இத்தகையப் பாடல்களைப் படிக்கும்போது வால்மீகியின் உயர்வு மட்டுமா தெரிகிறது? அவருக்குத் தமிழ் தெரிந்திருந்தால் உயிர் பெற்றெழுந்து கம்பனைக் கட்டி அணைத்து மகிழ்ந்திருப்பார் அல்லவா?

10

# 'அடித்தலமே முடித்தலம்'

அடிபணிந்து நின்ற பரதனை அணைத்து மடியில் இருத்தி நலம் விசாரிக்கிறான் ராமன். முதலில் தந்தையைப்பற்றிக் கேட்கத் துடிக்கிறது உள்ளம். ஊரைவிட்டு வந்தபோது மூர்ச்சையாகிக் கிடந்தாரல்லவா? ஆயினும் அவர் செய்தது, வலிமையற்று அந்திக்கு உடந்தையாகிவிட்டார் என்ற உணர்ச்சி, இதெல்லாம் மனதைவிட்டு அகலவில்லைபோலும்.

பற்று இல்லாதவன் போல் ''உன் தந்தைக்கு என்ன ஆயிற்று? நீ இங்கு வரக்காரணம் என்ன?'' என்று கேட்கிறான் ராமன். (உன்னையும் விரட்டிவிட்டாரா?' என்பது தொக்கி நிற்கிறது.)

க்வனுதே அபூத் பிதா தாத யதரண்யம் த்வம் இஹாகத: 1

பின்னால் பேசும்போதும் 'ராஜா,' 'தசரத மன்னர்' என்றே குறிப்பிடுகிறான். கொண்டாடினால்தானே உறவு?

நெருங்கிய உறவினரோடு மனஸ்தாபம் நேர்ந்தாலும் அவரைப் பற்றி அறிந்துகொள்ள அவா அகலாது. ஆனால் பேச்சில் தன்னையறியாமல் மனக்கசப்பு வெளிப்படும். இதை நுட்பமாகக் குறிக்கிறார் வால்மீகி.

அரண்மனையில் எல்லோரையும் பற்றி விசாரித்து 'அரசாங்கம் சரிவர நடக்கிறதா?' என்று அறியப் பல கேள்விகள் கேட்கிறான். ராஜதந்திரம், உத்யோக முறை, நட்பின் இயற்கை, நல்லோர்க்கு ஆதரவு முதலியவற்றைக் கேள்வி உருவத்தில் அமைத்து அறிவூட்டுகிறான்.

சம்பந்தமில்லாத பேச்சு. சூழ்நிலைக்கு ஒவ்வாமல் அமைந்திருக்கிறது. ''அரசன் சௌக்கியமா?'' என்று ஆரம்பிக்கும் சொற்

பொழிவு 'நீ எப்படி அரசு செலுத்துகிறாய்?' என்று மாறி, ராஜ நீதியை போதிக்கும் பாடமாக முடிகிறது. காவ்யத்தின் நடையை ஒடுக்கி ரஸமான காட்சியைச் சிதற அடிக்கும் இந்த சுலோகங்கள் எல்லாம் பிற்கால இடைச் செருகல் என்றே சொல்லாம்.

எல்லா நன்மொழிகளையும் ராமாயணத்தில் அமைத்து மகிழ விரும்பிய பின்னோர்களின் செயலே இந்த ஸர்க்கம் பத்தாவது சுலோகத்துக்கு அப்பால் வளர்ந்த காரணம் என்று ஊகிக்கலாம்.

'தமையனிருக்கத் தம்பி ஆள்வதோ முறை? என்னோடு அயோத்திக்கு வா. முடிசூடி எங்களை ஆதரிக்க வேண்டும். நான் கேகய நாட்டிலிருக்கும் போதே நீ வனம் போனவுடன் தந்தை பரகதி அடைந்துவிட்டார். நீயும் லக்ஷ்மணனும் ஸீதையும் போன துக்கம் தாங்க மாட்டாத மன்னன் உன்னையே நினைத்து, உன்னையே காணத் துடித்து, உன்னையே நாடிய மனதை வசப்படுத்த இயலாமல் உயிர் துறந்தார் உன் தந்தை' என்று முடிக்கிறான்.

ராமன் கேட்ட கேள்விக்குத்தக்க பதில்!

**நிஷ்க்ராந்த மாத்ரே பவதி ஸஹஸீதே ஸலக்ஷ்மணே**
**து:க்க சோகாபி பூதஸ்து ராஜா த்ரிதிவம் அப்யகாத்**
**............**
**த்வாமேவ சோசன்ஸ்தவ தர்சனேப்ஸுஸ்த்வய்யேவ**
**ஸக்தாம் அநிவர்த்ய புத்திம்**
**த்வயாவிஹீனஸ்தவ சோக ருக்ணஸ்த்வாம் ஸம்ஸ்**
**மரன்னஸ்தமித: பிதாதே.** 2

ராமனைப் பிரிந்ததே வியாதி. கைகேயி பெற்ற வரம்தான் யமன் என்று குறிப்பிடுகிறார் கம்பன். 'நின் பிரிவெனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்கரியவள் வரமெனும் காலனால்'' என்கிறான் பரதன். 'என்னைப் பெற்ற அக்கரியவள்' என்ற அடைமொழியால் தாய்செய்த வினையில் தனக்குப் பங்கு கிடையாதென்று உணர்த்துகிறான்.

செய்திகேட்டு மூர்ச்சையடைகிறான் ராமன். நீர் தெளித்து மூர்ச்சை தெளிவிக்கின்றனர். எழுந்ததும் பரதனைப் பார்த்து ''தந்தை இறந்தபின் எனக்கு அயோத்தியில் என்ன வேலை?' அவரில்லாத போது எவன் அரசாள்வான்?'' என்கிறான்.

மரணச் செய்தி அறிந்ததும் தன்னையறியாமல் சதை ஆடுகிறது. 'மன்னன்' தந்தையாகி விடுகிறான்!

**கிம் கரிஷ்யாம்யயோத்யாயாம் தாதே திஷ்டாம் கதிம் கதே**
**கஸ்தாம் ராஜவராத் ஹீனம் அயோத் யாம் பாலயிஷ்யதி.** 3

'வனவாஸம் முடிந்த பிறகும் அயோத்திக்குத் திரும்பி வர விருப்பமில்லை. அவ்வளவு நாள் கழித்து என்னையார் வருந்தியழைக்கப் போகிறார்கள், அதுவும் தந்தை இறந்தபின்?' என்கிறான்.

நிவ்ருத்த வனவாஸோபி நாயோத்யாம் கந்து முத்ஸஹே
ஸமாப்த வனவாஸம்மாம் அயோத்யாயாம் பரந்தப
கோநு சாஸிஷ்யதி புனஸ்தாதே லோகாந்தரம் கதே. 4

இரண்டு முக்யகருத்துகள். தசரதன் இல்லாத அயோத்தியில் என்ன வேலை, பதினான்கு வருடம் கழித்து திரும்பிப் போனால், தன்னை லக்ஷியம் செய்வார்களா? சந்தேகம்தான்.

தசரதன் இறந்துபோனது ராமன் அரசாள்வதை எப்படிப் பாதிக்கும்? ஊடுருவிப் பார்த்தால் புலப்படும். ''அதர்மமாகக் கிடைத்தால் எனக்கு அரசு வேண்டாம். ஆனால் தந்தையை சமாதானப்படுத்தி எனக்கு அரசு அளிக்கவே வருகிறான் பரதன்'' என்று லக்ஷ்மணனிடம் சொன்னானல்லவா? அவன் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. தர்ம முறையில் ராமனுக்கு ராஜ்யம் கிடைக்க ஒரு வாய்ப்பு கூட அளிக்காமல் உயிர் துறந்துவிட்டார் மன்னன். அவர் உயிருடன் இருந்து, மனம் மாறி, பரதன் அநீதியைக் கண்டித்த உணர்ச்சி வேகத்தைக் கண்டு உள்ளம் குளிர்ந்து, தன்னை அழைத்து வரும்படி சொல்லியிருந்தால் தர்மத்தில் ஈடுபாடுள்ள ராமன் இசைந்திருக்கலாம். ஆனால் சம்பவங்களின் போக்கு விபரீதமாக நேர்ந்துவிட்டது. நிபந்தனை விதித்தவர் இறந்தபின் அதை விலக்க யாருக்கு உரிமை? அப்படி தர்ம முறையில் அரசுபெற உதவக்கூடிய தசரதன் இல்லாத அயோத்திக்கு எப்படிப் போக இயலும்? ஆகையால் காட்டிலேயே இருக்க வேண்டியதுதான். வனவாஸம் முடிந்தபின் கூடத்திரும்பிப் போக வேண்டுமா என்பது சந்தேகம். பாமர மனிதனைக் கூட யாராவது மதிப்பார்களோ?

இத்தகைய எண்ணங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் ஊன்றிவிட, பரதன் கோரிக்கையை அடியோடு மறுக்கிறான் ராமன். பின் நடக்கும் சம்பாஷணையெல்லாம் விவாதம். மனம் உறுதியாகிவிட்டது. காரணம், நியாயம் எதுவும் காதில் ஏறாது. கடைசியில் மட்டும் சற்று இளகிவிடுகிறான்.

நதியில் நீராடி முறைப்படி கருமம் செய்கிறான் தந்தைக்கு. வஸிஷ்டர் கட்டளைப்படி எல்லாம் நடக்கிறது. துக்கம் நிறைந்த ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தாய்மார்கள் ஸீதையைச் சூழ்ந்து ஆறுதல் சொல்லுகிறார்கள்.

ஸீதையிடம் சேதி சொல்லும்போது 'உன் மாமனார் காலமாகிவிட்டார்' என்கிறான் ராமன்.

ஸீதே ம்ருதஸ்தே ச்வஸுர : பித்ரா ஹீநோஅஸி லக்ஷ்மண 5

'லக்ஷ்மணு, உனக்கினி தந்தையில்லே' என்கிருன். தன்னேவிட அவர்களுக்குப் பெருந்துயரம் என்று குறிக்கிருனு, அல்லது பற்றற்ற நிலே இன்னும் மாறவில்லேயா?

இதை மாற்றியமைக்கும் கம்பன், 'என்னேப் பிரிந்த சோகத்தால் இறந்து விட்டார் தந்தை' என்று சொன்னதாகக் குறிக்கிருர்.

**என்னெடும் பிரிவினில் துஞ்சினன் என்ருன்.**

அது கேட்ட ஸீதை துன்பக் கடலில் கால் வைத்தாள் என்று கற்பனே செய்கிருர் கம்பன். இதுவரை நேர்ந்ததெல்லாம் துன்பம் இல்லே. வீரனுன கணவன்கூடவே நின்று அன்போடு ஆதரிக்கிருன். ஆதலால் காடு நகரம் போலவே இருக்கிறது. ஆனுல் இனி அவனே யும் பிரிந்து போகப் போகிருள். அதற்கு இதுவே ஆரம்பம் என்று குறிப்பிடுகிருர்.

**கல்நகு திரள் புயக்கணவன் பின் செல**
**நன்னகர் ஒத்தது நடந்த கானமும்**
**மன்னவன் துஞ்சினன் என்ற மாற்றத்தால்**
**அன்னமும் துயர்க்கடல் அடிவைத்தாள் அரோ.**

தசரதன் இறக்காமலிருந்தால் அயோத்திக்குத் திரும்பி அரசாள வும் இடமிருந்தது. இனித் திரும்புவது அசாத்தியம். ஆகையால் மன்னன் மடிந்தபின் தோன்றியநிலே அன்னமாகிய ஸீதையைத் தான் அதிகம் பாதித்துவிட்டது என்பது கவியின் கருத்து.

சோகத்திலிருக்கும் ஸீதையை ஒரு தாய் தன் பெண்ணே அணேப் பதுபோல் அணேத்துக் கொண்டாள் கோசலே என்கிருர் வால்மீகி. துயரத்தில்தான் உறவு நெருங்கும்.

**தாம் பரிஷ் வஜ்ய து: க்கார்தாம் மாதா துஹிதரம் யதா** 6

'விதேக ராஜாவின் புதல்வி, தசரதன் மருமகள், ராமன் மனேவி. ஆயினும் நிர்ஜனமான காட்டில் கஷ்டப்படுகிருயே' என்று ஏங்கு கிருள்.

சமக்ரியைகள் முடிந்ததும் சகோதரர்கள் பேசத் தொடங்கு கின்றனர். ஏற்கெனவே 'நீ வந்து அரச பெற வேண்டும்' என்று பரதன் சொல்லியாயிற்று. எனினும் ராமன் கேட்கிருன், ''நீ எதற்கு இப்படிச் சடை முடியோடு இங்கு வந்திருக்கிருய்? ராஜ்யத்தைவிட்டு வரக் காரணம் என்ன?''

**யன்னிமித்தம் இமம் தேசம் க்ருஷ்ணுஜின ஜடாதர:**
**ஹித்வா ராஜ்யம் ப்ரவிஷ்டஸ்த்வம் தத்ஸர்வம் வக்துமர்ஹஸி** 7

''அரசன் இறந்துவிட்டார். இவ்வுலகம் அவர் கட்டளைப்படி உன்னுடையதாகிவிட்டது. மகுடம் தரிப்பதற்கு பதில் விரதக்கோலத்தில் வந்திருக்கிறுயே, எதற்காக?'' என்று பரிவுடன் கேட்டானும் ராமன்.

**வரதன் துஞ்சினுன் வையம் ஆணையால்**
**சரதம் நின்னதே மகுடம் தாங்கலாய்**
**விரதவேடம் நீ என் கொல் வேண்டுவான்**
**பரத, கூறு எனுப்பரிந்து கூறினுன்.**

கூப்பிய கரத்தோடு மீண்டும் சொல்லுகிறுன் பரதன், 'உயர்ந்த லக்ஷியத்தைக் கைவிட்டு, செய்யத்தகாததைச் செய்து, மகனின் பிரிவால் உயிர் துறந்தார் மன்னன். பெண் பேச்சைக் கேட்டுத் தன் புகழை அழித்துக் கொண்டார். கொடிய தீமை இழைத்துவிட்டார். இவளாவது பலன் அடைந்தாளா? விதவையாகி நிற்கிருள்.

என் தாய் நரகவேதனை அனுபவிக்கப் போகிருள். நான் உனது அடிபணியும் தாஸன். என் கோரிக்கையை ஏற்று அரசு ஆளவேண்டும். இன்றே இந்திரனைப்போல் அபிஷேகம் செய்துகொள்.'

**ஆர்யம் தாத: பரித்யஜ்ய க்ருத்வா கர்ம ஸுதுஷ்கரம்**
**கதஸ் ஸ்வர்க்கம் மஹாபாஹு: புத்ர சோகாபி பீடித:**
**ஸ்த்ரியா நியுக்த: கைகேய்யா மம மாத்ரா பரந்தப**
**சகார ஸுமஹத்பாபம் இதம் ஆத்மயசோஹரம்**
**ஸா ராஜ்ய பலம் அப்ராப்ய விதவா சோகர்சிதா**
**பதிஷ்யதி மஹாகோரே நிரயே ஜனனீ மம**
**...............**
**தஸ்ய மே தாஸபூதஸ்ய ப்ரஸாதம் கர்து மர்ஹஸி**
**அபிஷிஞ்சஸ்வ சாத்யைவ ராஜ்யேன மகவானிவ.** 8

அநீதியைக் கண்டித்து, தாயை நிந்தித்துத் தன் தூய்மையையும் அறிவிக்கிறுன் ஒரே மூச்சில்.

'உன் தந்தை செய்த தீமையும் உலகம் கண்டறியாத தீவினை அளித்த என் தாய் செய்த தீமையும் நீங்க, நீ மீண்டு வந்து அரசு செய். நீயே எனக்குத் தந்தை' என்றுனும் மனக் கருத்தை விளக்கிக் கூறிய பரதன்.

**உந்தை தீமையும் உலகுருத நோய்**
**தந்த தீவினைத் தாய் செய் தீமையும்,**
**எந்தை!, நீங்க மீண்ட ரசுசெய்க எனுச்**
**சிந்தை யாவதும் தெரியக் கூறினுன்**

(முழுதுணர் சிந்தையான்' என நின்ற ராமனுக்கு 'சிந்தையாவதும் தெரியக் கூறினன்' என்கிறார் கவி.)

'இவ்வுலகை நோய் செய்த பாவகாரியிற் பிறந்த பாவி' என்று தன்னை நொந்து கொள்ளுகிறான். தசரதனை 'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த பெருமகன்' என்று லக்ஷ்மணன் ஏசினன் அல்லவா? அதற்கு ஒப்பாக இங்கு பரதன் 'உலகை நோய் செய்த பாவகாரி' என்று தாயைக் குறிப்பிடுகிறான். உயர் குலத்து மக்கள் எல்லோரும் அநீதியைக் கண்டித்துப் பேசுவதில் ஒருமனத்தவர் என்பதைக் காட்டுகிறார் கம்பன். பழிக்கும் அஞ்சும் இயல்புடைய பரதன் 'யாவன் ஆகி இப்பழி நின்று ஏறுவேன்?' என்று அங்கலாய்க்கிறான்.

'இந்த ஜனங்களெல்லாம் உன்னை நாடி வந்திருக்கிறார்கள். பரம்பரை ஒழுக்கத்துக்கும் உன் நலனுக்கும் உகந்தபடி தர்மமுறையில் அரசை ஏற்று எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்' என வேண்டுகிறான்.

**ததானு பூர்வ்யா யுக்தம் ச யுக்தம் சாத்மனி மானத**
**ராஜ்யம் ப்ராப்னுஹி தர்மேண ஸகாமான்ஸுஹ்ருத: குரு** 9

'தலை வணங்கி வேண்டுகிறேன். உனக்கு நான் சகோதரன் மட்டுமல்ல; சிஷ்யன், தாஸன். ஆகையால் தயைபுரிவாய்' என்று மன்றாடிக் கேட்கிறான். காலடியில் வீழ்கிறான்.

**ப்ராது: சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி** 10

மனம் சற்று இளகிவிட்டது. பரதன் களங்கமற்றவன் என்று ஒப்புக் கொள்ளுகிறான். 'உன்னிடம் எள்ளளவும் குற்றமில்லை' யென்று வாய்விட்டுச் சொல்லுகிறான். கைகேயியைப் பழிக்கலாகாது என்கிறான். தாயை நிந்திப்பது முறையல்ல; மேலும் அவள்தான் காரணம் என்று நினைப்பது அறியாமை என்கிறான். அரசன் யாரிடம் வேண்டுமானாலும் பிரியம் வைக்கலாம், குழந்தைகளை இஷ்டப்படி நடத்த உரிமையுண்டு என்கிறான். தூண்டியது கைகேயிதான், ஆனால் மனம் கலைந்தது தசரதன். ஆதலால் அவர்தான் பொறுப்பாளி என்பது குறிப்பு. அவருக்கு பதிலாக யார் வந்து வேண்டினாலும் ஈடாகுமா?

**ந தோஷம் த்வயி பச்யாமி ஸூக்ஷ்ம மபிஅரிஸூதன.** 11

''அரசன் சொல்படி உனக்கு மகுடமும் எனக்கு மரவுரியும் கிடைத்தது. அவரவர் பங்கை அனுபவிப்போம்'' என்கிறான்.

பேசிக் கொண்டேயிருக்கும்போது இரவு சூழ்ந்து விடுகிறது. மறுநாள் விவாதம் தொடர்ந்து நடக்கிறது. ஜனத்திரள் நடுவே நிற்கும் பரதன், ''வரம்பெற்று மனம் குளிர்ந்த தாய் ராஜ்யத்தை எனக்குக் கொடுத்தாள். நானே அந்த ராஜ்யத்தை உனக்களிக்கிறேன்'' என்கிறான்.

ஸாந்த்விதா மாமிகா மாதா தத்தம் ராஜ்யமிதம் மம
தத்தாமி தவைவாஹம் புங்க்ஷ்வ ராஜ்யமகண்டகம். 12

இக்கருத்தையுடைய பாடலில் அயோத்தியை 'மூத்தவனுகிய நீ பிறந்த பூமி' என்று பரதன் வாயிலாகக் குறிப்பிடுகிருர் கம்பன்.

முன்னர் வந்துதித்து உலக மூன்றினும்
நின்னை ஒப்பிலா நீ பிறந்த பார்
என்னதாகில் யான் இன்று தந்தனென்
மன்ன? போந்து நீ மகுடம் சூடு எனு

இதற்கு என்ன பதில்? வாழ்க்கையே விசித்திரம், அநித்ய மானது. விதியொன்றே எல்லோரையும் ஆட்டிவைக்கிறது. மனைவி, மக்கள், உறவினர் எல்லாம் மாயை. 'ஆகையால் வீணுக வருந்தாமல் தந்தையின் ஆணையைக் கைப்பிடிக்க வேண்டும்' என்று முடிக்கிருன் ராமன்.

இந்த வேதாந்த சுலோக மெல்லாம் தனித்து நிற்கின்றன. சூழ்நிலைக்கும் சம்பாஷணையின் போக்குக்கும் சம்பந்தமில்லாதவை. தன் உள்ளக்கருத்தை வெளிப்படையாகச் சொல்லவிரும்பாத ராமன் பொதுவாகப் பேசி சமாளிக்கப் பார்க்கிருன் போலும்!

சுலோகங்களின் தத்துவம் கீதையை நினைவுறுத்துகிறது.

ஒரு பெரிய சமுத்திரம். மிதந்து போகும் ஒரு மரக்கட்டை அலையின் வேகத்தால் வேருெரு கட்டையுடன் சேர்ந்துவிடுகிறது. இரண்டும் ஒன்ருகப் பிணைந்து மிதக்கும்போது மீண்டும் ஒரு அலை மோத, பிரிந்துவிடுகின்றன. இதேபோல் வாழ்க்கையென்னும் கடலில் மனைவி மக்கள், உற்ருர் உறவினர், செல்வமும் அப்படித்தான். சேர்ந்து பின் பிரிவதே இவற்றின் இயல்பு. பிரிவது மட்டும் திண்ணம்.

யதா காஷ்டம்ச காஷ்டம்ச ஸமேயாதாம் மஹார்ணவே
ஸமேத்ய ச வ்யபேயாதாம் காலம் ஆஸாத்ய கம்சன
ஏவம் பார்யாஸ்ச புத்ராஸ்ச ஞாதயஸ்ச தனுனிச
ஸமேத்ய வ்யதாவந்தி த்ருவோஹ்யேஷாம் வினபவ: 13

இந்நிலையைக் கம்பர் வேறுவிதமாகக் கையாளுகிருர். 'நீ கொடுப்பது, நான் பெறுவது' என்பதெல்லாம் அறியாமை என் கிருனும் ராமன்.

''அன்பினுல் உன் சிந்தையே குழம்பிவிட்டது'' என்கிருன் ராமன். ''நீ கேட்டுக் கொண்டபடி நாடு என் வசமாகிவிட்டால் அது முறையாகுமா? வசைக்கும் பழிக்கும் நடுங்கிய தந்தை சொல்படி நான் இசைந்த அந்தப் பதினுன்கு வருடங்களும் இன்ருேடு தீர்ந்து விடுமா?' என்கிருன்.

பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்
வசம் செய்தால் அது முறைமையோ? வசைக்கு
அசைந்த எந்தையார் அருள அன்று நான்
இசைந்த ஆண்டெலாம் இன்றேடேறுமோ?

வாய்மை ஒன்றுதான் வையகத்தில் தூய்மை என்கிறான், அடுத்த பாடலில்.

ராமனது நேர்மையையும் மனப்போக்கையும் கண்டு வியக்கிறான் பரதன். தன்னிலையை நொந்து, மீண்டும் மன்னிப்புக் கோருகிறான். 'தாய் செய்த பாவத்தை மன்னித்துவிடு. தந்தையும் அந்திக் காலத்தில் மதியிழந்து விட்டார். நீ வந்து அரசுபெறு. அல்லது இவர்கள் பாவத்தை நிவர்த்தி செய்ய உன்னோடு நானும் வர அனுமதி கொடு' என்று வேண்டுகிறான்.

ராமன் மறுக்கிறான். அவன் உறுதியைக் கண்டு மகிழ்ச்சி ஏற்படுகிறது மக்களுக்கு; ஆனால் திரும்பி வரவில்லையே என்ற ஏக்கமும் இருக்கிறது. ஏன் மறுக்கிறான்? இதுவரை யாரும் சொல்லாத ரகசியத்தை வெளியிடுகிறான். ''முன்பு உன் தாயை மூன்றாம் தாரமாக மணந்து கொண்டபோது தந்தையார் உன் பாட்டனை கேகய ராஜாவுக்கு வாக்கு அளித்தபடி கைகேயி வயிற்றில் பிறந்த உனக்கே அரசுரிமை. சம்பராஸுர யுத்தத்தின்போது அடைந்த வரத்தால் இதையே உறுதிப்படுத்தினாள் உன் தாய்.''

புரா ப்ராத: பிதா நஸ்ஸ மாதரம் தே ஸமுத்வஹன்
மாதாமஹே ஸமாச்ரௌஷீத் ராஜ்ய சுல்கம் அனுத்தமம் 14

''தந்தை சொல்படி நான் இங்கு வந்தேன். என்னை ஒருவராலும் மாற்ற முடியாது. உனக்குக் கிடைத்ததை நீ வைத்துக்கொள். தண்டகாரண்ய வாஸம் எனக்கு. வெண்குடை உனக்கு நிழல்தரும். மரநிழல் எனக்குத் தண்மை தரும். உனக்கு சத்ருக்னன் துணை. எனக்கு லக்ஷ்மணன். நாம் நால்வரும் இவ்விதமாகத் தந்தையை மெய்யனாக்குவோம்' என்ற உணர்ச்சியோடு பேசுகிறான்.

சூழ்ந்து நிற்கும் முனிவர்கள் ஏதேதோ சொல்லுகிறார்கள். வஸிஷ்டர் பேச்சையும் கேளாமல் உறுதியாய் நிற்கும் ராமனைத் திருப்ப சத்யாக்ரகம் செய்ய முற்படுகிறான் பரதன். 'புல்லைப் பரப்பி வாயிற்படியில் படுத்திருப்பேன்' என்கிறான். அவனை சமாதானம் செய்து நிற்க வைக்கிறார்கள். உடனே பரதன் சொல்லுகிறான், 'சபையோர்களே, மந்திரிமார்களே, கேளுங்கள். நான் என் தந்தையை அரசு வேண்டுமென்று கேட்கவில்லை. தாயைத் தூண்டிவிடவுமில்லை. ராமனைக் காட்டுக்குப் போக நான் அனுமதிக்கவில்லை. அப்படி வனவாஸம் அனுபவித்தே தீரவேண்டுமானால் நான் போகிறேன்.' மீண்டும் அறிக்கை!

நயாசே பிதரம் ராஜ்யம் நாஹுசாஸாமி மாதரம்
ஆர்யம் பரமதர்மக்ஞம் நாஹுஜாஞமி ராகவம்
யதி த்வவச்யம் வஸ்தவ்யம் கர்தவ்யம் சபிதுர்வச :
அஹமேவ நிவத்ஸ்யாமி சதுர்தச ஸமாவனே 15

'இப்படியெல்லாம் மாற்ற முடியாது. தந்தை உயிரோடிருந்த போது ஏதாவது ஒரு பொருள் வாங்கியோ, விற்ருே கொடுத்து வைத்தோ இருந்தால் அதை நாஞே பரதஞே மாற்றமுடியுமா?' என்று கூடியிருக்கும் ஜனங்களைப் பார்த்துக் கேட்கிருன் ராமன். அவர் இன்னமும் உயிரோடிருந்தால் அவரே மாற்றலாம் என்பதும் தொக்கி நிற்கிறது.

விக்ரீதம் ஆஹிதம் க்ரீதம் யத்பித்ரா ஜீவதா மம
ந தத் லோபயிதும் சக்யம் மயாவா பரதேன வா. 16

எனினும் பரதனின் தூய்மையைப் பற்றி ஒரு அறிக்கை வெளியிடுகிருன். ''பரதன் மிகவும் பொறுமையுள்ளவன், பெரியோர்களை மதிப்பவன் என்று நான் அறிவேன். அவன் ஒரு மேதாவி. அவன் ஒரு காலும் தகாதது செய்யமாட்டான்.''

ஜாஞமி பரதம் க்ஷாந்தம் குருஸத்காரகாரிணம்
ஸர்வமே வாத்ர கல்யாணம் ஸத்யஸந்தே மஹாத்மனி 17

கூடியமுனிவர் அனைவரும் தசரதனைப் புகழ்கின்றனர். ''இவ்வளவு தர்மம் தெரிந்தவர், தர்ம முறையை ஸூக்ஷ்மமாகக் கைப்பிடிப்பவர், இவ்விரு புதல்வரைப் பெற்றவன் புண்யாத்மா'' என்கிருர்கள்.

ராமன் சொல்வதே சரியென்று பரதனைத் தேற்றுகிருர்கள். தன் பழியை முற்றிலும் அகற்றியபின், பரதன் தாய்க்காகச் சிறிது பேசுகிருன். ''அவள் உன்னை யாசித்துக் கேட்கிருள், திரும்பிவா. ராஜதர்மம், குலதர்மம் எல்லாம் நினைத்துப்பார்'' என்கிருன்.

ராஜதர்மம் அனுப்ரேக்ஷ்ய குலதர்மானுஸந்ததிம்
கர்துமர்ஹஸி காகுத்ஸ்த மம மாதுஸ்ச யாசஞம். 18

''என்ஞல் ராஜ்யத்தை ஆளமுடியாது. மக்களை மகிழ்வோடு பரிபாலனம் செய்யத் தெரியாது. எல்லோரும் உன்னையே ஆவலோடு எதிர்பார்க்கிருர்கள்'' என்கிருன்.

அவனை மடியில் இருத்தி, ''எல்லாம் விரைவிலேயே கற்றுக் கொள்வாய், அப்பனே. மந்திரிகளையும் பெரியோரையும் கேட்டு அவர்கள் ஆசியோடு அரசு செலுத்து'' என்று உபதேசம் செய்கிருன். ஆஞல் 'என் சபதத்தை மாற்ற முடியாது' என்கிருன். உடனே கைகேயி நினைவு வருகிறது. அவளை மன்னித்து விடுகிருன்! பந்தம்

இல்லாத நிர்மல சித்தம் பெருந்தன்மையை உண்டாக்குகிறது. பெருமையினுல் மன்னித்துவிடுகிருன். அதுவே அவனை சிறுமைப் படுத்திவிடுகிறது.

''காமத்தாலோ, பேராசையினுலோ செய்திருந்தாலும் உன் தாய் செய்த காரியத்தை நீ மறந்துவிடு. அவளைத் தாய்போலவே நடத்துவாயாக'' என்கிருன். அப்படி நடத்தத் தகாதவள் என்பது தொக்கி நிற்கிறது.

காமாத்வா தாத லோபாத்வா மாத்ரா துப்யமிதம் க்ருதம்
நதன் மனஸி கர்தல்யம் வர்திதவ்யம் சமாத்ருவத் 19

'ஐயன் இனி மீளான்' என்று ஊரார் சொன்ன உண்மையை உணருகிருன் பரதன். எனினும் ராமன் சொல் கேட்டுத் தான் போய் அரசாண்டால் இவ்வளவு நேரம் பேசியதெல்லாம் வீணல்லவா? 'சட்'டென்று ஒரு முடிவுக்கு வருகிருன். ''அண்ணு, உன் பாதுகையைக் காலால் தொட்டுக் கொடு. அதுவே அரசாளும்'' என்கிருன். ராமனும் உடனே கொடுக்கிருன்.

பாதுகையை வணங்கி ராமனைப் பார்த்துச் சொல்லுகிருன், ''பாதுகையின் பிரதிநிதியாக நான் ராஜ்யத்தை நடத்துவேன். ஆனுல் ஊருக்கு வெளியே உன் வரவை எதிர்பார்த்து, இதே சடை முடியோடு சந்நியாச வாழ்க்கையிலிருப்பேன். பதினுன்கு வருடங்கள் முடிந்தவுடன் அந்நாளிலே நீ வராமல் போனுல் தீயில் விழுந்து உயிர் விடுவேன்.'' அன்போடு அணைத்து விடை கொடுத்தனுப்புகிருன் ராமன்.

ராமன் பாதுகையே தனக்குக் கிரீடம் எனக் கருதி அதைத் தலைமேல் சூடினுன் பரதன் என்கிருர் கம்பன். இன்னமும் அழுத கண்ணினனுகவே இருக்கிருன்.

**அடித்தலமிரண்டையும் அழுத கண்ணினுன்**
**முடித்தலம் இவையென முறையில் சூடினுன்.**

சடை முடிமீது பாதுகை ஏந்திச் செல்கிருன் பரதன். தன் கொள்கையை விடாது கைப்பிடித்து இமாலய பர்வதம் போலிருந்தான் ராமன் என்கிருர் வால்மீகி. ஆனுல் பரதன் வருகை வீண் போகவில்லை. தான் சிறிதும் களங்கமற்றவன் என்பதை நிலைநாட்டி விட்டான். தாயின் நிலையைச் சிறிது சீர்படுத்தினுன். உடனே திரும்பி வராவிட்டாலும் ராமன்தான் அரசன், அவனது பாதுகைக்குப் பிரதிநிதி என்னும் முறையில் மட்டும் தான் ஆளமுடியும் என்ற நிபந்தனை ஏற்படுத்தியதால் 'வனவாஸம் கழிந்ததும் முடி சூடுகிறேன்' என்று ராமனது சம்மதத்தையும் பெற்றுவிட்டான். அவன் எப்போது வந்தால் என்ன?

இதுவே பெரிய சாதனே. கைகேயி எதிர்பாராதது. ராமன் 14 வருஷம் காடு செல்லவேண்டுமென வேண்டினுள். அவன் திரும்பியே வரமாட்டான், வந்தாலும் அதற்குள் பரதன் சிங்காதனத்தில் நிலேத்துவிடுவான் என்றல்லவா போதனே செய்தாள் கூனி? ராமனேப் பொறுத்தவரையில் அவன் திரும்பி வந்து பாமர மக்களில் ஒருவனுக வசிக்கவேண்டிய நிலே வருமோ என்ற சந்தேகத்துக்குச் சிறிதும் இடமின்றிச் செய்தது பரதனின் பெருமை. உலகை நோய் செய்த தீவினே எரிந்து சாம்பலாகிவிட்டது.

ஒவ்வொருவராக எல்லோரும் போகிறுர்கள். உணர்ச்சிப் பெருக் குற்றநிலே. ராமனுக்கே தாங்க முடியவில்லே. தாய்மாரை வணங்கித் தன் குடிசைக்குள் நுழைகிருன். அழுது நிற்கிருன்.

ஸ த்வேவ மாத்ரூர பிவாத்ய ஸர்வாருதன்குடிம்
ஸ்வாம் ப்ரவிவேசராம: 20

பரதன் இவனே 'அழுத கண்ணினன்' ஆக்கிவிட்டுப் போய்விட்டான்.

# 11

# இரும்பு பிடித்தவன் கை

பரதன் வந்து பாதுகை பெற்றுப்போனபின் ராமனுக்கு அவ்விடத்தில் இருக்க விருப்பமில்லை. மீண்டும் மீண்டும் பழைய நினைவுகள் வருகின்றன. ஆகையால் வேறிடம் செல்ல நினைத்து அத்ரி முனிவர் ஆச்ரமத்தை அடைகிறான்.

மகனைப்போல் கருதி அன்போடு உபசரிக்கிறார் முனிவர். மனைவி அனசூயையை அழைத்து 'ஸீதை வந்திருக்கிறாள், பார்' என்கிறார். பிறகு (வயது முதிர்ந்தோரின் இயல்புக்கொப்ப) ராமனிடம் தன் மனைவியின் குணங்களை எடுத்துரைக்கிறார். ''தவத்தில் சிறந்தவள், கோபமே வராது. ஒழுக்கமே அவளுக்கு அணிகலன். யாரிடமும் அசூயை கொள்ளாமல் நற்செயல் புரிந்தே அனசூயை யென்று பெயர் பெற்றுவிட்டாள்'' என்கிறார் பெருமையோடு. அனுபவம் பேசுகிறது.

அபிகச்சது வைதேஹீ வ்ருத்தாம் அக்ரோதனாம்ஸதா
அனஸூயேதி யா லோகே கர்மபி: க்யாதிமாகதா. 1

உள்ளே சென்று வணங்குகிறாள் ஸீதை. தலைமுழுதும் நரைத்து, உடல்குன்றி, கை, கால் ஆட்டமெடுத்துப்போன நிலையில் இருக்கிறாள் ரிஷிபத்னி. ''சௌக்கியமாயிரு. தர்மத்தை உணர்ந்துவிட்டாய் நீ'' என்று ஆசீர்வதிக்கிறாள். ''கணவனைக் கைவிடாதே. அவனுடன் தர்மத்தைப் போற்று. உனக்குப் புகழ் உண்டாகும்'' என்கிறாள்.

பவஸ்வ பர்துஸ்ஸஹ தர்மசாரிணீ யசஸ்ச தர்மஞ்ச தத:
ஸமாப்ஸ்யஸி 2

'ஸஹதர்மசாரிணீ' என்ற சொல் அடிக்கடி ஒலிக்கிறது. எல்லோரும் நினைவுறுத்துகிறார்கள்!

அதை ஆமோதித்து 'இது ஒன்றும் சிரமமான காரியமல்ல' என்று ராமனுடைய பெருமையை எடுத்துக் கூறுகிருள் ஸீதை. மகிழ்ந்த மனத்தோடு அனசூயை அவளுக்கு ஆடை ஆபரணங்களெல்லாம் வெகுமதியாக அளிக்கிருள். ''உனக்கு சுயம்வரத்தில் இவர் கிடைத்த விவரம் சொல். கேட்க விரும்புகிறேன்' என்கிருள்.

உற்சாகத்தோடு தன் வரலாற்றைச் சொல்லுகிருள் ஸீதை. ''வயலில் கண்டெடுத்தார் ஜனகர். உடனே என்னை மகள் எனக் கொண்டார். அன்பிலேயே வளர்ந்தேன். ஆனுல் தாய்வயிற்றில் பிறக்காததால் தக்கதோர் கணவன் கிடைப்பது அரிதாகிவிட்டது. நெடுநாள் சிந்தனைசெய்து வில்லை வளைப்பவர்க்கே மணம் செய்து கொடுப்பதென முடிவு செய்தார். பலர் வந்து முயற்சித்தனர். ஒரு நாள் விச்வாமித்ரருடன் இவர் வந்தார். வில்லையெடுத்து இவர்முன் வைத்ததும் நிமிஷத்தில் நாணேற்றி விட்டார். வில் ஒடிந்து பேரொலி செய்தது. உடனே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்தார் என் தந்தை. ஆனுல் தந்தையைக் கேட்காமல் ஒப்புக் கொள்வாரா இவர்? பின்னர் அவரை வரவழைத்துப் பெரியோர்கள் முன்னிலையில் எனக்கும் இவருக்கும் விவாகம் ஆயிற்று.''

பேசிக்கொண்டே நேரம்போவது தெரியவில்லை. அஸ்தமன சமயம். நிலவு தோன்றிவிட்டது. 'நீயும் ராமன் இருப்பிடம் போகலாம்' என்று அனுமதி அளிக்கிருள் இங்கிதம் தெரிந்த அனசூயை. 'ஆனுல் முதலில் நல்ல உடை அணிந்து எனக்குக் காண்பி' என்கிருள்.

உயர்ந்த பதிவ்ரதையான அனசூயை அளித்த அணிகலன்களைப் பூண்டு வணங்கி, பின்னர் ராமன்முன் சென்று நிற்கிருள் ஸீதை.

'தவத்தில் மிக்க தேவியார் கொடுத்தார்,' என்று சொல்லுகிருள். மரவுரியை அகற்றி, முனிபத்னியை மகிழ்விக்கப்பட்டாடை அணிந்து நின்ற ஸீதையின் அழகைப் பார்த்துப் பூரித்துப் போகிருன் ராமன். மனிதர்களுக்குக் கிடைத்தற்கரிய அலங்காரத் திருக்கோலம் கண்டான் ராமன் என்று வர்ணிக்கிருர் வால்மீகி.

ப்ரஹ்ருஷ்டஸ்த்வபவத் ராமோ லக்ஷ்மணஸ்ச மஹாரத:
மைதில்யாஸ்ஸத்க்ரியாம் த்ருஷ்ட்வா மானுஷேஷு ஸுதுர் லபாம் 3

மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு ராமன் தண்டகா்வனம் புகுந்து அங்குள்ள முனிவர்களின் ஆச்ரமத்தில் தங்குகிருன்.

அரக்கர் செய்யும் கொடுமையை விவரித்து தங்களைக் காக்கும்படி வேண்டுகிருர்கள். 'நீதான் எங்களுக்கு கதி. காட்டிலிருந்தாலும் நீதான் எங்களுக்கு அரசன்' என்று கூறிப் புகழ்கிருர்கள்.

அடர்ந்த கானகத்துக்குள் நுழைந்ததும் விராதன் எதிர் வருகிறான். கையில் சூலத்தோடு கொடிய உருவத்தில் தோன்றுகிறான். நொடிப்பொழுதில் ஸீதையைக் கைப்பற்றி ராமலக்ஷ்மணர்களை விரட்டுகிறான். ''தவவேடத்திலிருக்கும் உங்களுக்கு மனைவி எதற்கு? தண்டகாரண்யத்தில் வந்து வேஷமா போடுகிறீர்கள்? இந்தப் பெண் என் மனைவி ஆவாள்'' என்கிறான்.

ஸீதை நடுங்குகிறாள். ராமன் சோர்வுற்று, நாஉலரப் புலம்புகிறான். விராதன் மடியில் ஸீதையைக் கண்டதும் கைகேயி நினைவு வருகிறது. லக்ஷ்மணனைப் பார்த்து ''ஐயோ, கைகேயி மனம்குளிர்ச்சியாகும். இதற்குத்தான் வரம் கேட்டாளோ? மகனுக்கு ராஜ்யம் கிடைத்தால் போதாதென்று நினைத்தாளோ? என்கிறான். 'ஆனால் என் ராஜ்யம் கை நழுவிப்போனதையும் தந்தை இறந்ததையும்விட மேலான துக்கம் இன்று என் மனைவியைப் பிறன்வசம் காண்பது தான்' என்கிறான்.

யதபிப்ரேதம் அஸ்மாஸு ப்ரியம் வரவ்ருதம் ச யத்
கைகேய்யாஸ்து ஸுஸமபன்னம் க்ஷிப்ரம் அத்யைவ லக்ஷ்மண
யா ந துஷ்யதி ராஜ்யேன புத்ரார்த்தே தீர்க்கதர்சினீ
அத்யேதானீம் ஸகாமா ஸா யா மாதா மம மத்யமா
பரஸ்பர்சாத்து வைதேஹ்யா ந து:க்கதரமஸ்திமே
பிதுர்வியோகாத் ஸௌமித்ரே ஸ்வராஜ்யஹரணாத் ததா. 4

அவனைத் தேற்றி 'அனாதைபோல் அலறாதே. நான் அவனைக் கொல்லுகிறேன். பரதன்மேல் எழுந்த கோபத்தை இன்று இவன் மேல் செலுத்துகிறேன் பார்' என்கிறான் லக்ஷ்மணன். இருவரும் விராதனை எதிர்த்துச் சண்டை செய்கிறார்கள். சிறிதுநேரம் கழித்து ஸீதையைவிட்டு இவர்கள் இருவரையும் தூக்கிச் செல்கிறான் விராதன். அப்போது ஸீதை புலம்புகிறாள்; 'அவர்களை விடு. தனித்து நின்றால் என்னை எப்படியும் புலிகளும் ஓநாய்களும் கொன்று தின்னும். ஆகையால் அவர்களை விட்டு என்னைத் தூக்கிச்செல்' என்று விராதனை வேண்டுகிறாள். ரோஷம் கொண்ட வீரர்கள் விராதனை வெட்டி வீழ்த்துகின்றனர். பின்வரப்போகும் பேராபத்துக்கு ஒத்திகை போல் அமைந்த சம்பவம் அதோடு முடிகிறது. சரபங்கர். சுதீக்ஷ்ணர் முதலிய முனிவர்களைக் கண்டு வணங்கி அவர்கள் மூலமாக அரக்கர் விளைவிக்கும் உபத்திரவங்களைப்பற்றி அறிகிறான் ராமன். 'எப்படியாவது எங்களைக் காக்கவேண்டும்' என்று கேட்கிறார்கள். 'தவம் செய்வோரை இம்சிப்பவர்களை நாசம் செய்கிறேன். என் வீர்யத்தைப் பாருங்கள். என் வனவாஸமும் பயன்படட்டும்' என்றுகூறி அவர்களுக்கு அபயம் அளிக்கிறான். வில்லும் வாளும் ஏந்தி அங்கிருந்து கிளம்பிப் போகிறார்கள்.

ஆனால் ஸீதைக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. 'ராஜ்யத்தை விட்டு வந்தாகிவிட்டது. உடுத்தியிருப்பது காஷாயம். அப்படியிருக்க

ஆயுதம் எதற்கு?' என்று நினைக்கிருள். தனிமையில் கணவனுக்கு எடுத்துரைக்கிருள்.

''காமத்தால் உண்டாவது மூவகைக் குற்றம்: பொய்மை, பிறன் மனையாளை நாடுதல், பகைமையில்லாதவர் மீது கோபம். இம் மூன்றையும் தவிர்ப்பவனே தர்மத்தை உணரமுடியும். முதலிரண்டும் ஒரு பொழுதும் உங்களுக்கு நேராது என்று நான் அறிவேன். ஆனல் பாமரமனிதனைப் போல் காரணமின்றிப் பிறரைக் கொல்ல முற்பட்டிருக்கிறீர்களே, எனக்குக் கவலையாயிருக்கிறது. எனக்கு இச்செயல் சரியெனத் தோன்றவில்லை'' என்கிருள். ராமனுக்கு நீதிசொல்ல ஸீதையால்தானே முடியும்?

அவள் சொல்வதை ராமன் ஏற்காதது கண்டு ஒரு புராணக் கதையையும் சான்று காட்டுகிருள். 'முன்னொரு காலத்தில், ஒரு முனிவர், தவத்தில் மிக்க மகான், தனிமையில் தவம் செய்து இந்திர பதவியடைய எண்ணினர். அவரது நிலையைக்கண்டு பயந்த இந்திரன் ஒரு போர்வீரனைப்போல் வேடம்தரித்து அவரை யணுகித் தன்வாளைப் பத்திரமாக வைத்திருக்கும்படி சொல்லிப் போனன். கொடுத்த பொருளைக் காக்க, முனிவர் வாளை எப்போதும் கையோடு எடுத்துச் செல்லலானர். இரும்பு பிடித்தவன் கை சும்மா இருக்குமா? நாளடைவில் தவத்தைக் கைவிட்டு கத்தியும் கையுமாகக் கொடுமையில் இறங்கினர். இறுதியில் நரகம் சென்ருர். உங்களுக்குத் தெரியாதா? ஏதோ அன்பினல் சொல்லுகிறேன். உபதேசம் செய்கிறேனென்று நினைக்காதீர்கள். ஞாபகப்படுத்துகிறேன். அரக்கர் நமக்கு என்ன தீமை செய்தார்? பகைமையின்றி அவர்களைக் கொல்லுவது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை' என்கிருள்.

ஸ்நேகாச்ச பஹுமானச்ச ஸ்மாரயே த்வாம் ந சிக்ஷயே
ந கதம்சன ஸா கார்யா க்ருஹீத தனுஷா த்வயா
புத்திர்வைரம் வினஹந்தும் ராக்ஷஸான் தண்டகாச்ரிதான்
அபராதம் வின ஹந்தும் லோகான் வீர ந காமயே. 5

தவவேடத்தில் காட்டுக்கு வந்ததும் இங்கு ஆயுதம் தாங்கிப் போர்தொடுப்பதும் ஒன்றுக்கொன்று முரண்பாடானது என்று உணர்ந்து பேசுகிருள் ஸீதை. வந்த இடத்தில் முனிவர்களைப் போலவே காலத்தைக் கழித்துவிட்டுப் போகலாம் என்கிருள்.

க்வச சஸ்த்ரம் க்வச வனம் க்வச க்ஷாத்ரம் தப : க்வச
வ்யாவித்தம் இதம் அஸ்மாபி : தேசதர்மஸ்து பூஜ்யதாம் 6

'ஏதோ பெண்புத்தி, சபலம். எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். உங்களுக்குச் சொல்ல என்னல் முடியுமா? தம்பியுடன் கலந்து யோசித்து எப்படி உசிதமோ செய்யுங்கள்' என்று முடிக்கிருள்.

ஸீதையின் பேச்சில் பெண்களுக்கே உரித்தான ஆருவது அறிவு ஒலிக்கிறது. அதை நிராகரிக்கும் ராமன் ஆண்களுக்குரித்தான நுண் ணறிவு காட்டுகிருன்.

''பாவம், இந்த முனிவர்கள் கஷ்டப்படுகிருர்கள். என்னைச் சரணமடைந்து விட்டார்கள். நான் அவர்களைக் கைவிடலாமா? வாக் களித்துவிட்டேன். இனி மீளமுடியாது. ஆனல் நீ அன்பும் ஆதரவும் கொண்டு கூறியதை மெச்சுகிறேன்'' என்று சொல்லி அவளை சமாதானம் செய்கிருன் ராமன். அவளை 'தர்மசாரிணி' யென்று புகழ்கிருன். 'அன்புடையவர்தானே அறிவு கூறுவர்?' என்கிருன். (நஹ்யனிஷ்டோ அனுசிஷ்யதி). எனினும் அவள் பேச்சை மெச்சு கிருனே ஒழிய அதன் கருத்தை உணரவில்லை. ஏன்?

பரதன் வந்து 'நீயே அரசன். நான் உன் பாதுகையின் பிரதிநிதி யென்று சொன்னுன். முனிவர்கள் சூழ்ந்துகொண்டு 'நீதான் கதி. நாட்டிலும் காட்டிலும் நீயே அரசன்' என்று சொன்னுர்கள். இவையே க்ஷத்ரிய வீரனுன ராமன் மனதில் பதிந்து நிற்கின்றன. சாந்தமும் உண்மையும் அடங்கிய ஸீதையின் பேச்சு ஏறுமா? இயற்கை எப்படியும் வலுத்து விடும் என்பதைக் குறிக்கிருர் கவி.

அகஸ்திய முனிவரைக் கண்டு வணங்கி அவர் கூறியபடி பஞ்சவடிக்குப் போய்ச் சேருகிருர்கள். முனிவர் ராமனுக்கு வில்லும் அம்புப் புட்டிலும் தந்து ஆசீர்வதிக்கிருர். ''விச்வகர்மாவினுல் செய்யப்பட்ட இவ்வில் விஷ்ணுவின் சக்திபெற்றது. அம்புகள் இந் திரனுல் கொடுக்கப்பட்டவை. இவற்றைக் கொண்டு அரக்கர்களை அழிப்பாயாக'' என்கிருர். ஸீதை சொன்ன புராணக் கதையை மிஞ்சிவிடுகிறது இச்சம்பவம். சடைதரித்துத் தவவேடத்திலிருக்கும் க்ஷத்ரியனுக்குத் தவத்தில் சிறந்த முனிவர் ஆயுதம் கொடுத்துப் போருக்கனுப்புகிருர்!

இதன் விளைவு விரைவில் தோன்றும் வண்ணம் ராமன் குடிசைக் கருகில் அகஸ்மாத்தாய் வருகிருள் ராவணன் சகோதரியான சூர்ப் பனகை.

12

# காமவல்லி

ராமனைப் பார்க்கிருள். மனிதனே, தேவனே? என்று வியக்கும்படி அழகாயிருக்கிருன். அவள் மனம் அவன் பால் செல்லுகிறது. அவனை அணுகி 'நீர்யார்? என்று கேட்கிருள். விவரம் அறிந்ததும் தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்கிருள். ''என் பெயர் சூர்ப்பனகை. இஷ்டப்படி உருவமெடுக்கும் சக்தி உண்டு. என் சகோதரன் ராவணன் என்னும் ராக்ஷஸன். அரக்கர் தலைவன், மகா பலசாலி. விச்ரவஸ்ஸின் புத்ரன். நீரும் கேள்விப்பட்டிருக்கலாம். நீண்ட நேரம் உறங்கும் இயல்புடைய கும்பகர்ணனும் தருமத்தில் ஈடுபட்ட விபீஷணனும் என் உடன்பிறந்தோர்தான்'' என்று பெருமை யாகச் சொல்லுகிருள்.

[இடையூறு செய்பவர்களுக்கு 'ராக்ஷஸ' என்பது காரணப் பெயர். 'ரக்ஷ்' என்ருல் 'காப்பாற்று' என்று ஒரு அர்த்தம். 'துன்புறுத்து' என்றும் ஒரு அர்த்தம்!) புலஸ்த்யர் என்ெருரு வேதியர்; பிரும்மாவுக்கொப்பான மஹிமையுடையவர். அவரது மகன் விச்ரவஸ் தந்தையைப்போல் தவத்தில் மிக்கவர்.]

ராவணன் விச்ரவஸ்ஸின் புதல்வன் என்று குறிப்பாகச் சொல் லித் தன் குலப்பெருமையை உணர்த்துகிருள் சூர்ப்பனகை. 'உனக் குத்தக்க மனைவி நான். என்னைப்பார். இந்த அழகற்ற ஸீதையைவிடு. இவளையும் உன் தம்பியையும் வேண்டுமாளுல் கொன்றுவிடுகிறேன். நானும் நீயும் சுகமாய் வாழலாம்' என்கிருள்.

காமம் தலைக்கேறிவிட்டது. 'என் பெயர் காமவல்லி' என்று சொன்னதாக வர்ணிக்கிருர் கம்பன். ராமனுக்கோ சிரிப்புவருகிறது. விளையாட்டாக அவளை லக்ஷ்மணனிடம் போகச் சொல்லுகிருன். 'எனக்கோ விவாகமாகிவிட்டது. இவன் இளைஞன், மணமாகாதவன்

இவளைப்பிடி.' என்கிருன். லக்ஷ்மணன் ''நல்லகாரியம் செய்தாய். நானே இவனுக்கு அடிமை. எனக்கு நீ மனைவியா? என் எஜமானையே நாடு. விடாதே,' என்கிருன்.

இதெல்லாம் பரிகாசப்பேச்சு என்று உணராத சூர்ப்பனகை மீண்டும் ராமனிடம் சென்று ''ஸீதையை விட்டொழி. என்னேடு உல்லாஸமாக வாழலாம். இடையூருன இவளைக் கொன்றுவிடட்டுமா?'' என்றுகூறிக் காமமும் ஆத்திரமும் நிறைந்த கண்களால் விழிக்கிருள். விரைந்து வரும் அரக்கியை விலக்கி, ராமன் லக்ஷ்மணனை ஏவுகிருன். ''பண்பு இல்லாதவரோடு என்ன விளையாட்டு? திமிர் பிடித்த இவளைக் குரூபியாக்கி விரட்டு'' என்கிருன்.

இமாம் விரூபாம் அஸதீம் அதிமத்தாம் மஹோதரீம்
ராக்ஷஸீம் புருஷவ்யாக்ர விருபயிதுமர்ஹஸி 1

வாளை உருவிக் காதையும், மூக்கையும் வெட்டி விடுகிருன் லக்ஷ் மணன். உதிரம் சிந்த அலறிக்கொண்டு ஓடுகிருள் சூர்ப்பனகை. ஒன்றுவிட்ட தமையனுகிய கரனிடம் சென்று முறையிடுகிருள். சினம் கொண்ட கரன் 'உன்னை அவமானப்படுத்தியவன் எவன்?'' என்று கேட்கிருன்.

வசைமொழியால் விவரிக்க வேண்டிய விரோதியை இசை மொழியால் துதிப்பவள் போலக்கூறுகிருள். ''வாலிபர் இருவர், எழில்மிக்க அழகர், மரவுரிதரித்தோர், ஆயினும் வீரம் நிறைந்தோர், தருமத்தில் சிறந்தோர் . . .'' அடுக்கிக்கொண்டே போகிருள். தனக்கு நேர்ந்த தீங்கைக்கூற வந்தவள் பகைவரைப் புகழத் தொடங்கிவிட்டாள். உள்ளம் கவர்ந்த கள்வர்!

தருணௌ ரூபஸம்பன்னௌ ஸுகுமாரௌ மஹாபலௌ
புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ண ஜினம்பரௌ
பலமூலாசனௌ தாந்தௌ தாபஸௌ தர்மசாரிணௌ
புத்ரௌ தசரதஸ்யாஸ்தாம் ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ
கந்தர்வராஜப்ரதிமௌ பார்த்திவ வ்யஞ்ஜனுன் விதௌ
தேவௌ வா மானுஷௌ வா தௌ ந தர்க்கயிது முத்ஸஹே 2

இதற்கு மொழிபெயர்ப்பென அமைந்த பாடலில் 'அரக்கர்களைத் தேடித் திரிகிருர்கள் ராமலக்ஷ்மணர்' என்று சேர்க்கிருர் கம்பன்.

**இருவர் மானிடர் தாபதர், ஏந்திய**
**வரிவில், வாள்கையர், மன்மதன் மேனியர்**
**தருமநீரர், தயரதன் காதலர்**
**செருவில் நேரும் நிருதரைத் தேடுவர்.**

ஆனல் அவமானத்துக்குப் பழிவாங்க வேண்டும் என்கிருள். 'அவர்களைப் போரில் கொன்று ரத்தத்தை உறிஞ்ச வேண்டும்

என்கிருள். ''எனது வைரியான ராமனை இன்றே நீ கொல்ல வேண்டும். இல்லாவிட்டால் உன் முன்னுலேயே நான் துணிந்து தற்கொலை செய்து கொள்வேன்' என்று கரனிடம் சொல்லுகிருள். ''உன்னுல் எங்கு முடியப் போகிறது!'' என்றும் ஏசுகிருள்.

யதி ராமம் மமாமித்ரம் ந த்வமத்ய வதிஷ்யஸி
தவ சைவாக்ரத: ப்ரணுன்ஸ்த்யக்ஷ்யாமி நிரபத்ரபா. 3

முதலில் பதினன்கு போர்வீரர்களை அனுப்புகிருன். அவர்களனைவரும் தோல்வியுற்று மாண்டபின் தானே தூஷணனைத் துணையாகக் கொண்டு ராமனை எதிர்த்துப் போராடுகிருன். ஒருமையில் நின்று, ராமன் சரமாரியாய் அம்புகளை வீசி அரக்கனைக் கொல்லுகிருன். 'முனிவர்கள் இனிக் கவலையற்று வாழலாம்.' என்கிருன். குகையிலிருந்து வெளிவருகிருள் ஸீதை. கணவனின் வீரத்தைக் கண்டு மகிழ்ந்து பெருமையடைகிருள். மீண்டும் மீண்டும் அணைத்து மகிழ்ந்தாள் ஸீதை என்கிருர் வால்மீகி.

ஜனஸ்தானத்திலிருந்து தப்பியோடிய அகம்பனன் என்ருெருவன் ராவணனிடம் போய்ச் சேதி சொல்லுகிருன். 'கரனைக் கொன்றனர், அரக்கரை அழித்தனர்' என்று முறையிடுகிருன். ஆனுல் சூர்பனகை பற்றிப் பேசவில்லை. அவமானச் செய்தி கூறினுல் கொன்று விடுவான் என்ற பயமோ? அல்லது மனிதரால் அரக்கருக்கு நேர்ந்த ஆபத்து பெரிதென்றெண்ணி அதை மட்டும் சொல்லுகிருன் போலும்!

'ராமன் மகா பலசாலி, இந்திரனுக்கொப்பான வீரன்' என்று எச்சரிக்கை செய்கிருன். 'இப்போதே சென்று அவனைக் கொல்லுவேன்' என்கிருன் ராவணன். 'அது அசாத்யம். நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன், கேள், ஸீதையென்ற அவன் மனைவி பேரழகி. ஒப்பற்ற ஒளியுடையாள். பெண்களுக்குள் மாணிக்கம். அவளை நீ அபகரித்துவிடு. பிரிவெனும் பிணியால் உயிர் துடிப்பான் ராமன்' என்கிருன் ராவணனுடைய விஷமமான இயற்கையை அறிந்த அகம்பனன். சற்று யோசித்து 'சரி, நாளையே புறப்படுகிறேன்' என்கிருன் ராவணன்.

தனிமையில் வருகிருன். அருகாமையிலிருக்கும் மாரீசனுடைய வீட்டையடைந்து அவனிடம் யோசனை கேட்கிருன். தாடகையின் புதல்வனுன மாரீசன் திடுக்கிட்டுப் போகிருன். ''நண்பன்போல் நடித்து இந்த யுக்தி சொன்ன பகைவன் யார்? நீ க்ஷேமமாயிருப்பது கண்டு சகிக்காத அற்பன் யார்? ஸீதையைப் பற்றிச் சொன்னவன் யார்? கருநாகத்தின் வாயில் கையை வைக்கச் சொன்னது யார்? என்று கேள்விமேல் கேள்வியாக அடுக்குகிருன்.

ஸீதாம் இஹானயஸ்வேதிகோ ப்ரவீதி ப்ரவீஹிமே
ஆசீவிஷமுகாத் தம்ஷ்ட்ராம் உத்தர்த்தும்ச இச்சதி த்வயா. 4

''சொல்வதைக் கேள். உன் மனைவியரோடு லங்கேச்வரனுக வாழ்வாய், ராமனும் காட்டில் ஸீதையோடு வாழட்டும்' என்கிறுன்.

ப்ரஸீத லங்கேச்வர ராக்ஷஸேந்த்ர லங்காம் ப்ரஸன்னோ
பவ ஸாது கச்ச
த்வம் ஸ்வேஷு தாரேஷு ரமஸ்வநித்யம் ராமஸ்
ஸபார்யோ ரமதாம் வனேஷு. 5

இது கேட்ட ராவணன் திரும்பி லங்கைக்குப் போய்விடுகிறுன்.*

ஆனுல் மறுநாள் சூர்ப்பனகை வந்து சேருகிறுள். தனக்கு நேர்ந்த அவமானத்தைக் காட்டி ராவணனைத் தூண்டுகிறுள். வஞ்சம் தீர்க்க வேண்டுமென்று அலறுகிறுள். 'உன் ஒற்றர்கள் என்ன செய்கிறுர்கள்? நமக்கெல்லாம் வந்தது ஆபத்து' என்கிறுள்.

தேவர்களை வென்று புகழ்பெற்ற வீரன் சபையில் வீற்றிருக்கிறுன். தக்ஷகனைவென்று அவன் மனைவியைக் கைப்பற்றியவன், 'குபேரனைவென்று புஷ்பக விமானத்தைக் கைப்பற்றியவன்' என்று பலவாறு அவன் 'கைப்பற்றிய' பெருமையை நமக்கு அறிமுகப்படுத்துகிறுர் வால்மீகி.

மிகுந்த கோபத்துடன் 'யார் இந்த ராமன்? அவனுக்கு தண்டகாரண்யத்தில் என்ன வேலை? அவன் வலிமை என்ன? எந்த ஆயுதம் கொண்டு கரன், தூஷணன், த்ரிசிரஸ் எல்லோரையும் கொன்றுன்?' என்று விசாரிக்கிறுன். எதிரியின் படைபலங்களை அறிவதில் ஊக்கம். அங்கஹீனளான தங்கையைப்பற்றி ஒரு வார்த்தை கேட்கவில்லை. சபையில் அரசியல்நோக்கு தூக்கி நிற்கிறது போலும்!

''போரை நேரில் பார்த்தேன். சரமாரியாய் வரும் அம்புகளைப் பார்த்தேன். அவற்றை விடுக்கும் ராமனைக் காணவில்லை. அப்படித் தொடர்ந்து வந்தன!' என்கிறுள்.

நாத தானம் சரான்கோரான் நமுஞ்சந்தம் மஹாபலம்
நகார்முகம் விகர்ஷந்தம் ராமம் பச்யாமிஸம்யுகே 6

வலிமையை நன்கு உணர்த்திவிட்டாள். ஆனுல் உடனேயே பயம். 'இவ்வளவு பலவானு?' என்றெண்ணிப் போருக்குச் செல்லாமலே இருந்துவிட்டால்? வேறுவிதமாகத் தூண்டி விடுகிறுள்.

ஸீதையை வர்ணிக்கிறுள். 'இப்படி ஒரு அழகியை நான் கண்டதேயில்லை. எவன் அவளை அடைகிறுனே அவன் நெடுநாள் வாழ்வான். உனக்குத்தான் அவள் ஏற்றவள். உன் பொருட்டு அவளைக் கொண்டுவர முற்பட்டேன், அப்போதுதான் என்னை லக்ஷ்மணன் குரூபியாக்கிவிட்டான்'' என்கிறுள்.

---

* அகம்பனன் வந்து சேதி சொன்னதும் ராவணன் மாரீசனை முதல் முறை சந்தித்தும் இடைச் செருகலெனச் சொல்லப்படுகிறது.

ராவணன் காது கொடுத்துக் கேட்கிறான். 'அவளையடைய விரும்பினால் உடனே கிளம்பு' என்கிறாள் 'ராக்ஷஸர்களுக்கும் க்ஷேமம் உண்டாகும், தவசி போலிருக்கும் ராமனைக் கொல், லக்ஷ்மணனையும் கொன்று, கவலையற்று ஸீதையுடன் வாழலாம்' என்கிறாள்.

ராவணன் சற்றுத் தயங்குகிறான் போலும். உடனே சொல்லுகிறாள், ''எப்படி இஷ்டமோ செய், அண்ணா. கரதூஷணாதிகளைத் தனிமையில் நின்று வென்றான் ராமன் என்பது மட்டும் நினைவிருக்கட்டும். பலாத்காரமாகவாவது கொண்டுவா எப்படியும் அவளை உன் வசமாக்கு.''

சபை கலைகிறது. ராவணன் கிளம்பிவிட்டான்! சூர்ப்பனகைக்கு வெற்றி. கைகேயி மனதை மாற்றிய கூனியின் வெற்றிக்கு ஒப்பானது.

தன்னை நிராகரித்த மனிதரைக் கொல்ல விரும்பினாள் காதலில் தோல்வியுற்ற சூர்ப்பனகை. கரனிடம் முறையிட்டு வேண்டிக் கொண்டது இதுவே. ராவணனிடமும் ராமனைப் போரில் வெல்லத் தூண்டினாள். தேவர்களையெல்லாம் வென்று அலுத்துப்போன ராவணனுக்கு இது ஏறவில்லை. மேலும் அது அசாத்யம் என்று அகம்பனன் எச்சரிக்கை செய்திருக்கிறான். மூக்கையிழந்து நிற்கிறாள் தங்கை. அதை லக்ஷியம் செய்யவில்லை.

அவளோ வஞ்சம் தீர்த்துக் கொள்ளத் துடிக்கிறாள். அசையாப் பொருளாய் உட்கார்ந்திருக்கும் சகோதரனைச் செயலில் ஈடுபடச் செய்வது எப்படி? ஒரு யுக்தியைக் கையாளுகிறாள், அவனது குணம் தெரிந்த தங்கை. மங்கை ஒருத்தி மதிப்பிலா மாணிக்கம் என்று ஆசை காட்டுகிறாள். 'உன் பொருட்டு அவளை இங்கு கொண்டுவர முற்பட்டே இக்கதிக்கு ஆளானேன்' என்று கதை திரிக்கிறாள். உடனே கிளம்பிவிட்டான்!

படிப்படியாக வர்ணிக்கிறார் வால்மீகி. ஆனால் இந்நிலையில் தோன்றும் விகாரத்தை நகைச்சுவையோடு எடுத்துக் காட்டுகிறார் கம்பன்.

சூர்ப்பனகை ஆகாத்யம் செய்பவள் என்று நினைக்கிறான் ராவணன். அவளோ தன்னைப்பற்றிக் கவலைப்படாவிட்டாலும் பெண் என்றால் பல்லைக் காட்டுவான் தமையன் என்று நினைக்கிறாள்!

மானிடர் மூக்கை வெட்டினர் என்றதும் இடியிடிக்கச் சிரிக்கிறானாம் ராவணன். 'பயப்படாமல் நடந்ததைச் சொல். பொய்யை ஒழி' என்கிறான்.

**பொய் தவிர் பயத்தையொழி புக்கபுகல் என்றான்.**

''அவர்கள் இப்படிச் செய்ய நீ என்ன குற்றம்செய்தாய்?'' என்கிறான். ராவணன் மட்டுமல்ல, ஊராரும் அவளை நம்பவில்லை யென்கிறார் கம்பன். ''என்ன ஐயா இது, விந்தை! ராவணன் தங்கை யென்றதும் எல்லோரும் 'அம்மா, தாயே' என்று அடிவணங்கு வாரேயன்றித் தீங்கு செய்ய நினைப்பார்களோ? இவள் தன் மூக்கைத் தானே வெட்டிக்கொண்டு முறையிடுகிறாள்'' என்கிறார்களாம் சிலர்.

என்னையே இராவணன் தங்கையென்றபின்
'அன்னையே' என்றடி வணங்கலன்றியே
உன்னவே ஒண்ணுமோ ஒருவரால்? இவள்
தன்னையே அரிந்தனள் தான் என்றார் சிலர்

ஆனால் ராவணன் 'கேட்டதும் காதல்' என்ற நிலையில் சீதையையே நினைத்து நிற்கிறான். வேறொன்றும் மனதில் நிற்கவில்லை.

கரன் மாண்டதை மறந்து போனான், தங்கையின் மூக்கு அறுந்தது மறந்தான், அறுத்தவர் வலிமையும் மறந்தான், தனக்கு நேர்ந்த பழியையும் மறந்தான். சிவனையும் வென்ற காமனதுஅம்பினால் அடி பட்ட ராவணன் தான் பெற்ற தவத்தையும் மறந்து நின்றான், ஆனால் கேள்விப்பட்ட மங்கையை மட்டும் மறக்கவில்லை!

கரனையும் மறந்தான், தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான், உற்ற பழியையும் மறந்தான் வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால் முன்புபெற்ற
வரனையும் மறந்தான், கேட்ட மங்கையை மறந்திலாதான்.

'சீதையென்னும் நாமமும்சிந்தையும்இரண்டும்ஒன்றாய் நின்றது' என்கிறார். பெயர்கூட மனதில் பதிந்துவிட்டதாம். மனதில் மட்டுமா? சீதையைத் தன் இதயத்திலே சிறை வைத்துவிட்டான். வஞ்சித்துக் கொண்டுவந்து அசோகவனத்தில் வைப்பதற்கு முன்னமே இதயத்தில் வைத்தான் என்கிறார் கவி.

மயிலுடைச் சாயலாளை வஞ்சியாமுன்னம் நீண்ட
எயிலுடை இலங்கைநாதன் இதயமாம் சிறையில்
வைத்தான்

பெண்ணை அபகரித்து வரச்சொன்னது புதிதல்ல. ராவணனுக்கும் சகஜம். வேறொன்றும் பலிக்காமல் போகவே இதைப் பிரயோகம் செய்தாள் சூர்ப்பனகை. ஆனால் ஊக்கம் உண்டாக்குவதற்காக சீதையை ஒப்பிலா அழகியென வர்ணிக்கிறாள். கேட்டதுமே காம வெப்பத்தால் தவிக்கிறானும் ராவணன்.

அங்க அங்கமாக வர்ணிக்கிறாள் ஸீதையை. 'முகம் தாமரை அளவில் இருக்கிறது. ஆனால் கண்கள் கடல் போன்றவை. பேச்சும் குரலினிமையும் அமுதத்திலிருந்து அள்ளி எடுத்தது போல் இருக்கின்றன' என்கிறாள்.

**அம் சொற்கள் அமுதின் அள்ளிக் கொண்டவள் வதனம் மைதீர்**
**கஞ்சத்தினளவிற்றேனும் கடலிலும் பெரிய கண்கள்.**

பல உபமானங்கள் சொல்லுகிறாள். ஆனால் திருப்திகரமானதாக இல்லையாம். 'நீயே நாளைக்குப் பார்க்கப் போகிறாய்' என்று ஆசையைக் கிளப்புகிறாள்.

உபமானங்களின் எளிமையைக் குறிக்க ஒரு உபமானம் சொல்லுகிறாள்! ''நெல் பயிரைக் கண்டிராத ஒருவனுக்கு அது புல்லைப் போலிருக்கும் என்று சொல்லிப் புரியவைக்க முடியுமா? ஸீதையின் புருவம் வில்; விழியே வேல், பல் முத்து, உதடு பவழமே. ஆனால் இவையெல்லாம் சொல் அளவிலேதான். அவள் அழகைச் சொல்ல ஏற்றபடி உவமையே கிடையாது'' என்கிறாள்.

**வில்லொக்கும் நுதலென்றாலும் வேலொக்கும் விழியென்றாலும்**
**பல்லொக்கும் முத்தென்றாலும் பவளத்தை இதழ் என்றாலும்**
**சொல்லொக்கும் பொருளொவ்வாதால் சொல்லலாம் உவமையுண்டோ?**
**நெல்லொக்கும் புல்லென்றாலும் நேர் உரைத்தாக, அற்றே**

இத்தகைய பெண்ணைப் பார்க்கவாவது வேண்டுமென்று தோன்றுதா ஒரு ரஸிகனுக்கு?

சூர்ப்பனகையையும் ராமன் மீது ஆழ்ந்த காதல் கொண்டவளாகவே வர்ணிக்கிறார் கம்பன். ராமனைக் கண்டதும் மோகம் கொண்டாள் ('காம மோஹிதா') என்று குறிப்பிட்ட வால்மீகி, பின்னர் அவள்ராமனையும் லக்ஷ்மணனையும் மாறிமாறி அணுகியதாக வர்ணிக்கிறார். இதைக் கம்பன் மனம் ஒப்பவில்லைபோலும். சம்பவத்தைச் சிறிது மாற்றி இடைவிடாது ராமனையே அடையவிரும்பும் பேதையாகச் சித்தரிக்கிறார். 'அப்புன்மையாள் மோகத்துக்கோர் முடிவும் உண்டாம் கொலோ?' என்கிறார். உயிர் போனாலும் ஆசை அடங்காதவள் என்று குறிக்கிறார். (ஆவி போயினும் ஆசையின் ஓய்வு இலாள்.)

சூர்ப்பனகையின் பேச்சைக் கேட்டு ராவணன் காமத்தால் வாடுகின்றான் என்று விவரிக்கிறார் கம்பன். ஆனால் 'கேட்டவுடன்

கிளம்பிவிட்டான்' என்று கதையை துரிதப்படுத்துகிறார் வால்மீகி.

குணதோஷங்களைச் சீர்தூக்கிப் பார்த்துத் தனக்குள்ளே முடிவு செய்கிறான். நேராக மாரீசன் இருப்பிடம் வந்து சேருகிறான்.

''மிகுந்த கஷ்டத்தில் இருக்கிறேன். நீதான் உதவ வேண்டும்'' என்ற பீடிகையோடு ஆரம்பிக்கிறான். ''என்னை நம்பி என் ஆதரவின் கீழ் இங்கு வசித்துவந்த கரதூஷணர்களையும் அவரது சேனையையும் ஒருவனாய் நின்று அழித்து விட்டான் ராமன் என்பவன். என்ன குற்றம் செய்தார்கள் என்று சொல்லாமலே அவர்கள் மீது அம்பு தொடுத்தான் அந்த மூர்க்கன். தகப்பனால் நிராகரிக்கப்பட்டவன், தீயவன், தர்மத்தினின்று விலகியவன், கோபத்தை அடக்கத் தெரியாதவன்...'' என்று அடுக்குகிறான். ''நல்லவன்போல் நடிக்கிறான். ஆனால் யாதொரு பகைமையும் இன்றி என் தங்கையின் மூக்கையும் காதையும் அறுத்து அவமானப்படுத்திவிட்டான்'' என்கிறான்.

யேன வைரம் வினா அரண்யே ஸத்வமாச்ரித்ய கேவலம்
கர்ண நாஸாபஹாரேண பகினீமே விருபிதா 7

('பகைமையின்றி (வைரம் வினா) கொல்லுவது எனக்குப் பிடிக்கவில்லை' யென்ற ஸீதையின் வாக்கு இதில் எதிரொலியாகத் தோன்றுகிறது.)

அவமானத்துக்கு நிவர்த்தி எது? எதிரிக்கு அவமானம் உண்டாக்குவதுதான். ''அவன் மனைவியான ஸீதையை வஞ்சித்துக் கவர்ந்து செல்வேன். நீ எனக்கு உதவுவாயாக'' என்கிறான். 'பொன் மான் திட்டம்' ஒன்று சொல்லி அதை வர்ணிக்கிறான்.

ராமன் கதையை ராவணன் சொல்லக் கேட்டு மாரீசன் அவனைக் கண்கொட்டாமல் பார்க்கிறான். வரப்போகும் விபத்தை நினைத்து பதறுகிறான். உலர்ந்த உதடுகளை அடிக்கடி நாவினால் தடவுகிறான்!

தஸ்ய ராமகதாம் ச்ருத்வா மாரீசஸ்ய மஹாத்மன:
சுஷ்கம் ஸம்பவத் வக்த்ரம் பரித்ரஸ்தோ பபூவ ச
ஓஷ்டௌ பரிலிஹன் சுஷ்கௌ நேத்ரைரநிமிஷைரிவ
ம்ருதபூத இவார்த்தஸ்து ராவணம் ஸமுதைக்ஷத 8

மீண்டும் இதே துர்புத்தியா? யாரோ மனதைக் கலைத்திருக்க வேண்டும் என்று ஊகிக்கிறான். நற்புத்தி புகட்டத் துணிகிறான். 'எப்போதும் உனக்குப் பிடித்த முறையில் பேசி, உன் விருப்பத்தை நிறைவேற்ற ஆவலாயிருப்பவர் அநேகர் கிடைப்பர். உனக்கு அதிருப்தியானாலும் இதமாக நல்வழியை எடுத்துக்காட்டத் துணிபவர்கள் சிலரே. அத்தகைய ஆலோசனையை அங்கீகரிக்கும் மன்னரும் சிலர் தான்!'' என்கிறான். மாரீசனை 'மஹாப்ராக்ஞன்' என்கிறார் கவி.

**ஸுலபா: புருஷா ராஜன் ஸததம் ப்ரியவாதின:**
**அப்ரியஸ்ய து பத்யஸ்ய வக்தா ச்ரோதா ச துர்லப:** 9

'ராமனைப்பற்றி நீ தவருக நினைக்கிருய். பொய் வதந்திகளை நம்பாதே. அவன் முட்டாள் அல்ல, பலவீனன் அல்ல, தர்மத்தினின்று விலகினவன் அல்ல. தானுக உவந்து ராஜ்யத்தை விட்டு வந்தவன்' என்கிருன்.

**ந ராம: கர்க்கசஸ்தாத நாவித்வான் நாஜிதேந்த்ரிய:**
**அன்ருதம் து:ச்ருதம் சைவ நைவம் த்வம் வக்துமர்ஹஸி.** 10

'உன்போன்ற காமுகர்கள், தீய மந்திரிகள் பேச்சைக்கேட்டு தன்னேடு மட்டுமில்லாமல் ஜனங்களையும் தேசத்தையுமே நாசம் செய்கிருர்கள். தீமையறியாத நல்லோரும் தீயவனேடு சேர்ந்ததால் பாம்பிருக்கும் நீரில் கலந்த மீனகளைப் போல் அழிந்துவிடுவார்கள்' என்கிருன்.

**அகுர்வந்தோஅபி பாபானி சுசய: பாபஸம்ச்ரயாத**
**பரபாபைர்விநச்யந்தி மத்ஸ்யா நாகஹ்ரதே யதா** 11

'நீ சுகமாயிருக்க விரும்பினுல் ராமனுடைய மனதைப் புண் படுத்தாதே'' என்கிருன். ('மாக்ருதா ராம விப்ரியம்). 'வேண்டா, வேண்டா, செய்திடில் உய்வான் விதியுண்டோ?' என்று மொழி பெயர்க்கிருர் கம்பன்.

தன் கருத்துக்குச் சான்றுகப் பழைய கதையையும் சொல்லு கிருன். 'நான் விச்வாமித்ரர் தவத்தைக் கலைத்தபோது சிறுவனுன ராமன் எனக்குக் கொடுத்த உதை இன்னும் நினைவிருக்கிறது. என்ன வில் வித்தை! எப்படியோ தப்பியோடி இங்குவந்து சேர்ந்தேன். ஆனுல் பயம் தெளியவில்லை. ஒவ்வொரு மரத்திலும் வில்லேந்திய ராமன் உருவமே தெரிகிறது. யமனைப்போலல்லவா தோன்றுகிருன்? கனவிலும் என்னை விரட்டுகிருன். ராமனைக் கண்டு நடுங்கியபின் எனக்கு 'ர' காரத்தில் ஆரம்பிக்கும் பெயர்களே பயத்தை உண் டாக்குகின்றன. ரதம், ரத்னம் என்றுல்கூட வெறுக்கிறேன்'' என் கிருன்! வால்மீகியின் நகைச்சுவை வெளிப்படுகிறது.

**வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணுஜினும்பரம்**
**க்ருஹீத தனுஷம் ராமம் பாசஹஸ்தமிவாந்தகம்**
**ரகா ராதீனி நாமானி ராமத்ரஸ்தஸ்ய ராவண**
**ரத்னனிச ரதாஸ் சைவ வித்ராஸம் ஜனயந்திமே.** 12

'உன்னை யார் நியாயம் கேட்டது? குணதோஷங்களை நான் கேட்கவில்லை. உதவி வேண்டுகிறேன். செய்தே தீரவேண்டும். ராஜ்

யத்தில் பாதி தருகிறேன். செய்யாவிட்டால்..இன்றே கொல்லு வேன் உன்னை'' என்கிறான்.

இப்படிப் பிடிவாதம் ஏற்படக் காரணம் சூர்ப்பனகையின் சொல் வன்மை மட்டுமல்ல.

அவளுக்கு நேர்ந்த அவமானத்துக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்ற காரணத்தை மாரீசனிடம் சொல்லுகிறானே ஒழிய ராமனை நேரில் போய் எதிர்க்கத் தயங்குகிறான். ஏன்? ராமனை வெல்ல முடியாதென்ற பயம் ஒரு புறம். அதோடு பெண்ணை அபகரிப்பதி லுள்ள உற்சாகமும் கலந்து சூழ்ச்சியில் ஈடுபடத் தூண்டுகிறது.

மதிப்பைப் பெற்ற மாரீசன் சொல்லியும் கேளாத அளவுக்கு ராவணனைத் தயார் செய்துவிட்டாள் சூர்ப்பனகை! அவளைப்பொறுத் தவரையில் ராவணன் ராமனை எதிர் நின்று கொன்றாலும்சரி, மறைந்து சென்று ஸீதையைக் கவர்ந்தாலும்சரி, இரண்டும் ஒன்று தான். வஞ்சம் தீரும்.

ஒரு வேளை ராமன் இவனைக் கொன்றால்? ஆபத்துதான். ஆனால் வஞ்சம் தீர்த்துக் கொள்வது ஒன்றே குறியாயிருப்பவர்கள் பிறரு டைய சுகதுக்கங்களைப் பொருட்படுத்த முடியுமா? மேலும், அவனுக்கு அபாயம் நேர்ந்தாலும் அதிகம் கவலைப்படமாட்டாள். ராவணன் பலசாலியென்ற காரணத்தால் அல்ல. அவன் மேல் சிறிது மனஸ் தாபம்!

கணவனையிழந்து தண்டகாரண்யத்தில் தனிமையில் வாழ்ந்து வருகிறாள் சூர்ப்பனகை. இந்நிலையில்தான் ராமன் மேல் காதல் ஏற்படு கிறது. அவள் பால்ய விதவையானதற்கு ராவணனே காரணம். காலகேய வம்சத்தைச் சேர்ந்த வித்யுத்ஜிஹ்வா என்ற ஒருவனுக்குத் தன் தங்கையை மணம் செய்வித்த ராவணன், அவர்களோடு போர் மூண்ட சமயம் எதிரே நிற்பவர் யாரென்று பாராமல் அவனையும் கொன்றுவிட்டான். பின்னர் அதற்குப் பரிகாரமாகச் சூர்ப்பனகைக்கு தண்டகாரண்யத்தில் நிலம் கொடுத்து, கரனின் மேல்பார்வையின் கீழ்வசிக்க ஏற்பாடு செய்தான். இதனால் இவர்களிடேயே உறவு நெருங்கியதாயில்லை.

13

# பொன் மான்

சூழ்ச்சியில் முனைந்து நிற்கிறான் ராவணன். அதனால்தான் அவனைத் திருப்ப முடியவில்லை. பலவிதமாய்ச் சொல்லு கிறான் மாரீசன். 'உன் வாழ்வை நீயே முடிக்கிறாய், மதியற்றவனே! இது நீ தெரிந்து செய்யும் காரியம் அல்ல, ஊழ்வினையென்றே நினைக் கிறேன்' என்கிறான்.

**மன்னா! நீ நின் வாழ்வை முடித்தாய் மதியற்றாய்**
**உன்னால் அன்று இது ஊழ்வினையென்றே உணர்கின்றேன்**

'எத்தனையோ அழகிகள், லக்ஷ்மியைப் போன்றவர்கள், உன் செல்வத்தை அனுபவிக்கக் காத்திருப்பவர்கள்! அப்படி இருக்க, அறிவில்லாதவர் பேச்சைக் கேட்கிறாயே?' என்கிறான். 'மதியற் றவனே' என்று மீண்டும் குறிப்பிடுகிறான்.

**செந்திரு ஒப்பார் எத்தனையோர் நின் திரு உண்பார்**
**மந்திரம் அற்றார் உற்ற துரைத்தாய் மதியற்றாய்.**

கேட்கவில்லை ராவணன். 'பொன்மானாக உருவெடுக்க மறுத்தால் கொல்லுவேன்' என்கிறான். 'உனக்கு நாச காலம் வந்துவிட்டது. அதனால்தான் நன்மையும் தீமையாகத் தோன்றுகிறது' என்று அனு தாபத்தோடு சொல்லுகிறான் மாரீசன்.

**நன்மையும் தீமையன்றோ நாசம் வந்துற்றபோது**

இதை ஏற்கும் மனநிலையிலா இருக்கிறான் ராவணன்? ''தென் றல் வீசினால் அது பகைவன் போல் வருத்துகிறது. இப்படி என்னை ஆக்கிய சீதையைத் தருவாய்'' என்று வேண்டுகிறான்!

தென்றலைப் பகையைச் செய்த சீதையைத் தருதி என்ருன்.

'சரி. அப்படி வேண்டுமானல் போரில் வென்று அவளை அடைவாயாக. வஞ்சித்துக் கவர்ந்து செல்வது சிறுமைத்தனம்' என்று சொல்லிப் பார்க்கிருன் மாரீசன். ராவணன் சிரிக்கிருன். 'போரைத் தவிர்த்து வஞ்சனை செய்தே அவளையடைந்து வெற்றியோடு திரும்புவேன்' என்கிருன்.

ப்ராப்யஸீதாம் அயுத்தேன வஞ்சயித்வா து ராகவம் 1

'போரில் அவர்கள் மடிந்து விடுவார்கள். பின் அதே துயரத்தால் அவளும் இறந்து விடுவாள் அல்லவா? ஆகையால் அந்தப் பெண்மானை மாயத்தால் கைப்பற்றுவோம்' என்கிருன்.

மானவள் ஆதலால் மாயையின் வலித்தும் என்ருன்

ராவணனைப் போருக்கு அனுப்ப முடியவில்லை. விருப்பமின்றி மாளுகிருன் மாரீசன். ஆனல் கடைசியாகச் சொல்லுகிருன். ''உன் போன்ற காமாந்தகனை, மூர்க்கனை, அரசனுகப் பெற்ற நாடும் குடிகளும் பாழ். நீ ஒருவன் செய்யும் பாவத்தால் அனைவரும் அழிவர். ஒருவேளை ஸீதையை நீ அபகரித்து வந்தால் நான் உயிரோடில்லையென்று அறிவாயாக. அதன்பின் நீயும் இல்லை. லங்கையும் இல்லை, அரக்கரும் இல்லை என்பதும் உண்மை'' என்கிருன்.

அவச்யம் விநசிஷ்யந்தி ஸர்வே ராவண ராக்ஷஸா
யேஷாம் த்வம் கர்க்கசோ ராஜா துர்ப்புத்திரஜிதேந்த்ரிய:
..................
..................
ஆனயிஷ்யஸி சேத்ஸீதாம் ஆச்ரமாத் ஸஹிதோ மயா
நைவத்வம் அஸி நாஹம் சநைவலங்கா நராக்ஷஸா: 2

இவ்வளவு துணிவுடன் ராவணனுக்குப் புத்தி கூறியவன் ஏன் பொன்மான் திட்டத்துக்கு இசைந்தான்? ராவணனிடம் பயம்மட்டும் அல்ல. ராமன்பால் மனக்கடுப்பும் உண்டு. தாயாகிய தாடகையைக் கொன்றவனல்லவா? சுபாகுவைக் கொன்று தன்னை ஓட ஓட விரட்டிய ராமன்மேல் வஞ்சம் தீர்த்துக்கொள்ள மாரீசனுக்கும் இது ஒரு வாய்ப்பு!

மாண்ட உறவினரை நினைத்து ஆத்திரம் ஒரு புறம், ராமனது வீரத்தை நினைத்து அச்சம் ஒருபுறம். போகாவிட்டால் ராவணன் கொல்லுவான். போனல் ராமன் என்ன செய்வானே? நீரில் விஷம் கலந்து போய்விட்டால் ஏரியிலுள்ள மீன் எப்படித் துடிக்குமோ அப்படி இருந்ததாம் மாரீசன் நிலை.

மான்வேடம் தரித்து, மானேபோல் திரிகிறுன் மாரீசன். ஆனுல் பொய்மான். பொன்மான். பல வர்ணங்கள் ஒளி வீசுகின்றன. இயற்கை மான்கள் மோப்பத்தால் உணர்ந்து விலகிப் போகின்றன. ஆனுல் ஸீதையின் மனம் இதன்பால் செல்லுகிறது. விவரம் தெரியாமல் காணுததைக் கண்டவள் போல் நடந்துகொள்ளும் இவளைக் 'காட்டில் வாழத் தகுதியற்றவள்' என்கிறுர் வால்மீகி. ('அனர்ஹா அரண்ய வாஸஸ்ய')

அதைப் பிடித்துத் தரும்படிராமனை வேண்டுகிருள். லக்ஷ்மணன் இடைமறித்து, ''இது மாயை. அந்த அயோக்யன் மாரீசன் வேலை. முன்பே தெரியுமே?'' என்கிறுன்.

தமேவைனம் அஹம் மன்யே மாரீசம் ராக்ஷஸம் மருகம் 3

'இந்த மாதிரி மானை இதுவரை கண்டதில்லையே' என்கிறுன்.

'நம்மீது வஞ்சம் விரும்பிய கொடிய அரக்கர் செய்யும் வினையே இந்த மான்' என்கிருனும்.

**வெய்ய வல்லரக்கர் வஞ்சம் விரும்பினுர் வினையிற் செய்த கைதவம்தான்.**

ராமன் லக்ஷ்யம் செய்யவில்லை. ''மானுயிருந்தாலென்ன, மாரீசனுயிருந்தால் என்ன? கொன்று வருவேன் அல்லது பிடித்து வருவேன். நீ ஸீதையை நன்கு கவனித்துக் கொள்'' என்று கூறிப் போகிறுன் ராமன். மாரீசன் கூறிய புத்திமதியை ராவணன் கேட்க வில்லை. அதேபோல் லக்ஷ்மணன் பேச்சை ராமன் கேட்கவில்லை. இரு தரப்பிலும் தவறு நேர்ந்ததால்தான் விபத்து விளைந்தது. ஒருவராவது ஜாக்கிரதையாக இருந்திருக்கலாகாதா? முடியவில்லைபோலும், தவிர்க்கமுடியாத விதியைப்போல வந்து நின்றுன் மாரீசன் என்று சமாதானம் கூறுகிறுர் கம்பன்.

**'கடக்கவொண்ணு வினையென வந்து நின்ற மான்'**

மான் நெடுந்தூரம் இழுத்துச் செல்லுகிறது. பிடிக்க முடியவில்லை. கோபம் கொண்டு அதைக் கொல்ல நினைக்கிறுன் ராமன். அம்பு பட்டதும் வேஷத்தைக் களைந்து சுய உருவில் தோன்றுகிறுன் மாரீசன். 'ஸீதே, லக்ஷ்மணு!' என்று அலறிக்கொண்டே உயிரை விடுகிறுன்.

உடனே லக்ஷ்மணன் கூறிய வார்த்தை நினைவுக்கு வருகிறது ராமனுக்கு. ஸீதை 'துடிப்பாளே' என்று ஏங்குகிறுன். விரைந்து வருகிறுன் தன் குடிசையை நோக்கி. தம்பியின் சாதுர்யத்தை மெச்சி 'அவன் வல்லவன்' என்று அடிக்கடி தனக்குள் சொல்லிக் கொண்டான் என்கிறுர் கம்பன்.

**ஐயன் வல்லன், என் ஆருயிர் வல்லன், நான்**
**உய்யவந்தவன் வல்லன் என்று உன்னினுன்**

மாரீசனின் உரத்தகுரல் இங்கு கேட்கிறது. 'உதவி வேண்டுகிருர், அலறுகிருர் உன் தமையன். சீக்கிரம் போ' என்று லக்ஷ்மணனை ஏவுகிருள் ஸீதை. ராமன் இட்ட ஆணையை நினைத்து அவ்விடத்தை விட்டுப்போக மறுக்கிருன் காவலனுகிய லக்ஷ்மணன்.

நடுங்கிய மனைவி 'இது அவர் குரல்தான்' என்று சாதிக்கிருள். (இவனுக்கு அதிகம் தெரியுமா?) 'நிற்கிருயே? போ. அவருக்கு ஆபத்து வந்தால் உனக்குத் திருப்தியா?' என்று விரட்டுகிருள். அவன் நகரவில்லை.

பீதி அதிகரிக்கிறது. மூளையைக் குழப்புகிறது. ''மித்திரன் உருவில் வந்த சத்ரு நீ. ஒரு வேளை என்னை அடையலாம் என்ற நோக்கத்தோடுதான் போக மறுக்கிருயோ? அது நடவாது'' என்று வாய் கூசாமல் ஏசுகிருள்.

**இச்சஸித்வம் விநச்யந்தம் ராமம் லக்ஷ்மண மத்க்ருதே**
**லோபான்மம க்ருதே நூனம் நானுகச்சஸி ராகவம்** 4

அவளது பீதியை உணர்ந்து, அவள் பேச்சைப் பொருட்படுத்தாமல் சமாதானம் சொல்லுகிருன் கோபத்துக்குப் பெயர் போனவன். 'ராமனை வெல்ல முடியாது. விரைவில் வந்து விடுவான். நீ ஏன் உளருகிருய்? அக்குரல் மாயை. கரன்மாண்டதுமுதல் நம்மீது வஞ்சம் கொண்டிருக்கிருர்கள் அரக்கர். நான் உன்னைத் தனியே விட்டுப் போகமாட்டேன். இது என்பொறுப்பு' என்கிருன். இதமாகப் பேசிய மெய்யனை அவள் ஏசினுள் என்கிருர் வால்மீகி.

**அப்ரவீத் பருஷம் வாக்யம் லக்ஷ்மணம் ஸத்யவாதினம்.** 5

கோபம் பொங்கி வருகிறது. அதன் விளைவாக மேலும் தவருன எண்ணங்களே உதிக்கின்றன. நாசம் வந்துற்றபோது நன்மையும் தீமையன்ருே? ''சக்களத்தி மகன்தானே நீ, உள்ளன்பு எப்படியிருக்கும்? இது விந்தையல்ல. நீ மிகத் தீயவன். தனிமையில் காட்டுக்கு வந்து உடன் நின்று தக்க சமயத்தில் என்னைக் கைப்பற்றலாமென்று நினைக்கிருய். பரதன் உன்னை வேவுகாரனுக அனுப்பியிருக்கிருன் போலும். உன் எண்ணம் ஒரு நாளும் பலிக்காது.'

'சக்களத்திமகன்' எல்லோரும் தீயவராய்த் தோன்றுகின்றனர்! 'ராமனையடைந்தபின் மற்ருெருவனை நினைப்பேனே? உன் கண்முன்னே உயிரைவிடுவேன். ஆனுல் ராமனில்லாமல் ஒரு கணமும் இருக்கமாட்டேன்.' என்கிருள்.

**நைதச்சித்ரம் ஸபத்னேஷு பாபம் லக்ஷ்மண யத்பவேத்**
**த்வத்விதேஷு ந்ருசம்ஸேஷு நித்யம் ப்ரச்சன்னசாரிஷு**
**ஸுதுஷ்டஸ்த்வம் வனே ராமம் ஏகம் ஏகோனுகச்சஸி**
**மம ஹேதோ: ப்ரதிச்சன்ன: ப்ரயுக்தோ பரதேன வா**
**தன்னஸித்யதி ஸௌமித்ரே தவ வா பரதஸ்ய வா** 6

மிகுந்த சஞ்சலமுற்ற நிலையிலிருக்கிறாள். எனினும் அளவுமீறிப் பேச வேண்டுமா? இயல்பாகவே சற்றுத் துடுக்காகப் பேசுபவள் ஸீதை. ராமன் காட்டுக்கழைத்துச் செல்லத் தயங்கின சமயம் ''நீ ஒரு ஆண்பிள்ளையா? உனக்குப் பெண்ணைக் கொடுத்தாரே, ஜனகர்!' என்று இடித்துக் காட்டினாள் அல்லவா? ஆனால் காரியத்தைச் சாதித்து விட்டாள். அதே முறையை இங்கு கையாளுகிறாள். ('சுருக்'கென்று சொன்னால்தான் பிடிவாத குணமுள்ள மனிதன் அசைவான்!)

மீண்டும் குற்றச்சாட்டு. ஆபாசமான பேச்சு. லக்ஷ்மணன் சீறி எழுகிறான். (இவ்வளவு நேரம் பொறுத்தது அதிசயம்.) 'இதற்குத் தக்கபடி பதிலளிக்கும் நிலையில் இல்லை இப்போது நான். நீ மரியாதைக் குரியவள். தகாத பேச்சு பெண்களுக்கே இயல்பானதுதான். ஆனால் இது போன்ற நாராசமான வார்த்தைகளை நான் பொறுக்கமாட்டேன். நியாயமாகச் சொன்னேன். கேட்கவில்லை. பதிலுக்கு வசைகள் தந்தாய். சரி, எப்படியோ தொலைந்து போ. தமையன் ஆணைப்படி நடக்கும் என்னையே சந்தேகிக்கிறாயே! நீ நாசமாய்ப் போ. நான் ராமனிடம் போகிறேன்' என்கிறான்.

> **உத்தரம் நோத்ஸஹே வக்தும் தைவதம் பவதீமம**
> **வாக்யம் அப்ரதிருபம் து ந சித்ரம் ஸ்த்ரீஷு மைதிலி**
> **......................**
> **..................**
> **திக் த்வாம் அத்ய ப்ரணச்ய த்வம் யன்மாம் ஏவம் விசங்கஸே** 7

அநீதியை எண்ணிக் குமுறுகிறான். ஆனால் போகுமுன் ''நீ க்ஷேம மாயிருப்பாயாக'' (ஸ்வஸ்தி தே அஸ்து, வரானனே) என்று வாழ்த்தி விட்டுப் போகிறான் அப்போதும் ஆத்திரம் தீராமல், 'விஷம் குடிப்பேன், தீயில் விழுவேன், கயிற்றை மாட்டிக் கொள்வேன், ஆனால் ராமனையன்றி ஒருவனைக் காலாலும் தொடுவேனோ?' என்கிறாள். பின் வரப்போகும் அவலம் இப்பேச்சிலே ஒலிக்கிறது. வாக்கிலே சனி!

ரோஷமும் ஆத்திரமும் உண்டானாலும் அன்பும் விட்டுப் போகாத நிலையை 'வரானனே' என்ற ஒரு வார்த்தையால் விளக்கி விட்டார் கவி! வெகு தூரம்வரை திரும்பிப் பார்த்துக்கொண்டே காட்டுக்குள் மறைகிறான்.

# 14

## ‘இல்லையோ அறம்?’

அவன் தலை மறைந்ததும் குடிசையை நோக்கி வருகிறான் காஷாயம் தரித்த துறவி. கையில் கமண்டலம்; காவி உடை; நாவிலே மந்திரம். துறவியேபோல் தோன்றுகிறான் ராவணன். அளவிலா அகந்தையுடையவன் அடக்கமே உருவானவன்போல் தோன்றுகிறான். காமன் கணைக்கிரையானவன் வேதமந்திரம் ஓதிக் கொண்டே நுழைகிறான். காமம் எப்படியெல்லாம் வேஷம் போடச் செய்கிறது!

சிந்தையில் ஆழ்ந்து உட்கார்ந்திருக்கிறாள் ஸீதை. கண் கலங்கி யிருக்கிறது. புகழ் பெற்றவளான ராமபத்னியைப் பார்த்தான் என்கிறார் வால்மீகி. (சூர்ப்பனகை எவ்வளவு புகழ்ந்திருக்கிறாள்!) ‘கற்பினுக் கரசியைக் கண்ணின் நோக்கினான்’ என்கிறார் கம்பன். அகக்கண்ணால் உணரவில்லை என்று தொக்கி நிற்கிறது. கற்பைக் கண்ணால் பார்க்க முடியுமா?

அவளைக் கண்கொட்டாமல் தலைமுதல் கால்வரை பார்க்கிறான். அழகில் லயித்து நிற்கிறான். அதை எப்படிச் சித்தரிக்கிறார் கம்பன்? தேன் நிறைந்த மலர்களில் புகுந்து எழுந்து ரீங்காரம் செய்யும் வண்டினங்கள் போல சஞ்சலமான பார்வை. பார்வை ஆங்காங்கு சென்று களித்தது என்கிறார். அதோடு நிற்கவில்லை. அவன் மனமே களிநடனம் புரிகிறது. அதன் விளைவாக, சீதையின் மேல் அவன் வைத்த விழிகள் (மயிலின் தோகைபோல்) அவன் மனதுக்கிசைந்தபடி ஆடுகின்றன. அவளைச் சுற்றிக் கண்ணாலேயே மாலையிட்டதுபோன்ற உணர்ச்சியும் உண்டாகிறதாம்!

**புன மயில் சாயல்தன் எழிலின் பூநறைச்**
**சுனை மடுத்து உண்டு இசைமுரலும் தும்பியின்**
**இனமெனக் களித்துளது என்பது என்? அவன்**
**மன்மெனக் களித்தது கண்ணின் மாலையே.**

'கண்ணின் மாலை' என்னசொல் அலங்காரம்! அமருகவியின் 'தீர்க்காவந்தனமாலிகா விரசிதா த்ருஷ்ட்யைவ ந இந்தீவரை:' என்ற ச்லோகத்தை நினைவுறுத்துகிறது. (நெடுநாள் கழித்துத் திரும்பிவரும் தலைவனுக்கு உபசரணைகள் செய்கிறாள். ஆனால் ஒரு பொருளையும் உபயோகிக்கவில்லை. தனது கண்விழிகளாலே மாலையிட்டாளாம் காதலி. புன்னகையாலே பூமாரி சொரிந்தாளாம்!)

('ராவணனுக்குப் பத்து தலைகளிருந்ததால் கண்கள் இருபதும் வரிசையாகக் களித்தன என்று வழக்கமாகச் சொல்லும் விளக்கம் கவிதையைப் புறக்கணிக்கிறது.)

'இவ்வளவு பேரழகியைக் கண்டு தந்த என் சகோதரிக்கு என் அரசையே கொடுக்கலாம்' என்கிறான் வள்ளல்! ஏன்? 'துக்கத்திலே இவ்வளவு ஒளி முகத்தில் தோன்றுமானால், இவள் புன்னகை செய்தால் எப்படி இருக்கும்?' என்று நினைக்கிறான்.

**உளைவுறு துயர்முகத்து ஒளி இதாம் எனின்**
**முளையிறு இலங்கிடும் முறுவல் என்படும்?**
**தளையவிழ் குழல் இவள் கண்டு தந்த என்**
**இளையவட்கு அளிப்பென் என் அரசு என்றெண்ணினான்.**

உடனே புகழத் தொடங்குகிறான். 'பொன்மேனியுடைய நீ யார்? பூதேவியோ? புகழ் அன்னையோ? அப்ஸரஸ்தானோ? ரதியோ? தாமரையை விட்டெழுந்து வந்த லக்ஷ்மியோ?' என்று வினாக்கள் மூலமே விவரிக்கிறான்.

'யக்ஷ, கந்தர்வ, கின்னரப் பெண்களைப் பார்த்திருக்கிறேன். உன் போன்ற அழகியை உலகிலே கண்டதில்லை. நீயோ யுவதி. இங்கு தனியே இருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. அரக்கர் இருப்பிடம் அபாயகரமானது' என்கிறான்.

அவள் மௌனமாயிருப்பது கண்டு தன் கருத்தை முடிக்க அவசரத்திலிருக்கும் ராவணன் தைரியமாக மேலே பேசுகிறான். ''கருவிழியாளே! உனக்கேற்றது விலையுயர்ந்த ஆடையாபரணம், நல்ல உணவு. மாடமாளிகை. எல்லாம் சிறந்ததாயிருக்க வேண்டும்'' 'மேன்மையுடைய கணவனும் வேண்டும்' என்று சேர்த்துக் கொள்ளுகிறான் விஷமமாக. (பெரியவர் ஆசி கூறுவதாகவும் எடுத்துக் கொள்ளலாமே!)

**வரம் மால்யம் வரம் போஜ்யம் வரம் வஸ்த்ரம் சசோபனே**
**பர்த்தாரம் ச வரம் மன்யே த்வத்யுக்தம் அஸிதேக்ஷணே. 1**

அந்தணர் பேச்சு விரஸமாக இருக்கிறது. பார்வையோ உடலில் தைக்கிறது. எனினும் அதிதிபோல் கருதி உபசரிக்கிறாள். கற்புடைய

மங்கை அந்த முறையற்றவனை 'எழுந்தருளும்' என்று கூறினாளாம். எல்லாமே முரண்பாடாக இருக்கிறது. நல்லவனை விரட்டினாள், தீயவனை வரவேற்கிறாள்.

அவனுடன் பேச்சுக் கொடுத்துக்கொண்டே யிருக்கிறாள். அவன் பார்வை இவள் மேலிருக்க, இவள் மானின் பின்போன கணவனையும் அவனைத்தேடிப் போன லக்ஷ்மணனையும் எதிர்பார்த்து அடிக்கடி வெளியே செலுத்துகிறாள் பார்வையை. அடர்ந்த காட்டில் பச்சைப் பசேலென்ற மரங்கள்தான் தெரிகின்றன. அவர்களைக் காண வில்லையே!

விவீக்ஷமாணா ஹரிதம் ததர்ச தன் மஹத்வனம் நைவது
ராமலக்ஷ்மணௌ. 2

இதற்கிடையில் போலிச்சாமியார் கேள்விமேல் கேள்வி கேட்கிறார்!

தன் குலப் பெருமை, கணவன் பெருமை, வனம் புகுந்த விவரம் எல்லாம் கூறுகிறாள் ஸீதை. இடையே, 'தசரதன் காமத்தில் மூழ்கி, இளம் மனைவியை மகிழ்விக்க விரும்பி ராமனுக்கு முடிசூடாமல் இருந்துவிட்டார்' என்றும் சொல்லுகிறாள். சாமியாரைப் பார்த்ததும் தன் குறையைச் சொல்லிக்கொள்ள வேண்டும்போல் இருக்கிறது!

கைகேய்யா: ப்ரியகாமார்த்தம் தம் ராமம் நாப்யஷேசயத்
காமார்த்தஸ்து மஹாதேஜா: பிதா தசரதஸ்ஸ்வயம் 3

'சற்றுப் பொறுங்கள், முனிவரே! என் கணவர் நிறைய உணவுப் பொருளோடு திரும்புவார், தக்கபடி உபசரிக்கின்றேன். ஆமாம், நீங்கள் யார்? தனிமையில் இங்கு திரியக்காரணம் என்ன?' என்கிறாள்.

பொறுக்க நேரமில்லை. விரைவில் அவளது நன் மதிப்பைப் பெற வேண்டும். ஆனால், எப்படிப் பேசுகிறான் ராவணன்? 'உலகோரெல்லாம் பயந்து நடுங்கும் அரக்கர் தலைவன், ராவணன் என்பவன் நான்தான். பல இடங்களிலிருந்தும் உத்தமப் பெண்களைக் கொண்டு வந்து என் அரண்மனையில் ஒருங்கே வைத்திருக்கிறேன். அவர்கள் எல்லோரையும் விட உயர்ந்த பதவி உனக்களிக்கிறேன். என் முதல் மகிஷியாவாயாக.'

யேன வித்ராஸிதா லோகா: ஸதேவாஸுர பன்னகா:
அஹம் ஸராவணோ நாம ஸீதே ரக்ஷோகணேச்வர:
பஹ்வீனாம் உத்தமஸ்த்ரீணாம் ஆஹ்ருதானாம் இதஸ்தத:
ஸர்வாஸா மேவ பத்ரம் தே மமாக்ரமஹிஷீ பவ 4

பிறரை பயமுறுத்துபவன், பெண்களைக் கைபற்றுபவன் என்ற இரு முக்ய குணாதிசயங்களைச் சொல்லிவிட்டான். இவனை எவள்

விரும்புவாள்? இயற்கைக் குணம் தன்னை யறியாமல் வெளிப் படுகிறது! ('ராவண' என்ற சொல்லுக்கு வடமொழியில் 'மிரட்டுபவன்' என்று அர்த்தம்).

கோபம் கொண்ட ஸீதை படபடப்போடு பேசுகிறாள். ''என் கணவர் சிங்கம். நீ ஒரு நரி. ராமன் மனைவியை நீ விரும்பினால் உனக்கு முடிவு காலம் வந்துவிட்டதென்று தெரிந்துகொள்'' என்று சீறுகிறாள். அவனது முயற்சி அறிவற்றதென்று உணர்த்தப் பல உபமானங்கள் கூறுகிறாள். 'கண்ணில் மாசு துடைக்க ஊசியை உபயோகிப்பாயோ? தகதகவென்று ஒளிவீசும் தணலை மடியில் கட்டிக்கொள்ளப் பார்க்கிறாய். பாறாங்கல்லைக் கழுத்தில் கட்டிக்கொண்டு கடலை நீந்தப் பார்க்கிறாய்' என்று ஏசுகிறாள். படபடப்பு மிகுந்து, உடல் காற்றிலாடும் வாழைபோல் நடுங்குகிறது என்கிறார் வால்மீகி.

அக்ஷி ஸூச்யா ப்ரம்ருஜஸி ஜிஹ்வயா லேக்ஷி ச க்ஷுரம்
ராகவஸ்ய ப்ரியாம் பார்யாம் யோதிகந்தும் த்வமிச்சஸி
அவஸஜ்ய சிலாம் கண்டே ஸமுத்ரம் தர்த்து மிச்சஸி
அக்னிம் ப்ரஜ்வலிதம் த்ருஷ்ட்வா வஸ்த்ரேணாஹர்த்து மிச்சஸி. 5

என்ன கோபம்! பயந்துவிட்டாள் போலிருக்கிறது. தன் குலப் பெருமையை சொல்லிப் பார்ப்போமென்று நினைக்கிறான் இலங்கை வேந்தன். 'விச்ரவஸ் என்ற வேதியரின் மகன் நான். குபேரனின் தம்பி' என்கிறான். குபேரனை விரட்டி புஷ்பக விமானத்தைப் பறித்தது நினைவுக்கு வருகிறது. அதையும் சொல்லிவிடுகிறான் அறிவிலி!

'எனக்குக் கோபம் வந்தால் குபேரன் என்ன? எல்லாத் தேவர்களும் நடுங்குவார்கள்' என்கிறான். ''செல்வமிகு நகரம் லங்கை. என்னோடு வாழ்ந்தால் அது கிடைத்ததற்கரிய வாழ்வு என்பதை உணர்வாய். அந்த இன்பமெல்லாம் அனுபவிக்க அனுபவிக்க, அற்பனான ராமன் நினைவே அற்றுப் போய்விடும். மூத்த மகனை விலக்கித் தன் மனதுக்குகந்த பரதனுக்கு மகுடம் அளிக்க நினைத்த தசரதன், ராமனை ஊரைவிட்டு ஓட்டினான். அப்போது வலிமையற்று வெளிக் கிளம்பியவனா உனக்குகந்த வீரன்?' என்று இடித்துக் காட்டுகிறான். தன் பெருமையையும் ராமன் சிறுமையையும் ஒப்பிட்டுச் சொல்லுகிறான்.

புஞ்ஜானா மானுஷான் போகான் திவ்யாம்ஸ்ச வரவர்ணினி
ந ஸ்மரிஷ்யஸி ராமஸ்ய மானுஷஸ்ய கதாயுஷ:
ஸ்தாபயித்வா ப்ரியம் புத்ரம் ராஜ்யே தசரதேனய:
மந்தவீர்யஸ் ஸுதோ ஜ்யேஷ்டஸ் தத: ப்ரஸ் தாபிதோஹ்யயம்
தேன கிம் ப்ரஷ்ட ராஜ்யேன ராமேண கதசேதஸா
கரிஷ்யஸி விசாலாக்ஷி தாபஸேன தபஸ்வினா 6

ராமன் துறவியாகித் தவவேடத்திலிருக்கிறான் என்று ஏளனம் செய்கிறான். துறவிபோல் தோன்றிக் காமம் தலைக்கேறி, தான் உளரு

வது தவருகத் தோன்றவில்லே போலும். அதையே உயர்ந்த லக்ஷண மாக எடுத்துச் சொல்லுகிருன்! 'காதலால் தவிக்கிறேன். அது பிடித்து என்னே இங்கு இழுத்து வந்தது. என்னே நிராகரிக்காதே. முன்பு ஊர்வசி புரூரவஸ்ஸை இப்படித்தான் உதறித் தள்ளினுள். பின்னர் அவனேயே நாடிச் சென்ருள்' என்று புத்திமதி கூறுகிருன். ''ராமன் என் சுண்டு விரலுக்கு ஈடாவானு? ஏதோ உன் பாக்யம் நான் நாடி வந்திருக்கிறேன். என்னே ஏற்றுக் கொள்'' என்று முடிக் கிருன்.

கண்கள் சிவக்கச்சினம் கொண்டு விட்டாள் ஸீதை. போதும் சாமியார் பேச்சு! விச்ரவஸ்ஸின் புதல்வனென்றும் பெரிய குலத்தில் தோன்றியதாகச் சொன்னுனல்லவா? அதை அவன் மேலே திருப்பு கிருள். 'குபேரன் தம்பியென்றும் சொல்லிக்கொண்டு எப்படித் தகாத வார்த்தையெல்லாம் பேசுகிருய்? உன் போன்ற முட்டாள், ஆசை யைக் கட்டுப்படுத்தாத காமுகன் அரசனுயிருந்தால் அரக்கர் குலம் மடிந்து போவது திண்ணம். என்மேல் கை வைத்தால் நீ நாசமாய்ப் போவாய். அமுதம் குடித்துச் சாகாவரம் பெற்றிருந்தால் கூட உனக் குப் பிழைக்கும் வழியில்லே' என்று மிரட்டுகிருள்.

**கதம் வைச்ரவணம் தேவம் ஸர்வபூத நமஸ்க்ருதம்**
**ப்ராதரம் வ்யபதிச்ய த்வம் அசுபம் கர்த்து மிச்சஸி**
**அவச்யம் விநசிஷ்யந்தி ஸர்வே ராவண ராக்ஷஸா:**
**யேஷாம் த்வம் கர்க்கசோ ராஜா துர்ப்புத்திரஜிதேந்த்ரிய: 7**

பின்னிரண்டு அடிகள் எழுத்துக்கு எழுத்து மாரீசன் கூறிய புத்திமதிதான். ஸீதையின் வாயிலாக மீண்டும் நினேவுறுத்துகிருர் கவி. ராவணனே 'இது பழைய பேச்சு' என்று தள்ளிவிடுகிருன் போலும்!

'உயிர் பிழைக்க வேண்டுமானுல் ஓடி ஒளிந்துகொள்' என்று சொன்னுள் என்கிருர் கம்பன். தனிமையிலும் துணிச்சல்!

**உன்னுயிர்க் குறுதி நோக்கின் ஒளித்தியால் ஓடி என்ருள்.**

ஒரு சிறுக்கி தன்னே உதாசீனம் செய்வது கண்டு ஆத்திரம் வரு கிறது அரக்கர் வேந்தனுக்கு. ஆயினும், அல்லது அதன் காரணத் தாலே, அவள் மதிப்பைப் பெற விரும்புகிருன். 'உனக்கு அளவிலாத் திமிர். அதனுல்தான் நான் சொல்வது காதில் ஏறவில்லே, என் வீர் யத்தை உணரவில்லே. ஆகாயத்தில் நின்ற வண்ணம் பூமியை இவ் விருகைகளால் தாங்குவேன். கடலேக் குடிப்பேன். காலனே வெல் லுவேன். ஆனுல் காதலே உருவாகி உன் முன் நின்று காதல் சொரி யும் என்னேப்பார், கர்வக்காரி!' என்கிருன்.

நோன் மத்தயா ச்ருதெள மன்யே மமவீர்ய பராக்ரமெள
உத்வஹேயம் புஜாப்யாம்து மேதினீம் அம்பரேஸ்தித:
ஆபிபேயம் ஸமுத்ரம்ச ஹன்யாம் ம்ருத்யும் ரணே ஸ்தித:
காமரூபிணம் உன்மத்தே பச்யமாம் காமதம் பதிம். 8

கம்பன் இக்கருத்தை எப்படி அமைக்கிருர் பாருங்கள். ''மேரு மலேயைப் பெயர்க்க வேண்டுமா? வானத்தை இடிக்க வேண்டுமா? கடலேக் கலக்க வேண்டுமா? நெருப்பையணேக்க வேண்டுமா? பூமியைத் தூக்க வேண்டுமா? என்ன வேண்டுமோ சொல், பேதையே! ராவணனுக்கு முடியாதது என்ன? யாரென்று நினேத்துப் பேசுகிருய்?'' என்கிருன். வீம்பும் கர்வமும் பீறிட்டுக் கொண்டு வருகிறது.

மேருவைப் பறிக்கவேண்டின், விண்ணினே
இடிக்கவேண்டின்,
நீரினேக் கலக்கவேண்டின். நெருப்பினேயவிக்கவேண்டின்,
பாரினே எடுக்கவேண்டின், பல வினே சில சொல், ஏழாய்!
யாரெனக் கருதிச் சொன்னுய்? இராவணற்கரிது என்
என்ருன்.

கபடமாக நடந்து கொண்டவன், தீய குணங்களேப் பெருமையென்றெண்ணிப் பேசுபவன், எத்தகைய பராக்ரமசாலியானுல் என்ன? ஒன்றும் பலிக்கவில்லே. அவனுக்கோ நேரம் ஆகிறது! கோபமும் உணர்ச்சியும் மேலிடத் துறவி வேடம் நீக்கிச் சுய உருவில் தோன்றுகிருன். அரக்கனுகிக் கருகருவென்று மேகம்போல் தோன்றினுன் என்கிருர் வால்மீகி. 'மாயவேடம் அகன்றது. படம் விரித்துச் சீறியெழும் பாம்புபோல் நின்ருன் ராவணன்,' என்கிருர் கம்பன்.

கபட நடத்தையை வேறு விதமாக எடுத்துக் காட்டும் கம்பன் ராவணன் தன்னேப்பற்றிப் பேசும்போது முதலில் தன் அழகு, பதவி, உயர்குலம், மூன்றையும் குறிப்பாக விவரிப்பதாகச் சித்தரிக்கிருர். 'இந்திரனுக்கு மேல்பட்ட இந்திரன், ஓவியத்தில் எழுதமுடியாத அழகுடையோன், பிரும்மாவின் குலத்தில் பிறந்தவன், எல்லா உலகுக்கும் அரசன், வேதங்களே உணர்ந்தவன்' என்று விவரிக்கிருன். தான் வேறு யாரோ போல் பேசுகிருனும்.

இந்திரற்கு இந்திரன் எழுதலாகாச்
சுந்தரன் நான்முகன் மரபில் தோன்றினுன்
அந்தரத்தோடும் எவ்வுலகும் ஆள்கின்ருன்
மந்திரத்து அருமறை வைகும் நாவினுன்.

சுந்தரனே, தந்திரனே, தன் சுய உருவம் அவளே மயக்கும் என்ற உறுதியான நம்பிக்கையோடு மீண்டும் ஆசை மொழி பேசுகிருன். 'மூவுலகிலும் புகழ்பெற்ற புருஷன் வேண்டுமா? உன் எதிரில்

நிற்கிறான். உனக்கேற்ற கணவன் நானே. அளவிலாக் காதல் பொங்கும் என் உள்ளத்தை ஏற்றுக்கொள், பெண்ணே. உனக்கு மங்களம் உண்டாகும். ஒரு காலும் உன் முகம் கோணாமல் நடந்து கொள்வேன்!' என்று உறுதி கூறுகிறான்.

**த்ரிஷு லோகேஷு விக்யாதம் யதி பர்த்தாரம் இச்சஸி**
**மாம் ஆச்ரய வராரோஹே தவாஹம் ஸத்ருச: பதி:**
**மாம் பஜஸ்வ சிராய த்வம் அஹம் ச்லாக்ய: ப்ரியஸ்தவ**
**நைவ சாஹம் க்வசித் பத்ரே கரிஷ்யே தவ விப்ரியம்.** 9

காதலை அர்ப்பணம் செய்யும் ராவணன் அவள் காலடியில் விழுந்து வணங்கினான் என்கிறார் கம்பன். 'உன் மேலுள்ள ஆசை, நோயாகி என்னுள் வளர நான் உடல் மெலிந்துவிட்டேன். எனக்குயிர் தந்து அருள். அதனால் உனக்கும் லாபம் உண்டு. தேவ மகளிர்க்கெல்லாம் கிடைக்காத பெரும்பதவி உன்னுடையதாகும்' என்று இறைஞ்சிக் கேட்கிறானாம்.

**அணங் கிறுக்கணங்கனாய் நின் ஆசை நோய் அகத்துப் பொங்க**
**உணங்கிய உடம்பினேனுக்குயிரினை உதவி உம்பர்க்**
**கணங்குழை மகளிர்க்கில்லாப் பெரும் பதம் கைக்கொள் என்னா**
**வணங்கினன் உலகத் தாங்கும் மலையினும் வலியதோளான்**

அவளோ இதையெல்லாம் பொருட்படுத்தாமல் கவலை தோய்ந்த முகத்தோடு கணவன் சென்ற வழியையே பார்க்கிறாள்.

ஆத்திரம் பொங்கி வருகிறது. ராவணனுக்குக் காதலில் தோல்வியா? தனக்கு இணங்கவில்லையென்பதைவிட 'தகுதியற்ற' ஒருவனுக்கு அடிமையாயிருக்கிறாளே என்ற ஆத்திரம் அதிகம்!

''எதைக்கண்டு நீ அந்த நாடிழந்த பேடியைப் போற்றுகின்றாய், முட்டாள்?'' என்று கேட்கிறான்.

**கைர்குணைர் அனுரக்தாஸி மூடே பண்டித மானினி** 10

அருகில் சென்று அதட்டுகிறான். வெறிதலைக்கேறி விடுகிறது. அவளை வாரியெடுத்துத் தேரில் ஏற்றிவிடுகிறான் நொடிப்பொழுதில்.

'ராமா'வென்று அலறுகிறாள். ''என்னைக் கவர்ந்து செல்லுகிறான் பாவி. நீ அறியாயோ லக்ஷ்மணா!'' என்கிறாள். சிறிது நேரத்துக்கு முன் அவனை வைது விரட்டியதை மறந்துவிட்டாள் பேதை!

'சூர்ப்பனகையின் நாசிக்குப் பழிவாங்கவே அபகரித்துவிட்டான்' என்று கதறுகிறுள். ('தவவேடத்தில் காட்டிலிருக்கும்போது வாள் ஏந்த வேண்டாம்' என்று அவள் கூறிய புத்திமதியை ஏற்காததன் விளைவு தானே இந்த விபரீதம்?)

ராவணன் கையில் சிக்கித் தேரில் தெற்கு நோக்கிச் செல்லும் போது இதற்கெல்லாம் மூலகாரணம் கைகேயிதானென்று நினைக்கிறுள். இத்தகைய முடிவு நேருமென்று எதிர்பார்த்தே சூழ்ச்சி செய்தாள் என்கிறுள். 'தருமம் நாடியவன் ராமன். அவன் தர்மபத்னி நான். என்னை இவன் தூக்கிச் செல்லுகிறுன். கைகேயி மனம் குளிரும். அவள் சுற்றத்தாரும் மகிழ்வர்' என்று புலம்புகிறுள். மறக்க முடியுமோ அவள் செய்த கொடுமை?

**ஸந்தேதானீம் ஸகாமா அஸ்து கைகேயீ ஸஹ பாந்தவை:**
**ஹ்ரியே யத் தர்ம காமஸ்ய தர்மபத்னீ யசஸ்வின: 11**

கைதியென்ற நிலையிலும் ராவணனை நிந்திக்கிறுள். 'உனக்கு முடிவுகாலம் வந்துவிட்டது' என்று உறுமுகிறுள். ''மரமே, மலையே, மானே'' என்று உயிர் உள்ளவை, உயிரற்றவையெல்லாம் அழைத்து ராமனுக்குச் சேதிசொல்லச் சொல்லுகிறுள். தேர் விரைந்து ஓடுகிறது!

**மலையே மரனே மயிலே குயிலே**
**கலையே பிணையே களிறே பிடியே**
**நிலையா உயிரே, நிலை நேடினர்போய்**
**உலையா வலியாருழை நீர் உரையீர்.**

அழைப்புக்கு இணங்கியதுபோல் வந்துசேருகிறுன் ஜடாயு என்ற கழுகினத்தவன்.* அவனைப் பார்த்து ஸீதை சொல்லுகிறுள் 'என்னைக் கவர்ந்து செல்லும் இப்பாவியைத் தடுப்பது கடினம். ஆயினும் ராமனுக்குச் சேதிசொல்.'

ஜடாயுவுக்கும் ராவணனுக்கும் சொல்யுத்தம் நடக்கிறது. தொடர்ந்து மல்யுத்தமும் நடக்கிறது. வாளால் வெட்டிக் குற்றுயிராக்கி மேலே செல்லுகிறுன் ராவணன். ஜடாயுவின் வாயிலாகப் பொது உண்மைகள் சிலவற்றை வற்புறுத்துகிறுர் வால்மீகி.

'தருமத்தைக் காக்கவே கடமை கொண்டவன் அரசன். பிறர் மனைவியைக் காப்பதைவிட்டு அவனே அழிக்கத் துணியலாமா?' என்று அறிவு புகட்டுகிறுன்.

---

* கழுகிலிருந்து தாங்கள் தோன்றியதாகக் கருதும் 'கித்தி' ஜாதியினர் இன்றும் உள்ளார். ('க்ருத்ர' என்ற சொல்லின் திரிபு)

கதம் ராஜா ஸ்திதோ தர்மே பரதாரான் பராம்ருசேத்
ரக்ஷணீயா விசேஷேண ராஜதாரா மஹாபல 12

'ஸீதையை எடுத்துச் செல்வது அபாயகரம். கழுத்தில் கட்டிக் கொண்ட கயிறுபோல, மடியில் கட்டிய கருநாகம்போல' என்கிறான். தன் திறமைக்கு மீறி எதையும் செய்யக்கூடாது. 'தலைமேல் சுமக்கும் சுமை மனிதனையே அமுக்கிவிடும் வரை ஏற்றலாமா? எவ்வளவு உணவு எளிதில் ஜீரணமாகுமோ அவ்வளவு ஆகாரம்தான் சாப்பிடலாம்.'

ஸ பார: ஸௌம்ய பர்த்தவ்யோ யோநரம் நாவஸாதயேத்
ததன்னமபி போக்தவ்யம் ஜீர்யதே யதனாமயம். 13

ஆப்த நண்பன் மாரீசன் பேச்சையே கேட்காத வெறியன் இவனையா லக்ஷியம் செய்வான்?

குற்றுயிராகிக்கிடக்கும் ஜடாயுவை நன்றியோடு அணைக்கிறாள் ஸீதை. 'போதும். கிளம்பு' என்று விரட்டுகிறான் அரக்கன். 'ராமா, ராமா' என்றலறிக்கொண்டு மரங்களைப் பிடித்துக் கொள்ளுகிறாள். கொடிபோல் சுற்றிக் கொள்கிறாள் ஆதரவைநாடி. 'விடு, கையை விடு' என்று அவளை மயிரைப் பிடித்து இழுத்துத் தேரில் ஏற்றி ஆகாய மார்க்கமாகப் போகிறான் ராவணன்.

இப்படிச் செல்வதைப் பார்த்த முனிவர்கள் என்ன செய்தார்கள்? ஸீதையைக் குறித்து வருந்தியபோதிலும் ராவணனுக்கு முடிவு காலம் நெருங்கிவிட்டதை நினைத்துப் பெரியோரெல்லாம் மகிழ்ந்தனராம். படைத்த பிரமனும் 'திட்டம் நிறைவேறிவிட்டது' என்று சொன்னதாக வர்ணிக்கிறார் வால்மீகி. எல்லோருக்கும் அவரவர் கவலை!

க்ருதம் கார்யம்இதி ச்ரீமான் வ்யாஜஹார பிதாமஹ:
ப்ரஹ்ருஷ்டா வ்யதிதாஸ்சாஸன் ஸர்வே தே பரமர் ஷய:
த்ருஷ்ட்வா ஸீதாம் பராம்ருஷ்டாம் தண்டகாரண்யவாஸின: 14

அக்கிரமமாய் அபலையைத் தூக்கிச் செல்லுகிறான் அரக்கன். அவனைத் தடுப்பதைவிட்டு 'ஐயோ, பாவம்' என்று வாயால் மட்டும் சொல்லுகிறார்கள். ராவணன் அழிவதற்கு ஸீதை ஒரு கருவியென்று கருதிக் களிக்கின்றனர்.

இத்தகைய சூழ்நிலையில்தான் ஜடாயுவின் செயல் போற்றத் தக்கதாகத் திகழ்கிறது. அறிவு படைத்த மனிதர் வாயால் பேசுகின்றனர். 'ராமன் மனைவிக்கு இக்கதி ஆனால் இனித் தருமம் ஏது, சத்யம் ஏது?' என்கின்றனர். நாகரீகம் தெரியாத ஜடாயு ஒருவனே அநீதியை எதிர்த்துப் போராடுபவன். இதுதான் தத்துவம்.

நுட்பமாக அமைத்திருக்கிறார் வால்மீகி. அதை நன்கு உணர்த்தும் பொருட்டு ஸீதையின் வாயிலாக உயர்ந்ததோர் லக்ஷியத்தைப் பாடுகிறார் கம்பன். ''நான் ஆபத்தில் இருப்பதையறிந்து 'அஞ்சாதே' என்று கூறி உதவிக்கு வந்த இந்த நல்லவன் தோற்பது, தீயவன் வெல்வதா? இனி பாவம்தான் வெல்லுமோ? வேதம் பொய் யாகுமோ? தருமம் இல்லையென்றாய் விட்டதோ?'' என்று புலம்பு கிறாள் ஸீதை. உரக்கப்படித்தால் உள்ளத்தை உலுக்கும்.

**அல்லல் உற்றேனை வந்து அஞ்சல் என்றஇந்**
**நல்லவன் தோற்பதே, நரகன் வெல்வதே?**
**வெல்வதும் பாவமோ, வேதம் பொய்க்குமோ?**
**இல்லையோ அறம்? என இரங்கி ஏங்கினாள்.**

ஆக்ரமிப்பை எதிர்த்துக் குற்றமற்ற பெண்ணைக் காக்க துணிவுடன் போராடிய நல்லவன் தோற்றதால்தான் தருமத்துக்குக் கேடு வந்ததென்று பொருள். பிறன் மனைவியை அபகரித்ததைவிட மேலாக நீதியற்ற நிலை. ஆதலால் 'அறம் இல்லையோ?' என்கிறார் கவி. (இத்தகைய கண்டனத்தை ஆங்கிலத்தில் (Righteous indignation) என்று சொல்வார்கள்).

இடதுகையால் ஸீதையைப் பிடித்துக்கொண்டு வலதுகையால் தேரை ஓட்டிச் செல்லுகிறான் ராவணன். வழியெல்லாம் உதவி வேண்டி அலறுகிறாள் ஸீதை. ஒருவரையும் காணவில்லை. ஒரு மலைச் சாரலில் சில வானர வீரர்களைப் பார்க்கிறாள். உடனே ஒரு யுக்தி செய்கிறாள். சில நகைகளைக் கழற்றித் தன் மேலாடையில் சுற்றி அவர்களிடையே வீசுகிறாள். ராமனிடம் சொன்னாலும் சொல்வார்கள் என்று நினைக்கிறாளாம். வெற்றி மயக்கத்தில் இதை கவனிக்கவில்லை ராவணன் என்கிறார் வால்மீகி!

காடு, மலை, நதியெல்லாம் தாண்டிச்சென்று கடலையும் கடந்து லங்காபுரியை அடைந்துவிட்டான். துடிக்கும் ஸீதையை மடியில் இருத்தி எக்களிப்புடன் ஊருக்குள் நுழைகிறான். அவன் தன் மரணத்தையல்லவோ எடுத்துச் செல்லுகிறான் என்று நிந்திக்கிறார் கவி.

**ஸது ஸீதாம் விவேஷ்டந்தீம் அங்கேனாதாய ராவண:**
**ப்ரவிவேச புரீம் லங்காம் ரூபிணீம் ம்ருத்யும் ஆத்மன:** 15

அந்தப்புரத்தையடைந்து அரக்கியர் சிலரை வரவழைக்கிறான். ''இவளைக் காவலில் வைத்து என் உத்தரவின்றி யாரும் பார்க்காமல் கவனித்துக் கொள்ளுங்கள். ஆனால் அவள் எது கேட்டாலும், ஆடையோ, நகையோ, பொருளோ, எதுவானாலும், நானே கேட்டதுபோல் நினைத்து விரைவில் கொடுக்கவேண்டியது. யாராவது அவளிடம் சரிவர நடந்து கொள்ளாமல், தெரிந்தோ தெரியாமலோ

அவளுக்கு அதிருப்தி ஏற்படச்செய்தால் உயிரிலே விருப்பமில்லை யென்று அர்த்தம்!' என்று எச்சரிக்கை செய்கிறான். என்ன கரிசனம்!

முக்தாமணி ஸுவர்ணானி வஸ்த்ராண்யாபரணானி ச
யத்யத் இச்சேத் ததே வாஸ்யா தேயம் மச்சந்ததோ யதா
யா ச வக்ஷ்யதி வைதேஹீம் வசனம் கிம்சித் அப்ரியம்
அக்ஞானாத்யதி வா ஞானாத் ந தஸ்யா ஜீவிதம் ப்ரியம். 16

அங்கிருந்து அப்பாற்சென்று 'இன்னும் என்ன செய்யலாம்?' என்றுயோசிக்கிறான். எட்டு வீரர்களை வரவழைக்கிறான். ராமனிருக்கு மிடம் சென்று வேவு பார்த்து வரும்படி அனுப்புகிறான். ''அவன் கரதூஷணர்களைக் கொன்றானல்லவா? அது முதல் பழிவாங்கத் துடிக் கிறேன் நான். அவனை எப்படியாவது கொல்வதற்கு முயற்சி செய் யுங்கள். அவன் நடவடிக்கைகளைக் கவனமாய்ப் பார்த்து அவ்வப் போது தெரிவிக்க வேண்டும்' என்கிறான்.

அவர்களை அனுப்பியபின் இருக்கை கொள்ளவில்லை. ஸீதை யைப் பார்க்கப் போகிறான். சோகத்தில் ஆழ்ந்துகிடக்கும் அபலையை பலாத்காரமாக இழுத்துக் கொண்டுபோய்த் தன் மாட மாளிகை யைச் சுற்றிக் காண்பிக்கிறான். கண்ணைப் பறிக்கிறது செல்வம்! ''அனைத்தும் என்செல்வம். நானே தலைவன். ஆனால் எல்லாம் உன் வசம் ஒப்புவிக்கத் தயார். என்னையே உன் வசம் அடைக்கலம் செய் கிறேன். நீ உயிருக்குயிரானவள் அல்லவா? என் மனைவியாக இசை வாய், பெண்ணே. காமத்தால் வாடுகிறேன். என்னை ஏற்றுக்கொள். தயை புரி'' என்று வேண்டுகிறான்.

'ராமன் ஒருகாலும் இங்கு வரமுடியாது' என்றான். ''நீ செய்த தீவினையெல்லாம் இதுவரை அனுபவித்த காட்டுவாழ்க்கையோடு தீர்ந்தது. இனி நல்வினைப் பயனை அனுபவிப்பாயாக' என்று தூண்டு கிறான்.

துஷ்க்ருதம் யத் புரா கர்ம வனவாஸேன தத்கதம்
யஸ் ச தே ஸுக்ருதோ தர்ம: தஸ்யேஹ பலம் ஆப்னுஹி 17

'ஒப்பிட்டுப் பார்க்கட்டுமே' என்று நினைக்கிறான். தனிமையில் சிக்கிய அபலைக்கு உற்றார் உதவி செய்ய வராமல் தடுக்கும் பெருங் கடல், அரக்கர்படை; துயரத்திலிருந்து விடுபட இவன் அளிக்கும் உயர்ந்த பதவி! விரைவில் குழைந்து விடுவாள் என்றும் தோன்று கிறது போலும்.

'உன் தாமரைமுகம் துக்கத்தில் களையற்றிருக்கிறது' என்கிறான். 'சுருக்'கென்று படுகிறது. ஸீதை மேலாடையால் முகத்தை மறைத் துக்கொண்டு விடுகிறாள். ஆனால் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடு கிறது. தன் புகழுரை கேட்டு வெட்கப்படுகிறாள் என்று நினைக்கிறான். 'போதும். வெட்கப்படாதே. உலக இயல்பை ஒட்டி இதுவரை வெட்

கித்தது போதும். தெய்வாதீனமாகத்தான் நீயும் நானும் சந்தித்திருக்கிறோம். ஆகையால் நீ என்னை அடையலாம். இதோ, பார். ராவணன் யாருக்கும் தலைவணங்கியதில்லை. ஆனால் என் தலை இன்று உன்பாதத்தில் கிடத்துவேன்' என்று கெஞ்சுகிறான். 'இனி இவள் எனதே' என்றும் நினைக்கிறான் ('மமேயம் இதிமன்யதே')

ஆனால் ஸீதைக்கோ பயம் தெளிந்துவிட்டது. எதற்கும் அளவு இல்லையா? 'நிர்பயா' என்று வர்ணிக்கிறார் வால்மீகி. உதாசீனமாகப் புல்லைக்கிள்ளி நடுவே போட்டு நிதானமாகப் பேச ஆரம்பிக்கிறாள். கணவன் பெருமையை மீண்டும் சொல்லுகிறாள். இருதரப்பிலும் மாறுதலற்ற பேச்சு!

'உனக்கு முடிவுகாலம் வந்துவிட்டது' என்று மிரட்டுகிறாள். 'என்னை பயமுறுத்தி வெல்ல முடியாது' என்று கூறுபவள்போல் 'என் உடலில் எனக்கு விருப்பமில்லை' என்கிறாள். (அவனுக்கல்லவோ விருப்பம்?) 'என் உயிரிலும் விருப்பமில்லை. உணர்வற்ற உடலைக் கட்டிப்போடலாம், சிறையில். வெட்டிப் போடலாம். ஆனால் இவ்வுலகில் அபவாதத்தை மட்டும் நான் பொறுக்கமாட்டேன்' என்கிறாள்.

> **இதம் சரீரம் நிஸ்ஸம்ஞம் பந்தவா காதயஸ்வ வா**
> **நேதம் சரீரம் ரக்ஷ்யம் மே ஜீவிதம் வாபி ராக்ஷஸ** 18

காலடியில் விழுந்து வணங்கும் தன்னை நிராகரித்தவள்மீது ஆத்திரம் பொங்கி வருகிறது மன்னனுக்கு. என்ன செய்யலாம்? கைதியை அடிக்கடி மிரட்டுவதுதான் முறை. 'சரி. உனக்கு ஒரு வருடம் தவணை அளிக்கிறேன். அதற்குள் நீ இணங்காவிட்டால் உன்னைக் கண்டம் துண்டமாய் வெட்டிச் சமைத்துவிடுவார்கள் என் சமையல்காரர்' என்று மிரட்டி, அவளை அசோகவனத்துக்கு அழைத்துச் செல்லும்படி உத்தரவிடுகிறான்.

'அங்கு இவளை மிரட்டுங்கள். பின் சற்று ஆறுதல் சொல்லுங்கள். பிறகு மறுபடி மிரட்டுங்கள். இப்படிச் செய்து காட்டில் பிடித்த முரட்டு யானையைப் போல் வசமாக்கிப் பணியவைக்க வேண்டும்' என்கிறான்.

> **தத்ரைனாம் தர்ஜனைர் கோரை: புனஸ் ஸாந்த்வைஸ் ச மைதிலீம்**
> **ஆனயத்வம் வசம் ஸர்வா வன்யாம் கஜவதூமிவ** 19

புலிகளிடம் சிக்கிய மானைப்போல் ஏக்கம் பிடித்து இருக்கிறாள் ஸீதை. பயமும் துயரமும் மேலிட்டுத் தன் கணவனையே நினைந்து பிரியமான மைத்துனனையும் நினைத்து நினைவற்றுப் போனாள் என்று இப்படலத்தை முடிக்கிறார் வால்மீகி.

> **பதிம் ஸ்மரந்தீ தயிதம் ச தேவரம் விசேதனா அபூத்**
> **பய சோக பீடிதா** 20

15

## எங்கே? அவள் எங்கே?

மாணுகி வந்த மாரீசனைக் கொன்று விரைந்து வருகிறுன் ராமன். தூரத்தில் கேட்கும் நரியின் கூக்குரல் அவலமாகத்தோன்றுகிறது. 'ஜனஸ்தானத்தில்கர தூஷணர்களைக்கொன்றது முதல் அரக்கர் வஞ்சம் கொண்டுள்ளார்கள். ஸீதையும் தம்பியும் க்ஷேமமாயிருக்க வேண்டும்' என்று நினைக்கிறுன். காத்திருக்கும் துக்கத்தை அறிவிப்பதுபோல் மான்களும் பக்ஷிகளும் சமிக்ஞை செய்கின்றனவாம்.

எதிரே வருகிறுன் லக்ஷ்மணன்! அவன் முகமும் கவலை தோய்ந்திருக்கிறது. லக்ஷ்மணனைப் பிடித்து உலுக்குகிறுன் ராமன். 'என்ன காரியம் செய்தாய் நீ? அவளைத் தனியே விட்டு வந்தாயே, அவளை அரக்கர் அபகரிப்பர், அல்லது கொன்றுவிடுவர். சந்தேகமில்லை.' என்று பதட்டமாக ஏசுகிறுன்.

'எங்கே என் வைதேகி? தயங்காமல் என்னேடு கானகம் புகுந்த செல்வி எங்கே? நாடிழந்த எளியவனை நான் என் துயரமெல்லாம் மறந்து வாழ உதவும் துணைவி எங்கே? நான் உயிர் தரிக்க உதவும் உத்தமி எங்கே?' என்று துடிக்கிறுன்.

ராஜ்யப்ரஷ்டஸ்ய தீனஸ்ய தண்டகான் பரிதாவத:
க்வ ஸா து:க்கஸஹாயா மே வைதேஹீ தனுமத்யமா
யாம் விநா நோத்ஸஹே வீர முஹூர்த்தமபி ஜீவிதும்
க்வஸா ப்ராணஸஹாயா மே ஸீதா ஸுரஸுதோபமா. 1

துயரத்தில் துணைவியாய் நிற்பதால் உயிர் தரிக்க உதவும் உத்தமி என்ற கருத்து 'து:க்கஸஹாயா, ப்ராணஸஹாயா' என்று சொற்களில் வெளிப்படுகிறது.

கவலைக்கிடமான சூழ்நிலையில் அவள் உயிருடன் இருக்கிறுளா என்றே சந்தேகம் வருகிறது. உடனே மனதில் வேகமாகத் தோன்றி

மறைகின்றன பலஎண்ணங்கள். 'அவள் இல்லையென்றால் நானும் மாய்ந்துப்போவேன். நீ தனியே அயோத்திக்குத் திரும்பிச் சென்றால் கைகேயி மனம் குளிரும். மகனுக்கு அரசு தந்து காரியத்தை சாதித்த கைகேயிக்கு, மகனையிழந்த கோசலை கைகட்டி அருகில் நிற்பதும் முறையோ?' என்று புலம்புகிறான். மறக்கமுடியாத மாற்றாந்தாய்!

ஸீதா நிமித்தம் ஸௌமித்ரே ம்ருதே மயி கதே த்வயி
கச்சித்ஸ காமா ஸுகிதா கைகேயீ ஸா பவிஷ்யதி
ஸபுத்ர ராஜ்யாம் ஸித்தார்த்தாம் ம்ருதபுத்ரா தபஸ்வினீ
உபஸ்தாஸ்யதி கௌஸல்யா கச்சித் ஸௌம்ய ந கைகயீம். 2

பலவாறு பேசிக்கொண்டே விரைந்து வருகிறான். லக்ஷ்மணன் வாய் திறக்கவில்லை. அவலமாய் நிற்கிறான். தான் செய்தது தவறு என்று உணர்ந்தபோதிலும் அவள் விரட்டினாள் என்று சொல்ல விரும்பவில்லை போலும். அவன் செயலை நிந்திக்கிறான் ராமன். ஸீதையை நினைத்து வேகமாய் நடக்கிறான். பசி ஒருபுறம், தாகம் ஒருபுறம். களைப்பு மிகுதி. உலர்ந்த நாவொடு குடிசைக்குவந்து அது சூன்யமாயிருப்பதைக் காண்கிறான். முகத்தில் ஈயாடவில்லை.

விகர்ஹமாணோ அனுஜம் ஆர்தரூபம் க்ஷுதா ச்ரமாத்சைவ
பிபாஸயா ச
விநிச்வஸன் சுஷ்க முகோ விஷண்ண: ப்ரதிச்ரயம் ப்ராப்ய
ஸமீக்ஷ்ய சூன்யம் 3

அங்குமிங்கும் அருகில் பார்த்துக் கூவியழைத்தும் காணவில்லை. 'அவளை ஏன் தனியேவிட்டு வந்தாய்?' என்று மீண்டும் கேட்கிறான். இப்போது முழுக்கதையைச் சொல்லுகிறான் தம்பி. ''நான் நானாக வரவில்லை. என்னை ஏவினாள் ஸீதை. மறுத்தேன், ஏசினாள். 'தீய' பரதனுக்கு உடந்தையாக வந்தேன் என்றாள். அவள்பால் இச்சை கொண்டேன் என்றும் சொன்னாள். கோபம் பொறுக்கமாட்டாமல் நான் உன்னை நாடி வந்தேன்'' என்கிறான். விவரங்களைச் சிறிதும் பொருட்படுத்தாத ராமன், 'நீ செய்தது தவறு. என் திறமை நீ அறியாயோ? ஸீதை கோபத்தில் சொன்ன பேச்சையா பெரிதென் றெண்ணினாய்? எந்நிலையிலும் அருகிலிருந்து காக்கச் சொன்னேன். அதைவிட்டு நீயே கோபத்துக்காளாகி என் ஆணையையும் மீறினையே?' என்று நிந்திக்கிறான்.

நஹி தே பரிதுஷ்யாமி த்யக்த்வா யத்யாஸி மைதிலீம்
க்ருத்தாயா பருஷம் வாக்யம் ச்ருத்வா ஸ்த்ரியா யத் த்வம் இஹாகத:
ஸர்வதா த்வப நீதம்தே ஸீதயா யத் ப்ரசோதித:
க்ரோதஸ்ய வசமாபன்ன: நாகரோ: சாஸனம்மம 4

போக மறுத்த லக்ஷ்மணனைக் கேவலமாக ஏசி மிரட்டியது ஸீதையின் கோபம். அவள் சொன்ன பேச்சைப் பொருட்படுத்தி அவளைத்

தனியே விட்டுச்செல்லத் தூண்டியது லக்ஷ்மணனின் கோபம். அருகிலிருந்து நடந்ததையெல்லாம் பார்க்காதவன் சீர்தூக்கி தீர்ப்பு அளிக்கிறான்! விபரீதம் நேர்ந்தபின், லக்ஷ்மணன் குற்றமே பெரிது என்பதில் ஐயமில்லை.

இப்படி லக்ஷ்மணனை நிந்தித்தது கம்பர் மனம் ஒப்பவில்லை போலும். 'என் மேல் பாசத்தால் கவலை மிகுந்து உன்னை அனுப்பினாள் ஸீதை. நீ உதவிக்கு வராவிட்டால் அவள் துயரத்தால் மாய்ந்து போவாளேயென்று கருதி நீயும் வந்தாய். ஆகையால் உங்கள் மேல் தவறு ஒன்றுமில்லை. முன்பே நீ தடுத்தும் கேளாமல் அந்தப் பொய் மானின் பின் போனேனே, அச்செயல்தான் கெடுத்தது அனைத்தையும்' என்று கூறித் தன்னையே நொந்து, அதையே நினைத்து நினைத்து வருந்தினான் என்கிறார்.

**முந்தே தடுக்க ஒழியாது எடுத்த வினையேன் முடித்த**
**முடிவால்**
**அந்தோ! கெடுத்தது என உன்னி உன்னி அழியாத**
**உள்ளம் அழிவான்.**

குடிசை சூன்யமாயிருக்கிறது. பாழடைந்து நிற்கிறது. மரங்களின் இடையே தேடுகிறான். குன்றின் மீதேறிப் பார்க்கிறான். ஆற்றின் கரையோரம் பார்க்கிறான். எட்டியவரை பார்வையை வீசுகிறான். உரக்கக் கூவியழைக்கிறான். எங்கும் சூன்யம்.

எங்காவது ஒளிந்து நின்று விளையாட்டாகப் பரிகாஸம் செய்கிறாளோவென்று கூட நினைக்கிறான். அப்படிச் செய்வது அவளது இயற்கையாம். 'போதும் விளையாட்டு. வா இங்கே' என்று கூவுகிறான்.

ஒன்றும் பயனில்லை. 'மலையே, மரமே, மானே,' என்று எல்லாவற்றையும் அழைத்துக் கேட்கிறான், 'ஸீதையைக் கண்டாயோ?'

அசோகமரத்தையும் அணுகி ஆருயிர்க் காதலியைப்பற்றி சேதி கேட்டான் என்கிறார் வால்மீகி!

'அரக்கர் கொண்டு போயிருப்பார்' என்கிறான். 'இறந்திருப்பாள்' என்கிறான். 'பொறு, அண்ணா. தேடுவோம். காட்டிலோ, நதிக்கரையிலோ இருப்பாள்' என்கிறான் லக்ஷ்மணன்.

தேடுகிறார்கள். மனம் பதைபதைக்கிறது. அடிக்கடி பெருமூச்சு விடுகிறான் ராமன். 'என் கண்ணே!' என்று கதறுகிறான். லக்ஷ்மணன் சமாதானம் செய்து பார்க்கிறான். லக்ஷியம் செய்யாமல் 'ஓ'வென்று அழுகிறான் ராமன்.

உணர்ச்சிப் பெருக்குற்று பலவாறு புலம்புகிறுன். 'திரும்பி ஊருக்குப் போய் ஜனகரிடம் என்ன சொல்லுவேன்?' என்கிறுன். அவமானம்.

நடந்து செல்லும்போது வழியில் பூக்கள் சிந்தியிருப்பதைப் பார்க்கிறுன். 'இதோ, ஸீதைக்கு நான் தந்த பூக்கள். சந்தேகமே யில்லே. எனக்குத் தெரியும்' என்கிறுன். 'எங்கே அவள்? சொல்லா விட்டால் எரித்துவிடுவேன்' என்று மலேயைப் பார்த்து உறுமுகிறுன்.

ஒரு ஒடிந்த வில் தென்படுகிறது. நகையின் சில பாகங்களும் சிதறிக்கிடக்கின்றன. 'இவையே அத்தாக்ஷி. அவளேக்குறித்து இரு அரக்கர் போராடியிருக்க வேண்டும். தோற்றவனின் வில் இது. இடையே சிக்கித் தவித்தவளின் தங்கச் சரங்கள் இதோ' என்று ஊகிக்கிறுன். 'ஆனல், அவள் எங்கே?' என்று பேரிரைச்சல் போடு கிறுன். 'அநீதி நேர்ந்தபோது கைகட்டிச் செயலற்று எல்லோரும் இருந்ததால் இவ்வுலகத்தையே அழித்து விடுவேன்' என்று உறுமு கிறுன். முன்பு, முடிதுறந்து வனம்போகவேண்டிய நிலேயில், 'அயோத்தியை அழித்துக் காடாக்கிவிடுவேன்' என்று குமுறிய லக்ஷ்மணனின் சகோதரன் இங்கு தோற்றுகிறுன்.

இன்று அவனே ஆறுதல் கூறும் நிலே. 'உறுதியுள்ள மாந்தர் இவ்விதம் நிலேயிழந்து போகலாகாது. நான் துணேயிருக்கிறேன். ஸீதையைத் தேடுவோம். மலேயிலும் குகையிலும் காட்டிலும் தேடி உன் தாரம் கவர்ந்தானேப் பிடிப்போம்.' என்கிறுன் லக்ஷ்மணன். ('அதிகமிஷ்யாமஸ் தவபார்யாபஹாரிணம்') லக்ஷ்மணன் சாதாரண மாகப் பேசுகிறுன். ஆனல் 'தாரம் கவர்ந்தான்' என்ற சொல் நெஞ் சிலே தைக்கிறது போலும். இந்த அவச்சொல் வேறு கேட்க வேண் டுமா? மீண்டும் அநாதை போல் சோகமேலிட்டு அலறுகிறுன் ராமன். பாமரமக்களேப்போல் உயர் குலத்தோர் உணர்ச்சிவசப்படலாகாது என்று எடுத்துரைக்கிறுன் லக்ஷ்மணன். 'காகுத்ஸ வம்சத்தில் தோன் றிய நீயே இத்துயரைப் பொறுக்காவிட்டால் பாமரமக்கள் என்ன தான் செய்யமாட்டார்?' என்கிறுன்.

யதி து: க்கம் இதம் ப்ராப்தம் காகுத்ஸ்த ந ஸஹிஷ்யஸே
ப்ராக்ருதஸ் சால்பஸத்வஸ்ச இதர: கோ ஸஹிஷ்யதி 5

'நீ எனக்கு முன்பெல்லாம் எவ்வளவு புத்திமதி புகட்டிருக் கிருய், அண்ணு? நீயே இப்படிச் சோர்வு அடையலாமா? சோகம் உன் அறிவைக் குலேத்துவிட்டது. எழுந்திரு 'தீங்கிழைத்தோனேத் தேடிச் சிதைக்கலாம். வா. ஜனஸ்தானத்துக்கருகில் பல குன்றுகளும் குகைகளும் காட்டுப்பிரதேசங்களும் நிறைந்திருக்கின்றன இங்கு வாழும் அரக்கரே தீங்கு செய்திருப்பர்' என்றுகூறி ராமனேத் தெளிவித்து அழைத்து செல்லுகிறுன் லக்ஷ்மணன்.

வழியில் ஜடாயுவைக் காண்கிருர்கள் 'கழுகின் உருக்கொண்ட அரக்கன் ஸீதையை விழுங்கிவிட்டு இங்கே கிடக்கிருன், பார். துலேத்துவிடுகிறேன் இவனே' என்கிருன் ராமன்.

க்ருத்ரரூபம் இதம் ரக்ஷோ வ்யக்தம் பவதி கானனே
பக்ஷயித்வா விசாலாக்ஷீம ஆஸ்தே ஸீதாம் யதாஸுகம்
ஏனம் வதிஷ்யே தீப்தாஸ்யைர் கோரைர்பாணைரஜிஹ்மபி: 6

மானுருவம் கொண்ட அரக்கனைப் புரிந்து கொள்ளாமல் ஏமாந்து போனபின் யாரைக் கண்டாலும் உஷாராயிருக்கத் தூண்டுகிறது பின்புத்தி!

காயமடைந்து குற்றுயிராகிக் கிடக்கும் ஜடாயு 'உன் மனைவியைத் தூக்கிச் சென்றவனே என் உயிரைப் போக்கிச் சென்றவன். அவன் பெயர் ராவணன்' என்றுகூறி நடந்ததையெல்லாம் தெரிவிக்கிருன். ராமன் மனம் உடைந்து நிற்கிருன். எனினும் பரபரப்போடு கேட்கிருன். 'உனக்குப்பேச தெம்பு இருந்தால் சொல், அப்பா. ராவணன் ஏன் என் ஸீதையைக் கவர்ந்தான்? நான் அவனுக்கு என்ன தீங்கிழைத்தேன்? அவன் எங்கிருக்கிருன். எத்தகைய வீரன்?''

'குபேரனின் தம்பி' என்று கூறி உயிர்விடுகிருன் ஜடாயு. 'இன்னமும் சொல், சொல்' என்று கூப்பிய கையொடு ராமன் கேட்டுக்கொண்டிருக்கும்போதே உயிர் பிரிகிறது. ராமனுக்கு மீண்டும் உணர்ச்சிப்பெருக்கு உண்டாகிறது. ''என் பொருட்டுப் போராடி உயிர்துறந்த இக்கழுகினத் தலேவனே நினைத்தால் ஸீதையை இழந்ததைவிட அதிகத் துயரம் உண்டாகிறது'' என்கிருன்.

ஸீதா ஹரணஜம் துக்கம் நமே ஸௌம்ய ததாகதம்
யதா விநாசே க்ருத்ரஸ்ய மத்க்ருதே ச பரந்தப 7

('நல்லவன் தோற்பதோ, நரகன் வெல்வதோ?' என்று சொன்ன ஸீதையின் வாக்குக்கு ஒப்பான கருத்து.)

நெருங்கிய உறவினனே இழந்தாற்போல் துயரப்படுகிருன் ராமன். தன் கையாலே விறகு சேகரித்து ஈமக் கிரியைகள் செய்கிருன். உயர்ந்த முனிவர்களுக்கேற்ற மரியாதைகளுடன் காரியம் நடக்கிறது.

ஸீதையை நினைந்துருகும் ராமன் நிலேயைப் பலவாறு விவரிக்கிருர் கம்பன். கடலின் அலேகள் போல் பொங்கி எழுந்தபின் உருத் தெரியாமல் கலேந்துபோகும் எண்ணங்கள் அவனே வாட்டுகின்றனவாம்.

வீங்குவேலே விரிதிரையாம் என
ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினன்.

('தஸ்மின்னேவ லயம் யாந்தி ஸாகரே புத்புதா யதா' என்ற வடமொழி உவமையின் கருத்து)

'அந்தப் பாவி 'நில், நில்' என்று சொல்லி அணுகியபொழுதில், அவள் என்னவெல்லாம் நினைத்தாளோ' என ஏங்குகிறான்.

**நின்னில் என்று நெருங்கிய போதவள்**
**என்னி னைந்தனளோ வென எண்ணுமால்**

அதையறிந்து என்ன பயன்? அவமானம் ஒருபுறம், அன்பு ஒரு புறம் என ஊசலாடுகிறது உயிர். அடிக்கடி மனம் வெதும்பி 'எனக்கு ஒரு வில் வேறு வேண்டுமா?' என்று நொந்துகொள்கிறான். 'வீரன்' என்று சொல்லிக் கொள்ளவே வெட்கப்படும் நிலை!

**பூண்ட மானமும் போக்கரும் காதலும்**
**தூண்ட நின்றிடை தோமுறும் ஆருயிர்**
**மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினன்**
**'வேண்டுமோ எனக்கின்னமும் வில்' என்பான்.**

இரவில் உறக்கமா வருகிறது? கானக முழுவதும் ஜானகி உருவமே தோன்றுகிறது. இது மனத்தின் பிரமையா? அரக்கரின் மாயம்தான் என்றுகூட நினைக்கிறானும். விலவிலத்துவிட்ட நெஞ்சம்!

மதங்க முனிவர் ஆச்ரமத்தைத் தேடிச் சற்று மேற்கே சென்று தெற்கே திரும்புகிறார்கள். மூன்று க்ரோசதூரம் (2 மைல்) சென்று க்ரௌஞ்சாரண்யம் (நாரை நிறைந்தகாடு) அடைகிறார்கள். சூரிய வெளிச்சமே நுழையாதபடி அடர்ந்த காடு.

மேலும் நடந்துசென்று கபந்தன் என்ற கழுத்து இறுகிய அரக்கனைச் சந்திக்கிறார்கள். ('கபந்த என்றால் தலையில்லாத முண்டம். யுத்தத்தில் அடிபட்டு இவ்வாறு உருவம் குலைந்துவிட்டது.) பயங்கர உருவத்தைக் கண்டு நடுக்கம் ஏற்படுகிறது. 'கொன்று தின்னுவேன்' என்று பயமுறுத்துகிறான். ஆனால் தோல்வியுற்று மாண்டு போகிறான். கபந்தன் இறக்குமுன் ரிச்யமூகம் என்ற குன்றின்மேல் வசிக்கும் சுக்ரீவனைப்பற்றிச் சொல்லி அவனோடு நட்பு கொள்ளும்படி யுக்தி கூறுகிறான்.

தோல்வியுற்றவன் எதிரிக்கு யுக்தி சொல்வது விந்தைதான். ஒருவேளை தானவ ஜாதியைச் சேர்ந்த இவன் சுக்ரீவனின் நண்பனோ? ராமனின் நிலையைக் கேள்வியுற்றான். அவன் வலிமையைக் கண்டுணர்ந்ததும் 'இவன் நட்பு சுக்ரீவனுக்குப் பயன்படும்' என்று எண்ணுகிறான் போலும். அதற்கேற்ப அமைந்திருக்கிறது அவன் பேச்சு. ''பெரியவீரன் சுக்ரீவன், சொன்னசொல் தவறாதவன்.

ஆனால் அடக்கமுடையோன். உறுதியுடையோன். அறிவுடையோன்.'' என்கிறான். இதற்கெல்லாம் மேலாக ''சகோதரனால் வெளியே விரட்டப்பட்டவன்'' என்று அறிமுகப்படுத்துகிறான். ராமனுக்கும் சுக்ரீவனுக்கும் உள்ள ஒற்றுமையான விவரத்தை வற்புறுத்துவது போலிருக்கிறது.

ப்ராத்ரா நிரஸ்த: க்ருத்தேன வாலினா சக்ரஸூனுனா
ஸத்யஸந்தோ விநீதஸ்ச த்ருதிமான் மதிமான் மஹான்
ப்ராத்ரா விவாஸிதோ ராம ராஜ்ய ஹேதோர் மஹாபல: 8

'உதவியை நாடி நிற்கிறான் சுக்ரீவன். அவனைத் தேடி அடைவாய். நீ அவனுக்குதவி செய்யாவிட்டால்கூட அவன் உனக்கு உதவுவான். அவன் வனத்திடை வாழும் வானரன். ஆனால் அவனை அலக்ஷியம் செய்யாதே. காடு, மலை, குகை, சோலை எல்லாம் நன்கு அறிந்தவன். அவன்தான் இந்தக் கொடிய ப்ரதேசங்களில் வழியறிந்த நிபுணன். மனிதரை அடித்துத் தின்னும் அரக்கர் நிறைந்த இவ்விடத்தில் அவனே உனக்குத் துணை. உன் மனைவி பாதாளத்தில் இருந்தால் கூடக் கொண்டு தருவான்'' என்று கூறிமுடிக்கிறான் கபந்தன்.

பின்னர் மலைகளுக்கிடையே இருக்கும் பம்பை ஏரியின் மேற்குக் கரையில் வசிக்கும் சபரியின் குடிசைக்குப் போகிறான் ராமன். மதங்க முனிவருக்கும் அவர் சீடர்களுக்கும் சேவை செய்யும் சபரியின் பெருமையைச் சொல்லியிருக்கிறான் கபந்தன். அவளைக் கண்டதும் 'நீ என்ன தவம் செய்கிறாய், அம்மா? சினத்தை அடக்கி உணவை வெறுத்து மனதில் அமைதியை எப்படி நிலை நாட்டினாய்?' என்கிறான். தன்னிலைக்கு ஒரு மருந்து வேண்டி நிற்பவன்போல் கேட்கிறான்.

சபரியும் ராமனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாள். அவன் வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள். 'உனக்காகப் பலவித உணவுப்பொருள் சேர்த்து வைத்திருக்கிறேன், ராமா. இன்றுதான் என்உள்ளம் குளிர்ந்தது. என் ஜன்மமே புனிதமாயிற்று.'' என்றுகூறி உபசரிக்கிறாள். மதங்கர் மகிமையை அவள் சொல்லக் கேட்கிறான் ராமன். மகிழ்வொடு விடைகொடுக்கிறான்.

துறவியான சபரியோ இவ்வுலகிலிருந்தே விடைபெற விரும்புகிறாள். தள்ளாடுகின்ற உடலை நீக்கக் கருதித் தீயை வளர்த்து அதில் புகுந்து ஆத்மஸமாதி அடைகிறாள். அவளது உறுதியையும் தவ வலிமையையும் கண்டு வியக்கிறான் ராமன்.

---

*காட்டில் வாழ்பவரை 'காட்டுமிராண்டி' என்கிறோம். அதேபோல் வனத்தில் வாழ்பவர் 'வானரர்' 'குரங்கு' என்றும் ஒரு பொருள் உண்டு: ஆதலால் குழப்பம். 'திக்' என்ற குரங்கினத்திலிருந்து தாங்கள் தோன்றியதாகக் கருதும் இனத்தவர் இன்றும் இருக்கிறார்கள் விந்தியச் சாரலில்.

பம்பை அழகுமிக்க ஏரி. சுற்றிலும் மலைகள். பலவிதமான செடி கொடிகள், கரைமீது புஷ்பங்கள். நீரில் தாமரை, நீலோற்பலம் போன்ற புஷ்பங்கள். பறவைகள் பயமின்றி விளையாடும் பிரதேசம்.

இயற்கையின் இனிமையைக் கண்டதும் பிரிவின் கொடுமை தான் நினைவுக்கு வருகிறது. எதைப் பார்த்தாலும் 'அவள் இல்லையே' என்ற ஏக்கம் ஏற்படுகிறது. அவள் காணுமல் போன நிலையில், அயோத்தியில் நடந்த அநீதியே பரதன் இழைத்ததுதான் என்று கூடத் தோன்றுகிறது.

மாம்து சோகா பிஸந்தப்தம் ஆதய:பீட யந்திவை
பரதஸ்யசது:க்கேன வைதேஹ்யா ஹரணேன ச 9

மாருதம் வீசுகிறது. வண்டினங்கள் இசைபாடுகின்றன. 'எல்லாம் சேர்ந்து என்னை வருத்துகின்றன' என்கிருன் ராமன். இயற்கைக் காட்சிகள்கூட நமது சுகதுக்கங்களுக்கேற்றபடி வெவ்வேறுவிதமாய்த்தோன்றும். 'கோகிலம் என்னை அழைப்பதுபோல் இருக்கிறது. இந்த மயிலைப்பார். கணவனுடன் சேர்ந்து ஆடுகிறது. நல்லகாலம், அவளை ஒரு அரக்கனும் கொண்டு போகவில்லை' என்கிருன்! அவள் மட்டும் கூட இருந்திருந்தால்?

பச்ய லக்ஷ்மண ந்ருத்யந்தம் மயூரம் உபந்ருத்யதி
மயூரஸ்ய வனே நூனம் ரக்ஷஸா ந ஹ்ருதாப்ரியா 10

அவளும் இப்போது தனிமையில் தவிக்கிருள் என்று நினைத்து ஏங்குகிருன். 'இனிமையாய்ப் பேசுபவள்' என்று சொல்லிப் பெருமூச்சு விடுகிருன். 'மான்களெல்லாம் தத்தம் நாயகியோடு உலாவுகின்றன. நான் மட்டும் மான் விழியாளைப் பிரிந்து நிற்கிறேன்' என்கிருன். மிருகங்களைப் பார்த்துப் பொறுமைப்படும்நிலை!

பச்ய ஸானுஷு சித்ரேஷு ம்ருகீபி: ஸஹிதான் ம்ருகான்
மாம் புனர் ம்ருகசாபாக்ஷ்யா வைதே ஹ்யாவிரஹீக்ருதம் 11

உயிர்தரிக்க உதவும் உத்தமியைக் காணத் துடிக்கிறது உள்ளம் மனைவி என்ற உறவினுல் மட்டுமல்ல. உற்ற துணைவி என்பதனுல் அவ மதிப்புக்குரியவளாகிவிட்டாள். எப்படி? ஓர் அந்தரங்கமான விவரத்தை வாய்விட்டுச் சொல்லுகிருன் ராமன். ''காட்டில் பலவித இன்னல்கள் அனுபவித்தாள். எனினும் நாங்கள் தனித்திருக்கும் வேளையில் துன்பம் மறைந்து இன்பம் வந்ததுபோல் இதமாக இன்மொழி பேசுவாள், உயர்ந்த குணவதி. புன்சிரிப்பும் சிறிது ஹாஸ்யமும் கலந்த அவளது இனிய பேச்சை இனி எப்போது கேட்பேன்?' என்று லக்ஷ்மணனிடம் புலம்புகிருன். உயர்ந்த காதலின் அறிகுறி. மனைவியை 'ஸாத்வீ' என்கிருன்.

ஸ்மிதஹாஸ்யாந்தரயுதம் குணவந்மதுரம் ஹிதம்
வைதேஹ்யா வாக்யம் அதுலம் கதா ச்ரோஷ்யாமி லக்ஷ்மண
ப்ராப்ய துக்கம்'வனே ச்யாமா ஸா மாம் மன்மத கர்சிதம்
நஷ்டதுக்கேவ ஹ்ருஷ்டேவ ஸாத்வீ ஸாத்வப்யபாஷத 12

இந்நிலேயில் ராமனே 'இன்னகைச்சனகியைப் பிரிந்த வேந்தன்' என்று குறிப்பிடுகிருர் கம்பன்.

# 16

## ‘உன்னோடுற்றவர் எனக்கும் உற்றார்’

ரிச்யமூகக் குன்றின்மேல் நின்று வருவோர் போவோரை யெல்லாம் உற்று நோக்கிக் கவனித்துக் கொண்டிருக்கிறான் சுக்ரீவன். அவ்வளவு பயம், சந்தேகம்!

ராமனும் லக்ஷ்மணனும் தென்படுகிறார்கள். உயர்ந்த தோள்கள். உயரிய லக்ஷணங்கள். மாபெரும் வீரரெனத் தோன்றுகிறார்கள். ஆனால் சந்தேகம் ஏற்படுகிறது. வாலியின் ஏவலாளரோ? துணைவர் நால்வரையும் அழைத்து யோசனை கேட்கிறான். பேச்சில் வல்லவனான ஹனுமான் காரணம் கூறித் துணிவு ஊட்டுகிறான். ‘வாலி இங்கு வரமாட்டான். நீ ஏன் பயப்படுகிறாய்?’ என்கிறான். குறிப்பறிந்து நடக்க வேண்டும் என்கிறான். (‘இங்கிதைஸ்ச புன : புன :)

‘ராமனும் தம்பியும் மனங்கலங்கி ஆவி சோர்ந்த நிலையில் தோன்றுகிறார்கள். வாலியின் ஏவலால் வரவில்லை’ என்று தீர்மானித்தான் என்கிறார் கம்பன்.

சுக்ரீவனுக்குச் சந்தேகம் தெளியவில்லை. ‘‘அரசனாயிருப்பவருக்குப் பலர் தோழமை உண்டு. வாலியின் நண்பர் என்றே நினைக்கிறேன். வில்லையும் தோளையும் பார்த்தால் பயமாயிருக்கிறது. எதற்கும் நீ போய்ப் பேசி சாமர்த்தியமாக விசாரித்து வா. இங்கு வந்த காரணம் என்ன? என்று அறிந்து கொள். பேச்சினாலேயே இவர்கள் நல்லவரா, தீயவரா என்று தீர்மானித்து இவர்களால் நமக்கு ஏதாவது பயன்படுமா என்றும் பார்’’ என்று சொல்லி அனுப்புகிறான். இங்கிதமாய் நடந்துகொள் என்றும் சொல்லுகிறான். அவன் சொன்ன குறிப்பு அவனுக்கே!

சந்யாசியைப் போல் வேஷம் தரித்து ராமனை அணுகுகிறான் ஹனுமான். புகழ்ந்து பேசுகிறான் ஊருக்குப் புதியவரை. ‘‘ராஜரிஷி

யைப் போல் தோற்றம். கையிலே வில். முகத்திலே ஒளி, உடலிலே வலிமை. காவி உடை அணிந்து, இங்குள்ள பிராணிகளெல்லாம் நடுங்கும்படி நாண் ஒலி செய்யும் தாங்கள் யார்? ஒருவருக்கொருவர் ஒப்பான நீங்கள் தேவலோகத்திலிருந்து வந்தவர்களா? சூரியனும் சந்திரனும் ஒன்ருய் இறங்கி வந்தது போலல்லவா இருக்கிறீர்கள்?''

பேசிக் கொண்டே போகிருன். பதிலில்லே. 'ஏன் ஒன்றும் பேசா திருக்கிறீர்கள்?' என்று கேட்கிருன். தன்னைப் பற்றி ஒன்றும் தெரி யாததால்தான் என ஊகித்து மேலும் சொல்லுகிருன் : ''சுக்ரீவன் என்ருெரு நல்லவன். தர்மாத்மா. அவன் சகோதரனுல் விரட்டப் பட்டு அல்லற்படுகிருன். அவன்தான் என்னை உங்களிடம் அனுப் பினுன்'' என்று ஆரம்பிக்கிருன். கபந்தன் சொன்ன அடையாளம் இதுவே!

ஸுக்ரீவோ நாம தர்மாத்மா கஸ்சித்வானர யூதப:
வீரோ வினிக்ருதோ ப்ராத்ரா ஜகத் ப்ரமதி துக்கித: 1

'நான் அவனது மந்திரி. அவன் உங்களோடு நட்பு கொள்ள விரும்புகிருன்'' என்று முடிக்கிருன். இவன் வேஷத்தை உற்றுக் கவனிக்கிருர்கள் போலும். ''இது சுக்ரீவன் சொல்படி போட்ட வேஷம். எனக்கு இஷ்டப்படி வேஷம் போடத் தெரியும்.' என்று சேர்த்துக் கொள்ளுகிருன்!

பின்பு மௌனம். (அவர்களைப் பேசவிட வேண்டும்.) ராமன் முகத்தில் மகிழ்ச்சி ததும்ப ''யாரைத்தேடிச் செல்லுகிருேமோ அந்தச் சுக்ரீவனின் மந்திரி இவன். நம்மை நாடி வந்திருக்கிருன். இவனேடு விவரமாகப் பேசு'' என்று லக்ஷ்மணனை ஏவுகிருன். இவர்களைத் தந் திரமாகக் கையாண்டு வசப்படுத்த எண்ணி வந்த ஹனுமான் திடீரென்று தன் மதிப்பு உயர்ந்துவிட்டதை காண்கிருன். அளவிலா ஆனந்தம்! 'பரமஸம்ஹ்ருஷ்ட:' என்கிருர் கவி. இவர்களை 'நண்பர்' ஆக்கி அழைத்துச் செல்லும் பெருமை அவனுக்கு எளிதிலல்லவா கிடைத்துவிட்டது? கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது போல. 'இந்தக் காட்டில் உங்களுக்கு என்ன வேலே?' என்று கேட் கிருன். இனி தைரியமாக விவரங்கள் கேட்கலாமல்லவா?

''தசரதன் என்ற அரசனின் புதல்வர் நாங்கள். மூத்தவன் இவன். ராமன் என்று பெயர். தந்தை சொல் தட்டாத தனயன். எல்லோருக்கும் உதவி புரியும் தன்மை உடையவன்.

சரண்யஸ்ஸர்வ பூதானும் பிதுர்நிர்தேச பாரக: 2

ஆயினும் ராஜ்யத்திலிருந்து விரட்டப்பட்டு இங்கு வந்து சேர்ந் தான். நான் ஒருவனே இவனுக்குத் துணை. ஸீதை என்ற மனைவியும் வந்தாள். ஆனுல் அவளை அரக்கன் ஒருவன் கவர்ந்து சென்றுவிட்

டான், நாங்கள் இல்லாத சமயம் பார்த்து, அவளைத்தான் தேடுகிறோம். சுக்ரீவன் வெகு சமர்த்தன். தாரம் கவர்ந்தானைத் தேடும்வழி அறிவான் என்று கபந்தன் சொல்லக் கேட்டோம். ஆகையால் நானும் ராமனும் சுக்ரீவனைச் சரண் அடைகிறோம்'' என்கிறான் லக்ஷ்மணன்.

ராஜ்யாத் ப்ரஷ்டோ வனே வஸ்தும் மயா ஸார்தம் இஹாகத:
பார்யயாச மஹாதே ஜா: ஸீதயானு கதோ வசீ
அஹம் சைவ ஹி ராமஸ்ச ஸுக்ரீவம் சரணம் கதௌ 3

'ஒரு காலத்தில் இவன் மக்களின் தலைவனாகப் பதவி ஏற்க இருந்தான். அச்சமயம் தன் பொருளையெல்லாம் வாரி வழங்கிப் புகழ் பெற்றான். ஆனால் இன்று அநாதை. சுக்ரீவனைத் தலைவனாகக் கொள்ள விரும்புகிறான்.'

ஏஷ தத்வா ச வித்தானி ப்ராப்ய சானுத்தமம் யச:
லோகநாத: புராபூத்வா ஸுக்ரீவம் நாதம் இச்சதி 4

'சோகத்தில் மூழ்கியிருக்கும் ராமன் சரணம் அடைகிறான். அவனுக்கு சுக்ரீவன் க்ருபை செய்ய வேண்டியது அவசியம்' என்று வேண்டுகிறான்.

சோகாபி பூதே ராமேது சோகார்தே சரணம் கதே
கர்துமர்ஹதி சுக்ரீவ: ப்ரஸாதம் ஹரியூதப: 5

சந்திப்பதற்கு முன்னமே ஒருவனைச் சரணம் அடையும் அளவுக்குத் திக்கற்று நின்ற நிலை.

குரலில் ஏழ்மை. கண்ணில் நீர். இதைக் கண்டு மனம் குழைந்து ஆறுதல் சொல்லுகிறான் ஹனுமான்: ''சுக்ரீவனும் ராஜ்யத்திலிருந்து விரட்டப்பட்டவன். மனைவியைப் பறிகொடுத்தவன். சகோதரனால் காட்டில் துரத்தப்பட்டவன். வாலி மீது வஞ்சம் கொண்ட அவன் உங்களுக்கு உதவி புரிவான். ஸீதையைத் தேட உதவுவான்'' சுக்ரீவனைக் கலந்து பேசுவதற்கு முன்னமே உறுதி அளித்துவிட்டான் தூதன்!

ஸ ஹி ராஜ்யாத் பரிப்ரஷ்ட: க்ருதவைரஸ்ச வாலினா
ஹ்ருத தாரோ வனே த்யக்தோ ப்ராத்ரா வினிக்ருதோப்ருசம்
கரிஷ்யதிஸ ஸாஹாய்யம் யுவயோர் பாஸ்கராத்மஜ:
ஸுக்ரீவ: ஸஹ சாஸ்மாபி: ஸீதாயா: பரிமார்கணே. 6

சுக்ரீவனிடம் அழைத்துச் செல்கிறான் ஹனுமான். வழியில் 'காரியம் கைகூடிவிட்டது' என்றெண்ணி மகிழ்ச்சியடைகிறான் **('க்ருதக்ருத்யவத் ப்ரஹ்ருஷ்ட:')** அவசரமாக உதவி வேண்டி நிற்பவன் சுக்ரீவன்தான் என்பது அவனுக்கல்லவோ தெரியும்?

ராமலக்ஷ்மணர்களைக் கண்டதும் அவர்களோடு பேசுவதற்கு முன் அவர்களைக் கூர்ந்து கவனித்து ஊகிக்கிறானும் ஹனுமான். இதைக் கம்பன் சித்தரிக்கிறார். ''தருமமும் ஒழுக்கமுமே தனம் எனக் கொண்டவர். வந்த காரியம் ஒரு பொருள் அல்லது பூமியை நாடி அல்ல. கிடைத்தற்கரிய மருந்துபோன்ற ஏதோ ஒன்று இடையே அழிவு வந்து காணுமல் போனது. அதையே இருபுறமும் தேடுகின்றனர்.'' பார்த்தவுடன் பிறர் தன்மையறியும் அறிவுபடைத்தவன் ஹனுமான் என்பது கருத்து. எனினும் பின் அறியப்போகும் விவரங்களை முன் கூட்டியே அறிந்ததுபோல் அமைந்திருக்கிறது.

**தருமமும் தகவும் இவர் தனம் எனும் தகையர் வரு**
**கருமமும் பிரிதோர் பொருள் கருதி அன்று அதுகருதின்**
**அருமருந்து அனையது இடை அழிவு வந்துளது, அதனை**
**இருமருங்கினும் நெடிது துருவுகின்றனர் இவர்கள்**

அருகில் சென்று பார்க்கிறான். தனக்கு உவமை தானே என்ற அளவுக்கு ஒப்பிலாத பெருங்குணம் படைத்த பெருமகன் அன்பு கொண்டு நின்றான் என்கிறார். ராமனை அனுமன் வாயிலாகத் துதிக்கத் துடிக்கிறார் போலும் கம்பன்.

**தன் பெருங்குணத்தால் தன்னைத்தானலது ஒப்பிலாதான்**
(ஒப்பிலாதான் என்ற அடைமொழி 'நிருபம என்ற சொல்லின் தமிழாக்கம்)

ராமனும் ஹனுமானும் முதலில் சந்திக்கும் இக்காட்சியை பக்தி பரவசனாகிப் பாடுகிறார் கம்பன். உயர்குலத்து உத்தமன் உதவிநாடி வருகிறான். அறிவிற் சிறந்த பாமரன் அவனுக்கு ஆறுதல் சொல்லுகிறான். பின்னர் இவனே அவனுக்கு உற்ற தோழனாகப் போகிறான். பிரிந்த மனைவியைச் சேர்த்து வைக்கிறான் : ஒப்பிலா மெய்யன்பு கொண்ட அடிமை ஆகிறான். (சரித்திரப் புகழ் பெறப் போகிறான்) இதையெல்லாம் குறிக்கும் வண்ணம் ராமன் வாயிலாக ஹனுமானையும் புகழ்கிறார். 'லக்ஷ்மணா, உலகம் ஒரு தேர். அது சரியாக ஓட உதவும் அச்சாணி போன்றவன் இவன். இவ்வுண்மை போகப் போகத் தெரியும்' என்கிறானும். ('ஆணியிவ்வுலகுக்கெல்லாம் என்னலாம், 'பின்னர் காணுதி மெய்ம்மை'.) மெய்யன்பே உலகின் அச்சாணி என்றும் பொருள்.

ஹனுமானைப் பார்த்து 'உன்போன்றவனை எம்மிடம் அனுப்பிய நல்ல மனத்தினனைக் காட்டு' என்று சொல்லுகிறான். ''சுக்ரீவனுக்கு எதிர்பாராத செல்வம் கிடைத்ததுபோல் நீங்கள் வந்திருக்கிறீர்கள்'' என்று கூறி அவர்களை அழைத்துச் செல்லுகிறான் ஹனுமான்.

சுக்ரீவனுக்கு அறிமுகம் செய்துவைக்க, லக்ஷ்மணன் இவனுக்குச் சொன்னதையெல்லாம் திருப்பிச் சொல்லுகிறான். 'தருமத்துக்குப் பெயர்போனவன். அரசு இழந்தவன். மனைவியைப் பறிகொடுத்தவன்' என்ற முக்கிய விவரங்களால் ராமனை வர்ணிக்கிறான். ''உன் நட்பை நாடி வந்திருக்கிறார்கள்'' என்று சொல்லுகிறான். 'ராமன் உன்னைச் சரண் அடைகிறான்' என்று இருமுறை சொல்லுகிறான். ஒரு காலத்தில் மக்கள் தலைவனாய்ப் பதவி பெற இருந்தவன் இன்று நாடிழந்து ஓடி ஒளிந்து வாழும் சுக்ரீவனைத் தலைவனாய் ஏற்கப் போகிறான் என்பது காலத்தின் விந்தை.

ஒன்றுபட்ட நிலையை வற்புறுத்தும் விவரங்கள். அதே சொற்கள் மீண்டும் மீண்டும் ஒலித்துச் சமநிலையிலுள்ள இருவரையும் பிணைக்கின்றன. மகிழ்ச்சியோடு பேசுகிறான் சுக்ரீவன். 'நீங்கள் என்னோடு நட்புகொள்ள விரும்புவது எனக்கும் லாபகரமானது. இதோ என் கையை ஏற்றுக்கொள். கைகுலுக்கி நெருங்கிய நட்பை வளர்ப்போம்' என்கிறான். ஹனுமான் விரைவில் தீயை மூட்டுகிறான். பூஜைசெய்து, தீயை வலம் வந்து ராமனும் சுக்ரீவனும் பிரியா நட்பு கொள்ளுகின்றனர். இருவரும் பரஸ்பரம் வெகு நேரம் பார்த்துக்கொண்டே இருக்கின்றனர். திருப்தி ஏற்படவில்லை! அவ்வளவு பேருவகை என்று குறிக்கிறார் வால்மீகி.

ததஸ்ஸுப்ரீதமனஸௌ தாவுபௌ ஹரிராகவௌ
அன்யோன்யம் அபிவீக்ஷந்தௌ நத்ருப்திம் உபஜக்மது: 7

உணர்ச்சி மேலிட்ட சுக்ரீவன் சுருக்கமாகச் சொல்லுகிறான். 'இனி துக்கமும் சுகமும் நம் இருவருக்கும் பொதுவானது. (ஏகம் துக்கம் ஸுகம் ச நௌ') துக்கத்தை முதலில் சொன்னான். சுகம் இனிமேல்தானே காணப்போகிறார்கள்? 'ஒரே விதமான சுகதுக்கங்களை அனுபவித்தவர்கள் நாம்' என்றும் பொருள்.

ராமலக்ஷ்மணர் வரும்போதே வியப்போடு பார்த்தான் சுக்ரீவன் என்று சித்தரிக்கிறார் கம்பன். உருவத்திலே லயித்து நெடுநேரம் பார்த்து நின்றானாம். தேவர்களுக்கும் தேவரான இவர் மாறிப்போய் உலகில் பிறந்தனரோ? என்கிறானாம். 'இவர்கள் மானிடராயிருந்தால் பிரமன், ருத்ரன் முதலான தேவர் கூட்டம் எல்லாவற்றையும் மனித வர்க்கம் வென்றுவிட்டதென்றே சொல்லலாம்' என்கிறான். அவதாரம் ஆகிவந்த உருவத்திலும்கூடத் திருமால் சிவனையும் பிருமாவையும்விட மேலானவர் என்றும் பொருள்படும்.

**ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்றறிவர்களாதி**
**வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றதம்மா!**

ராமனும் சுக்ரீவனும் நட்புகொண்டது எவ்வாறு என்றால் முற்பிறப்பில் செய்த புண்ணியமும் இப்போதுள்ள ஊக்கமும் ஒன்று

சேர்ந்ததுபோல் என்று வர்ணிக்கிறுர் கம்பன். வாழ்க்கையில் வெற்றி பெற இரண்டும் அவசியம் அல்லவா? கற்றுணர்ந்த கல்வியோடு ஞான மும் சேர்ந்ததுபோல் என்று இன்னெரு உவமையும்கூறி, சுக்ரீவனது நட்பு ராமனுக்கு இன்றியமையாதது என்பதைக் குறிக்கிறுர்.

**ஈட்டிய தவமும் பின்னுள் முயற்சியும் இயைந்ததொத்தார்**
**.........**
**கேட்டுணர் கல்வியொடு ஞானமும் கிடைத்ததொத்தார்**

சுக்ரீவனை ராமன் சரணமடைந்தான் என்று கதையின் நிலைமைக் குத் தக்கபடி வர்ணிக்கிறுர் வால்மீகி. ஆனுல் வைஷ்ணவ பக்தனுன கம்பன் சுக்ரீவன் ராமனைச் சரணமடைந்தான் என்கிறுர். அந்நிலையில் சுக்ரீவனைப் பார்த்து ராமன் சொல்லுகிறுன், ''உனக்குரிய இன்ப துன்பங்களில் இதுவரை சென்றதுபோக, இனிமேல் வருவன எனக் கும் நேர். அவற்றை நான் சமாளிப்பேன்.''

**சென்றன போக மேல் வந்துறுவன தீர்ப்பல் அன்ன**
**நின்றன எனக்கும் நிற்கும் நேர் என மொழியு நேரா.**

அது மட்டுமல்ல. 'இனி அதிகம் பேசுவானேன்? உலகில் உன்னை யாராவது அவமதித்தால் அவர் என்னை அவமதித்தவர் ஆவர். தீயவ ராயினும் உனக்கு உற்றவராயிருந்தால் எனக்கும் உற்றுர். உன் பந் துக்களெல்லாம் இனி என் பந்துக்கள். உன் உறவினர் எல்லாம் என் உறவினர். நீ எனக்கு ஆருயிர்த்துணைவன்' என்கிறுன். கஷ்டத்தில் இருப்பவர்கள் எவ்வளவு விரைவில் நெருங்கிப்பிணைந்து விடுகிறுர்கள்!

**மற்றினி உரைப்பதென்னே? வானிடை மண்ணில் நின்னைச்**
**செற்றுர் என்னைச் செற்றுர். தீயரே எனினும் உன்னேடு**
**உற்றவர் எனக்கும் உற்றுர். உன்கிளை எனது, என்காதல்**
**சுற்றம் உன் சுற்றம். நீ என் இன்னுயிர்த்துணைவன்**
**என்றுன்.**

சுக்ரீவன் 'உன் மனைவி எங்கிருந்தாலும் அவளைக் கொண்டு தருவேன்' என்று உறுதி சொல்லுகிறுன். 'ஸீதை துடித்த வண்ணம் ராவணனேடு தேரில் போவதைப் பார்த்தேன். அவள் எம்மிடையே எறிந்து சென்ற ஆபரணங்கள் இதோ' என்று கூறி, உள்ளே ஒரு குகையிலிருந்து ஒரு சிறு முடிப்பைக் கொண்டு வந்து காட்டுகிறுன்.

பரபரப்போடு வாங்கிப் பார்க்கிறுன் ராமன். நீர் கண்ணை மறைக்கிறது. 'என் கண்ணே' என்று அலறித் தரையில் விழுந்து அழுகிறுன். தைரியம் எங்கோ ஓடிவிட்டது!

ஹா ப்ரியேதி ருதன் தைர்யமுத்ஸ்ருஜ்ய ந்யபதத் க்ஷிதௌ 8

அருகிலிருக்கும் லக்ஷ்மணனிடம் காட்டுகிறான் 'பார். ஸீதையின் மேலாடை. இதோ நகை. அப்படியே இருக்கிறதே' என்கிறான்.

இதற்கு லக்ஷ்மணன் கூறிய பதில் ஒரு ரஸமான ச்லோகம் 'அவள் அணியும் கைவளையும் காதணியும் நான் அறியேன். தினமும் பாதத்தை வணங்கி வணங்கி, காலில் அணியும் தண்டை மட்டும் அடையாளம் தெரியும்' என்கிறானும் லக்ஷ்மணன்.

நாஹம் ஜானாமி கேயூரே நாஹம் ஜானாமி குண்டலே
நூபுரே து அபி ஜானாமி நித்யம் பாதாபிவந்தனாத் 9

பொருத்தமற்ற பேச்சு. ஆயினும் லக்ஷ்மணனின் தூய்மையையும் பக்தியையும் குறிக்க இந்த ச்லோகத்தை அத்தாட்சி காட்டுவது சம்பிரதாயம். தென்னிந்தியாவில் மட்டும் பிரபலமாயுள்ள இது இடைச்செருகலென ஆராய்ச்சியின் மூலம் வெளியாயிருக்கிறது.

துயரம் மேலிட்ட ராமன், 'சுக்ரீவா, என் நாயகி எங்கிருக்கிறாள்? எனக்குத் துயர்தந்த அவ்வரக்கன் எங்கிருக்கிறான், காட்டு. இன்றே அவனை யமலோகம் அனுப்புகிறேன்' என்று துடிக்கிறான்.

கதய மம ரிபும் த்வம் அத்யவை ப்லவகபதே யமஸந்நிதிம் நயாமி 10

'அவனிருக்குமிடம் அறியேன். அவனது திறமையும் பராக்ரமமும் எத்தகையதென்றும் அறியேன். ஆனால் எப்படியாவது அவனை இனத்தோடழித்து உன்னை மகிழ்விக்கிறேன்' என்கிறான் சுக்ரீவன். ஆறுதல் சொல்லுவோர்க்கு ஆதாரம் அவசியமில்லை! 'என்னைப் பார். நானும்தான் மனைவியைப் பிரிந்து இருக்கிறேன். ஆனால் அவளையே நினைந்து தைரியத்தை இழந்து நிற்கிறேனா? நீ மேலோன். கண்ணீர் விடலாகாது' என்கிறான். ஒற்றுமை நிலையை வற்புறுத்திக் காட்டுகிறான்.

மயாபி வ்யஸனம் ப்ராப்தம் பார்யாஹரணஜம் மஹத்
ந சாஹம் ஏவம் சோசாமி ந ச தைர்யம் பரித்யஜே 11

'நான் உனக்கு புத்தி கூறுவதாகநினைக்கக்கூடாது. நம் நட்பை உத்தேசித்து நீ கவலையற்றிருக்க வேண்டியது' என்கிறான். ராமன் மனமுவந்து 'உன்போன்ற உற்ற துணைவன் கிடைப்பதரிது, அதுவும் எனது தற்போதைய நிலையில்' என்கிறான்.

துர்லபோ ஹீத்ருசோ பந்துரஸ்மின்காலே விசேஷத : 12

'நீ என் மனைவியைத் தேட உதவுவாய். நான் உனக்கு என்ன செய்ய வேண்டுமோ தாராளமாகச் சொல். சத்தியமாய்ச் செய்

கிறேன்' என்று உறுதி சொல்லுகிருன் ராமன். இருவரும் பரஸ்பர சுக துக்கங்களைப் பற்றிப் பேசி ஆறுதலடைகின்றனர். சுக்ரீவன் தன் எண்ணம் நிறைவேறி விட்டதென்று கருதி மகிழ்கிருன். 'ராமா, உன் போன்ற நண்பன் கிடைத்தால் இந்திர பதவியையே அடையலாம். இழந்த ராஜ்யத்தைப் பெறுவதுதானு பிரமாதம்' என்று புகழ்கிருன்.

'நானும் உன் போலத்தான் என்பதை விரைவில் அறிவாய். என்னைப்பற்றி நானே சொல்லிக் கொள்ளும் திறமையற்றவன் நான்' என்கிருன். பிறகு, நின்று கொண்டே பேசுவது சரியல்லவென்று ஒரு மரத்தடியில் சென்று, கிளையை ஒடித்து இலைகளைப் பரப்பி உட்காரு கிருர்கள்.

'மனைவியும் ராஜ்யமும் போய், பயந்து ஒளிந்து வாழ்கிறேன்' என்கிருன் சுக்ரீவன். நீ எனக்குதவி செய்யும் நண்பன். உன் தாரம் கவர்ந்தானை இன்றே கொல்லுவேன்' என்று ஆணையிடுகிருன் ராமன்.

**அத்யைவ தம் ஹனிஷ்யாமி தவ பார்யாபஹாரிணம் 13**

மீண்டும் தன் குறையைச் சொல்ல ஆரம்பிக்கிருன். 'நீ என் உற்றதோழன். ஆதலால் வாய்விட்டுச் சொல்லுகிறேன். வாலி என்னை வைது விரட்டியதுமல்லாமல் என் மனைவியையும் அபகரித்தான். பிறகு என்னைக் கொல்ல நினைத்து ஆட்களை ஏவி அனுப்பினுன். அதனுல்தான் உன்னைப் பார்த்தபோதுகூட மிகவும் சந்தேகப்பட் டேன். என் தமையனே எனக்குப் பரம வைரி. அவன் அழிந்தால் தான் என் துயர்நீங்கும்' என்கிருன்.

ராமனுக்குச் சற்று வியப்பு ஏற்படுகிறதுபோலும். ('தமையனே வைரி' என்றுனல்லவா?) 'உனக்கும் வாலிக்கும் கடும் பகைமூண்ட காரணம் என்ன? முழுவிவரமும் அறிந்தபின் எப்படிச் செய்தால் உனக்கு சுகம் கிடைக்குமோ அப்படிச் செய்கிறேன்' என்கிருன். சகோதரர்களிடையே சமரஸம் செய்தும் தீர்ப்பளிக்கலாமல்லவா? ஆனுல், 'இன்றே கொல்லுவேன்' என்று ஆணையிட்டபின் விவரம் விசாரிக்கிருன்!

உதவியை நாடி நின்றவன் உணர்ச்சிவசப்பட்டு உறுதி கூறினுன். எனினும் நியாயம் அறிந்து தீர்ப்பளிக்க விரும்பும் இயற்கை இடையே தோன்றுகிறது. சிறிதும் தயக்கமின்றி 'என் தமையனைக் கொல்லு வாய்' என்று அடிக்கடி சுக்ரீவன் சொல்லச் சொல்ல 'அந்தத் தமையன் பக்ஷத்திலும் சிறிது நியாயம் இருக்கவேண்டும்' என்று தோன்றிற்ருே?

**ஸுகம் ஹி காரணம் ச்ருத்வா வைரஸ்ய தவ வானர**
**ஆனந்தர்யம் விதாஸ்யாமி ஸம்ப்ரதார்ய பலாபலம் 14**

ஆயினும் உணர்ச்சியே ஓங்கிநிற்கிறது. 'கவலைப்படாதே, சுக்ரீவா. நான் வில்லில் நாண் ஏற்றுவதற்குள் உன் கதையைச் சொல். எனக்கு ஆத்திரம் பொங்கி வருகிறது' என்கிறான். சுக்ரீவன் முகத்தில் கவலை நீங்கிப் புன்னகை தோன்றுகிறது! கதையைச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

'வாலி யென்பவன் என்சகோதரன். மூத்தவன். ஆதலால் தந்தைக் கொப்பானவன். மகாவீரன். என் மதிப்புக்குரியவனாக இருந்தான் முன்பு' என்கிறான். (பீடிகை நன்றாக அமைந்திருக்கிறது. கேட்போருக்குத் தக்கபடி கதையின் வசனம் ஓடுகிறது!)

''மூத்தவன் என்ற முறையில் பட்டம் ஏற்று அரசு புரிந்து வந்தான். நான் எப்போதும் பணிவாகவே அவனை அண்டி வாழ்ந்து வந்தேன். ஒரு சமயம் மாயாவி என்ற அரக்கன் வாலியின்மீது வஞ்சம் கொண்டு—(ஏதோ ஒரு பெண்ணுக்காக என்று கேள்வி)— நள்ளிரவில் கிஷ்கிந்தைக்கு வந்து உரக்கக் கூவிப் போருக்கழைத்தான். நாங்கள் தடுத்தும் கேளாமல் அவனோடு சண்டைக்குக் கிளம்பினான் வாலி. அவனைத் தனியே போகவிட மனமின்றி அவனுடன் செல்லத் தூண்டியது பாசம். நாங்கள் இருவராக வருவதைக் கண்ட அரக்கன் பயம் கொண்டு ஓட ஆரம்பித்தான். அவனைத் தொடர்ந்து சென்றோம். ஒரு குகைக்குள் ஓடி மறைந்துவிட்டான். வெளியே என்னைக் காவல் வைத்து அவனைத் தேடி குகைக்குள் சென்றான் வாலி.

வெகுநேரமாகியும் திரும்பவில்லை நாட்கள் கழிந்தன, ஆனால் வாலியைக் காணவில்லை. குகை வாயிலில் ரத்தம் கண்டேன். உள்ளே அரக்கர் ஆரவாரம் கேட்டது. அண்ணன் இறந்துவிட்டான் என்று தோன்றிற்று. எதிரியை வெளிவராமல் தடுக்க ஒரு பெரும்பாறையை எடுத்து குகைவாயிலை அடைத்துவிட்டு ஊருக்குத் திரும்பினேன். அண்ணனுக்கு சமக்ரியைகளையும் செய்து முடித்தேன்.

ஊரில் மந்திரிகள் ஒன்றுகூடி என்னை அரசன் ஆக்கினர். திடீரென்று ஒருநாள் வந்து சேர்ந்தான் வாலி! முடிசூடிய என்னைப் பார்த்தான். என்னையும் மந்திரிமாரையும் கட்டிவைத்து அவமதித்தான் அப்போதும் தமையன் மேலுள்ள மரியாதையால் அவனைத் தக்கபடி உபசரித்துக் காலடியில் தலைவணங்கினேன். 'இந்தா வெண்குடை. இவ்வரசு உனக்கே உரியது' என்றேன். ஆனால் சினங்கொண்ட வாலி வணங்கி நின்ற என்னை 'சீ' என்று ஏசினான், சபைகூட்டி என்னை நிந்தித்தான். 'குகைக்கு வெளியே காவல் இருக்கச் சொன்னேன். வாயிலை அடைத்து ஓடிவந்துவிட்டான் வெகு சிரமப்பட்டு வெளிவந்தேன். இங்குவந்து முடிசூடிக் கொண்டான் இவன்' என்றுகூறி 'என்னை இடுப்பில் கட்டிய வேஷ்டியுடன் வெளியே விரட்டினான். என் மனைவியை இருத்திக்கொண்டான்!'' என்று முடிக்கிறான் சுக்ரீவன்.

'தீமையும் பாவமும் நிறைந்த வாலி நின்தாரம் கவர்ந்தான். என் கண்ணெதிரில் தென்படும் வரையில்தான் உயிர் தரிப்பான். உன் பெரும்துயரை என் சொந்த அனுபவத்திலே காண்கிறேன்' என்கிறான் ராமன்.

**யாவத் தம் நஹிபச்யேய ம்தவ பார்யாபஹாரிணம்**
**தாவத் ஸ ஜீவீத் பாபாத்மா வாலீ சாரித்ரதூஷக:**
**ஆத்மானுமானுத் பச்யாமி மக்னம் த்வாம் சோகஸாகரே** **15**

சுக்ரீவன் சொன்ன கதையில் எஞ்சி நிற்பது 'தாரம் கவர்ந்தான்' என்ற விவரம். அப்படியிருந்த மனநிலையில் அவன் எதிரே தென்பட்டால் என்ன செய்யவேண்டும்? என்னதான் செய்யக் கூடாது?

வாலியோடு நேர்ந்த பகைமையை ஹனுமான் வாயிலாக விவரிக்கிறார் கம்பன். 'தாரம் கவர்ந்தான்' என்ற கருத்தை வற்புறுத்துகிறார். 'என்ற இவன் மனைவி ருமையை வாலி விரும்பினான்' என்று முடிக்கிறான் ஹனுமான்.

**உருமையென்றிவர்க்குரிய தாரமாம்**
**அருமருந்தையும் அவன் விரும்பினான்**

உடனே ராமன் 'பதினான்கு லோகங்களில் உள்ள பிராணிகளெல்லாம் வந்து அவனுக்கு உதவியாய் நின்று தடுத்தாலும் என் அம்பு அவனை வீழ்த்தும். ராஜ்யத்தோடுகூட உன் மனைவியும் உனக்கு இன்றே கிடைப்பாள். நீ அவன் இருக்குமிடம் மட்டும் எனக்குக் காட்டுவாயாக' என்றானும்.

**உலகம் ஏழினோடேழும் வந்து அவனுயிர்க்குதவி**
**விலகும் என்னினும் வில்லிடை வாளியின் வீட்டி**
**தலைமையோடு நின் தாரமும் உனக்கின்று தருவேன்**
**புலமையோய், அவனுறைவிடம் காட்டு என்று புகன்றான்.**

*('அத்யைவ ஹனிஷ்யாமி' என்ற உறுதியின் எதிரொலி)*

இப்படி வெகுண்டெழுந்து சீற்றம் கொண்டதற்கு வேறு ஒரு காரணமும் கற்பிக்கிறார் கம்பன். ராமனுக்கு சகோதரவாஞ்சை அதிகம். நெஞ்சில் ஈரமில்லாத சிற்றன்னை ஒரு வார்த்தை சொன்னாள் என்றவுடன் தம்பிக்குத் தன் அரசை ஈந்தவனல்லவா? தம்பியின் மனைவியை ஒருவன் அபகரித்த செய்தியைக் கேள்வியுற்றால், நியாயம் அறிந்த தமையன் அந்தப் பேச்சைப் பொறுப்பானா? என்கிறார் கவி.

ஈர நீங்கிய சிற்றவை சொற்றனன் என்ன
ஆரம் வீங்குதோள் தம்பிக்குத் தன்னரசுரிமைப்
பாரம் ஈந்தவன் பரிவிலன் ஒருவன்முன் தமியோன்
தாரம் வவ்வினன் என்ற சொல் தரிக்கு மாறுளதோ?

'தருமமும் தகவும் தனமெனும் தகையர்' என்று வர்ணித்த கருத்துக்கு ஒப்பானது.

எப்படியோ ராமனிடம் உறுதிமொழி பெற்றுவிட்டான் சுக்ரீவன். ஆயினும் மனதுக்குள் பயம்! தவிர, சுபாவத்திலே சந்தேகப் பிராணி. ராமன் வாலிக்கு எதிராக நிற்க முடியுமா? சந்தேகம்தான். வாலியின் பலம் இவனுக்குத் தெரியும். ராமன் வலிமை இனிமேல் தானே பார்க்க வேண்டும்? 'எதற்கும் சற்று பரீக்ஷை செய்து பார்ப்போம்' என்று நினைக்கிறான்.

ராமனிடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பிக்கிறான். ''நீ மகா வீரன். கோபம் வந்தால் உலகை அழிப்பாய் என்று தெரியும். ஆயினும் வாலியின் வலிமை உனக்குத் தெரியுமா? கவனமாகக் கேள்' என்றுகூறி, துந்துபி என்ற அரக்கனை மல்யுத்தம் செய்து கொன்ற வாலியின் பெருமையை எடுத்துரைக்கிறான். 'பராக்ரமத்தில் இந்திரனுக்கொப்பானவன்' என்கிறான் 'அந்த துந்துபியின் எலும்புக் கூடு இதோ மலைபோல் கிடக்கிறது பார்' என்று காட்டுகிறான். கூடவே 'இந்த வாலியை நீ எப்படிப் போரில் வெல்வாய்?'' என்றும் கேட்கிறான்.

கதம் தம் வாலினம் ஹந்தும் ஸமரே சக்ஷ்யஸே ந்ருப 16

'என்ன செய்தால் உனக்கு நம்பிக்கை ஏற்படும்?' என்று புன் சிரிப்போடு லக்ஷ்மணன் கேட்கிறான்; எதிரே நிற்கும் ஆச்சா மரங்களைக் காட்டுகிறான் சுக்ரீவன். 'இந்த ஏழு மரங்களை ஒவ்வொன்றாகத் துளைத்தான் வாலி. ராமனும் ஒரே பாணத்தால் ஒரு மரத்தைத் துளைத்தால் வாலிக்குமேல் வலிமையுள்ளவனென்று கருதுவேன்' என்கிறான். மேலும், 'இந்த துந்துபியின் எலும்பைக் காலால் உதைத்து ஒரு பத்தடி தூரம் எறிந்தால். . .' என்கிறான்.

ராமன் பேசவில்லை. கண்கள் மட்டும் சிவந்து இருக்கின்றன. 'அபயம் என்று காலடியில் விழுந்தவன் என் வலிமைக்கு அத்தாட்சி கேட்கிறானே?' என்று நினைக்கிறான்போலும். முகத்தைப் பார்த்து இதை ஊகிக்கிறான் சுக்ரீவன். 'மன்னிக்க வேண்டும் உன்னைப்பரீக்ஷை செய்யவோ, அவமரியாதை செய்யவோ நான் கருதவில்லை. உன் வலிமையை நான் கண்டதில்லை, அவன் வலிமை நன்கு அறிவேன். ஆதலால் இப்படிக் கேட்டேன். பரவாயில்லை. நீ சொன்ன சொல், செய்த பிரதிக்ஞை இவையே போதும்' என்கிறான்.

ராமன் முகத்தில் புன்னகை தோன்றுகிறது. அளவுமீறிப் பேசிய வன் வரம்புக்குள் வந்துவிட்டான் அல்லவா? இனி அவன் வேண்டா மென்று சொன்னபோதிலும் வலிமையைக் காட்டலாம்.

துந்துபியின் எலும்புக் கூட்டைக் காலால் எடுத்து நெடுந்தூரம் வீசி எறிகிறான். பத்துஅடி என்ன, பத்து யோஜனை தூரம் போய் விழுகிறது. இதைப் பார்த்ததும் சுக்ரீவன் 'உலர்ந்து போன எலும் புக்கு கனமே இல்லை. ஆகையால் இதன் மூலம் நீ வாலியைவிட அதிக பலசாலியா என்று தீர்மானிக்க முடியாது' என்கிறான். அதிகப்ரசங் கிக்கே உரித்தான துணிச்சல்!

ஆச்சாமரம்? சரி, அதையும் செய்துகாட்ட வேண்டியதுதான். கஷ்டகாலத்தில் பிறர் உதவியை நாடினால் அவர் சொல்படி எல்லாம் ஆடவேண்டியதுதானே? சுக்ரீவனுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்காக வில்லைக் கையில் எடுக்கிறான். அம்பைத் தொடுத்து ஆச்சமரத்தை நோக்கி எய்கிறான். ஏழு மரங்களையும் வரிசையாய்த் துளைத்து பூமி யையும் பிளக்கிறது ராமபாணம்.

வியப்பு நிறைந்து நிற்கும் சுக்ரீவன், தரையில் விழுந்து அடி பணிந்து வணங்குகிறான். 'இந்திரன் முதலான தேவர்களையும் நீ வெல்ல முடியும். இந்த வாலி எம்மாத்திரம்? உன்போன்ற நண்பன் கிடைத்தபின் எனக்கினி துயரம் ஏது? வாலி என்ற வைரியை இன்று கொல், ராமா. உன்னை கும்பிடுகிறேன் என்கிறான். ராமன் செய்த பிரதிக்ஞையைத் தன் வாயால் சொல்லி அவனைச் செயலில் ஈடுபடத் தூண்டுகிறான்.

**தம் அத்யைவ ப்ரியார்த்தம்மே வைரிணம் ப்ராத்ரு ரூபிணம்**
**வாலினம் ஜஹி காகுத்ஸ்த மயா பத்தோயம் அஞ்ஜலி: 17**

ராமன் வலிமையை உணர்ந்ததும் வாலி எம்மாத்திரம் என்று தோன்றியதுபோல் அக்கொடிய ராவணன் எம்மாத்திரம் என்றும் சொன்னான் சுக்ரீவன். தாரம் கவர்ந்த பகைவர் இருவரை யும் சேர்த்தே பேசுவது இயற்கைதானே? 'அவனது பத்து தலையும் என்ன, இந்த ஈரமுலோகமும் உன் ஒரு பாணத்துக்கு ஈடாகுமா?' என்று சித்தரிக்கிறார் கம்பன். வாலி வதத்துக்கு சான்றாக எய்த பாணம் ராவண வதத்துக்கும் அடிக்கோல். இரு பகைவரும் ஒரே இனத்தவர் என்பது குறிப்பு. ஒன்று நடந்தபின் அதன் மூலமே மற்றொன்றும் நிறைவேறும் என்ற கருத்தும் தொக்கி நிற்கிறது.

இதை ஹனுமான் வ்ாயிலாக வெளிப்படையாய்த் தெரிவிக் கிறார் கம்பன். 'கொடிய வாலியைக் கொன்று சுக்ரீவனை அரசனாக் கினால் பெரும் பெரும் படை திரட்ட முடியும் அப்படிச் செய்தாலன்றி அந்த அரக்கன் இருப்பிடம் தேடி அறிதல் அரிது' என்கிறான்.

**கொடுந்திறல் வாலியைக் கொன்று கோமகன்**
**கடுங்கதிரோன் மகன் ஆக்கிக் கைவளர்**
**நெடும்படை கூட்டிஞலன்றி நேடரிது**
**அடும்படை அரக்கனது இருக்கை, ஆணையாய்.**

அத்தாட்சி கேட்ட சுக்ரீவன் அடிபணியும் அடிமையாகிவிட்டான். இனி அவன் கவலையைத் தீர்க்க வேண்டியதுதான் என்று முடிவு செய்கிருன் ராமன். லக்ஷ்மணனேடு கலந்து பேசி ராமன் ஒரு திட்டம் செய்கிருன். 'சுக்ரீவா, நாம் கிஷ்கிந்தைக்குப் போவோம், வா. நீ முன்னே செல். அந்த வாலியைப் போருக்கு அழை' என்கிருன். மேலே என்ன நடக்கும் என்று சொல்லவில்லை.

அவர்கள் எல்லோரும் விரைந்து சென்று அடர்ந்ததோர் காட்டுப் பிரதேசத்தில் மரங்களின் பின் ஒளிந்து கொள்ளுகின்றனர். சுக்ரீவன் மட்டும் வெளிக்கிளம்பி வாலியைக் கூவி அழைக்கிருன். குரலிலேயே பகைமை. வெகுண்டெழுந்து வருகிருன் வாலி. கைகலந்து சண்டையிடுகின்றனர் சகோதரர். கையில் வில்லேந்திய ராமன் இருவரையும் கூர்ந்து கவனிக்கிருன். ஒன்று போல் இருக்கிருர்கள் உடன் பிறந்தோர். எவன் வாலி, எவன் சுக்ரீவன் என்று தெரியவில்லை. பூட்டிய அம்பைத் தொடுக்காமல் நிறுத்திவிட்டான் ராமன்.

இவனை நம்பி மல்லுக்குச் சென்ற சுக்ரீவன் கைசளைத்துப் போயும் உதவியைக் காணுமல் தவிக்கிருன். வாலி அவனை முறியடித்து விட்டான். நேராக திரும்பி ஓடி ரிச்யமூகத்தை அடைந்த பின்னரே நின்று மூச்சு வாங்குகிருன். அவனைத் துரத்திய வாலி 'பிழைத்துப்போ' என்று விட்டுப்போகின்ருன். (முன்பு முனிவருக்குக் கொடுத்த வாக்குப்படி ரிச்ய மூகத்துக்குள் நுழையமாட்டான் வாலி.)

சுக்ரீவனிருக்குமிடம் தேடி வருகிருன் ராமன். தலைநிமிர்ந்து பார்க்காமலே பேசுகிருன் சுக்ரீவன். 'உன் வலிமையைக் காட்டிஞய், என்னைப் போர்செய்யத் தூண்டிஞய், அவன் என்னைக் குற்றுயிராக்கி விட்டான். நீ பார்த்து நின்ருயே? முன்பே 'என்ஞலாகாது' என்று சொல்லியிருந்தால் நான் இங்கிருந்து கிளம்பியிருப்பேஞ? ' என்கிருன்.

மனதில் வேதனையும் முகத்தில் கவலையும் தோன்ற ராமன் சொல்லுகிருன். 'கோபம் கொள்ளாதே அப்பா. நான் அம்புதொடுக்காத காரணம் என்னவென்று கேள். உயரம், பருமன், உருவம், உடை, எல்லாவற்றிலும் ஒன்று போலிருந்தீர்கள் சகோதரர். அது மட்டுமல்ல. குரலும் பேச்சுமா அப்படியே இருக்க வேண்டும்? எனக்குக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. தவறிப்போய் உன் மேல் பாணம் போட்டிருந்தால் அண்டினவரைக்கொன்ற கொடிய பாவம் என்னைச் சேரும்.'

சுக்ரீவனுக்கு நம்பிக்கை உண்டாகிறது போலும். எனினும் உறுதி காட்ட நினைக்கிறான் ராமன். 'இக்காட்டில் நீயே கதி என்றிருக்கிறோம். நானும் லக்ஷ்மணனும் மட்டுமல்ல, ஸீதையும் உன்னை நம்பியிருக்கிறாள்' என்கிறான். விலைமதிப்பற்ற நண்பன் சுக்ரீவன்!

**அஹம் ச லக்ஷ்மணஸ் சைவ ஸீதா ச வரவர்ணினீ**
**த்வததீனா வயம் ஸர்வே வனே அஸ்மின் சரணம் பவான். 18**

'ஆகையால் நீ மீண்டும் போருக்குச்செல். இனி சந்தேகம் வேண்டாம். வாலியை வீழ்த்துவேன். புரண்டு துடிப்பான், பார். உனக்கு அடையாளமாக ஏதாவதொன்று அணிந்துகொள். லக்ஷ்மணா இவனுக்கு ஒரு பூமாலையைக் கழுத்தில் கட்டு' என்கிறான். கஜ புஷ்ப மாலையைக் கழுத்திலணிந்த சுக்ரீவன் நக்ஷத்திரங்கள் சூழ்ந்த சூரியன் போல் 'விபரீதமாக'த் தோன்றினான் என்கிறார் வால்மீகி. நடக்க இருக்கும் விபரீத நிகழ்ச்சியைக் குறிக்கும் உவமை.

ஹனுமான், நளன், நீலன் முதலியோர் சூழ எல்லோரும் கிஷ்கிந்தைக்கு மறுபடி செல்லுகிறார்கள். மரங்களிடையே ஒளிந்து நிற்கிறார்கள். மீண்டும் உரக்கக் கூவியழைக்கிறான் அண்ணனை. போவதற்கு முன் மீண்டும் நினைவுறுத்துகிறான். (இம்முறை ராமன் கைவிட்டால் அதோகதிதான்!) மீண்டும்உறுதி கூறியனுப்புகிறான் ராமன் 'வாலியால் உனக்குண்டான பயம் இன்றோடு ஒழிந்தது. ஒரே பாணத்தால் நிவர்த்தியளிப்பேன். அவன் என் கண்ணெதிரில் மட்டும் வரட்டும். நீ கவலைப்படாதே. உன் கழுத்தில் தான் மாலையிருக்கிறதே!' என்கிறான். உடன்பிறந்தோனுருவத்தில் தோன்றிய பகைவனை மட்டும் காட்டு' என்கிறான். தருமத்தின் பெயரால் ஆணையும் இடுகிறான்!

'தருமத்தை நாடுபவன் நான். ஒரு போதும் பொய் சொன்னதில்லை. இனி சொல்லப்போவதுமில்லை. என் ஆணையை நிறைவேற்றுவேன்' என்றும் சொல்லுகிறான்.

**அந்ருதம் நோக்தபூர்வம் மே வீர க்ருச்ச்ரேபி திஷ்டதா**
**தர்ம லோப பரீதேன ந ச வக்ஷ்யே கதம்சன**
**ஸபலாம் ச கரிஷ்யாமி ப்ரதிக்ஞாம் ஜஹி ஸம்ப்ரமம் 19**

இனி சுக்ரீவனுக்குக் கவலையில்லை. ராமனுக்கும் யோசிக்க இடமில்லை.

17

# திகைத்த செய்கை

போர் ஒலி கேட்டுச் சிறி எழுகிருன் வாலி. மீண்டும் வந்து விட்டாஞ? இதற்குள்ளாகவா? கோபம் கொண்ட வாலியைக் கட்டியணைத்து வழி மறைக்கிருள் மனைவி, தாரா. 'சற்றுப்பொறுங்கள். இந்தச் சண்டையை நாளை நடத்தலாம். நான் ஏன் தடுக்கிறேன் என்று கேளுங்கள். சற்று முன் உடம்பு வீங்கிப் போகும் அளவு உதை வாங்கியவன் மீண்டும் சவால்விடுகிருன். அதுவே சந்தேகத்துக்கிடமாகும். பிறர் துணையின்றி சுக்ரீவன் வந்திருக்கிருனென்று தோன்றவில்லை. முன்பே அங்கதன் சொல்லக் கேட்டிருக்கிறேன், அவனுக்கு நம் ஒற்றர்கள் சொன்னர்களாம். ராமலக்ஷ்மணர்கள் பெரும் வீரர்; சுக்ரீவனுக்கு நண்பர்களாம். ராமன் போரில்சூரன். அண்டியவர்களுக்குத் துணைவனும். வெல்லுதற்கரியராமனோடு உங்களுக்கு ஏன் விரோதம்? நான் ஹிதமான யோசனை சொல்லுகிறேன், கேளுங்கள். தம்பியோடு வேற்றுமையை ஒழித்து அவனை யுவராஜாவாக ஆக்குங்கள். எப்படியும் அவன் கூடப்பிறந்தவன், உறவினன். அவனைத் தள்ளலாகாது. உலகில் இதற்கொப்பான உறவு வேறு எது? அவனுக்குப் பரிசுகள் வழங்கி, கௌரவம் அளித்து நம்மோடு நெருங்கியவனாக ஆக்கிக்கொள்ளுங்கள். போதும் இதுவரை இருந்த பகைமை' என்கிருள். ஒன்றும் பதில் பேசாமல் இருக்கிருன் வாலி. 'நான் கெஞ்சிக் கேட்கிறேன். நான் சொன்ன நல்வழியைப் பின்பற்றுங்கள். எப்படியும் அந்த ராமனோடு விரோதம் வேண்டாம்' என்று எச்சரிக்கை செய்கிருள். அறிவும் அன்பும் நிறைந்த பேச்சு.

ஆனல் வாலிக்குப் பிடிக்கவில்லை. 'அவமதிப்பு மரணத்திலும் கொடுமையானது. அந்த அற்பன் என்னை ஏசுகிருன். தெருவில் நின்று வீம்பு பேசுகிருன். நான் கேட்டுக்கொண்டு சும்மா இருப்பேனே?' என்கிருன்.

'ராமனைப் பற்றிச் சொன்னாயல்லவா? நீ ஒன்றும் கவலைப் படாதே. தருமம் அறிந்த ஒருவன் ஈனத்தொழில் புரிவானோ?' என்கிறான். வரப்போகும் அவலத்தைப் பளிச்சென்று எடுத்துக் காட்டுவது போல் அமைந்திருக்கிறது ச்லோகம்.

**ந ச கார்யோ விஷாதஸ்தே ராகவம் ப்ரதி மத்க்ருதே**
**தர்மக்ஞஸ்ச க்ருதக்ஞஸ்ச கதம்பாபம் கரிஷ்யதி. 1**

ராமனது தருமத்தைப் புகழ்ந்து, அவன் அதர்மம் செய்ய மாட்டான் என்று அமைக்கிறார் வால்மீகி. 'தர்மக்ஞ,' 'க்ருதக்ஞ' என்ற இரு சொற்களும் பாலகாண்டம் முதல் அத்யாயத்தில் கவி உபயோகித்த புகழுரைகள். அங்கு ராமனது குணங்களை எடுத்துக் காட்டிய சொற்கள் இங்கு இடித்துக் காட்ட உதவுகின்றன.

கம்பன்இதற்கு பதில் வேறொரு கருத்தைக் கையாளுகிறார். 'இவ்வுலகில் தம்பிகளைத் தவிர உயிருக்குயிரானது வேறு எதுவும் இல்லை என்று எண்ணி வாழ்பவன் ராமன். அத்தகைய பெருமகன் நானும் என் தம்பியும் செய்யும் போரிலே இடைபுகுந்து அம்பு தொடுப்பானோ? அவன் கருணைக்கடல் அல்லவோ?' என்கிறான் வாலி. தனக்கு மட்டும் தம்பிமார் அன்புக்குரியவர் என்று கருதினலொழிய சகோதரர்களிடையே பிளவு உண்டாக்கமாட்டான் என்பது குறிப்பு.

**தம்பியர் அல்லது தனக்கு வேருயிர்**
**இம்பரின் இலதென எண்ணி ஏய்ந்தவன்**
**எம்பியும் யானும் உற்றெதிர்ந்த போரிடை**
**அம்பிடை தொடுக்குமோ, அருளின் ஆழியான்?**

('அருளின் ஆழி' என்பது 'கருணாஸாகர' என்பதன் தமிழாக்கம். கருணைக் கடலே வற்றிவிட்டது என்று சொல்லத்தக்க செயல் நடக்கப்போகிறது)

'நீ உன் தோழிகளுடன் உன் இருப்பிடம் செல். நான் போய் சுக்ரீவனுக்கு பதில் சொல்லுகிறேன். அவன் திமிரை அடக்கி விரட்டுகிறேன். கொல்லமாட்டேன், கவலைப்படாதே' என்று கூறி சமாதானம் செய்கிறான் தாரையை.

**தர்ப்பமாத்ரம் விநேஷ்யாமி ந ச ப்ராணைர் விமோக்ஷ்யதே 2**

'வென்று வாருங்கள்' என்று சொல்லி வணங்கி வலம் வந்து விடைகொடுத்தனுப்புகிறாள். அவள் பேச்சு முற்றிலும் பயனற்றுப் போகவில்லை. தம்பியைக் கொல்லமாட்டேன் என்று உறுதி அளித்தானல்லவா? பெரிய வீரனுக்குரிய லக்ஷணம் அன்புக்குக் கட்டுப்படுவது. குடும்ப ஒற்றுமையை நினைவுறுத்திய அவள் வார்த்தை மதிப்புக்குரியது என்றுணர்ந்த வாலியின் பெருந்தன்மையைக் காட்டுகிறார் வால்மீகி.

வெளியே வந்ததும் வேட்டியை இறுக்கிக் கச்சம் கட்டி ரோஷமான குத்துச்சண்டைக்குத் தயாராகிறுன். சுக்ரீவன் கையை ஓங்கிய வண்ணம் வாலியை நோக்கி வருகிறுன். அவன் கை ஓங்கியிருக்கிறது!

வாலி அவனைப் பார்த்து ''ஒரு குத்துவிட்டேனேயானுல் 'பிழைத்தேன்' என்றலறி ஓடுவாய்'' என்று சீறுகிறுன். பதிலுக்கு சுக்ரீவன் 'என்குத்து உன் உயிரைப் பறிக்கும்' என்கிறுன். இருவரும் அவரவர் செய்த ஆணைக்குத் தக்கபடி பேசுகிறுர்கள்.

கையாலடித்துக் காலாலுதைத்து மரக்கிளைகளால் அடித்துப் போர் செய்கிறுர்கள் சகோதரர். வீம்பான பேச்சும் ஆத்திரம் நிறைந்த உறுமலும் இடையே கேட்கின்றன. உடலெல்லாம் காயம். ரத்தப்பெருக்கு. சுக்ரீவன் கைசளைத்து விட்டான். நாலு பக்கமும் பார்க்கிறுன். ஆபத்துக்கு அறிகுறி.

ராமன் கவனித்துவிட்டான்! இனி தாமதிக்கக்கூடாது. கரு நாகத்துக்கொப்பான பாணம் சீறிக்கொண்டு போய் வாலியின் மார்பில் தைக்கிறது.

ரத்தப் பெருக்குற்று விழுந்து துடிக்கும் வாலி, சிவந்த பூக்கள் நிறைந்த அசோக மரம் காற்றில் அசைவதுபோல் தோன்றினுனும். (அசோக மரத்தை அடிக்கடி நினைக்கிறுர் கவி!) லக்ஷ்மணனைக்கூட அழைத்துக்கொண்டு அருகில் செல்லுகிறுன் ராமன்.

ராமனை நிமிர்ந்து பார்க்கிறுன் வாலி. வலி தொண்டையை அடைக்கிறது. கோபத்தோடு பேசுகிறுன் வாலி. எனினும் பேச்சில் அடக்கமும் தருமமும் நியாயமும் நிறைந்திருக்கிறது.

**அப்ரவீத் ப்ரச்ரிதம் வாக்யம் பருஷம் தர்மஸம்ஹிதம் 3**

'மறைந்து நின்று என்னை வீழ்த்தினுயே, என்ன பயன் கிடைக்கும்? உன் அரச பரம்பரையை நம்பி, என் மனைவி தடுத்தும் கேளாமல் சுக்ரீவனேடு சண்டைக்குக் கிளம்பினேன். பிறருடன் கைகலந்து நிற்கும்போது என்னை நீ இம்சிக்கமாட்டாய் என்று கருதினேன், உன்னை நேரில் பார்க்காத வரை! பாவத்துக்கஞ்சாத நீ புல்மண்டிய பாழுங்கிணறு. முனிவர்போல் வேடம் தரித்து நிற்கிறுய், ஆனுல் சாம்பல் பூத்த வெந்தணல் நீ என்று உணராமல் போனேன்.

உனக்கு நான் ஏதாவது தீங்கு செய்தேனு? உன்னைப் பார்த்தது கூட இல்லை. அப்படியிருக்க என்னைத் துன்புறுத்தத் துணிந்தாயே? நீ அரசகுமாரன். பார்க்கவும் லக்ஷணமாயிருக்கிறுய். ஆனுல், தருமத்தின் பெயரால் எந்த க்ஷத்ரியனுவது தீய செயலில் இறங்குவானு?' என்கிறுன். 'ராமன் உயர்குலத்தோன், தருமத்தில் ஈடுபட்டவன் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நீயோ சாதுபோல் வேஷம்

போட்டுத் திரிகிறாய். குற்றம் செய்யாத என்னைக்கொன்று ஊருக்குப் போய் பெரியோர் முன்னிலையில் எப்படி நிற்பாய்? என்ன சமாதானம் சொல்லுவாய்?' என்று கேட்கிறான். அரசனின் செயல் பெரியோர் ஆமோதிக்கத்தக்கதாய் இருக்கவேண்டும் என்று எடுத்துரைக்கிறான் உத்தமவீரன்.

'நீ எப்படி தசரதன் என்ற மகான் வயிற்றில் பிறந்தாய், பாவீ?' என்கிறான்.

**கதம் தசரதேனத்வம் ஜாத: பாபோ மஹாத்மனா** 4

'ராமன் என்ற யானை தருமம் என்ற அங்குசத்துக்கு அடங்கவில்லையே' என்கிறான்.

'என் எதிரில் வந்து சண்டை செய்திருந்தால் உன்னை யமனுலகுக்கனுப்பியிருப்பேன். நீ என்னை மறைந்து நின்று அடித்தது, மது மயக்கத்திலிருப்பவனை உறங்கும் சமயம் பார்த்துப் பாம்பு கடித்தது போல்' என்கிறான். 'முன்பே என்னிடம் வந்து வேண்டிக் கேட்டிருந்தால், உன் எதிரி ராவணனைக் கொன்று அவனுடலைக் கட்டி இழுத்து வந்து தள்ளியிருப்பேன்.'

'நான் இறந்தபின் சுக்ரீவன் அரசு பெறுவது முறையென்றே சொன்னாலும் தருமத்தைப் புறக்கணித்து நீ என்னை வீழ்த்தியது ஒருகாலும் முறையல்ல' என்கிறான்.

**யுக்தம் யத் ப்ராப்னுயாத் ராஜ்யம் ஸுக்ரீவ: ஸ்வர்கதே மயி**
**அயுக்தம் யத் அதர்மேண த்வயாஹம் நிஹதோரணே.** 5

மீண்டும் 'என்ன பதில் சொல்லப் போகிறாய்?' என்று கேட்டு மௌனமாயிருக்கிறான் வாலி. அவன் பேச்சிலிருந்து தருமத்தையும் பெரியோரையும் போற்றுபவன் வாலி என்று அறிந்து அதற்கேற்பப் பேசுகிறான் ராமன். 'பெரியோர்களைக் கலந்து யோசித்துப் பேசாமல் நீ என்ன சொல்லுகிறாய்? தருமம், அர்த்தம், காமம் எல்லாம் அறியாதவன். சமய சந்தர்ப்பமும் தெரியாது' என்று பீடிகையோடு துவக்குகிறான்.

'இது இக்ஷ்வாகுவம்சத்தோராகிய எங்கள் ஆதீனத்துக்குட்பட்ட தேசம். பரதன் அங்கு அரசாள்கிறான். அவன் உத்தரவுப்படி நாங்கள் தருமத்தை நிலைநாட்ட ஊர் ஊராகப் போகிறோம். நீயோ தருமத்தை விலக்கிக் காமத்தையே பெரிதாகக் கருதுபவன். இளைய சகோதரனை மகன் போல் கருதுவதற்குப் பதிலாக அவன் மனைவி ருமையைப் பெண்டாட்டியாக வைத்துக் கொண்டிருக்கிறாய் அவன் உயிரோடிருக்கும்போதே! மருமகளை மனைவியாய்க் கொண்டவனைத் தண்டிக்க வேண்டியது அவசியம். இத்தீச் செயலுக்கு தண்டனை

மரணம்தான்!' என்கிருன். இதெல்லாம் வாலிக்கு ஒப்பக்கூடியதாக இல்லையென்று தெரிகிறது போலும். 'சுக்ரீவனேடு நட்புக்கொண்டு விட்டேன். அவன் லக்ஷ்மணனைப்போல் ஒரு தம்பி. மனைவி, அரசு இவையிரண்டையும் இழந்த காரணத்தாலே எங்களுக்குள் நெருங்கிய உறவு. பிறர் முன்னிலையில் நான் அவனுக்கு வாக்களித்துவிட்டேன். பிறகு நான் அதை எப்படி மீறுவேன்? ' என்கிருன் என் நிலையைப் பார்த்துப் புரிந்துகொள்' என்பதுபோல் இருக்கிறது பேச்சு.

**ஸுக்ரீவேண ச மே ஸக்யம் லக்ஷ்மணேன யதா ததா**
**தார ராஜ்ய நிமித்தம் ச நி:ச்ரேயஸி ரதஸ் ஸ மே**
**ப்ரதிக்ஞா ச மயா தத்தா ததா வானர ஸந்நிதௌ**
**ப்ரதிக்ஞா ச கதம் சக்யா மத்விதேன அனவேக்ஷிதும்** 6

தன்னுல் எது முடியுமோ அவ்வளவுதான் ஏற்றுக் கொள்ளலாம் ஆனல் பிறருடைய வாழ்வை பாதிக்கும்படியான காரியம் செய்வதாக வாக்களிக்கலாமா? இதற்கு சமாதானம் கிடையாது. தசரதன் கைகேயிக்கு வாக்களித்துவிட்டுப் பின்னர் தவித்த நிலை நினைவுக்கு வருகிறது. (அப்போது அவன் செயல் ஒருவருக்கும் ஆமோதிக்கத் தக்கதாயில்லை. அதை உணர்ந்தே உயிரை விட்டான் மன்னன்.)

ராஜ தர்மத்தை மேலும் எடுத்துரைக்க முற்பட்டு ஏதேதோ பேசுகிருன் ராமன். ''நான் என் வசத்தில் இல்லை' என்று ஒப்புக் கொள்ளுகிருன். (நவயம் ஸ்வவசே ஸ்திதா:) 'சுக்ரீவனுக்கு வாக் களித்தபின் கட்டுண்டவனுனேன்' என்றும் கொள்ளலாம்.

கடைசியாக, 'நான் அரசன். வேட்டையாட உரிமை உண்டு. நீ வானரன். அதனுல் உன்னைக்கொன்றேன்' என்கிருன். தர்மசாஸ்திரம் எடுத்துரைத்துத் தர்க்கம் செய்தான். இப்போது சிறிதும் பொறுத்தமில்லாத முறையில் அவனைக் குரங்கு என்று குறிப்பிடுகிருன். வசமிழந்து பேசுகிருன் என்பதற்கு இதுவே அத்தாட்சி!

வாலியைக் கொன்றது நியாயம் என்று நிலைநாட்ட இந்த அத்யாயத்தை விவரமாகப் பலவாறு வியாக்யானம் செய்வார்கள் பலர். ஆனல் சாதுர்யமான விளக்கத்துக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சி இது. கொந்தளிக்கும் மனநிலையில் உள்ளவரைப் பேச்சால் புரிந்துகொள்ள முடியுமா?

காரணம் என்று சொல்லி ஒவ்வொன்ருக எடுத்துக் கூறும் விஷயங்கள் உண்மையில் சாரம் அற்றவை. 'நான் பரதனின் பிரதிநிதி,' 'நீ குரங்கு. நான் உன்னை வேட்டையாடினேன்' என்பது போன்ற அர்த்தமற்ற பேச்சுகளைப் புகுத்தி அவற்றின் மூலமே ராமனின் குழம்பிய மனநிலையைக் காட்டுகிருர் வால்மீகி. 'வாக் களித்துவிட்டேன் சுக்ரீவனுக்கு' என்றதும் 'நான் வசமிறியிருக் கிறேன்' என்றதும்தான் உண்மை 'அரசையிழந்தோம், மனைவியை

இழந்தோம். அதனுல் நண்பர்' என்பதும் குறிக்கத்தக்கது. ஆனுல் மனம் குழம்பியது ஏன்? செய்த காரியம் வீரனுக்கு குரியதல்ல. போற்றும் தருமத்துக்கு விரோதமானது. இதை உணர்ந்த மனதிற்கும், பேசிய பேச்சுக்கும் தொடர்பு இல்லாத நிலேயில் ராமனேச் சிக்க வைத்தது மனச்சாட்சி. அந்த மனச்சாட்சியைத் தட்டி எழுப்பியது வாலியின் பேச்சு.

'உனக்கு தருமம் தெரியுமா?' என்று அடிக்கடி வாலியைக் கேட்கிருன்! இது வாயால் சொன்ன சொல். 'நான் என் வசமில்லே' என்றது மனதால் சொன்னது. 'மன்னித்துவிடு' என்ற வேண்டுகோள் தொக்கி நிற்கிறது.

உணர்ச்சிமிக்க இக்காட்சியைப் பல வர்ணங்களில் தீட்டுகிருர் கம்பன். ராம பாணம் மார்பில் தைத்தவுடன் அதில் 'ராம' வென்ற நாமம் பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டான் வாலி. அது எப்படிப்பட்ட நாமம்? மூவுலகுக்கும் மூலமந்திரம். அடியார்க்குப் பெரும் பதம் கொடுக்கும். பிறப்பு என்னும் நோயைத் தீர்க்கும் என்கிருர் பக்தன். அபயம் அளித்தோ, அம்பு வீசியோ முக்தி அளிக்கும் அவதார மகிமையை எடுத்துச் சொல்லுகிருர்.

**மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தை முற்றும்**
**தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தை தானே**
**இம்மையே எழுமை நோய்க்கு மருந்திலே, இராம வென்னும்**
**செம்மைசேர் நாமம் தன்லேக் கண்களில் தெரியக் கண்டான்**

இது கவியின் வர்ணலே. வாலி என்ன சொல்லுகிருன்? ராமன் செயலேக் கண்டு வீரனுக்கு வெட்கம் உண்டாகி நகைக்கிருனும். இல்லறம் துறந்து தவ வேடம் கொண்டான் ராமன். அவன் தரும யுத்தம் செய்யும் முறையையும் துறந்துவிட்டான். இவன் பிறந்ததால் வேத சாஸ்திரங்களுக்குட்பட்டு வாழ்ந்த சூரிய வம்சத்துக்கே இழுக்கு வந்துவிட்டதே? இதை நிலேத்து வெட்கப்படுகிருன். ('நானும் வீரன், நீயும் வீரனு?' என்பது உட்கருத்து).

சூரிய வம்சத்தை நிலேத்தவுடன் தசரதன் உருவம் கண்ணெதிரில் வருகிறது. சொன்ன சொல்லேக் காத்தவன், குலப் பெருமையையும் காத்தவன். அதற்காகத் தன்னுயிரைக் கொடுத்தவன். (நீயோ உன் சொல்லேக்காக்கப் பிறருயிரை வாங்குகிருய்) 'அப்படிப்பட்ட தூயவனின் மைந்தனு நீ?' என்று கேட்கிருன். 'கதம் தசரதேன த்வம் ஜாத:' என்ற வால்மீகியின் கேள்வி, தூயவன் மைந்தனே என்று ஏளனமாய் அமைகிறது. ஆனுல் மேலே பரதலேயும் பெருமைபடுத்திக் காட்டுகிருர் கம்பன். 'நீ பரதனுக்கு முன் பிறந்த சகோதரனு?' என்று ஏசுகிருன் வாலி. 'பிறர் தீமை செய்யாமல் காப்பது அரசன் கடமை. ஆனுல் அதை அவனே செய்தால் அது தீங்கில்லேயென்ருகுமோ? நீ கருணேயும் அறிவும் தருமமும் நிறைந்தவனுயிற்றே, சொல்' என்கிருன்.

**வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்**
**தூயவன் மைந்தனே, நீ பரதன்முன் தோன்றினையே!**
**தீமைதான் பிறரைக் காத்துத்தான் செய்தால் தீங்கன்றாமோ**
**தாய்மையும் அன்று மறையும் தருமமும் தழுவி நின்றாய்!**

(தசரதனுடைய முக்கிய குணம் வாய்மை. ராமனின் முக்கிய குணம் 'தாய்மை'யென்னும் கருணை இவ்விரண்டும் நீங்கிய நிலையில் தீமை பிறக்கிறது என்று குறிக்கிறார் போலும் கவி)

அறிவும் தருமமும் அகலவே, கருணையற்ற செயல் புரியத் துணிந்தான் ராமன் என்று அடுத்த பாடல்களில் சொல்லுகிறான். இதற்கெல்லாம் காரணம் சீதையைப் பிரிந்த துயரம் என்றும் ஊகிக்கிறான், விவேகம் குலையாத வாலி.

'அரச நீதி, தருமம் எல்லாம் உங்கள் குலத்துக்கே உடைமையல்லவா? நீ சித்திரத்தில் எழுத இயலாத வடிவழகன் உன் குலதருமத்தைக் கைவிட்டது உயிருக்குயிரான ஜானகியைப் பிரிந்து என்ன செய்வதென்றறியாமல் திகைப்பு ஏற்பட்டதால்தான் போலும்!' என்கிறான்.

**கோஇயல் தருமம் உங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்,**
**ஓவியத்தெழுத ஒண்ணா உருவத்தோய்! உடமையன்றோ?**
**ஆவியை, சனகன்பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த**
**தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை.**

'ஓவியத்து எழுதவொண்ணா உருவத்தோய்' என்ற சொல்லில் 'அழகுதான் இருக்கிறது. குலப்பண்பு இல்லை' என்ற இகழ்ச்சி ததும்புகிறது. தவக்கோலத்தில் காட்டிலிருக்கையில் வில்லேந்தி நிற்பதும் குற்றமற்றவரைக் கொல்வதும் அழகல்ல என் அறிவூட்டிய ஸீதை அருகில் இல்லையே!

''மனுநெறியில் பண்டிதனாயிற்றே, உனக்கு அரக்கர் ஓர் தீமை செய்துஓடிவிட்டால் அதற்காக வேறொரு இனத்து அரசனைக் கொல்வது தரும சாஸ்திரத்தில் எழுதியிருக்கிறதோ? என் மேல் என்ன பிழை கண்டாய்? உன் கருணை எங்கே சிந்திப் போயிற்று? அருளின் ஆழி! இந்தப் பெரும் பழியை நீ ஏற்றுக் கொண்டால், இனி யார்தான் புகழோடு வாழ்வார்?' என்கிறான். உயர்குலத்தோருக்கு நிர்ப்பந்தமும் உண்டு என்பது பொருள்.

**அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல் அதற்கு வேறோர்**
**குரக்கினத் தரசைக் கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ?**
**இரக்கம் எங்கு உகுத்தாய், என்பால் எப்பிழை கண்டாய்**
**அப்பா?**
**பரக்கழி இது நீ பூண்டால் புகழை யார் பரிக்கற் பாலார்?**

‘உனக்கு ஒருவரும் உதவி செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அப்படியிருக்க, உன் அரசை நீ உன் தம்பிக்குக் கொடுத்து வெளியேறிய மாதிரியே, என் அரசை (என்னை அகற்றி) என் தம்பிக்குக் கொடுத்தாயே? இது புதுமைதான். இதற்கு மேல் இனி செய்ய வேண்டியது ஏதேனும் இருக்கிறதா?’ என்று கேட்கிறான். ‘உன்னைப் போலவே பிறரையும் ஆக்கிவிடப் பார்க்கிறாய்’ என்ற ஏளனம் தொக்கி நிற்கிறது. இன்னுமொரு தமையனைக் கொன்று தம்பிக்கு அரசு தரப் போவதும் லேசாக ஒலிக்கிறது.

**கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவ! பெற்ற தாதை**
**பூட்டிய செல்வம் ஆங்கோர் தம்பிக்குக் கொடுத்துப் போந்து**
**நாட்டொரு கருமம் செய்தாய்; எம்பிக்கு இவ்வரசை நல்கிக்**
**காட்டொரு கருமம் செய்தாய்; கருமம்தான் இதன்மேல்**
**உண்டோ?**

‘நெஞ்சில் ஈரமின்றி நீ செய்த காரியம் வீரச் செயலா? உன்னோடு பகைமையில்லாதவனைத் தாக்கியது பண்பு அற்றது. விதி என்று சொல்லித் தட்டிக் கழிக்கவும் முடியாது. இது என்ன காரியம்!’ என்கிறான். மரணத்தருவாயில் இருப்பவன் ஞானோபதேசம் செய்கிறான். ‘நீ வாலியை அழிக்கவில்லை. ராஜதருமத்தின் வேலியை அழித்துவிட்டாய்’ என்கிறான்.

**வாலியைப் படுத்தாய் அலை மன் அற**
**வேலியைப் படுத்தாய் விறல் வீரனே!**

‘வீரன்’ என்றதும் அவனது வீரம் எத்தகையது என்றும் இடித்துக் காட்டுகிறான். ‘உன் மனைவியை வேறொருவன் கொண்டு போனான். உன் பெரிய வில்லுக்கு அது இழுக்கு. அதற்குப் பரிகாரமாக மறைந்து நின்று, நிராயுதபாணியாயிருந்த என்மேல் அம்பு தொடுக்கவே பயன்பட்டது போலும் உன் வில்வித்தை!’ என்கிறான். ஏளனத்துக்குரிய செயலைப் பலவிதமாகச் சித்திரிக்கிறார் கவி.

**தாரம் மற்றொருவன் கொளத் தன் கையில்**
**பார வெஞ்சிலை தானும் பழுதுற**
**நேரில் அன்றி மறைந்து நிராயுதன்**
**மார்பின் எய்யவோ வில் இகல் வல்லதே.**

இதற்கெல்லாம் என்ன பதில்? வால்மீகியின் நடையை மாற்றி மூன்று முக்கிய காரணங்கள் சொல்லுகிறான் கம்பன் படைத்த ராமன். யாதொரு குழப்பமும் இல்லாமல் பேசுகிறான். ‘நீ மாயாவியைக் கொன்று திரும்பியதும் உன் அரசைத் திருப்பித் தந்தான் சுக்ரீவன். நீயோ இரக்கமின்றி அவனைக் கொல்லத் தொடங்கினாய்.

அபயம் வேண்டிய தம்பியின் மீது சீற்றம் கொண்டாய். தொழுத கையானை நீ யமலோகத்துக்கனுப்புவேனென்று சொன்னாய்,' என்கிறான். சரணம் அடைந்தவரைக் காப்பவன் என்று பெயர் வாங்கியவனுக்கு இது தவறாகத் தோன்றும் அல்லவா? மேலும், 'அருமைத் தம்பியின் மனைவியைச் சேரத் துணிந்தாய்' என்கிறான். கடைசியாக, 'சுக்ரீவன் என் ஆருயிர்க்காதலன் ஆதலால் உன் உயிரைப் போக்கினேன்' என்றும் சொல்லுகிறான். வால்மீகியின் எதிரொலி. காதலனுக்காக என்னதான் செய்யக்கூடாது?

**ஆதலானும் அவள் எனக்காருயிர்க்**
**காதலான் எனலானும் நின் கட்டனென்.**

வாக்குவாதம் நடக்க நடக்க உடலிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருக்கிறது. வலி அதிகரிக்கிறது. இனி பேசிப் பயன் இல்லை. 'நீ சொன்னதெல்லாம் சரி. என்னால் பேச்சை வளர்த்த முடியவில்லை' என்கிறான் வாலி. அருமை மகன் அங்கதனை நினைக்கிறான். ராமனிடம் கடைசியாக ஒரு வேண்டுகோள். வெற்றி கொண்ட நிலையில் மறுக்க மாட்டானென்ற நம்பிக்கையோடு பேசுகிறான். 'என்னைப் பற்றி இனிக் கவலையில்லை. தாரையைப் பற்றியும் கவலைப்படவில்லை. உயர்ந்த குணவான் அங்கதன். அவனைப் பற்றி வருந்துகிறேன். என்னைக் காணாமல் வாடிப் போவான் சிறுவன். சுக்ரீவனுக்கும் அங்கதனுக்கும் நியாயமாகப் பங்கு பிரித்துக் கொடு, ராமா. என் மீதுள்ள ஆத்திரத்தால், சுக்ரீவன் தாரையை அவமதிக்காமல் பார்த்துக் கொள்' என்கிறான். மகனுக்கு ஆதரவும் மனைவிக்கு மதிப்பும் வேண்டுகிறான் மரணநிலையில்.

'இதற்காக நீ கவலைப்படாதே. வருத்தமும் வேண்டாம், பயமும் வேண்டாம். உன்னைத் தண்டித்த உடனே உன் குற்றம் அகன்றுவிட்டது. இனி உன் விஷயத்தில் விசேஷ சிரத்தையோடு தருமமாக நடப்பேன்' என்று உறுதி அளிக்கிறான் ராமன். இதுவே பிராயச்சித்தம்,

**வயம் பவத் விசேஷேண தர்மத: க்ருத நிஸ்சய:** 7

மகனைக் கவனித்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டான். சொன்ன சொல் தவறமாட்டான். (அதை நேரில் கண்டாகிவிட்டது!) இனி என்ன மனஸ்தாபம்? ராமனது நிலையைப் புரிந்து கொண்டுவிட்டான் போலும். 'அடிபட்ட நிலையில் ஏதோ அறியாமையால் தூஷித்தேன். என்னை மன்னித்துவிடு ராமா.' என்கிறான். பெருந்தன்மை கடைசிவரை கைவிடவில்லை. வாலியை 'சிறியன சிந்தியாதான்' என்று குறிப்பிடுகிறார் கம்பன்.

வாலியின் தோல்வியைக் கேள்வியுற்றதும் அலறிக் கொண்டு வருகிறாள் தாரை. 'வாலி பிழைக்கமாட்டான். கோட்டை வாயிலை அடைத்துக் காப்போம். சீக்கிரம் அங்கதனுக்கு முடி சூட்டுவோம்'

என்று யுக்தி கூறும் மந்திரிகளை லக்ஷியம் செய்யாமல் வாலியைத் தேடி வருகிறாள். கண்டதும் புலம்புகிறாள். அவள் அழுவது கண்டு மனவருத்தம் அடைகிறான் சுக்ரீவன்! வஞ்சமும் வெற்றியும் இது வரை குடிகொண்டிருந்த மனத்தில் உறவும் பாசமும் இப்போது தலையெடுக்கின்றன.

அவள் வந்ததும் சூழ்நிலையே மாறிவிடுகிறது. குடும்ப ஒற்றுமைக் குப் போராடியவளல்லவா தாரை? சுக்ரீவனை அருகில் அழைக்கிறான் வாலி. அன்போடு பேசுகிறான். 'நாம் இருவரும் ஒரே சமயம் உயர் வாயிருக்கக் கொடுத்து வைக்கவில்லை. ஒருவர் மாறி ஒருவர்தான் சுகமும் பதவியும் பெறலாம்! சரி, அங்கதனை நன்றாக நடத்து. தாரை மகாபுத்திசாலி. அவள் ஒன்றை நல்லதென்று சொன்னால் அது வேறுவிதமாக ஆனதேயில்லை.' என்று சிபார்சு செய்கிறான்.

யதேஷா ஸாதுஇதி ப்ருயாத் கார்யம்தத் முக்தஸம்சயம் 8

பின் தம்பியைப் பற்றிக் கவலை. 'ராமனுக்கு நீ செய்ய வேண் டிய உதவியை அவசியம் செய்து முடி. அதர்மமான செயலாயிருப் பினும் சொன்னபடி செய்யாவிட்டால், ஏமாற்றமடைந்தவன் உன்னைத் துன்புறுத்துவான்' என்று கூறி இந்திரன் கொடுத்த பொன் மாலையைக் கழட்டி தம்பிக்கு அணிவிக்கிறான்.

கடைசியாக, மகனை அணைத்துப் புத்திமதி கூறுகிறான். 'சமயம் அறிந்து குறிப்பறிந்து, சுக்ரீவனுக்கு இதமாய் நடந்து கொள். என் னிடம் செல்வமாய் வளர்ந்துவிட்டாய். இனி நீ அப்படியிருந்தால் சுக்ரீவனுக்குப் பிடிக்காது' என்று சொல்லி உயிர்விடுகிறான் வீரன்.

வாலியின் உடலின்மீது விழுந்து புலம்புகிறாள் தாரை. 'நான் சொன்ன சொல்லை நீ ஏற்கவில்லை. உன்னைத் தடுக்கவும் சக்தியற்றவள் நான். நீ மடிந்துவிட்டாய். உன் உயிரோடுகூட என் உயர்வும் குலைந்து செல்லுகிறது.'

சமாதானம் சொல்லுகிறான் ராமன். 'விதியே எல்லாவற்றிற் கும் காரணம். எல்லா உயிர்களும் அதன்படியே நடக்க வேண்டும். விதியை வெல்வார் உண்டோ?' என்கிறான். 'அழுது புலம்பினால் இறந்தவர்க்கு ஆகாது' என்றும் சொல்லி ஆறுதல் செய்கிறான்.

உருக்கமான சம்பவம். சோகம், வீரம். அத்புதம் முதலிய ரஸங் கள் நிறைந்த காட்சியை நாடகம் போல் காட்டிவிட்டார்கள் கவிகள். ஆயினும், வாலியைக் கொன்றது தீராத பிரச்சினை.

தன்னைப் போன்ற நிலையிலிருந்த சுக்ரீவனைக் கண்ட ராமனுக்கு நிலைக்கண்ணாடியில் தன்னையே பார்ப்பது போலிருந்தது. ('ஆத்மானு மானுத் பச்யாமி') அவனது உதவியால் ஸீதையைத் தேட முடியு

மென்று கேள்வியுற்றபின் அவனுக்கு 'எது கேட்டாலும் செய்கிறேன்' என்று வாக்களிப்பது எளிதாகிவிட்டது. 'இன்றே கொல்லுவேன்' என்று உறுமியபோது 'தாரம் கவர்ந்தான்' என்ற சொல் ஒன்றே மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது. அது எவனுயிருந்தால் என்ன? ராவணனை வாலி உருவத்தில் கண்டான் ராமன். (சுக்ரீவனைத் தன் உருவமாய்க் கண்டபின் இது இயற்கையாய் நிகழ்ந்தது.) ஆகவே 'அவன் என் கண்ணெதிரில் வரட்டும். தொலைத்துவிடுகிறேன்' என்ருன். எதிரில் கண்ட வாலியே மனத்தில் கற்பனை செய்த ராவணன் எனக் கருதியது இயற்கையாய் ஏற்படும் விந்தை.

ஏன் மறைந்து கொன்ருன் என்ற கேள்வி இன்னும் நிற்கிறது. வாலியின் வலிமையைப் பற்றிக் கேட்ட பின்னர் நேரில் போர் செய்வது யுக்தியில்லை என நினைத்திருந்தால் அது இயற்கையே. ஆனுல் நுட்பமாகப் பதிந்து கிடந்த வேறு காரணமும் இருக்கலாம். தனது சொந்த அனுபவத்தில் 'தாரம் கவர்ந்தான்' நேரில் போர் செய்தா பறித்தான்? பொன்மானைக் காட்டிப் பெண்மானைக் கவர்ந்தது எவ்வளவு கொடிய வஞ்சனை! இப்போது தான் மட்டும் நேரில் எதிர்த்து வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டுமோ? தாரம் கவர்ந்தான் எல்லாருமே வஞ்சகர்; இரக்கம் காட்டக் கூடாது!

அறிவுகொண்டு ஆராய்ந்து பார்ப்பவருக்குக் காரணங்கள்தான் முக்கியம். ராமனை தருமத்தைக் கடைப்பிடிக்கும் இயந்திரம் எனக் கருதினுல் அவன் செயல் நியாய விசாரணைக்கு முரண்பட்டதா இல்லையா என்பதுதான் முக்கியம். ஆனுல் இதயத் துடிப்புள்ள மனிதப் பிறவிக்கு நிகழக் கூடிய உணர்ச்சிப் பெருக்கை எடுத்துக் காட்டும் கவிகள் ராமனை முழுமனிதனுக அறிமுகம் செய்விக்கிருர்கள். 'நான் என் வசம் இல்லை' (வால்மீகி) 'தேவியைப் பிரிந்த பின்திகைத்தனை செய்கை' (கம்பன்). இதுதான் நுட்பம்.

தாரம் இழந்தோர் பலர். நாடிழந்தோர் சிலர் இருக்கலாம். இரண்டும் இழந்து அநாதை போல் காட்டில் திரிய வேண்டிய நிலையிலுள்ளவர் எத்தனை பேர்? அந்த நிலையை நெஞ்சினுல் உணரும் சக்தியுடையவர்களே ராமன் செயலைப் புரிந்துகொள்ளலாம். மற்றவருக்குத் தர்க்கமே எஞ்சி நிற்கும்.

இதன்பின் கம்பன் வடித்த சித்திரம்
காட்டப்பெற வேண்டும்

# 18

## 'வாலி சென்ற வழி...'

முறைப்படி ஈமக்கிரியைகள் நடக்கட்டும்' என்று சொல்லுகிறுன் ராமன். 'விதியை வெல்வார் உளரோ!' என்று தாரைக்குச் சமாதானம் சொன்னபோதிலும் சுக்ரீவனேடு கூட நின்று சடங்குகளில் பங்கெடுத்துக்கொள்ளுகிறுன். இருவருக்கும் சோகம் சமானமாயிருந்தது என்கிறுர் வால்மீகி (ஸ்மான சோக.:)

வஞ்சமும் ஆத்திரமும் தூண்டவே கொடுமை இழைக்கத் துணிந்தனர் நண்பர். இப்போது மயானக் காட்டில் உடன் பிறந்த பாசமும் உயர் குலத்துக்குரிய கருணையும் இணைந்து நிற்கின்றன. பிணைப்பது சோகம்.

மறுநாள் ஊரிலுள்ள பெரியோரெல்லாம் ஒன்றுகூடி சுக்ரீவனுக்கு முடிசூட்ட ஏற்பாடு செய்கிறுர்கள். ஹனுமான் ராமனை அணுகி விழாவை நடத்திவைக்கும்படி வேண்டுகிறுன்.

'நான் தந்தையின் ஆணைப்படி பதினுன்கு வருட காலம் ஊருக்குள் நுழைய மாட்டேன். அபிஷேகம் நடக்கட்டும்' என்று ஆசி கூறி சுக்ரீவனைப் பார்த்துச் சொல்லுகிறுன். 'இதே நாளில் அங்கதனை யுவராஜன் ஆக்கிவிடு. இப்போது ஆவணி மாதம். அடுத்துக் கார்த்திகை வரை ஒரு காரியமும் செய்யமுடியாது. மழை காலம். ஆனுல் கார்த்திகை வந்ததும் ராவண வதத்துக்கு வேண்டிய முயற்சிகள் தொடங்க வேண்டும்' விமரிசையாய் மகுடாபிஷேகம் நடக்கிறது. மனைவியையும் அரசையும் அடைந்த சுக்ரீவன் ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறுன்.

தனிமையிலிருக்கும் ராமனே தம்பியிடம் அடிக்கடி தன் குறையைச்சொல்லிப் புலம்பிக்கொண்டு காலம் கழிக்கிறுன்.

'சுக்ரீவன் சுகமாயிருக்கிறான். வைரியை வென்று மனைவியை அடைந்துவிட்டான். நானோ அரசிழந்து வாடுகிறேன்' என்கிறான்.

**இமா: ஸ்பீதகுணா வர்ஷா: ஸுக்ரீவ ஸுகம் அச்னுதே**
**விஜிதாரி: ஸதாரஸ்ச ராஜ்யே மஹதி சஸ்தித:**
**அஹம்து ஹ்ருததாரஸ்ச ராஜ்யாச்ச மஹதஸ்ச்யுத:** 1

'மழை நின்று சரத் காலம் வரும்வரை பொறு அண்ணா' என்று ஆறுதல் கூறுகிறான் லக்ஷ்மணன். சுக்ரீவன் தயவையும் (வெள்ளம் வடிய) நதிகளின் தயவையும் எதிர்பார்த்துக் காத்திருக்கிறான் ராமன்.

இடியும் மின்னலும் நாளடைவில் குறைந்து ஆகாயம் நிர்மலமாயிருக்கிறது. அறிவிற் சிறந்த ஹனுமான் நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறான். சுக்ரீவனோ கடந்து சென்ற நாட்களுக்கு ஈடு செய்பவன்போல் மதுவிலும் காமத்திலும் மூழ்கியிருக்கிறான். மனைவி ருமையோடு கூட தாரையும் அவனுக்குப் பத்னியாகிவிட்டாள். தாரம் இழந்தோனுக்கு இரு தாரம்!

(குறிப்பு : சுக்ரீவன் தனது சகோதரன் மனைவியைத் தனதாக்கிக் கொண்டது கவனிக்கத்தக்கது. எந்தக் குற்றத்துக்காக வாலி கொடிய 'தண்டனை' அடைந்தானோ அதுவே மீண்டும் சகஜமாய் நடக்கிறது. இவன் வாலியைக் கொன்று அவன் மனைவியை அடைந்ததற்கும், அவன் சுக்ரீவனை விரட்டி ருமையை அடைந்ததற்கும் ஒன்றும் வித்யாசம் இல்லை. அவனாவது தம்பியை உயிரோடு விட்டான்!

உண்மையில் இது கிராமிய வழக்கம்; இன்றும் காணலாம். தனது நாகரீகமான க்ஷத்திரிய குலப்பண்பைக் கொண்டு வாலியின் செயலைச் சீர்தூக்கிப் பார்த்த ராமனுக்கு தன்னைப் போலவே சுக்ரீவனும் அவமானத்தால் தவிப்பதாகத் தோன்றியது. தன்னைப் போலவே பிறரையும் கருத வேண்டும் என்ற உயர்நோக்கமே சில சமயம் விபரீதத்தில் கொண்டு போய்விடும்.)

இன்பத்தில் திளைத்திருக்கும் சுக்ரீவனுக்குக் கடமையை நினைவூட்டுகிறான் ஹனுமான். 'நீ அடைந்திருக்கும் மேன்மைக்கு ராமனே காரணம். இனி அவனுடைய காரியத்தை நீ கவனிக்க வேண்டும். தன் உயிருக்கு ஆபத்தைப் பொருட்படுத்தாமல் உனக்கு உதவினான். அவன் மனைவியைத் தேட வேண்டியது நம் பொறுப்பு.'

**ப்ராணத்யாகா விசங்கேன க்ருதம் தேன தவ ப்ரியம்**
**தஸ்ய மார்காம வைதேஹீம் ப்ருதிவ்யாமபி சாம்பரே** 2

படை வீரர் அனைவரையும் திரண்டு வரும்படி உத்தரவிடுகிறான் சுக்ரீவன்.

இதற்கிடையில் ஆகாயத்தைப் பார்த்து நிற்கும் ராமன் தன் தம்பியிடம் தினமும் தன் குறைகளைச் சொல்லி வருந்துகிறான். ஸீதையை நினைக்கிறான், நடந்த இன்னல்களை நினைக்கிறான். இன்னும் எத்தனை நாள்? 'சுக்ரீவன் தயவு புரியமாட்டேன் என்கிறானே! அரசனாகிவிட்டான் அல்லவா? நான் அனாதை. ராவணன் என்னை அவமானப்படுத்திவிட்டான். ஊரைவிட்டு வெளி வந்தேன். சுக்ரீவனையே சரணம் எனக் கொண்டுள்ளேன் என்று நினைக்கிறான் அவன்' என்று புலம்புகிறான். மனம் நொந்திருக்கும்போது எல்லோரும் தன்னைக் கேவலமாக நடத்துவதாகத் தோன்றுகிறது.

ப்ரியாவிஹீனே து: கார்த்தே ஹ்ருத ராஜ்யே விவாஸிதே
க்ருபாம் ந குருதே ராஜா ஸுக்ரீவோ மயி லக்ஷ்மண
அனாதோ ஹ்ருத ராஜ்யோ யம் ராவணேன சதர்ஷித:
தீனோ தூரக்ருஹ: காமீ மாம் சைவ சரணம் கத: 3

'எதற்கும் நீ போய் நினைவூட்டு. போகத்தில் மூழ்கியிருப்பவனுக்கு நீதி புகட்டுவாயாக. நன்மையோ தீமையோ சொன்ன சொல் காப்பவனே உத்தமன்' என்கிறான். (அவன் உடன்பிறந்தோனைக் கொன்றுவது அரசை மீட்டுக் கொடுத்துத்தான் தனது ஆணையை நிறைவேற்றியதை நினைவுறுத்துகிறான் போலும்.)

சுபம் வா யதி வா பாபம் யோஹி வாக்யம் உதீரிதம்
ஸத்யேன பரிக்ருஹ்ணாதி ஸ வீர: புருஷோத்தம: 4

பிறகு சற்றுக் கோபம் வருகிறது. 'என் கோபம் எப்படிப்பட்டதென்று சுக்ரீவனுக்குச் சொல்' என்கிறான். 'வாலி சென்ற வழி இன்னும் திறந்துதானிருக்கிறது. அவன் போன வழி போகாதே. சொன்ன சொல் தவறாதே' என்று எச்சரிக்கை செய்யச் சொல்லுகிறான்.

ந ச ஸங்குசித: பந்தா யேன வாலி ஹதோ கத:
ஸமயே திஷ்ட ஸுக்ரீவ மா வாலிபதம் அன்வகா: 5

சேதி சொல்லியனுப்பும் ராமன் சுக்ரீவனைக் கொன்றாலும் பாவமில்லையென்று சொல்வதாக வர்ணிக்கிறார் கம்பன். ஏன்? அவன் நன்றி கொன்றவன். நட்பை வேறொடு அறுத்து விட்டவன். மெய்யைச் சிதைத்துச் சொல் தவறியவன். 'செய்ந்நன்றி கொன்றார்க்கு உய்வில்லை' என்ற பழமொழிக்கேற்ப அவன் வாழத் தகுதியற்றவன் அல்லவா? 'எனினும் அவனது கருத்தை அறிந்து வா' என்று கூறியனுப்புகிறான்.

நன்றி கொன்றரு நட்பினை நார் அறுத்து
ஒன்று மெய்ம்மை சிதைத்து உரை பொய்த்துளான்
கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்கும் ஆல்
சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்

'அவனுக்கு முடிவை யுண்டாக்கும் அம்பும் என்வசம் இருக்கிறதென்று சொல்' என்று முடிக்கிறான்.

லக்ஷ்மணனுக்குக் கோபம் பொங்கி எழுகிறது. இயற்கையில் பொறுமையற்றவன். அவனைத் தூண்டிவிட்டால்? 'சுக்ரீவன் அதிக நாள் அரசனாயிருக்கமாட்டான். அவனை அரசனாக்கியதே தவறு. விரைவில் போய்த் தமையனைக் காண்பான். பொய்யனை இன்றே கொன்று விடுகிறேன்.' என்று உறுமுகிறான்.

ந தாரயே கோபம் உதீர்ணவேகம் நிஹன்மி
ஸூக்ரீவம் அஸத்யம் அத்ய 6

ராமனுக்குச் சற்றுப் பயம் ஏற்படுகிறது. ('இன்றே கொல்லுவேன்' என்ற வார்த்தை விபரீதமானது!) தம்பியைச் சமாதானப் படுத்துகிறான். 'உன் போன்றவன் தவறான காரியம் செய்யலாமா? குற்றத்தை உயர்குணத்தால் வெல்லுபவனே உத்தமன்' என்று அறிவு புகட்டுகிறான்.

பாபம் ஆர்யேண யோ ஹந்தி ஸ வீர: புருஷோத்தம: 7

சுக்ரீவனோடு சமாதானமாகப் பேசிக் கொடுஞ் சொற்களைத் தவிர்க்கும்படி உத்தரவிடுகிறான்.

இது ராமனின் குணாதிசயங்களில் ஒன்று. தனிமையில் உணர்ச்சி வசப்பட்டு இயற்கையாய்ப் பேசுவான். ஆனால் செயல் என்று வரும் போதோ அல்லது பிறர் முன்னிலையிலோ, கொள்கையும் தருமமும் அவனைக் கட்டுப்படுத்தும். அப்போது அவன் சொற்களும் தக்கபடி அமையும். 'வாலி சென்ற வழி அடைபட்டுப் போகவில்லை' என்று அவனே சொன்னான். அதன்படி 'சுக்ரீவனைக் கொன்று விடுகிறேன்' என்று லக்ஷ்மணன் சொன்னதும் அது தவறு என்று நீதி உரைக்கிறான். அமைதியும் உயர்குணமும் வேண்டும் என்கிறான்! இயற்கை உணர்ச்சிகளுக்கும் மேற்கொண்ட கொள்கை காட்டும் வழிக்கும் உள்ள போராட்டத்தை அடிக்கடி நுட்பமாகத் தெரிவிக்கிறார் வால்மீகி.

என்ன சொன்னபோதிலும் கோபமாகவே போகிறான் லக்ஷ்மணன். அது அவன் இயற்கை. வழியில் பார்த்தவரெல்லாம் பார்த்தே உணர்ந்து கொள்ளும் அளவுக்குக் கோபம்! விரைவில் செய்தி சுக்ரீவனுக்கு எட்டுகிறது.

பல மங்கையருக்கிடையே மது மயக்கத்தில் இருக்கிறான் சுக்ரீவன். அங்கதன் சொன்னதைக் கேட்டதும் பயம் உண்டாகிறது. வெளியே காத்திருக்கும் லக்ஷ்மணனைச் சந்தித்துப் பேச தாரையை அனுப்புகிறான். 'பிறகு நான் பேசுகிறேன். பெண்களிடம் கடுமையாக நடந்து கொள்ளமாட்டார் பெரியோர்' என்ற காரணத்தோடு விளக்குகிறான்!

மதுபானத்தால் சிவந்த கண்கள். நழுவிய ஆடை. தள்ளாடும் நடை. லக்ஷ்மணன் முன்வந்து நிற்கிருள் தாரை. அவளைப் பார்த்து சற்று நாணத்தோடு தரையை நோக்கினுன் லக்ஷ்மணன் என்கிருர் வால்மீகி. அவளோ நாணம் நீங்கிய நிலையில் இருக்கிருள். 'ஏன் கோபம்? உங்கள் உத்தரவை எவனுவது மீறி நடந்தானு?' என்று கொஞ்சும் பாவனையில் கேட்கிருள்.

அவள் சகஜமாகப் பேசுவதைக் கண்டதுமே குரல் தணிந்து விடுகிறது லக்ஷ்மணனுக்கு. 'உன் கணவன் இன்பத்தில் இருக்கிருன். சோகத்தில் இருக்கும் எங்களை மறந்துவிட்டான். சொன்னபடி நான்கு மாதங்களாகியும் தன் கடமையை உணரவில்லை. சதா மதுபானத்தில் ஆழ்ந்திருக்கிருன்' என்கிருன். சொல்ல நினைத்ததில் பாதிதான் வெளி வருகிறது.

'கோபம் கொள்ளக் காரணமேயில்லை' என்று ஆரம்பிக்கிருள் தாரை. கடமையைப் பற்றி எடுத்துக்கூறிய லக்ஷ்மணனுக்குக் 'கோபம் கொடிது' என்னும் பொருள்பற்றி சொற்பொழிவு ஆற்று கிருள். அதுவும் தன்னினத்தவர் மேல் கோபம் கொள்ளலாமோ? 'உங்கள் உணர்ச்சி வேகம் தெரிகிறது. ஆனுல் ஆகவேண்டிய காரியம் நான் அறிவேன். சுக்ரீவன் மது மயக்கத்தில் இருந்தால் என்ன? உங்கள் காரியம் தடையின்றி நடந்து கொண்டிருக்கிறது பல திக்கு களிலிருந்து வானர வீரர்கள் வந்து கூடிவிட்டார்கள். இனி ஸீதை யைத் தேடிக் கிளம்ப வேண்டியதுதான்' என்கிருள். 'சுக்ரீவன் காமத்தில் மூழ்கியவன் என்ருல் அது உண்மைதான். அவனுக்கு சபலம் அதிகம். ஆனுல் பெரிய முனிவரெல்லாம் இதற்கடிமையானது உலகறிந்த விஷயமாயிற்றே?' என்று கூறி, 'உமக்கோ காமத்தில் ஈடுபாடில்லை. அதனுல்தான் கோபம் ஓங்கி நிற்கிறது' என்று விஷம மாய்க் குறிக்கிருள்!

**ந காமதந்த்ரே தவ புத்திரஸ்தி த்வம் வை யதா**
**மன் யுவசம் ப்ரபன்ன: 8**

'சரி உள்ளே வாருங்கள். நண்பர்கள் அந்தப்புரத்துக்கு வரலாம்' என்று கூறி அழைத்துச் செல்லுகிருள் தாரை. லக்ஷ்மணன் தோற்று விட்டான்.

தாரை தன் சாதுர்யத்தை நிலைநாட்டிவிட்டாள். பேச்சின் வல்லமையோடு பெருந்தன்மையும் தன்னம்பிக்கையும் உள்ளவள். ராணியாயிருந்தவள் அல்லவா?*

உள்ளே ருமையை அணைத்தவண்ணம் கொலுவீற்றிருக்கிருர் சுக்ரீவ மகாராஜா! கோபம் தலைக்குமேல் வருகிறது லக்ஷ்மணனுக்கு.

---

* லக்ஷ்மணனைத் தாரை வெளியே கண்டு பேசிய சம்பவம் இடைச் செருகல் எனக் கருதப்படுகிறது.

சொல்லவேண்டியதெல்லாம் ஒன்றுவிடாமல் சொல்லி 'வாலி சென்ற வழி அடைபடவில்லை' என்று முடிக்கிருன் இப்போது.

இடைமறித்துப் பேசுகிருள் தாரை. சுக்ரீவன் திகைத்து நிற்கிருன் போலும். ''வானரர்க்கு அரசன் அவர். அவரை இப்படிச் சொல்லலாகாது. ராமன் தயவால் அரசு பெற்று, என்னையும் ருமையையும் அடைந்தார். அதை மறக்கவில்லை. ராமனுக்காக என்னையும் அரசையும் ருமையையும் துறக்கத் துணிவார்'' என்று சமாதானம் செய்கிருள். லக்ஷ்மணன் சற்று கோபம் தணிந்து நிற்கிருன். உடனே தைரியமடைந்து பேச ஆரம்பிக்கிருன் சுக்ரீவன்.

அவன் பேச்சைக் கேட்கக்கேட்க லக்ஷ்மணன் முகம் மலர்ந்து விடுகிறது. 'நீ தருமம் அறிந்தவன் நன்றியுடையவன். என் தமையனைத் தவிர நீ ஒருவனே இவ்விதம் பேசக்கூடியவன்' என்று புகழ்மாலை சூட்டுகிருன்.

**தோஷக்ஞஸதி ஸாமர்த்யே கோன்யோ பாஷிதுமர்ஹதி**
**வர்ஜயித்வா மம ஜ்யேஷ்டம் த்வாம் ச வானரஸத்தம** 9

'சோகத்தில் ஆழ்ந்திருக்கும் ராமன் சொல்லைக் கேட்டு நான் கொடுமையாகப் பேசிவிட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்' என்று முடிக்கிருன்.

**யச்ச சோகாபிபூதஸ்ய ச்ருத்வா ராமஸ்ய பாஷிதம்**
**மயா த்வம் பருஷாண்யுக்தஸ் தச்ச த்வம் க்ஷந்துமர்ஹஸி** 10

(அந்த அளவுக்கு அவனை மாற்றிவிட்டாள் தாரை! அவளை 'இசையினும் இனிய சொல்லாள்' என்று வர்ணிக்கிருர் கம்பன்.)

வானரர்கள் புடைசூழ சுக்ரீவன் லக்ஷ்மணனேடு ராமன் இருப்பிடம் செல்கிருன். வணங்கி நிற்கும் சுக்ரீவனை அணைத்து அன்போடு பேசுகிருன் ராமன். 'உன் போன்ற நண்பர்கள் இருப்பதால்தான் உலகில் மழை பெய்கிறது. சூரியனும் உதிக்கிருன்' என்கிருன்.

காமத்தில் மூழ்கியவனைக் கொன்றுவிட வேண்டுமென்று தோன்றியது. இப்போது அவனை வாயாரப் புகழ்கிருன். நினைத்த காரியம் கைகூடியதன் விளைவு! கவலையுற்று நெஞ்சம் பதைக்கும் நிலையில் அளவுக்கு மீறி இகழ்வதும் பின்னர் புகழ்வதும் மனித இயல்பு என்பதை விளக்குகிருர் கவி.

ஏன் கம்பன் இங்கும் நினைப்படவில்லை?

# 19

# ‘நீ உரைப்பாய் அனுமானே’

‘வானர வீரர்கள் வந்து கூடிவிட்டனர். இனி ஆக வேண்டியது என்னவென்று உத்தரவு அளிக்கலாம் என்கிறான் சுக்ரீவன் ‘எனக்கு வேண்டியது ஒன்றுதான். என் ஜானகி உயிரோடிருக்கிறாளா இல்லையா என்று அறிந்து வரவேண்டும். ராவணன் இருக்குமிடம் தெரியவேண்டும். ஆனால் இவர்களுக்கெல்லாம் நீயே தலைவன். ஆதலால் நீதான் உத்தரவு கொடுக்க வேண்டும் எனக்கு அதிகாரம் இல்லை’ என்று ராமன் சொல்லுகிறான்.

**ஞாயதாம் மம வைதேஹீ யதி ஜீவதிவா ந வா**
**ஸ ச தேசோ மஹா ப்ராக்ஞ யஸ்மின் வஸதி ராவண:**
**.........................**
**.........................**
**த்வமேவ ஆக்ஞாபய விபோ மம கார்ய விநிஸ்சயம்.** 1

படையினருக்கு உத்தரவு கொடுக்கிறான் சுக்ரீவன். நாற்திசைகளிலும் சென்று தேடிவரச் சொல்லி அனுப்புகிறான். விநதனென்பவனின் தலைமையில் ஒரு குழு கிழக்கே போகிறது. சதபலி வடக்கே போகிறான். தாரையின் தகப்பன் ஸுஷேணன் (சுக்ரீவனின் மாமனார் என்று குறிக்கிறார் கவி) மேற்கே செல்லுகிறான். தென்திசை முக்கியமானது. அதற்கு ஹனுமானைப் பொறுக்கியெடுத்து அவனோடு ஜாம்பவான், அங்கதன், நீலன் முதலிய வீரர்களையும் அனுப்புகிறான். விவரமாகச் சொல்லியனுப்புகிறான் சுக்ரீவன். எப்படியும் ஒரு மாதத்துக்குள் திரும்பி வரவேண்டும் என்று உத்தரவிடுகிறான்.

ஹனுமானைத் தனியே அழைத்து ‘நீ அறிவும் வலிமையும் படைத்தவன். உன்னால்தான் காரியம் நிறைவேறும் என்று நம்பியிருக்கிறேன்’ என்கிறான். ராமனும் உற்சாகமடைந்து அவனிடம் தன் மோதிரத்தைக் கொடுக்கிறான். ‘இதைப் பார்த்து நீ என்

நண்பன் என்று அறிந்து கொள்வாள் ஸீதை. உன் செயல் வெற்றி பெறுமென்றே நினைக்கிறேன்' என்கிறான்.

மோதிரம் தந்தபோது அடையாளமாக ஓரிரண்டு விவரங்களும் சொல்லியனுப்பியதாகக் கற்பனை செய்கிறார் கம்பன். ஒன்றாய் அனுபவித்த இன்னல்களை நினைவுறுத்தி அன்பை வளர்ப்பது இயற்கை தானே?

''அயோத்தியைவிட்டு வெளியேறியபோது நீ வர வேண்டா மென்று தடுத்தும் கேளாமல் 'அரசையே துறந்து செல்லும் உனக்கு நான்தானா துன்பம் தருபவள்? என்னைத் தவிர மற்றவையெல்லாம் இன்பம் தருபவையோ?' என்று கேட்டதை நினைவுறுத்துவாய்'' என்கிறான் ராமன்

**ஆனபேரரசிழந்து அடவிசேர்வாய் உனக்கு**
**யான் அலாதன வெலாம் இனியவோ எனா.**

''ஊரைவிட்டு வெளியே போகும் சமயம் மதில் சுவரைத் தாண்டுவதற்குள் 'இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது காடு' என்று கேட்டாள் பேதை. அதையும் நினைவுறுத்துவாய்'' என்கிறான்.

**மல்லன் மாநகர் துறந்தேகு நாள் மதிதொடும்**
**கல்லின் மாமதில் மணிகடைந்திடு தன்முன்**
**எல்லைதீர்வரிய வெங்கானம் யாதோ எனாச்**
**சொல்லினாள் அஃதெல்லாம் உணர நீ சொல்லுவாய்**

வானரர் எல்லோரும் மழை காலத்து ஈசல்கள் போலப் பல திசையிலும் கிளம்பிப் போகிறார்கள். 'ராவணனைக் கொல்லுவோம்,' 'சீதையோடு திரும்புவோம்' என்றெல்லாம் கோஷம் செய்து கொண்டு போகிறார்கள் கூட்டம் கூட்டமாக 'நான் ஒருவனாய் நின்று கொல்லுவேன், அவன் மட்டும் எதிரில் வரட்டும்' என்று ஒவ்வொருவனும் வீம்பு பேசுகிறான். கூட்டத்தில் சேர்ந்து கொண்டால் ஒலி எழுப்புவது சுலபம்!

**க்ஷ்வேலந்தோ தாவமானாஸ்ச யயு: ப்லவகஸத்தமா:**
**அஹம் ஏகோ ஹனிஷ்யாமி ப்ராப்தம் ராவணம் ஆஹவே.** 2

ஸீதையைத் தேடிச் சென்றவர்கள் ஒவ்வொருவராகத் திரும்பி வருகிறார்கள். தெற்கு நோக்கிச் சென்ற ஹனுமான் மட்டும் திரும்பவில்லை. 'அவனே ஜானகியைத் தேடித் தருவான்' என்று ராமனுக்கு உறுதி கூறுகிறான் சுக்ரீவன்.

அங்கதன், ஜாம்பவான் முதலோருடன் சென்ற ஹனுமான் விந்திய மலைச்சாரலில் உள்ள குகைகளிலும் பள்ளத்தாக்குகளிலும்

தேடுகிறான். நீரற்று 'நிர் ஜலமா'யிருந்த பிரதேசம் மனித சஞ்சார மின்றி 'நிர் ஜனமா'யுமிருந்தது என்று வர்ணிக்கிறார் வால்மீகி. காடு, மலை, மேடு, குன்று எல்லாம் தேடியாகிவிட்டது. கவலையும் களைப்பும் மேலிட்டு நின்றபொழுதில் கரிய உருக்கொண்ட ஒருவனை ராவணன் எனக்கருதிக் கொல்லுகின்றனர்! ஆனால் ஸீதை எங்கே?

வெய்யில் நுழையாதபடி இருள் சூழ்ந்த மலைக் குகைகளில்* நுழைந்து புறப்படுகிறார்கள். ஒரு இடத்தில் ஒருவருக்கொருவர் கை கோர்த்துக் கொண்டு, தடவித் தடவிச் செல்லவேண்டியிருந்தது என்கிறார் வால்மீகி. வழி தெரியாமல் தவித்து, ஒரு பெண்ணின் உதவியால் வெளியே வருகிறார்கள்.

இப்படி அலைந்து திரிந்து ஒரு மாத காலம் கடத்திவிட்டார்கள். மேலே செல்ல வழி தெரியவில்லை. மனதில் சோர்வு ஏற்படுகிறது. அங்கதன் சொல்லுகிறான், ''சுக்ரீவன் குறித்த தவணை தாண்டிவிட்டது. திரும்பிப் போனால் இனி மரணம்தான் நமக்கு தண்டனை. இங்கே தற்கொலை செய்து உயிர்விடுவதே மேல்.''

ப்ராயோபவேசனம் யுக்தம் ஸர்வேஷாம் ச வனௌகஸாம் 3

அவன் நம்பிக்கையிழந்து பேசுவதற்கு ஒரு காரணம் உண்டு. சுக்ரீவன் மனமுவந்து யுவராஜ பட்டம் அளிக்கவில்லை. ராமனது பெருந்தன்மையால்தான் அது கிடைத்தது. ஆகையால் சுக்ரீவன் அது பற்றி மனக்கடுப்பும் வைரமும் கொண்டிருப்பான் என்று நினைக்கிறான். வாய்விட்டுச் சொல்லுகிறான். கொன்றுவிடுவான் என்றும் பயப்படுகிறான்.

ந சாஹம் யௌவராஜ்யேன ஸுக்ரீவேண அபிஷேசித:
நரேந்த்ரேண பிஷிக்தோஸ்மி ராமேணாக்லிஷ்ட கர்மணா
ஸ பூர்வம் பந்தவைரோ மாம் ராஜா த்ருஷ்ட்வாகவ்யதிக்ரமம்
காதயிஷ்யதி தண்டேன தீக்ஷ்ணேன க்ருதநிஸ்சய: 4

எல்லோரும் அதை ஆமோதிக்கிறார்கள். தாரன் என்றொருவன் 'ஏன் கவலைப்படுகிறீர்கள்? இங்கேயே தங்கி சுகமாக வாழலாம். திரும்பிப் போனால்தானே ஆபத்து? சுக்ரீவன், ராமன் மட்டுமல்ல தேவேந்திரனே முயன்றால்கூட இங்கு நம்மைத் தேடிப் பிடிக்கமுடியாது' என்கிறான்.

உற்சாகமிழந்த அங்கதன் பிடிவாதமாகப் புல்லை விரித்து அதன் மேல் படுக்கிறான் (பட்டினி கிடந்து உயிர்விடத் தீர்மானித்தவரின் அறிவிப்பு). வானரரெல்லாம் சூழ்ந்து நின்று சுக்ரீவனை நிந்திக்கிறார்கள். காலஞ் சென்ற வாலியின் பெருமையைப் பாடுகிறார்கள்.

---

* இத்தகைய இடங்களை மத்ய ப்ரதேசத்தில் இன்றும் காணலாம். 'Ravines' என்று சொல்லப்படும் குகைகளில் கள்வர் ஒளிந்து வாழ்கின்றனர்.

இந்நிலையில் செய்வதென்னவென்று தெரியாமல் நாக்குழறிப் பேசினூர்கள் என்கிறூர் கம்பர்.

**தேவியைக் காண்கிலார் செய்வதோர்கிலார்**
**நாவுறக்குழறிட நவில்கின்றூர் அரோ.**

ஹனுமான் மட்டும் மேலும் ஊக்கத்தோடு சீதையைத் தேடுதல் ஒன்றே வழி என்கிறுன். 'தேடியும் அகப்படாவிட்டால் துயரில் சிக்கிய சீதைக்காகப் போராடி உயிர்விட்ட ஜடாயுவைப்போல் மடிவது மேன்மை. அப்படியன்றி இவ்வாறு மாய்ந்து போவது பழிக்குரிய செயல்' என்கிறுன்.

**நாடுதலே நலம் இன்னும் நாடி அத்**
**தோடலர் குழலிதன் துயரின் சென்றுஅமர்**
**வீடிய சடாயுவைப்போல் வீடுதல்**
**பாடவம், அல்லது பழியிற்ரும் என்ருன்.**

மனம் குழம்பி நிற்கின்றனர் வானரர். இது சமயம் சம்பாதி யென்றெரு கழுகினத்துத் தலைவன் வந்து பேசுகிறுன். அவன் ஜடாயுவின் சகோதரன். விவரமெல்லாம் அறிந்தபின் சம்பாதி உளவு சொல்லுகிறுன். ''ராமா, ஓ. லக்ஷ்மணு? என்று அலறிக்கொண்டு ஒரு பெண் போனுள். அவளே நீங்கள் தேடும் ஸீதையென்று நினைக்கிறேன். அவளைக்கொண்டு சென்றவன் யார் தெரியுமா? விச்ரவஸ் என்ற முனிவரின் புதல்வன், குபேரனின் தம்பி. ராவணன் என்ற பெயருடையோன். லங்காபுரிக்கு மன்னன்' என்கிறுன்.

''எனக்கெப்படித் தெரியுமென்ருல் என் மகன் சுபார்ச்வன் சொன்னுன், 'ஒரு நாள் மீன் பிடிப்பதற்காக இங்கு அருகிலுள்ள மகேந்திர மலையில் மடைத்தலையில் நீரைத்தேக்கி நின்று கொண்டிருந்தேன். அப்போது ஒளிமிக்கதோர் பெண்ணைக் கவர்ந்து கரிய உருவத்தோன் ஒருவன் என்னை வழிவிடும்படி வேண்டினுன். (அக்குறுகிய பாதை வழியாகத்தான் லங்கைக்குப் போக முடியும். மற்றெல்லாப் புறங்களிலும் நீர் சூழ்ந்திருக்கும் போலும்) 'சரி'யென்று வழிவிட்டேன். அவன் சென்றதும் எல்லாரும் என்னை வாழ்த்தினுர்கள். நல்ல வேளை, வழிவிட்டாய், இல்லையேல் துலைத்திருப்பான்' என்ருர்கள்! அவன்தான் ராவணன். அவளே ஸீதையென்று பின்னுல் தீர்மானமாகத் தெரிந்து கொண்டோம்,'' என்கிறுன்.

விவரம் அறிந்து ஊக்கம் அடைந்த வானரர்கள் மேலே செல்லுகிறுர்கள். நீர் நிலையை அடையும் வரையில் வெற்றி காண்போம் என்ற உற்சாகம். அருகில் சென்று கண்ணுக்கெட்டிய தூரம் வரை நீரையே கண்டதும் மறுபடி சோர்வு ஏற்படுகிறது. எப்படிக் கடப்பது? யார் கடப்பது? இரண்டு முக்கிய பிரச்னைகள்.

அங்கதன் எல்லோரையும் கூட்டி அவரவர் திறமையை எடுத்துரைக்கச் சொல்லுகிறான். கடலோ நூறு யோஜனை தூரம். பத்து முதல் ஆரம்பித்துத் தொண்ணூறு யோஜனை வரை, தத்தம் திறமையை அவரவர் எடுத்துச் சொல்லுகிறார்கள் (முக்கால் கிணறு தாண்டிய கதை போல) அங்கதனோ 'என்னால் போய்ச் சேர முடியும். ஆனால் திரும்பி வரத் தெம்பு இல்லை' என்கிறான். மீண்டும் குழப்பம். பட்டினி கிடந்து உயிர் விடுவதாக அறிக்கை விடுகிறார் தலைவர்!

வயது முதிர்ந்த ஜாம்பவான் ஹனுமானை அருகிலழைத்து அவனது வலிமையை அவனுக்கே அறிவிக்கிறான் 'வாயு புத்ரன் அல்லவா நீ? தாண்டுவதில் அவனுக்கொப்பான திறமை படைத்தவன் ஆயிற்றே' என்கிறான்.

**மாருதஸ் யௌரஸ: புத்ரஸ்தேஜஸா சாபி தத்ஸம:**
**த்வம்ஹி வாயுஸூதோ வத்ஸ ப்லவனே சாபிதத்ஸம: 5**

பிறப்பின் பெருமையை மட்டும் அன்றி அவன் செயல் வலிமையையும் எடுத்துரைப்பதாகச் சித்திரிக்கிறார் கம்பன். வானரர் அனைவரும் ஏகமானதாய் 'மாருதி ஒப்பார் வேறிலை' என்று கூறிய பின் ஜாம்பவான் புகழத் தொடங்குகிறான். 'எந்நிலையிலும் நன்மையையும் தீமையையும் ஆராய்ந்து சொல்லும் திறமை உடையவன் நீ. துணிந்து செயலில் ஈடுபடும் வல்லமையும் உண்டு, எதிரியை வெல்லவும் முடியும், வெற்றியோடு திரும்பியும் வருவாய். பகைவர் எதிர்த்து நின்றால் கொல்லவும் வல்லமை உண்டு. உனது தோள் வலிமைக்குக் குறையுண்டோ?'

**நல்லவும் ஒன்றோ, தீயவும் நாடி நவைதீரச்**
**சொல்லவும் வல்லீர், காரியம் நீரே துணிகிற்பீர்.**
**வெல்லவும் வல்லீர். மீளவும் வல்லீர் மிடலுண்டேல்**
**கொல்லவும் வல்லீர், தோள்வலி ஒன்றும்குறையாதீர்**

இவ்வளவும் உண்மைதானா? ஆம். 'போரில் வல்லவனான வாலியை வெல்லத் தந்திரம் சொன்னது நீ தானே' என்கிறான். ('வாலியைக் கொன்று சுக்ரீவனை அரசனுக்கிப் பெரும்படை திரட்டினாலன்றி அரக்கர் இருப்பிடம் தேடி அறிதல் அரிது' என்று ஹனுமான் ராமனுக்குச் சொன்ன யுக்தியை நினைவூட்டுகிறான்.

புகழ்வாசகம் கேட்கக் கேட்க உற்சாகம் ஏற்படுகிறது. உடலும் பூரித்துப் பெரும்பணிக்குத் தக்க நிலையை அடைகிறது. ஆனால் ஹனுமான் உள்ளத்தில் அடக்கம் குடிகொண்டிருக்கிறது.

ஜாம்பவான் 'மூவுலகையும் எட்டிய திரிவிக்ரமன் போல் வளர்ந்து வெற்றி காண்பாயாக' என்று ஆசி கூறுகிறான்.

விக்ரமஸ்வ மஹாவேகோ விஷ்ணுஸ்த்ரீன்விக்ரமானிவ. 6

('ஓங்கி உலகளந்த உத்தமன்' என்ற அடைமொழியை நினைவுறுத்துகிறது.)

உடல் பெருத்து ஆணவத்தோடு நிற்கும் ஹனுமானை வர்ணிக்க இக்கருத்தைப் பயன்படுத்துகிருர் கம்பன். பெரு வடிவு கொண்டு உயர்ந்த மாயோனைப் போல் நின்ருனும் ஹனுமான். திருமாலின் திருவடிக்கொப்பாக ஓங்கினுன் திருவடியென்னும் தன்மையுடையோன் என்கிருர்.

ஆனல் அடக்கம் நிறைந்த ஆஞ்சநேயன் 'உங்கள் எல்லோருடைய ஆசியும் ராமபிரானின் ஆக்ஞையும் எனக்கிரு சிறகுகளாக அமைந்து கருடனைப் போல் பறந்து செல்ல வலிமை அளிக்கும். அதைக் காணப் போகிறீர்கள்' என்கிருன்.

**இற்றைநும் அருளும் எம்கோன் ஏவலும் இரண்டு பாலும்**
**கற்றைவார் சிறைகளாகக் கலுழனிற் கடப்பல் காண்டிர்.**

மாபெரும் பணியில் ஈடுபடவிருக்கும் வீரன் மார்பு விரிந்து, தோள் வீங்கி, ஆர்ப்பரித்துத் தன்னைத்தானே உற்சாகப்படுத்திக் கொள்ளுகிருன். குன்றின்மேல் பல இடங்களில் நின்று கடலைப் பார்வையிடுகிருன்.

இக்காட்சியைப் பலவாறு சித்தரிக்கின்றனர் கவிகள். அசாத்யமான காரியத்தைத் துணிவுடன் ஏற்று வெற்றி காணப்போகும் ஒப்பற்ற தூதனைப் புகழக் கவிகள் கையாளும் உவமைகள் ஒப்பற்றவை. அவை மிகைபடக் கூறுவனபோல் தோன்ருதிருக்க வாசகர் உள்ளத்தில் அத்புத ரஸம் தோன்றுதல் அவசியம்.

மகேந்திர மலைமீது நின்ற ஹனுமான் கூர்மாவதாரமாகிய ஆமைமீது தோன்றிய மந்தரகிரியைப்போல் இருந்தான் என்கிருர் கம்பன். (மலைகடைந்து அமுதம் வந்ததுபோல் கடல் கடந்து மகிழ்ச்சியான செய்தி கொண்டு வரப்போகிருன் என்பது குறிப்பு) தரை அதிரும்படி நடந்து செல்லும் ஹனுமானின் வேகத்தால் மரங்களிலுள்ள புஷ்பங்களெல்லாம் உதிர்ந்து மலையெங்கும் பூக்கள் பரவியிருந்தன என்கிருர் வால்மீகி.

**ஸ சசால அசலஸ்சாபி முஹூர்த்தம் கபிபீடித:**
**தருணும் புஷ்பிதாக்ராணும் ஸர்வம் புஷ்பம் அசாதயத்** 7

புறப்படுமுன் நண்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு ஒரு ஆணையிடுகிருன் ஹனுமான். 'ராமபாணம் போல் ராவணன் ஊராகிய லங்கையை நோக்கிச் செல்வேன். அங்கு ஸீதையைக் காணு

விடில் தேவலோகம் சென்று தேடுவேன். ஆகாயத்திலும் தேடிக் கிடைக்காவிட்டால் அந்த அரக்கர் தலைவனை கட்டிப்பிடித்து இழுத்து வருவேன். எப்படியும் ஸீதையோடு கூடவே திரும்புவேன். அதற்காக லங்கையையே பெயர்த்தெடுத்து வரவேண்டி நேர்ந்தாலும் சரி' என்கிறான். உற்சாகம் தலைக்கேறி விட்டது!

நஹி த்ரக்ஷ்யாமி யதிதாம் லங்காயாம் ஜனகாத்மஜாம்
அனேனைவ ஹி வேகேன கமிஷ்யாமி ஸுராலயம்
யதி வா த்ரிதிவே ஸீதாம் நத்ரக்ஷ்யாமி அக்ருத ச்ரம:
பத்வா ராக்ஷஸராஜானம் ஆனயிஷ்யாமி ராவணம்
ஸர்வதா க்ருத கார்யோ ஹம் ஏஷ்யாமி ஸஹ ஸீதயா
ஆனயிஷ்யாமி வா லங்காம் ஸமுத்பாட்ய ஸராவணம். 8

சுவாசத்தையடக்கிக் கைகளையுயர்த்திக் காதோடு சேர்த்துவைத்துக் காலால் மலையை உதைத்து நீரில் குதிக்கிறான். அப்போது, வழியனுப்பிக் கொடுக்கும் உறவினர்போல், அவனோடு கூடச் சில மரங்களும் சென்று கடலில் விழுந்தனவாம்.

ஊரு வேகோத்ததா வ்ருக்ஷா முகூர்த்தம் கபிம் அன்வயு:
ப்ரஸ்திதம் தீர்க்கம் அத்வானம் ஸ்வபந்து மிவ பாந்தவா: 9

ராமனுக்குப் பணி செய்யும் நோக்கத்துடன் மரங்கள் தாமும் லங்கையை நோக்கிக் கடலில் விழுந்தன என்கிறார் கம்பன்.

கடல்கடந்து செல்லும் ஹனுமானை ஒளிவீசும் சூரியன் என வர்ணிக்கிறார் வால்மீகி. பெரிய மலையே பெயர்ந்து வந்ததுபோல் என்கிறார். யானை என்கிறார், பெருங் கலம் என்கிறார், கார்மேகம் என்கிறார். அரிய செயலைக் குறிக்கத் துடிக்கும் கவியின் ஆவல் எப்படியெல்லாம் உருவாகிறது!

சூரியன், மலை என்ற உவமைகள் கம்பன் கற்பனையை மேலும் தூண்டுகின்றன. ராவணன் ஐம்புலன்களையும் அடக்கித் தவம் செய்து வலிமை பெற்றவன். அந்த வலிமையெல்லாம் அழிந்து போவதற்கு அறிகுறியாகச் சூரியனே, தன் இயற்கைப் பாதையை விட்டு, வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் செல்வதுபோல் தோன்றிற்றும். (கெட்ட சகுனத்தின் அறிகுறி)

மலையென்றதும் ராவணன் வாழ்வில் ஒரு முக்கிய நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. முன்பு கைலாச மலையைத் தூக்க முயன்றபோது லங்கை வேந்தன் சிவனது கட்டைவிரல் அமுந்தியதால் நசுக்குண்டான். அது போதாதென்று அவனை மேலும் அமுக்க எண்ணி அக் கயிலையே பெயர்ந்து வந்தது போலிருந்தது என்கிறார்.

**அண்ணல் வாள் அரக்கன்தன்னை அமுக்குவாம் இன்னம் என்று**
**கண்ணுதல் ஒழியச் செல்லும் கயிலையங்கிரியும் ஒத்தான்.**

வழியில் மைநாகம் என்ற ஒரு குன்றில் தங்கி மேலே நீந்திச் செல்லுகிறான் ஹனுமான். குன்றையும் மனிதனுயுருவகப்படுத்தி மாருதிக்குதவி செய்யும் நண்பனாகச் சித்தரிக்கிறார் வால்மீகி. இடையூறுகளும் சில ஏற்படுகின்றன. அவற்றை வெற்றிகரமாய் அகற்றி லங்கையின் வடபுறத்தில் ஒரு சோலையை அடைந்து கரை ஏறுகிறான்.

எதிரே த்ரிகூடமலை. அதன்மேல் அமைக்கப்பட்ட லங்கையென்னும் நகரத்தைப் பார்க்கிறான். இந்திர பட்டணமாகிய அமராவதியைப் போல் வளமும் வனப்பும் நிறைந்திருக்கிறது லங்கை.

# 20

# துயரத்தால் கண்டுகொண்டான்

நெடுந்தூரம் நீந்திவந்த போதிலும் களைப்புருத ஹனுமான் லங்காபுரியை வியப்போடு பார்க்கிருன். திரிகூடமலைமேல் அமைந்த அந்நகரம் அற்புதமாய்க் காட்சியளிக்கிறது. எங்கு பார்த்தாலும் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த பலவகை மரங்கள். இடையே ஓங்கி உயர்ந்த மாளிகைகள் மேகங்களைத் தொடுவனபோல் தோன்றுகின்றன. மதில் சுவர்களுக்கிடையே வெண்ணிறச் சுவர்கொண்ட வீடுகள். அவற்றில் பற்பல தோரணங்களும் வேலைப்பாடு கொண்ட தூண்களும் தென்படுகின்றன.

சூரியன் மறைந்து சந்திரன் தோன்றியதும் லங்கை கண்கொள்ளாக் காட்சியாகி ஆகாயத்தில் மிதக்கும் விந்தையெனத் தோன்றுகிறது*

**கிரிமூர்த்னி ன்திதாம் லங்காம் பாண்டுரைர்பவனை: சுபை:**
**ததர்ச ஸகபிச்ரேஷ்ட: புரம் ஆகாசகம் யதா** 1
**ப்லவமானம் இவ ஆகாசே ததர்ச ஹனுமான் புரீம்.**

லங்கையின் செல்வத்தையும் நகர அமைப்பையும் வர்ணிக்கும் கம்பன் பொன்கொண்டு இழைத்த மாடமாளிகைகளில் ரத்னங்கள் பொதிந்திருந்தன என்கிருர். அவை 'மின்னலின் ஒளிகொண்டோ, சூரியனின் ஒளிகொண்டோ, எதைக்கொண்டு இயற்றப்பட்டன?'

---

* ஊட்டி, சிம்லா போன்ற ஊர்களை இரவில் முதல் முதலாகக் கண்டவர்க்கு இந்த உவமையின் பொருள் புலப்படும்.

என்று திகைக்கும் வண்ணம் மேகத்தையும் தாண்டி வானத்தை முட்டி நிற்கின்றன என்கிறார்.

**பொன் கொண்டிழைத்து மணியைக்கொடு பொதிந்த**
**மின் கொண்டிழைத்த வெயிலைக்கொடு சமைத்த,**
**என் கொண்டியற்றிய? எனத் தெரிகிலாத**
**வன் கொண்டல் தாவி மதிமுட்டுவன மாடம்.**

இந்த அழகிய நகருக்கு எங்கு பார்த்தாலும் காவல். கையில் தடியும் சூலமும் ஏந்திய அரக்கர் நிறைந்த லங்கை கருநாகங்கள் சூழ்ந்த குகையைப் போல் தோன்றுகிறது. கடந்துவந்த நீர் நிலையைப் பார்க்கிறான். மலைமீது நிற்கும் கோட்டையைப் பார்க்கிறான். அரக்கரைப் பார்க்கிறான். 'ராவணன் எப்படி இருப்பான்?' என்று ஒருகணம் யோசித்துப் பார்க்கிறான். 'இங்கு வானரர்கள் வந்து சேர்ந்தாலும் வீண்தான். ஒருகாலும் போரில் வெல்லமுடியாத ஊர் இது. இவ்வளவு பாதுகாப்போடுள்ள லங்கையில் ராமன் வந்துதான் என்ன செய்யப் போகிறான்?' என்று நினைக்கிறான்.

**ஆகத்யாபி ஹரயோ பவிஷ்யந்தி நிரர்த்தகா:**
**நஹி யுத்தேன வைலங்கா சக்யா ஜேதும் ஸுரைரபி**
**இமாம்து விஷமாம் துர்காம் லங்காம் ராவண பாலிதாம்**
**ப்ராப்யாபி ஸ மஹாபாஹு: கிம் கரிஷ்யதி ராகவ:** 2

'ஒருவேளை கடத்தற்கரிய கடலைக் கடந்து வந்தாலும் வானரர் இங்குள்ள காவலர் எனும் பெருங்கடலைக் கடப்பது அரிது' என்று சொன்னதாகச் சித்திரிக்கிறார் கம்பன். காவலின் கொடுமையைக் குறிக்க வால்மீகி ஒரு சொல்லணி பிரயோகிக்கிறார். 'இங்கு இவர்களறியாமல் காற்றுகூட நடமாட முடியாது' என்றான் ஹனுமான். எதிரிகள் இருப்பிடம் தனிமையில் செல்வோர்க்குத் தோன்றும் பீதி இது!

**வாயுரப்யத்ர ந ஞாதஸ்சரேதிதி மதிர்மம** 3

எப்படியும் மனதை திடப்படுத்திக்கொண்டு எடுத்த காரியத்தில் கவனம் செலுத்துகிறான் ஹனுமான். 'என் ஜானகி உயிரோடிருக்கிறாளா வென்று அறியவேண்டும்' என்று சொன்னானல்லவா ராமன்? அதையே முதற் காரியமாய்க் கருதி முனைந்து செல்லுகிறான். அரக்கர் கண்டு கொள்ளாதபடி உடலைக் குறுக்கி உருவைமாற்றி வெகு கவனத்தோடு உள்ளே நுழைகிறான். நினைத்தற்கரிய அற்புதம் வாய்ந்த லங்கையைச் சுற்றிலும் பார்த்து கவலைப்படுகிறான். ஆனால் சற்று மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. ஸீதையைக் காண்பதில் உற்சாகம்.

**அசிந்த்யாம் அத்புதாகாரம் த்ருஷ்ட்வாலங்காம் மஹா கபி:**
**ஆஸீத் விஷண்ணோ ஹ்ருஷ்டஸ்ச வைதேஹ்யா தர்சனேத் ஸுக:** 4

இரவில் மெள்ள மெள்ள நகர்ந்து செல்லும் ஹனுமானை ஒரு காவற்காரி நிறுத்தி அதட்டுகிருள். லங்கையே உருவாகிவந்த ஊர் தேவதையெனத் தோன்றுகிறது. அவளுடன் தர்க்கம் செய்துகொண் டிருக்கும்போதே ஹனுமானை ஓங்கி அறைகிருள். பதிலுக்கு ஒரு குத்துவிட்டு, அவளை வீழ்த்தி மேலே செல்லுகிருன்.*

மதில் சுவரைத் தாண்டி ஊருக்குள் நுழைந்து வீடு வீடாகப் பார்க்கிருன். லங்கை இன்னமும் அழகாகத் தோன்றுகிறது. எங்கும் நாதம் நிறைந்த கீதம். பாடும் பெண்கள் அப்ஸரஸ்களைப் போலிருக் கிருர்கள். பிரபுக்களின் மாளிகைகளில், படியேறி நடந்து செல்லும் பெண்கள் இடுப்பில் கட்டிய சலங்கை நூலும் காலில் அணிந்த தண் டையும் சேர்ந்து ஒலிக்கின்றன. இடையே, கைகொட்டி ஆமோதிக் கும் ஆடவரின் குரல். தூரத்தில் மந்திரம் ஓதும் தொனி. அங்குள்ள மறையோர்களையும் பார்க்கிருன். ராவணன் புகழ்பாடும் அரக்கர் களும் அப்யாஸம் செய்து கொண்டிருக்கிருர்கள்!

**சுச்ராவ மதுரம் கீதம் த்ரிஸ்தான ஸ்வரபூஷிதம்**
**ஸ்த்ரீணும் மதஸம்ருத்தாணும் திவிச அப்ஸரஸாம் இவ**
**..............................**
**..............................**
**ஸ்வாத்யாய நிரதாம்ஸ்சைவ யாதுதானுன் ததர்ச ஸ:**
**ராவணஸ்தவ ஸம்யுக்தான் கர்ஜதோ ராக்ஷஸானபி** 5

மாளிகையில் நின்று கிளியோடு கொஞ்சும் மடந்தையர் குழல், யாழ், வீணை முதலியனவெல்லாவற்றையும்விட இனிய குரலில் பேசு கின்றனராம். அந்த வீடுகளில் சுவர்களிடையே பதிக்கப்பட்ட மணி களும் கண்ணுடிகளும் பெண்சளின் உருவை பிரதிபலிக்கின்றன. எது பெண், எது பிம்பம் என்று தெரிவதே கடினமாயிருக்கிறதாம்! கம் பனின் இக்கற்பனையில் காளிதாஸனின் எதிரொலி காணலாம்.

**குழலும் வீணையும் யாழும் என்றினையன குழையும்**
**மழலைமென் மொழி கிளிக்கிருந்து அளிக்கின்ற மகளிர்**
**சுழலும் நன்னெடுந்தடமணிச் சுவர்தொறும் துவன்றும்**
**நிழலும் தம்மையும் மெய்ம்மை நின்றறிவரு நிலைய**

ராஜவீதியில் நுழைகிருன் ஹனுமான். பலவித உருவங்களில் பலவித உடைகளில் அரக்கர் காவல் நிற்கின்றனர். தெருவின் நடு விலே, மலைக்கு மகுடம் வைத்தாற்போல் விளங்கும் மாளிகை ராவணனுடையது. வெளியே ரதங்களும் குதிரைகளும் யானைகளும் நிற்கின்றன. உள்ளே உவகைமிக்க மங்கையர் நிறைந்திருக்கின்றனர். அவர்களுடைய பேச்சும் வளையல்களின் ஒலியும் சேர்ந்து சமுத்திரம் போன்று பேரிரைச்சல் செய்கின்றன. மிருதங்க சப்தம் கேட்கிறது.

---

* ஹனுமானை லங்கிணி எதிர்த்து நின்றது இடைச்செருகலெனக் கருதப் படுகிறது.

இடையே சங்கநாதமும் முரசொலியும் கிளம்புகிறது. பல வீரர்கள் அங்குமிங்கும் செல்லுகிறுர்கள். கடலைப்போன்ற கம்பீரம், கடலைப் போன்ற அமைதி. லங்கைக்கே ஒரு அணிகலன் என அமைந்திருக் கிறது மாளிகை.

முதிதப்ரமதா ரத்னம் ராக்ஷஸேந்த்ர நிவேசனம்
வராபரண ஸம்ஹ்ராதை: ஸமுத்ர ஸ்வனநிஸ்வனம்
..................................
..................................
லங்காபரண மித்யேவ ஸோமன்யத மஹாகபி: 6

வெளியே கண்ணைப் பறிக்கும் வாகனம் ஒன்று நிற்கிறது. அது தான் குபேரனிடமிருந்து பறித்த புஷ்பக விமானம். அன்னப் பறவை கள் சுமந்து செல்வதுபோல் உருவாகியிருக்கிறது. (சித்திரம் வரைந்த தகடுகள் பதித்திருந்தான் போலும்). இருபுறமும் வரைந்துள்ள இயற் கைக் காட்சிகள் தேரை மேகங்களிடையே பறந்து செல்லும் வாகனம் போல் தோற்றுவிக்கின்றன. எத்தகைய காட்சி? வானத்தில் மேகங் கள். தொலைவில் மலை. மலைமீது வெண்ணிற மாளிகைகள். அந்த ஓவியத்தின் நுணுக்கமான வேலைப்பாடு வியக்கத்தக்கபடி இருக்கிறது. குன்றுகள் பலவகை மரங்கள் நிறைந்தனவாயும் ஒவ்வொரு மரமும் புஷ்பங்கள் நிறைந்ததாயும் ஒவ்வொரு புஷ்பமும் விரிந்த இதழோடும் அமைந்த சித்திரம்.

மஹீ க்ருதா பர்வத ராஜிபூர்ணு சைலா: க்ருதா வ்ருக்ஷ விதான பூர்ணு:
வ்ருக்ஷா: க்ருதா: புஷ்பவிதான பூர்ணு: புஷ்பம் க்ருதம்
கேஸரபத்ர பூர்ணம் 7

விசித்ர வேலைப்பாடுகளமைந்த வாகனத்தை வியந்து வியந்து பார்க்கிறுன் ஹனுமான். இடையே 'இன்னும் ஸீதையைக் காண வில்லையே' என்றும் தோன்றுகிறது. ஆயினும் விமானம் மனதை இழுக்கிறது போலும். சற்று துணிச்சலோடு அதன்மேல் ஏறிவிடு கிறுன். அங்கு நின்று சமையலறையிலிருந்து வீசும் நறுமணத்தை ரசிக்கிறுன். பலவித மதுபானங்களும் உணவுப் பொருள்களும் ராவணன் இருப்பிடத்தை அறிவிப்பதுபோல் மணம் வீசுகின்றன. 'ராவணன் இங்கிருக்கிறுன். வாருங்கள்' என்று அன்பரை அழைப்பது போலிருந்ததாம்!

ஸ கந்தஸ்தம் மஹாஸத்வம் பந்துர் பந்து மிவோத்தமம்
இதஏஹி இத்யுவாசஇவ தத்ர யத்ர ஸ ராவண: 8

மாளிகைக்குள்ளே சென்று பார்க்கிறுன். செல்வம் கொழிக் கிறது. கீழே ரத்னகம்பளம், கூரையில் சித்திரவேலைப்பாடு. தூண் களிலெல்லாம் சித்திரம், பொற்தகடு. எங்கும் புஷ்பங்கள். எங்கும் தூபம். கள் சொட்டுகிறது. பிரியமான ஸ்திரீயைப்போல் பார்த்துக் கொண்டானும் மாளிகையை! சுவர்க்கம் என்பது இதுதானே?

அல்லது தேவலோகமா, இந்திரன் வாழும் அமராவதியா? என்று வியக்கிருன் ஹனுமான்.

பெரியதோர் கம்பளத்தில் பெண்களின் கூட்டம் ஒன்று. மது பானத்தின் மயக்கமும் போகங்களில் ஈடுபட்ட களைப்பும் சேர்ந்து நித்திரையில் ஆழ்த்திவிட்டன. அஸ்தமனம் ஆனதும் அன்னமும் வண்டும் ஒய்ந்து நிசப்தமாயிருக்கிற தாமரைத் தடாகம்போல் தோன்றுகிறது. பெண்களின் கமலம்போன்ற முகம் இரவில் குவிந்திருக்கிறது. 'அதை மலரும்படி மீண்டும் மீண்டும் வேண்டுகின்றனவோ வண்டுகள்?' என்றுகூடத் தோன்றுகிறதாம் ஹனுமானுக்கு. ரஸிகன்!

> **இமானி முகபத்மானி நியதம் மத்த ஷட்பதா:**
> **அம்புஜானீவ புல்லானி ப்ரார்த்தயந்தி புன: புன:** 9

நக்ஷத்திரக் கூட்டம் போலிருக்கும் வனிதையரிடையே சந்திரன் போல் விளங்குகிருன் ராவணன். பயந்துகொண்டே அருகில் சென்று அயர்ந்து தூங்கும் வேந்தனைப் பார்க்கிருன் ஹனுமான். ராஜகளை வீசுகிறது. விரிந்த மார்பு, பரந்ததோள், திரண்ட புஜம். மெல்லிய வெண்ணிற உத்தரீயம் மார்பிலும், மஞ்சள் பட்டாடை இடுப்பிலும் அணிந்திருக்கிருன். 'கரு கரு'வென்று உளுந்துபோல் இருக்கிறது உடல். கங்கையில் அமுங்கியவாறே உறங்கும் யானையெனத் தோன்றுகிறதாம். நான்கு பொன்விளக்குகளின் ஒளியில் அவன் மின்னலிடையே மேகமெனத் திகழ்கிருன்.

அடிக்கடி ஸர்ப்பம்போல் பெருமூச்சு விடுகிருன். (மதுமயக்கம், களைப்பு) பெருமூச்சு விடுவது சீதையை நினைப்பதால் என்று கற்பனை செய்கிருர் கம்பன். தூக்கத்திலேகூடப் புஷ்பங்களின் வாடை வீசினுல் சீதையை நினைத்துப் பெருமூச்சு விடுகிருனும்.

சுற்றிலும் உள்ள பெண்களோ ராவணனையே நினைத்தவண்ணம் உறங்குகிருர்கள். அவன் முகமென்று நினைத்து அருகிலுள்ள பெண்ணின் முகத்தை முகர்ந்து இன்பம் காண்கிருர்கள் சில பெண்கள். வீணையை அணைத்து உறங்குபவரும் மத்தளத்தைக் கட்டிக்கொண்டு படுத்திருப்பவரும் பலர். ஒருவரையொருவர் கைகோத்து உறங்கும் போது பெண் மாலையெனக் காட்சியளிக்கின்றனர். ஆனுல் ஒருவளாவது ராவணன் மேல் மோகம் கொள்ளாதவளில்லை. பிறர் மனைவியுமில்லை. பலாத்காரம் செய்து அடையப்பட்டவளுமில்லை. எல்லோரும் அவன் குணத்தையும் பராக்ரமத்தையும் கண்டு அதற்கடிமையானவர்கள். எல்லோரும் செருக்கின் சின்னங்கள்! ஆனுல் ஒரு விதிவிலக்கு. அதுதான் ஸீதை.

> **நதத்ர காஸ்சித் ப்ரமதா: ப்ரஸஹ்ய வீர்யோபபன்னேன**
> **குணேன லப்தா:**
> **ந சான்யகாமாபி ந சான்யபூர்வா விஞ வரார்ஹாம்**
> **ஜனகாத்மஜாம் தாம்** 10

தனியே கட்டிலில் உறங்கும் ஒரு பெண்ணைப் பார்க்கிறான் ஹனுமான். விலையுயர்ந்த ஆடையாபரணங்களோடு விளங்குகிறாள் ராவணன் பட்ட மகிஷி மண்டோதரி. நல்ல அழகியான அவளைப் பார்த்து ஸீதையென்று நினைக்கிறான். ஆனால் உடனே அது சரியல்ல வென்று தோன்றுகிறது. ராமனைப் பிரிந்தவள் உறங்க முடியுமா? அல்லது உணவு செல்லுமா, அலங்காரம் செய்து கொள்ளத்தான் தோன்றுமா? இவள் வேறு எவளோதான் என்று நிச்சயித்து மேலே செல்லுகிறான் அறிவிற் சிறந்த ஹனுமான்.

இன்னமும் பல பெண்களைப் பார்க்கிறான். ஆடிப்பாடி விளையாடிக் களைத்து உறங்குகின்ற மங்கையர் பல விகாரங்களில் தோன்றுகின்றனர். அரைகுறையாய்த் தின்று வைத்த உணவுகளும் குடித்து வைத்த பானங்களும் கிடக்கின்றன. ஹனுமானுக்குச் சற்று அருவருப்பு உண்டாகிறது. 'எத்தனை பெண்களைப் பார்த்தேன், எந்தெந்த நிலையில் பார்த்துவிட்டேன். இது தவறல்லவா?' என்று நினைக்கிறான். ஆனால் 'மனதை அதில் செலுத்தினால்தானே காமம்?' என்கிறான். (தேடுவதில் ஈடுபட்டவனுக்குச் சபலபுத்தி ஏற்பட அவகாசம் ஏது? அதுவும் எதிரிகள் இருப்பிடத்தில்) 'பெண்ணைத் தேடப் பெண்களிருக்கும் இடத்துக்குத்தானே போகவேண்டும்? மான்களிடையேவா பெண்ணைத் தேடுவது?' என்று தனக்குத்தானே சமாதானம் சொல்லிக் கொண்டு மீண்டும் முனைகிறான்.

**மனோஹி ஹேதுஸ்ஸர்வேஷாம் இந்த்ரியாணாம் ப்ரவர்த்தனே**
**……………………………**
**……………………………**
**ந சக்யா ப்ரமதா நஷ்டா ம்ருகீஷு பரிமார்கிதும்** **11**

எங்கு பார்த்தாலும் பாட்டும் கூத்துமாகி எல்லோரும் களித்திருக்கிறார்கள். ஆனால் கவலைப்படுபவர் ஒருவரும் தென்படவில்லை என்கிறானும்

**அளிக்கும் தேறல் உண்டு ஆடுநர் பாடுநராகிக்**
**களிக்கின்றாரலாற் கவல்கின்றார் ஒருவரைக்காணோம்.**

கவலை தோய்ந்த ஒரு முகத்தைத்தானே தேடி அலைகிறான்?

வெளியே சென்று பூந்தோட்டமெல்லாம் பார்த்தாய்விட்டது. எங்கும் காணோம். 'ஒருவேளை ராமனைப் பிரிந்த சோகத்தில் இறந்துவிட்டாளோ? அதனால்தான் எனக்கு அகப்படவில்லை' என்று நினைக்கிறான். 'உயர்குலத்து உத்தமியைக் கொன்று போட்டிருப்பார்கள் துராத்மாக்கள். இஷ்டத்துக்கு இணங்கவில்லையென்ற ஆத்திரமாயிருக்கும். அல்லது அரக்கியர் குழுவைக்கண்டு பயத்திலேயே உயிர் விட்டிருப்பாள் ஸீதை' என்கிறான். போகாத இடமில்லை. தேடாத

மூலேயில்லே, பார்க்காத பெண் இல்லே இனி என்னதான் செய்யலாம்? நம்பிக்கையிழந்து நிற்கிருன் வீரன்.

காணவில்லேயென்ருே இறந்துபோனுளென்ருே ராமனிடம் போய் எப்படிச் சொல்லுவது? சொன்னுலும் ஆபத்து, சொல்லாவிட் டாலும் தவறு! ஆனுல் திரும்பிபோய் 'அவளேப் பார்க்கவில்லே' யென்று சொன்னுல் என்ன பிரயோஜனம்? கடல்கடந்ததும் லங்கை யில் புகுந்ததும் அரக்கரிடையே துருவிப் பார்த்ததும் வீண் ஆகுமல் லவா? 'என்னேப் பார்த்ததும் வானரர்கள் என்ன சொல்லுவார்கள், சுக்ரீவன்தான் என்ன சொல்லுவான்?' என்கிருன். இடையே சற்று நம்பிக்கையும் தோன்றுகிறது. மனதைத் தேற்றிக்கொண்டு' தைரியத் தைக் கைவிடாதிருத்தலே அதிர்ஷ்டத்துக்கு ஆதாரம்' என்று சொல்லி மீண்டும் முனேகிருன்.

அநிர்வேத : ச்ரியோமூலம் அநிர்வேத : பரம் ஸுகம் 12

ஆனுல் மீண்டும், 'ஸீதையைப் பார்க்க முடியவில்லேயென்ற செய்தி கேட்டால் ராமனே உயிர்விட மாட்டானு? என்று நினேக் கிருன். இப்படிப் பலவாருகச் சிந்தனேகள். திரும்பிப் போவதைவிடத் தற்கொலே செய்து கொள்வதே மேல் என்று முடிவு செய்கிருன். தீயில் விழலாமா, கடலில் குதிக்கலாமா, அல்லது காவியுடுத்தி எங்காவது ஓடிவிடலாமா? இதுதான் யோசனே! மனம் குழம்பிவிட்டது.

சிறிது தெளிந்ததும் 'உயிர் உள்ளவரைதான் நம்பிக்கையும் இருக்கும்' என்று சொல்லித் தேற்றிக்கொண்டு மேலும் தேடப் புறப் படுகிருன். பார்க்காமல் விடுவதில்லேயென்று உறுதி கொள்ளுகிருன். குழப்பமும் உறுதியும் மாறி மாறி வருகிறது! எதிரேஅசோகவனம் தெரிகிறது. இது ஒன்றுதான் இதுவரை பார்க்காதது. சென்று பார்க்குமுன் தெய்வங்களே வணங்கிச் செல்லுகிருன். வாயு முதலிய தேவர்களேயும் மூதாதையரையும் தொழுது வெற்றிகாண வேண்டு கிருன். ராமன், லக்ஷ்மணன், ஸீதை, மூவரையும் நினேத்து வணங்கு கிருன். சிவனேயும் தொழுகிருன்.

நமோஸ்து ராமாய ஸலக்ஷ்மணுய தேவ்யைச தஸ்யை
ஜனகாத்மஜாயை
நமோஸ்து ருத்ரேந்த்ர யமானிலேப்யோ நமோஸ்து
சந்த்ரார்க்க மருத்கணேப்ய : 13

பலவித மரங்களும் அழகிய கொடிகளும் நிறைந்த தோட்டம் அசோகவனம். எங்கும் பூக்கள், பழங்கள்; மனதுக்கு ரம்யமான நீர் நிலேகள், அவற்றைச் சுற்றிப் பளிங்குப்படிக் கட்டுகள். அங்கொரு மரத்தின் மீதேறி உட்கார்ந்து ஸீதையைக் காணும் நம்பிக்கையோடு நாலாபுரமும் பார்க்கிருன். அருகிலே பளிங்கினுலான ஒரு ஆயிரக் கால் மண்டபம். வானத்தைத் தொடும் கோபுரம். அதற்கப்பால் ஒரு பெண்.

அரக்கியர் நடுவே அழுக்கடைந்த ஆடையில் இருக்கிறாள். ஆகாரமின்றி இளைத்து அடிக்கடி பெருமூச்சு விடுகிறாள். சுக்லபக்ஷத்தின் ஆரம்பத்தில் ஒரு சிறு கோடாகத் தோன்றும் சந்திரன்போல் ஒளியிழந்து அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி இருக்கிறாள்.

ததோ மலின ஸம்வீதாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம்
உபவாஸ க்ருசாம் தீனம் நிச்வஸந்தீம் புன: புன:
ததர்ச சுக்லபக்ஷாதௌ சந்த்ரரேகாமிவாமலாம்
மந்தம் ப்ரக்யாய மானேன ரூபேண ருசிர ப்ரபாம் 14

ஒருவித அலங்காரமுமில்லை. தலைமயிர் கலைந்து ஒற்றைப் பின்னலாகக் கிடக்கிறது* முகம் வாடியிருக்கிறது. தவவேடத்திலிருக்கிறாள். நாணமும் தோற்றுகிறது. மலரற்ற தாமரைக் கொடிபோலிருக்கிறாள்.

ஸபங்காம் அனலங்காராம் விபத்மாம்இவ பத்மினீம் 15

துக்கம் என்னவென்றே தெரியாதவள் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாள். வீண் அபவாதத்தால் பாழடைந்த கீர்த்திபோலவும், முறிந்து போன ஆசைபோலவும் தோன்றுகிறாள். நெடுநாள் பிரயோகத்திலில்லாததால் அர்த்தமே மாறுபட்ட சொல்லைப் போல என்கிறார், அவள் நிலையைக் குறிக்கப்பல உபமானங்கள் சொல்லும் வால்மீகி.

கம்பனும் சீதை'தொழுதல், சோருதல், அழுதல்' முதலிய செய்கைகளில் ஈடுபட்டு செய்வதொன்றுமறியாமலிருந்தாள் என்கிறார். அரக்கியர் சூழ்ந்து நெருக்கிய நிலையில் வாடிய சீதை கல்லிடையே முளைத்து ஒரு துளி நீரை எதிர்பார்த்து வரண்டு நிற்கும் அரியதோர் மூலிகை போலிருந்தாளாம். (செடிக்கு நீர் போல் மனிதருக்கு நம்பிக்கை என்பது கருத்து)

வன் மருங்குல் வாள் அரக்கியர் நெருக்க அங்கிருந்தாள்
கன் மருங்கெழுந்து என்றும் ஓர் துளி வரக்காணு
நன் மருந்துபோல் நலன்அற உணங்கிய நங்கை
மென் மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்.

ராமன் சொன்ன அடையாளங்களைக் கொண்டு இவள் ஸீதையென ஊகிக்கிறான் ஹனுமான். ஆனால் ஊர்ஜிதம் செய்வது எப்படி? அவள் துயரத்தைக் கண்டு அவளே இவள் என்று நிச்சயிக்கிறான். துயரமே பேரடையாளம்!

துःக்கேன புபுதே ஸீதாம் ஹனுமான் அனலங்க்ருதாம்
ஸம்ஸ்காரேண யதாஹீனம் வாசம் அர்த்தாந்தரம் கதாம் 16

---

* ஒற்றைப் பின்னல் விசனத்தைக் குறிக்கும்.

துயரத்தால் கண்டுகொண்டான் என்று முத்திரையிடுகிறுர் கவி. மனதுக்குறுதி சொல்லும் காரணங்களால் இவளே ஸீதையென்று ஊகித்தான் என்கிறுர். முன்பு அழகை ஓர் அடையாளமாகக்கொண்டு மண்டோதரியைப் பார்த்தவுடன் ஸீதையென ஊகித்தவன் இப்போது காரணம் கொண்டு, துயர்வடியும் பெண்ணே ஸீதையென ஊகிக்கிறுன்.

'தர்க்கயாமாஸ ஸீதேதி ரூபயௌவனஸம்பதா' (8வதுஸர்க்கம்) என்ற வரியையும் 'தர்க்கயாமாஸ ஸீதேதி காரணோர் உபபாதயன்' (13வது ஸர்க்கம்) என்ற வரியையும் ஒப்பிட்டுப் பார்த்தால் கவியின் கருத்து தெரியும்.

பதிமூன்று ஸர்க்கங்களுக்கும் சிகரமாய் விளங்கும் சுலோகம் இது. (து:க்கேன' என்ற பதத்துக்கு 'சிரமப்பட்டு' என்ருெரு அர்த்தமும் உண்டு. இரண்டாவது அடியையும் சேர்த்துப் படித்தால், 'அர்த்தம் குலேந்து மாறுபட்டு நிற்கும் சொல்லேப் புரிந்து கொள்வதுபோல், சிரமப்பட்டுப் புரிந்து கொண்டான் ஸீதையை' என்று பொருள்படும்.)

'ராமன் இங்கு வந்துதான் என்ன பிரயோஜனம்?' என்ற அளவுக்குப் படை பலம், காற்றுப் புகமுடியாதபடி காவல், தேவலோகமோ என்று வியக்கத்தக்க செல்வம், காதல் புரியும் அரம்பையர்போல் மங்கையர், விசித்ர மண்டபம், இதையெல்லாம் சுவையோடு வர்ணித்தது ஸீதையின் சோகத்தை எடுத்துக் காட்டும் நோக்கத்தோடு தான். செல்வத்தைப் புறக்கணித்துக் காவலேக் கண்டு அச்சமுருத சோகம். உல்லாசமான சூழ்நிலேயில் தனித்து நிற்கும் சோகம். சிறை வைத்த இடத்தின் பெயர் அசோகவனம். சோகத்தை வற்புறுத்திக் காட்டவே சிலேடையாக அமைந்திருக்கிறது போலும்.

# சேற்றில் தாமரை

ஸீதையைக் கூர்ந்து கவனிக்கிறான் ஹனுமான் அவளது மேலாடை மஞ்சள் வர்ணமாயிருக்கிறது. அதில் ஒரு ஓரத்தைக் கிழித்து நகைகளை முடிந்து வானரர்களிடையே வீசினாள் அல்லவா, ராவணன் அபகரித்துச் சென்ற சமயம்? அந்தத் துணியும் மஞ்சள்நிறம்தான். நெடுநாள் ஒரே ஆடையை அணிந்திருப்பதால் சற்று வர்ணம் மங்கியிருக்கிறது! எனினும் இதன் ஒரு பகுதிதான் கிஷ்கிந்தையில் நகைமுடிப்புடன் இருக்கிறது என்றெல்லாம் நுட்ப மாககவனிக்கிறான் ஹனுமான். கவியின் கூர்மையான பார்வை சோகத்தைப் பெருக்குகிறது.

இதம் சிரக்ருஹீதத் வஸனம் க்லிஷ்டவத்தரம்
ததாபி நூனம் தத்வர்ணம் ததா ச்ரீமத்யதேதரத் 1

இவளே அவள். சந்தேகமில்லை. 'காணாமற் போன போதிலும் மனதைவிட்டு அகலாத மங்கை. நாலு விதமாய் ராமனைத் தவிக்க விட்ட மங்கை' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்கிறான். பெண் என்பதால் கருணையும், தன்னையடைந்தவள் என்பதால் காக்க வேண் டிய பொறுப்பும், மனைவி என்பதால் சோகமும் ஆருயிர்க் காதலியென் பதால் விரகதாபமும் உண்டாகி நாலுவிதமாய் வாட்டுகின்றனவாம் ராமனை.

காருண்யேன ஆன்ருசம்ஸ்யேன சோகேன மதனேன ச 2

ஆனால் இவள் மனம் அங்கிருக்கிறது. அவன் மனம் இங்கிருக் கிறது. அதனாலல்லவோ உயிர் வாழ்கிறான் ராமன்?

அஸ்யா தேவ்யா மனஸ்தஸ் மின்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்
தேனேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்தமபி ஜீவதி. 3

(ராமனும் ஸீதையும் முதன் முதலாக மிதிலையில் சந்தித்த போது 'மாறிப்புக்கு இதயம் எய்தினர்' என்று கம்பன் வர்ணித்தது நினைவிருக்கலாம்.)

இத்தகைய மனைவியைப் பிரிந்து உயிர் வாழும் ராமன் செயற்கரிய செயல் ஆற்றுகிறான். சந்தேகமில்லை என்கிறான் ஹனுமான். ஸீதையைக் கண்டதும் ராமனை நினைத்து இருவரையும் மனதார வாழ்த்துகிறான்.

மேலும் சிந்தையில் ஆழ்ந்து 'இவள் ஏன் இப்படி துக்கப்பட வேண்டும்? லக்ஷ்மணனின் மதிப்புக்குரியவள். அவன் தமையனின் அன்பைப் பெற்றவள். இவளே கஷ்டப்பட வேண்டுமென்றால் போதாத காலம் என்றுதான் சொல்ல வேண்டும்' என நினைக்கிறான்.

யதி ஸீதாபி துக்கார்த்தா காலோ ஹி துரதிக்ரம: 4

அவள் மகிமையை நினைத்துப் பார்க்கிறான். இவள் பொருட்டல்லவா ராமன் வாலியை வீழ்த்தினான்? கபந்தன், விராதன், கரன், தூஷணன் எல்லாரும் மடிந்ததும் இவளால்தான். சுக்ரீவனுக்கு அரசு கிடைத்ததும் இவளாலே என்றும் சேர்த்துக் கொள்ளுகிறான்! 'நான் கடல் கடந்தது இவள் பொருட்டல்லவா?' என்று தோன்றுகிறது. உடனே 'ராமன் உலகத்தையே சுற்றி வந்தாலும் தகும். மூவுலகு ஆளும் செல்வமும் இவளுக்கு ஈடாகுமா?' என்கிறான்.

யதி ராம: ஸமுத் ராந்தாம் மேதினீம் பரிவர்த்தயேத்
அஸ்யா: க்ருதே ஜகத்சாபி யுக்தமித்யேவ மே மதி: 5

ஏன்? ஸீதையின் குணப் பெருமையை நொடியில் உணர்ந்து விட்டான் ஆஞ்சனேயன். 'கணவன்மீது காதல்! அது பிடித்து உந்தவே மாளிகையைவிட்டு வெளியேறி வனத்தின் தனிமையை நாடினாள். இன்னல்களை நினைத்துக்கூடப் பார்க்காமல் காய் கனிகளை யுண்டுகளித்திருந்தாள். இன்று உத்யானவனத்தில் இருக்கிறாள். ஆனால் பூக்கள், பழங்கள், மரங்கள் எதுவும் கண்ணில் தென்படவில்லை. சுற்றியிருக்கும் அரக்கியரும் தென்படவில்லை. ஒருமைப்பட்ட மனதோடு ராமனையே பார்க்கிறாள் மனக்கண்ணால்' என்று வியக்கிறான்.

நைஷா பச்யதி ராக்ஷஸ்யோ நேமான் புஷ்ப பல த்ருமான்
ஏகஸ்த ஹ்ருதயா நூனம் ராமமேவ அனுபச்யதி. 6

இவள் உயிர்த்தரித்திருப்பதே அவன் வருகையை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துத்தான் என்கிறான்.

தாரயத் யாத்மனே தேஹம் தத்ஸமாகம காங்க்ஷிணீ 7

ஆனல் ராமன் உயிர்தரிப்பது செயற்கரியது என்கிறன். 'இவளைப் பிரிந்த துயரத்தில் இடிந்து போகாமலிருக்கிறனே'! என்று வியக்கிறன்.

துஷ்கரம் குருதே ராம: ஹீனோ யதனயா ப்ரபு:
தாரயதி ஆத்மனோ தேஹம் ந து: க்கேன அவஸீததி 8

நாயகன் வருகையை எதிர்பார்க்கிறள் என்ற கருத்தைக் கம்பன் உருக்கமாகச் சொல்லுகிறர். 'ராமன் வருவான், வருவான் என்ற ஒரே நம்பிக்கையில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை எல்லாத் திக்குகளிலும் பார்க்கிறள். பார்வையே வானத்தை அளப்பது போலிருக்கிறது.

**சுருதிநாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால்**
**கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணள்.**

இப்படி வெட்ட வெளியிலே ராமன் உருவைக் காணும் மனைவிக்குப் பழைய நினைவுகள் வருவது இயற்கையல்லவா? சிலவற்றைச் சித்தரிக்கிறர் கம்பன். அயோத்தியில் அன்றெரு நாள் வலுவிலேயழைத்து 'நீ முடி சூடு' என்றர் தசரதன். மறுநாளே, 'இப்புவியைத் துறந்து வனம் போ' என்றர். ஆனல் அவ்விரு நிலையிலும் மலர்ந்த செந்தாமரை போலிருந்த முகத்தை நினைத்துப் பார்க்கிறளாம் ஸீதை.

**மெய்த்திருப்பதம் மேவு என்ற போதினும்**
**இத்திருத்துறந்து ஏகு என்ற போதினும்**
**சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை**
**ஒத்திருந்த முகத்தினை உன்னுவாள்.**

அன்று நடந்த இன்னெரு சம்பவமும் மனக்கண் முன் தோன்றுகிறது. ஊரைவிட்டுப் போய்க் கொண்டிருக்கிறன் அரசகுமாரன். அவனை வழிமறித்து வறுமையால் வாடும் அந்தணர் ஒருவர் தானம் கேட்கிறர். 'உம்மால் பலம் கொண்ட மட்டும் இக்கழியை வீசி எறியும். அது எங்கு போய் விழுகிறதோ அது வரையிலுள்ள நிலமும் பசுமாடுகளும் உமக்குத் தருவேன்' என்கிறன் ராமன். வயோதிகர் ஆசை மேலிட்டு உடலை வளைத்துக் கழியை வீசுகிறர். அதைக் கண்டு ராமன் சிரிக்கிறன். இக்காட்சியை நினைத்த மாத்திரத்தில் அழுகை பீறிட்டுக் கொண்டு வருகிறதாம் ஸீதைக்கு.

பரித்த செல்வம் ஒழியப் படரும் நாள்
அருத்தி வேதியர்க்கு ஆன் குலம் ஈந்து அவர்
கருத்தின் ஆசை கரையின்மை கண்டு இறை
சிரித்த செய்கை நினைந்து அழும் செய்கையாள்

இன்னும் சில காட்சிகள் மனத்திரையில் தோன்றுகின்றன. கங்கையைக் கடக்க உதவிய குகனைச் சகோதரனெனக் கொண்டது, சித்ரகூடத்திலே பரதனைக் கண்டதும் அவனது சடைமுடியைக் கண்டு இரக்கம் கொண்டது எல்லாம் தோன்றி மறைந்து சித்தப்ரமை உண்டாக்குகின்றன.

கவனத்துக்குரிய விஷயம் ராமனின் குணங்களே நினைவில் தோன்றுவது; ஸீதை ஞாபகப்படுத்திக் கொண்டது அவனது அழகும் ஆற்றலும் வீரமும் அல்ல. உதார குணம், விரக்தியான மனப்பான்மை, எளியவனுடன் நட்பு, முடியிழக்கக் காரணமாயிருந்த கைகேயியின் புதல்வன் பரதன்மீதும் கருணை, இவைகளே அவள் மனத்தில் பதிந்தவை.

சோகத்திலிருக்கும் ஸீதை கட்டுண்ட பெண் யானை போல் தவிக்கிறாள். சுருதிகலைந்த வீணைபோல் என்கிறார் வால்மீகி. ஜீவநாதம் எங்கிருந்து வரும்? உடலையும் உடையையும் லக்ஷியம் செய்யாத நிலையில் சேறுபடிந்த தாமரைக் கொடி போல் இருக்கிறாளாம். இயற்கையழகு இருப்பினும் அது சோபிக்காத நிலை.

**ம்ருணாளீ பங்கதிக்தேவ விபாதி ந விபாதி ச** 9

சோகமே திரண்டு வந்ததுபோலும் துயரமே அலையென எழுந்தது போலும் இருந்தாள் என முடிக்கிறார் கவி.

அத்தகைய உத்தமியைக் கண்டு ஹனுமான் கண்ணீர் வடிக்கிறான். துயரக் கண்ணீர் அல்ல; ஆனந்த பாஷ்பம். ‘ராமன் கொடுத்து வைத்தவன்’ என்று நினைத்து அவனை வாழ்த்தி ஸீதையைக் கண்டுபிடித்த பெருமையில் மகிழ்ந்திருக்கிறான் வீரன்.

ராமனையே நினைத்துக் கொண்டிருக்கும் ஸீதை த்யானத்திலும் சோகத்திலும் மூழ்கியிருக்கிறாள். தனிமையில் அழுகிறாள். அதனால் உலர்ந்து விடுகிறது முகம். ஆயினும் துக்கத்துக்கோர் முடிவுகாணும் வகை தெரியவில்லை.

**சுஷ்யந்தீம் ருததீம் ஏகாம் த்யானசோக பராயணாம்**
**து:க்கஸ்யாந்தம் அபச்யந்தீம் ராமாம் ராமம் அனுவ்ரதாம்** 10

22

# ‘இங்கு நல்லவர் இல்லையா?’

இந்நிலையிலிருக்கும் ஸீதையை சதா நினைத்துக் கொண்டிருக்கிறான் ராவணன். திடீரெனக் கண் விழித்து இரவில் எழுந்து அவளைக்காண வருகிறான்.

வாலிபமும் வனப்பும் மிகுந்த உடலில் பலவித ஆபரணங்களணிந்து வருகிறான், அரக்கர் கோமான். அவனைக் கண்டதும் ஆடிக் காற்றில் வாழைபோல உடல் நடுங்குகிறது ஸீதைக்கு. முழங்கால்களைக் கைகளால் அணைத்துத் தலைகுனிந்து தரையில் உட்கார்ந்திருக்கிறாள்.

மரத்தின் மேலிருந்து பார்க்கும் ஹனுமானுக்கு ராவணன் மன்மதனே நேரில் வந்தது போல் தோன்றுகிறான். கரும்பு வில் இல்லாதது ஒன்றுதான் குறை என்கிறார் கவி!

ஸமக்ஷமிவ கந்தர்ப்பம் அபவித்த சராஸனம் 1

காமத்தை ஒளிக்க இயலாத மன்னன். மதுமயக்கம் வேறு. வெண்ணிற உத்தரீயம் நழுவிப் போகும்போது அதை லாவகமாய் எடுத்துப் போர்த்திக் கொள்ளும் அழகையும் ரஸிக்கிறான் ஹனுமான். ஆனால் மதம் பிடித்த வீரனையும் துயரமே உருக்கொண்ட தூயவளையும் மாறி மாறிப் பார்த்து மனம் பதைக்கிறான். ‘ஊசலாடும் உளம்’ என்கிறார் கம்பன். என்ன நேருமோ என்று துடிக்கும் மனம். தீங்கு நேராதிருக்க வேண்டுமேயென்று அறத்தின்மீது பிரார்த்தனை செய்து ‘வாழி சானகி, வாழி இராகவன்’ என்றானும்.

உபவாஸம், சோகம், த்யானம், பயம் இவை நான்கும் பீடிக்க உடல்மெலிந்து தபஸ்வினி போலிருக்கும் ஸீதையை இச்சை பல

சொல்லி ஆசை காட்டுகிறான் ராவணன். தான் அழிந்து போவதற்கே இப்படிப் பேசினான் ராயன் மனைவியிடம் என்று கடுப்பாகச் சொல்லு கிறார் வால்மீகி.

> அனுவ்ரதாம் ராமமதீவ மைதிலீம் ப்ரலோபயாமாஸ வதாய
> ராவண: 2

'அவள் கொடிய நஞ்சு. ஆனால் அது அமிர்தமென எண்ணி வேண்டுகிறான்' என்று ராவணனின் அறிவீனத்தைக் குறிக்கிறார் கம்பன்.

> **வெவ்விடத்தை அமிழ்தென வேண்டுவான்**

இனிய சொற்களால் மனதை மாற்ற முயற்சிக்கிறான். முதலில் பயத்தைப் போக்க வேண்டும். 'எனக்கு உன் மேல் காதல். என்னைக் கண்டா பயப்படுகிறாய்?' 'ஏன் உடலை மூடிப் போர்த்திக் கொள்ளு கிறாய்?' என்று ஆரம்பிக்கிறான். 'உன்னைக் கண்டு யார்தான் மயங்க மாட்டார்? உன் அகன்ற விழியே போதுமே! என் அன்பு பெரிது. அதை ஏற்றுக்கொள்' என்கிறான்.

> **மாம் த்ருஷ்ட்வா நாகநாஸோரு கூஹமானா ஸ்தனோதரம்**
> **காமயே த்வாம் விசாலாக்ஷி பஹு மன்யஸ்வமாம் ப்ரியே** 3

பயப்படுவது பிறருக்காகவும் இருக்கலாமல்லவா? 'கவலை வேண்டாம். இங்கு மனிதர் வரமுடியாது. அரக்கர்கூட அணுகமாட்டார்' என்று உறுதி கூறுகிறான். 'பல பெண்களைச் சேருவதும் பிறர் மனைவியைக் கைப்பற்றி வீரத்தை நிலைநாட்டுவதும் அரக்கர் வழக்கம். ஆயினும் உன்னை நான் தொடமாட்டேன், உனக்கே விருப்பமில்லாத வரை. உன் மனம் மாறியதும் யதேஷ்டமாய்க் காமம் கரை புரண்டு ஓடும்' என்றான்.

> **ஏவம் சைதத் அகாமாம்து ந த்வாம் ஸ்ப்ரக்ஷ்யாமி மைதிலீ**
> **காமம் காம: சரீரே மே யதா காமம் ப்ரவர்த்ததாம்** 4

அவள் மதிப்புக்குரியவள் என்பதையும் தான் தோல்வி காணாத மன்மதன் என்பதையும் ஒரே மூச்சில் விளக்கி அரசனுக்குரிய லக்ஷணத்தைக் காட்டிவிட்டான். தன் காதல் எப்படிப்பட்டது என்று விவரிக்கிறான். 'நீ சோகத்தில் ஆழ்ந்திருப்பது சரியல்ல, என்னை நம்பு. என் மேல் அன்பைச் செலுத்து. இந்த ஒற்றைப் பின்னல், அழுக்கு ஆடை, உபவாஸம், தரையில் படுக்கை இதெல்லாம் உனக்குப் பொருந்துமா?' என்கிறான்.

ஏன் பொருந்தாது என்றும் தெரிவிக்கிறான். 'பெண்களுக்குள் மாணிக்கம் நீ. இப்படி இருக்காதே. உடை மாற்றி அலங்காரம் செய்துகொள்' என்று வேண்டுகிறான்.

ஸ்த்ரீ ரத்னம் அஸி மா ஏவம் பூ: குரு காத்ரேஷு பூஷணம் 5

'இங்கு என்ன இல்லை? விதவிதமான ஆடையாபரணம், உணவுப் பொருள்கள், சங்கீதம், நடனம்...இவையெல்லாம் உனதே' என்கிறான். உன் நலத்துக்காகவும் சொல்லுகிறேன் என்று பொருள்பட 'எழில்மிகு யௌவனம் வீண் போகிறது. ஆற்றுவெள்ளம்போல் போன நாட்கள் திரும்பிவருமா?' என்கிறான். எழில் என்றால் சாதாரண எழிலா? 'உன்னைப் படைத்த பின் பிரமனே ஓய்வு எடுத்துக்கொண்டுவிட்டான். உன்னையன்றி வேறு யாரை இப்படிப் படைத்தான் அவன்! ஆஹா, எங்கெங்கு விழியைச் செலுத்தினாலும் ஆங்காங்கு மனதைக் கவரும் எழில்' என்று வர்ணிக்கிறான் ரஸிகன்.

எழிலை மட்டும் விரும்பவில்லை ராவணன். தனது என்றுள்ளதனைத்தையும் அவள் பாதத்தில் வைக்கும் அளவுக்கு அவளிடம் மனதைப் பறிகொடுத்து நிற்கிறான். 'எங்கெங்கோ சென்று உத்தமப் பெண்களைக் கொண்டு வந்து வைத்திருக்கிறேன். அவர்களனைவருக்கும் மேலாக நீ முதலிடம் பெறுவாய்' என்கிறான். 'உலகையே வென்று உன் தந்தை ஜனகனுக்கு அளிப்பேன், உன் பொருட்டு' என்கிறான். அவளுக்காக என்னதான் செய்யமாட்டான்?

விஜித்ய ப்ருத்வீம் ஸர்வாம் நானா நகரமாலினீம்
ஜனகாய ப்ரதாஸ்யாமி தவ ஹேதோர் விலாஸினி 6

'என் செல்வத்தையெல்லாம் அனுபவிப்பதோடு மட்டுமின்றி உன் இஷ்டத்தை வாரி வழங்கலாம்' என்று அந்த உரிமையையும் அளிக்கிறான். 'என் பதவி என்ன, செல்வம் என்ன? அந்த நாடிழந்த ராமன் எங்கிருக்கிறானோ, தெரியாது. இருக்கிறானோ இல்லையோ, அதுவே சந்தேகம். அவனோடு உனக்கென்ன?' என்கிறான். குழப்பமும் பீதியும் உண்டாகி, அப்படியாவது இசையட்டுமே என்ற நோக்கம் போலும்!

ரித்திம் மம அனுபச்யத்வம் ச்ரியம் பத்ரே யசஸ் ச மே
கிம் கரிஷ்யஸி ராமேண ஸுபகே சீரவாஸஸா
நிக்ஷிப்த விஜயோ ராமோ கதச்ரீர் வன கோசர:
வ்ரதீ ஸ்தண்டிலசாயீச சங்கே ஜீவதி வா ந வா 7

'நீ சிரித்தால் அழகு. உன் பல் வரிசையே அழகு. உன் கண் அழகு. நீயே ஒளி. கருடன் பாம்பைக் கொத்திப் போவதுபோல் என் மனதைக் கவர்ந்துவிட்டாய்' என்கிறான். (தன்னையறியாமல் தன்னைப் பாம்புக்கு ஒப்பாகச் சொல்லுகிறான்!)

சாருஸ் மிதே சாருததி சாருநேத்ரே விலாஸினீ
மனோஹரஸி மே பீரு ஸுபர்ண: பன்னகம் யதா 8

'ஒருவிதமான சிங்காரமும் செய்து கொள்ளாமல் இருக்கிறாய். ஆனால் உன்னைப் பார்த்தபின் என் மனைவியர் ஒருவரையும் என் மனம்

ஏற்கவில்லை, ஜானகி! அவர்கள் அனைவரும் உனக்கு ஊழியர் ஆவார்கள். தேவலோகத்தில் ஸ்ரீ தேவிக்கு அப்சரஸ் பெண்கள் எப்படிக் கைகட்டிச் சேவை செய்கிறார்களோ அப்படி உனக்கு உபசாரம் நடக்கும்' என்கிறான்.

தாஸ் த்வாம் பரிசரிஷ்யந்தி ச்ரியம் அப்ஸரஸோ யதா 9

நெஞ்சைக் கொட்டிவிட்டான் ராவணன்.

'குபேரனிடம் பெற்ற செல்வம் எல்லாம் உனக்கே' என்றுகூறி, மீண்டும் எச்சரிக்கை செய்கிறான். 'ராமன் தவத்திலோ, பலத்திலோ, வீரத்திலோ, செல்வத்திலோ, தேககாந்தியிலோ, புகழிலோ எனக்கு ஈடாகமாட்டான்.' (ராமனைப் பார்த்ததில்லை. ஆயினும்தான் நிகரற்றவன் என்று தெரியுமே!) 'ஐச்வர்யத்தை ஏற்றுக்கொண்டு என்னையும் ஏற்றுக்கொள். நாமிருவரும் வண்டுகள் நிறைந்த தோட்டங்களிலும் நீர் நிலைகளிலும் காடுகளிலும் உல்லாசமாய்ச் சுற்றி வருவோம் வா' என்கிறான்.

பிரமன் படைத்த விந்தையைக் கம்பனும் குறிப்பிடுகிறார். ஆனால் அப்படைப்பில் ஒரு குறையையும் காண்கிறானும் ராவணன். 'இடை எவ்வளவு சிறியதாய்க் கண்ணுக்கே புலப்படாமலிருக்கிறதோ அவ்வளவுதான் உன் அருள்' என்கிறான். வருந்துகிறான்.

**தெருளு நான்முகன் செய்ததுன் சிந்தையின்**
**அருளும் மின்மருங்கும் அரிதாக்கியோ.**

'அப்படி அருள் செய்யாமலேயிருந்தால் நான் இறந்துவிடுவேன். பிறகு உன் அழகுக்கு ஏற்றவர் யார்?' என்றும் ஏங்குகிறான். என்ன கரிசனம்!

இதையெல்லாம் கேட்ட ஸீதை அழுது நடுங்குகிறாள். ஆயினும் கணவனை நினைக்கிறாள். துணிவு வந்து விடுகிறது. துரும்பைக் கிள்ளி இடையே போட்டுப் பேசுகிறாள். (தன் அந்தஸ்துக்குக் கீழானவர்களுடன் பேசும்போது கையாளும் பண்டைய வழக்கம்.) 'பாபம் செய்தவன் நற்கதிக்கு ஆசைப்பட முடியுமா? நீ என்னை உன் மனத்திலிருந்து அகற்றிவிடு. உன் இனத்தவரை நாடு' என்று அவனுக்குப் புத்தி கூறுவதுபோல் சொல்லுகிறாள்.

'நான் உனக்கேற்றவளல்ல. பிறன் மனைவி. பதிவ்ரதை. தருமத்தை நினைத்துப் பார். நல்வழியைப் பின்பற்று.' என்கிறாள். ஆனால் நல்வழி எது என்று சொல்ல நாலு பேர் வேண்டுமே? ''இங்கு நல்லவர்கள் இல்லையா?' என்று கேட்கிறாள். 'அல்லது அவர்கள் சொல்லியும் கேட்காமல் உன் புத்தி விபரீதமானவகையில் செல்லு

கிறதா?' என்கிருள். விஷமக்காரப் பையனேக் கண்டிக்கும் தாய் போலப் பேசுகிருள் காதல் புரிய விரும்பிய மன்னனிடம்.

இஹ ஸந்தோ வா ந வா ஸந்தி ஸதோ வா நானுவர்தஸே
ததாஹி விபரீதா தே புத்திராசார வர்ஜிதா 10

'எப்படியும், செல்வத்தைக் காட்டி என்னே மயக்க முடியாது. சூரியனுக்கு ஒளியைப்போல ராமனுக்கு நான். அவரையன்றி ஒருவனே நினேப்பேனு? சொல்வதைக் கேள், ராவணு. என்னே ராமனிடம் கொண்டுபோய்விடு. அவருடன் நட்புகொள். உயிர் தப்புவாய். இல்லேயேல் சரமாரியாய் அம்புகள் வந்து பாயும் இந்நகரில்' என்று மிரட்டுகிருள். 'நீ ஒரு பேடி. அவர்களிருவரும் இல்லாத சமயம் ஆச்ரமத்தில் சாதுபோல் நுழைந்து என்னே அபகரித்தாய்' என்று இடித்துக் காட்டுகிருள்.

ராவணனே அம்பினுல் வீழ்த்துவது கடினமானதா? அவனுக்குத் தான் பத்துத் தலேகள் இருக்கின்றனவே! என்று ஏளனமாய்க் கூறு கிருர் கம்பன்.

**பத்துள தலேயும் தோளும் பலபல பகழி தூவி**
**வித்தக வில்லினுற்குத் திருவிளேயாடற் கேற்ற**
**சித்திர இலக்கமாகும்**

என்று ஸிதை சொன்னுளாம்!

'இங்கே நல்லவரே இல்லேயா?' என்ற கருத்தை எப்படிப் பிரயோகிக்கிருர், பாருங்கள். ''நல்லபாம்பு கடிக்கும். ஆனுல் அதுவும் மந்திரத்துக்குக் கட்டுப்படும். நீ மந்திரம் (ஆலோசனே) கேட்காமல் களிக்கிருயே? உனக்கு எது அடுக்கும் எது அடுக்காதென்று காரணங்கள்கூறி, அறிவு புகட்டி, இடித்துக் காட்டுவார் ஒருவருமில் லேயே! உன்னேச் சுற்றியுள்ளவர்கள் நீ எண்ணியதைத் தாமும் எண்ணி உன்னே முடிக்கின்றனர். ஆகையால் அடியோடு அழிவுதான் இதற்கு முடிவு'' என்கிருளாம் சீதை. அரசியல் அறிவை மெச்சுவதா, துணிச்சலே மெச்சுவதா?

**கடிக்கும் வல்லரவம் கேட்கும் மந்திரம் களிக்கின்ருேயை**
**அடுக்கும் ஈது அடாது என்று ஆன்ற ஏதுவோடு**
**அறிவு காட்டி**
**இடிக்குநர் இல்லே. உள்ளார் எண்ணியது எண்ணி உன்னே**
**முடிக்குநர் என்றபோது முன்னின் முடிவன்றி**
**முடிவதுண்டோ?**

அசோகவனத்தில் அடிமைபோல் வைத்திருந்த பேதை அரக்கர் கோமகனே அவமதித்துவிட்டாள். அதுவும் அவனது அந்தப்புரத்து

"ஊனா" போன்ற
கம்பனின் பல பாடல்கள்
இங்கு காட்டப்பட வேண்டும்.

அழகிகள் முன்னிலையில்! கோபம் பொங்கி வருகிறது. ஆனால் என்ன சொல்லுகிறான்? 'என் கோபத்தை அடக்குவது உன் மேலுள்ள காதல். சமாதானப்படுத்திப் பேசினால் பெண்கள் வசமாவார்கள் என்பது உலகரீதி. ஆனால் நான் பிரியமாய்ச் சொல்லச் சொல்ல நீ என்னைப் புறக்கணித்துவிட்டாய். ப்ரேமையால் கட்டுண்ட நிலையில் கோபம் கொள்வதற்கு பதிலாக அன்பும் ஆதரவும் அல்லவா உண்டாகிறது!' என்கிறான்.

**வாம: காமோ மனுஷ்யாணாம் யஸ்மின்கில நிபத்யதே**
**ஜனே தஸ்மின்ஸ்த்வனுக்ரோச: ஸ்நேஹஸ்ச கில ஜாயதே** 11

'நீ சொன்ன ஒவ்வொரு சொல்லுக்கும் கொலையே தக்க தண்டனை' என்கிறான் நீதியறிந்த மன்னன். அவமானப்படுத்திக் கொல்ல வேண்டுமாம்! 'ஆனால் கொல்லாமல் விடுகிறேன். ஏன் தெரியுமா? நீ அழகாயிருக்கிறாயே' என்கிறான் காதலில் சிக்கிய காமுகன். மிக அழகாய்த்தானிருக்கிறது காரணம்! (ச்லோகத்தை உரக்கப் படித்தாலே அசடு வழியும்).

**ஏதஸ்மாந் காரணாந் நத்வாம் காதயாமி வரானனே** 12

'சரி எதற்கும் இரண்டு மாதம் தவணை கொடுக்கிறேன். அதன் பிறகும் இணங்காவிட்டால் உன்னை வெட்டி சமைத்துவிடுவார்கள் என் ஊழியர்' என்று மிரட்டுகிறான். உயிர்மேல் ஆசையிருந்தால் படுக்கையறை; மானம் பெரிதானால் சமையலறை! எது வேண்டும்? ஸீதை நடுங்குகிறாள். அதைக் கண்டு மனமிரங்கி சுற்றியுள்ள கந்தர்வப் பெண்கள் 'பயப்படாதே' என்று ஜாடை காட்டுகிறார்கள். ராவணன் பார்க்காத வண்ணம் உதட்டை இழுத்துக் கண்ணைச் சிமிட்டி சமிக்ஞையால் சொல்லுகிறார்கள். இனத்தவரின் ஒற்றுமை!

**ஒஷ்டப்ராகாரைர் அபரா வக்த்ரைர் நேத்ரைஸ்ததாபரா:**
**ஸீதாம் ஆச்வாஸயாமர்ஸுஸ் தர் ஜிதாம் தேன ரக்ஷஸா** 13

பெண்களுக்கே உரித்தான ஆறுவது அறிவும் ஸீதைக்குத் துணிச்சலை ஊட்டுகிறது போலும். மிகத் துடுக்காகப் பேசுகிறாள். 'உன் குரூரமான கண் இரண்டும் தெறித்து விழாமல் இருக்கின்றனவே, பாவி. என்னை இப்படித் தீய நோக்கம் கொண்டு பார்க்கிறாயே?' என்று வைகிறாள்!

'ராமனின் அனுமதியில்லையே என்று பார்க்கிறேன், உன்னை என் தவ வலிமையாலே எரித்துச் சாம்பலாக்கிவிடமாட்டேனா?' என்று உறுமுகிறாள்.

இனி பேசிப் பயனில்லை. உணர்ந்துவிட்டானோ? பதிலுக்கு ஏதோ வசைமொழி சொல்லிவிட்டு அரக்கியரை அழைத்து அவளை வசப்படுத்தச் சொல்லிப் போகிறான். (தலைவனால் முடியாத காரியத்தைக் காவலர் செய்ய வேண்டும்!) 'பயமுறுத்தியோ, அறிவூட்டியோ,

எவ்விதத்திலோ வசப்படுத்தி என்னிடம் வாருங்கள். இல்லையேல் உங்களுக்கு நான் நஞ்சுபோல் கொடியவனுவேன்' என்று சொன்னுனும்.

**அஞ்சுவித்தானும் ஒன்ருல் அறிவுறத்தேற்றி யானும்**
**வஞ்சியிற் செவ்வியாளை வசித்தென்பால் வருவீர், அன்றேல்**
**நஞ்சுமக்காவென் என்னு**

(தூர்ஜனைர் கோரை : புனஸ் ஸாந்த்வைஸ்ச' என்ற வால்மீகியின் கருத்து ஒலிக்கிறது.)

போகும் மன்னனை இடை மறித்து தான்யமாலினியென்ற மனைவி 'என்னேடு களித்திருக்க வாருங்கள். வாடியுலர்ந்த ஸீதையோடு உங்களுக்கென்ன, மன்னவா? இஷ்டமில்லாத பெண்ணைச் சேர்ந்தால் உடம்புக்கு சூடு. விருப்பமாகவரும் மங்கையே மகிழ்ச்சியைப் பெருக்குவாள்' என்கிருள்.

**அகாகமாம் காமயானஸ்ய சரீரம் உபதப்யதே**
**இச்சந்தீம் காமயானஸ்ய ப்ரீதிர்பவதி சோபன** 14

பதில் சொல்லாமல் அவளைப் பார்த்து சிரித்துவிட்டுத் தன் மாளிகைக்குச் செல்லுகிருன் ராவணன். வழியிலிருக்கும் அழகியரையும் தாண்டி, அடிமேல் அடி வைத்துச் சென்று மறைந்துவிட்டான் என்று முடிக்கிருர் வால்மீகி. அவன் காமவேட்கையால் துடிக்கவில்லை, பெண்களுக்குள் மாணிக்கத்தை அடையத் தவிக்கிருன் என்பதை நுட்பமாய்த் தெரிவிக்கிருர் கவி.

செல்வத்தையும் சுகத்தையும் துச்சமாய் மதித்து 'இங்கு நல்லவர் இல்லையா?' என்று கேட்ட பெண்ணின் மதிப்பைப் பெறுவதை விட எது முக்கியம்? தனக்கும் மனேபலம் உண்டென்று காட்ட நினைத்தே வலுவில் வந்த தான்யமாலினியை நிராகரித்தான் போலும் காதலில் கரைகண்ட மன்னன்.

துயரமே உருக்கொண்ட பெண்மேல் மாளாக் காதல் கொண்டு அவளுக்கு அடிமை ஆகவும் துணிகிருன் வேந்தன். சிறையிலிருக்கும் பெண்ணே விடுதலைக்கோர் வழி காணுத நிலையிலும் வீராங்கனையாக விளங்குகிருள். சிறையே விடுதலைக்குக் காரணம். வாழ்விலே பற்றிழந்தவுடன் அச்சத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டாள்! அவன் மிரட்டுகிருன்; அது போலி. பயம் தெளிந்த பேதை மிரட்டுகிருள்; கண்ணில் தீப்பொறி பறக்கிறது. யாருக்கு வீரம், யாருக்குப் பேதமை? தான் சிறைவைத்த பேதைக்கு அஞ்சி நிற்கும் நிலைக்குத் தன்னை ஆக்கிக் கொண்டுவிட்டான் லங்கேச்வரன். பாத்திரங்களின் குணவிசேஷம் பரஸ்பரம் மாறிவிட்டது.

23

## தந்தான் உயிர்

ராவணன் சென்று மறைந்ததும் ஸீதையைச் சூழ்ந்து கொள்ளுகின்றனர் அரக்கியர். அவர்களுக்குக் கோபம் தான் ஓங்கி நிற்கிறது (தங்களது தலைவனை, ஒப்பற்ற வீரனை நிராகரித்துத் தங்களையெல்லாம் சிறுமைப்படுத்திவிட்டாளல்லவா?)

ஒருத்தி அவளை அருகில் அழைத்துச் சொல்லுகிறாள், 'புலஸ்தியரென்ற அந்தணர் பிரமனுக்கொப்பானவர். அவர் மகன் விச்ரவஸ்; அவர் மகன் ராவணன். இவன் அரக்கர் தலைவன். ஆதலால் இவனுக்கு நீ மனைவியாகத்தக்கவள். ஆனால் இது உனக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லையே?'

மற்றொருவள், 'பாவம், அரசன். அன்பான மனைவியைவிட்டு உன்பால் மனதைச் செலுத்துகிறான்' என்று ராவணன்மீது அனுதாபம் காட்டுகிறாள். 'உன்பால் மெய்யன்பு வைத்ததைத் தவிர என்ன தவறு செய்தான் அரசன்?' என்றாளாம்!

**மெய்யன்புன் பால் வைத்துளதல்லால் வினை வென்றோன்**
**செய்யும் புன்மை யாதுகொல் என்றார் சிலரெல்லாம்**

அவள் உறுதியைக் கண்டு சினம்கொண்டு சீதையை ' பெண்ணில் தீயோய்!' என்றழைக்கின்றனர் அரக்கியர். யாரும் விரும்பத்தக்க வீரன், அரக்கர் தலைவன். அவன் தன் அந்தப்புரத்தில் முதலிடம் அளிக்கிறான். அதை வெறுக்கிறாள் ஒருத்தி! கண்டிராத புதுமையைக் கண்டு ஆத்திரம் அடைகின்றனர். ''மனிதனின் மனைவியென்ற நிலையில் கர்வமாயிருக்கிறாயே, அவனை ராஜ்யத்திலிருந்து விரட்டிவிட்டார்களே!'' என்கிறாள் ஒரு அரக்கி.

துக்கம் பொங்கி வருகிறது ஸீதைக்கு. 'உங்கள் பேச்சு எனக்கு ஏற்றதாயில்லை. என் கணவன், ஏழையாயிருக்கலாம், அரசு இழந்து நிற்கலாம். ஆனால் எனக்கு அவரே உயர்ந்தவர்' என்கிறாள்

**தீனோவா ராஜ்யஹீனோவா யோமே பர்த்தா ஸமே குரு:** 1

எல்லோரும் அவளைச் சுற்றி நின்று மிரட்டுகிறார்கள். ஸீதை அழுத வண்ணம் ஒரு மரத்தை நோக்கிச் செல்லுகிறாள். தொடர்ந்து சென்று 'போதும் இதுவரை காட்டிய பதிபக்தி. சொல்வதைக் கேள். அரக்கர் வேந்தனின் அன்பு உன்னை அழைக்கிறது. என் பேச்சை நிராகரித்தால் உன்னைக் கொன்று தின்றுவிடுவோம்' என்கிறாள் விநதா என்ற அரக்கி. பிறகு 'ரத்தத்தைக் குடிப்போம்,' 'குடலைப் பிய்ப்போம்,' 'இருதயத்தைத் தின்று நாட்டியமாடுவோம்' என்று பலவாறு சொல்லிப் பயமுறுத்துகிறார்கள். நடுங்கிய ஸீதை தைரிய மிழந்து அழுகிறாள்.

அசோக மரத்தடியில் நின்று சோகத்தால் வருந்துகிறாள். ராமனை நினைக்கிறாள். லக்ஷ்மணனையும் நினைக்கிறாள். 'என் கணவனைப் பார்க்காமலே இறந்துவிடுவேனோ?' என்றும் நினைக்கிறாள். 'நான் முன்பு என்ன பாபம் பண்ணினேனோ, இத்தகைய கொடிய துக்கம் எனக்கு வாய்த்ததே' என்று ஏங்குகிறாள்.

**கீத்ருசம்து மயா பாபம் புரா தேஹாந்தரேக்ருதம்**
**யேனேதம் ப்ராபதே து:க்கம் மயா கோரம் ஸுதாருணம்** 2

'நான் உயிர் விடுவதே நலம். அவரைக் காணப்போவதில்லை. ஆனால் நான் பிறர்வசம் சிக்கி உயிர்விடக்கூட உரிமையற்று நிற்கிறேனே, என்ன வாழ்க்கை!' என்று வருந்துகிறாள்.

**திகஸ்து கலு மானுஷ்யம் திகஸ்து பரவச்யதாம்**
**ந சக்யம் யத்பரித்யக்தும் ஆத்மச்சந்தேன ஜீவிதம்** 3

நடந்ததையெல்லாம் நினைத்துப் பார்த்து 'உலகோர் ஒப்புக் கொள்ளுவார்களா?' என்று வருந்தியதாய் வர்ணிக்கிறார் கம்பன். மானின்பின் ராமனை அனுப்பி, ராமனைத் தேடி மைத்துனனை வைது அனுப்பி, நஞ்சு போன்ற ராவணன் வீட்டில் புகுந்தும் நான் உயிரோடிருக்கிறேனே, இதை உலகம் ஏற்குமா? என்கிறாள்.

**வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி என்**
**மஞ்சனை வைது பின்வழிக் கொள்வாய் எனு**
**நஞ்சனையான் அகம் புகுந்த நங்கையான்**
**உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ.**

'உலகம் என்ன, என் கணவரே ஏற்றுக் கொள்ளுவாரா?' என்ற எண்ணம் தோன்றி இன்னொரு கருத்தும் வெளிப்படுகிறது.

‘‘ஆச்சர்யப்படும் அளவுக்கு வில் வீரன்தான். அவர் அரக்கர் வர்க்கத்தை வேரோடு அழித்து என்னைச் சிறைமீட்கும் நாளில் நீ என் இல்லத்தில் புகத்தகாதவள் என்று சொல்லிவிட்டால் என் கற்பை எந்தவிதமாக நிரூபித்துக் காட்டுவேன்?’’ என்று ஏங்கினாளாம்.

**அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற**
**விற்பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்டநாள்**
**இற்புகத் தக்கிலை என்னின் யானுடைக்**
**கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்.**

உருக்கமான பாடல், ஆனால் பின் வரப்போகும் நிகழ்ச்சியை முன்பே குறிப்பிடுகிறது. இத்தகைய ஏக்கம் இருந்திருக்குமா? ராமன் தன்னை நிராகரிப்பான் என்ற எண்ணம் எப்போதாவது தோன்றியிருந்தால் இடைவிடாத நம்பிக்கையுடன் அரக்கரைத் தனிமையில் எதிர்க்க முடியுமா? களங்கமற்ற மனது ஐயமற்ற பக்தியோடு நாதனை எதிர்பார்ப்பதுதானே பொருத்தம்? இதெல்லாம் சிந்தனைக்குரியது.

இத்தகைய சஞ்சலம் எதுவுமே இல்லாத நிலையில் ஸீதையைச் சித்தரிக்கிறார் வால்மீகி. ‘என் கணவர் புகழ் பெற்றவர். நன்றி மறவாதவர். அனுதாபம் நிறைந்தவர் ஏதோ என் துரதிர்ஷ்டம் அவர் இன்னும் வரவில்லை. சற்று அனுதாபம் அற்றவர் போலிருக்கிறார்’ என்கிறாள். ஆனால் அரக்கரைப் பொறுத்தவரையில் அவள் மனம் இறுகிவிட்டது. ‘‘நீங்கள் என்னைக் கண்டம் துண்டமாய் வெட்டலாம். தீயிலே போட்டுச் சமைக்கலாம். ஆனால் நான் ராவணனை அண்டவிடமாட்டேன். வீணாக ஏன் பிதற்றுகிறீர்கள்?’’ ஆத்ம சக்தியை விரட்டலால் எதிர்க்க முடியாது.

**சின்னா பின்னா விபக்தாவா தீப்தாதவாக்னௌ ப்ரதீபிதா**
**ராவணம் நோபதிஷ்டேயம் கிம் ப்ரலாபேன வஸ்சிரம்** 4

ராவணன் பெருமையை ஓயாமல் சொல்லுபவர்களுக்கு அவன் சிறுமையை எடுத்துரைக்கிறாள் ஸீதை. கள்ளத்தனமாய்க் கவர்ந்தானல்லவா? லங்கை நாசமடையப்போகிறது என்கிறாள். ‘விராதனைக் கொன்றவர், கரதூஷணர்களைக் கொன்றவர் இங்கு வராமல் போவாரா? —கடலையே வற்றடித்துவிடுவார். ராவணன் பெயரே அழிந்துவிடும்’ என்கிறாள்.

ஆனால் மனதுக்குள் பயம், வாழ்க்கையில் வெறுப்பு. தன்னுயிரைத் தானே மாய்க்கத் துணிந்து தலைப் பின்னலைக் கழுத்தில் சுற்றி மரத்தடியில் போகிறாள். இதையறிவிக்க ராவணனிடம் சிலர் ஓடுகின்றனர். எஞ்சியவர் மீண்டும் மிரட்டுகின்றனர்.

அவர்களைத் தடுத்து அறிவுகூற ஒருவள் முற்படுகிருள். அவளே த்ரிஜடை; விபீஷணன் மகள். 'ஏன் பிதற்றுகிறீர்கள்? இவளுக்கு நன்மையும் நமக்குக் கேடும் வரப்போகிறது விரைவிலே. ஸீதை ராமனையடைந்து இன்புற்றிருக்கக் கனுக் கண்டேன். ராவணன் சிவப்புஉடையுடுத்தி எண்ணெய் தேய்த்து நிற்கிருன், கழுதைமீதேறி வலம் வருகிருன். லங்கையில் விகாரம் உலவக் கண்டேன். போதும் உங்கள் பேச்சு. ஸீதையை மன்னிப்புக் கேளுங்கள்.'' என்கிருள்.

நன்மை வருகிறதென்பதைக் குறிக்க ஸீதையின் இடது கண்ணும் தோளும் துடிப்பதாக வர்ணிக்கிருர் வால்மீகி. ஆனுல் சகுனங்களை நம்பி உயிர் வாழும் நிலையிலா இருக்கிருள்?

அவள் மனதில் எத்தனை சஞ்சலம், சந்தேகம்! 'என்னைப் பிரிந்த துக்கத்தாலே ராமன் இறந்திருக்கலாம்' என்றுகூட நினைக்கிருள். 'சரி, இனி உயிர் தரித்து என்ன பயன்? ஆனுல் இங்கு எனக்கு விஷம் கொடுக்கும் புண்ணியவான் கூட ஒருவருமில்லை' என ஏங்குகிருள்.

ஒரு அபூர்வக் கற்பனையில் ஈடுபடுகிருர் வால்மீகி. 'தந்தை சொல்படி வனவாஸம் முடிந்து, விரதம் காத்து உயர் குணத்தை நிலைநாட்டி, பெண்கள் புடைசூழ நீ களித்திருக்கப் போகிருய், ராமனே. நானே உன்னையே நினைந்து இங்கேயே தவம்கிடந்து, விரதம்பூண்டு அபாக்யவதியாய் உயிர்விடப் போகிறேன்' என்று நினைக்கிருளாம் ஸீதை.

**பிதுர்நிதேசம் நியமேன க்ருத்வா வனுன்னிவ்ருத்தஸ்**
**சரிதவ்ரதஸ்ச**

**ஸ்திரீபிஸ்து மன்யே விபுலேக்ஷணுபிஸ்த்வம்**
**ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த்த:**
**அஹம்து ராமத்வயி ஜாதகாமா சிரம் விஞசாய நிபத்தபாவா**

**மோகம் சரித்வா அத தபோ வ்ரதம்ச த்யக்ஷாமி திக்**
**ஜீவிதம் அல்பபாக்யா** 5

ராமன் விரதம் காத்துப் பலனடைவான், இவளோ அவனுக்காக விரதம் இருந்து மாய்ந்து போவாள் என்ற எண்ணம் மனதிலுள் சஞ்சலத்தைக் குறிக்கிறது.

மேலிருந்து கவனிக்கிருன் ஹனுமான். பலவித கிலேசங்கள் உண்டாகின்றன. விபரீதம் நேருவதற்குமுன் தடுக்க வேண்டும். ஆனுல் எப்படிப் பேசுவது? அவள் பயந்து கூச்சலிட்டால்? அரக்கர் ஒன்றுகூடிக் கைது செய்யவும் கொல்லவும் முற்படுவார்கள். இப்படியெல்லாம் கவலையுற்றுக் கடைசியாக ராமன்பெருமையை எடுத்துரைக்கத் தீர்மானிக்கிருன். 'தசரதன் என்ருெரு கீர்த்திமான் அவரது மகன் ராமன் உலகெல்லாம் போற்றும் வீரன்' என்று ஆரம்

பித்துக் கதையைச் சொல்லுகிறான். கர தூஷணவதம், மாயமான் பின் போனது எல்லாம் சொல்லி ''ராவணன் வஞ்சம்கொண்டு தூக்கி வந்தான் ஜானகியை. ராமன் சொன்னபடியே இருக்கின்றன அடையாளங்கள்' என்கிறான்.

காதுக்கினிய சேதியைக் கேட்டு மகிழ்ந்து தலை நிமிர்ந்து பார்க்கிறாள் ஸீதை. சற்று வியப்பு ஏற்படுகிறது. நாலுபுறமும் பார்க்கிறாள் உடனே பயமும் உண்டாகிறது. 'குரங்கைப் போன்ற உருவமுடையவனைப் பார்த்தேனே, இது கெட்ட சகுனம் அல்லவா? ஒரு வேளை கனவுதான் காண்கிறேனோ?' என்று நினைக்கிறாள். உடனே 'இருக்காது. இது கனவு அல்ல. எனக்குள்ள துயரத்தில் உறக்கமே இல்லை. அப்படியிருக்கக் கனவு எப்படி வரும்? உறக்கம் வர நான் என்ன சுகத்தில் இருக்கிறேனா?... இல்லை இல்லை. இதெல்லாம் வெறும் ப்ரமை. ராமனை எப்போதும் நினைத்து அவர் பெயரையே வாயால் சொல்லிக் கொண்டே கிடக்கிறேன் அதனால்தான் இப்படி யாரோ வந்து அவர் கதையைச் சொல்லுவது போல் தோன்றுகிறது'' என்கிறாள்.

> **ஸ்வப்னோபி நாயம் நஹிமேஸ்திநித்ரா**
> **சோகேன துக்கேன சபீடிதாயா:**
> **ஸுகம்ஹிமே நாஸ்தியதோஸ்மிஹீனா**
> **தேனேந்து பூர்ணப்ரதி மானனேன**
> **ராமேதிராமேதி ஸதைவபுத்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ தமேவ**
> **தஸ்யானுரூபாம் ச கதாம் தமர்த்தம் ஏவம்**
> **ப்ரபச்யாமி ததா ச்ருணோமி** 6

மனம் நொந்து திகைத்து நிற்கும் சமயம் கண்ணெதிரே தோன்றும் உண்மையே பிரமையெனத் தோன்றுகிறது!

கீழே இறங்கி வந்து வணங்கி நிற்கிறான் ஹனுமான். ('தொழுது தோன்றினான்' என்கிறார் கம்பன்). 'கமலம் போன்ற கண்ணையுடையவளே! உன் கண்ணில் நீர் வழியக் காரணம் என்ன?' என்று ஆரம்பிக்கிறான். அசோகவனத்தில் ஆதரவு நிறைந்த பேச்சா? காது கொடுத்துக் கேட்கிறாள். ''நீ யார்? எந்த இனத்தைச் சேர்ந்தவள்? வஸிஷ்டருடன் பிணங்கிய அருந்ததியோ? (பதிவ்ரதைக்குரிய லக்ஷணங்களை காணுகிறான் என்பது குறிப்பு) அல்லது ராவணன் தூக்கி வந்த ஸீதையோ? உன் உருவத்தையும் தவக்கோலத்தையும் திக்கற்ற நிலையையும் பார்த்தால் நீயே ராமன் மனைவியென்று நினைக்கிறேன்' என்கிறான்.

ராமன் பெயரைக் கேட்டு மனம் தேர்ந்த ஸீதை தன் வரலாற்றைச் சொல்லுகிறாள். கைகேயி வரம் வேண்டி நாட்டைவிட்டு விரட்டியதை விவரமாகச் சொல்லுகிறாள். 'ராமன் முடிதரித்தால் சாப்பிடமாட்டேனென்று பிடிவாதம் செய்தாள்' என்றும் சொல்லி, தன் துயரத்தின் மூலகாரணத்தை வற்புறுத்துகிறாள். வெளிக் கிளம்

பிய ராமன் உடனே மனதால் ராஜ்யத்தைத் துறந்தார் (காலால் கடந்தது பின்னர்) 'ஆனால் அவருக்கு முன் நான் வனம் போகத் தயாராகி நின்றேன். அவரை விட்டு என்னால் ஸ்வர்க்கத்தில்கூட இருக்க முடியாது' என்று பெருமையோடு சொல்லுகிறாள்.

**ஸாஹம் தஸ்யாக்ரதஸ் தூர்ணம் ப்ரஸ்திதா வனசாரிணீ**
**நஹிமே தேன ஹீனயா வாஸஸ்வர்க்கேபி ரோசதே** 7

இதைக்கேட்ட ஹனுமான் 'அந்த ராமனின் தூதன் நான். அவர் க்ஷேமமாயிருக்கிறார் லக்ஷ்மணனும் தன் நமஸ்காரத்தைத் தெரிவிக்கச் சொன்னான்' என்கிறான். சந்தோஷம் நிறைந்த நிலையில் ஸீதைக்கு ''உயிரைக் காத்து நம்பிக்கையோடிருப்பவருக்கு நூறு வருடம் கழித்தாவது ஆனந்தம் வந்தடையும்'' என்ற பழமொழி நினைவுக்கு வருகிறது.

**ஏதிஜீவந்தம் ஆனந்தோ நரம் வர்ஷசதாதபி** 8

சற்றுமுன் மனமிழந்து உயிர்விடுவதைப் பற்றி நினைத்த ஸீதையிடம் சற்று நெருங்கிப் பேசுகிறான் ஹனுமான். ஆனால் அவன் அருகில் வரவர மீண்டும் பயம். அவனே ராவணன் என்று சந்தேகிக்கிறாள்!

**யதாயதா ஸமீபம் ஸஹனுமான் உபஸர்ப்பதி**
**ததாததா ராவணம் ஸா தம் ஸீதா பரிசங்கதே** 9

அவள் கருத்தை உணர்ந்த ஹனுமான் அவளை விழுந்து வணங்குகிறான். அவளோ திரும்பிப் பார்க்க மறுக்கிறாள். சிறிது நேரம் கழித்து 'உன் மாயை யெல்லாம் தெரியும். மீண்டும் என்னைத் துன்புறுத்துவது உனக்கு அழகல்ல. நான் ஏற்கெனவே நொந்து கிடக்கிறேன். நீ உண்மையில் ராம தூதனாயிருந்தால் அவர் கதையைச் சொல். கேட்கிறேன்' என்கிறாள்.

''தேவி, மன்மதன் போன்ற அழகன். சொல்லில் உண்மையும் இனிமையும் உடையவன். விரைவிலே வந்து ராவணனைக் கொல்லப் போகிறான். அவன் அனுப்பிய தூதன், உனக்கு ஆறுதல் சொல்லவே இங்கு வந்தேன். நீ நினைத்தபடி அல்ல நான். சந்தேகம் வேண்டாம். என் பேச்சை நம்பு'' என்று வேண்டுகிறான்.

**நாஹம்அஸ்மி ததாதேவி யதாமாம் அவகச்சஸி**
**விசங்கா த்யஜ்யதாமேஷா ச்ரத்தத்ஸ்வ வததோ மம** 10

ஹனுமானை ராவணனே மாறுவேடம் பூண்ட வானரன் என்று நினைத்தாளல்லவா? இதைக் கம்பன் அழகாகப் பயன்படுத்துகிறார். சந்தேகம்தான். ஆயினும், ''இங்கு வந்து என் கணவன் பெயரைச் சொல்லி என் உணர்வை உருக்கிவிட்டான். இவன் அரக்கனாகவே

இருக்கட்டும், அமரனாகவே இருக்கட்டும். குரங்கினத்து வானரனாக இருக்கட்டும். கொடுமையே உருவான மனிதனாயிருக்கலாம். கருணையின் வடிவமாயிருக்கலாம். என்னைப் பொறுத்தமட்டில் எனக்கு உயிர் தந்தவன் இவனே. இதைவிடப் பேருதவி யார் செய்வார்?'' என்று நினைத்தாளாம்.

**அரக்கனே ஆக, வேறோர் அமரனே ஆக, அன்றிக்**
**குரக்கினத் தலைவனேதான் ஆகுக, கொடுமை ஆக,**
**இரக்கமே ஆக, வந்திங்கு எம்பிரான் நாமம் சொல்லி**
**உருக்கினான் உணர்வைத் தந்தான் உயிர் இதின்**
**உதவியுண்டோ**

'ராமனோடு உனக்கு எவ்விதம் நட்பு ஏற்பட்டது?' என்று கேட்கிறாள். நடந்ததெல்லாம் சொல்லி 'அடையாளமாகக் கொண்டுவந்த இம்மோதிரத்தைப் பார்' என்கிறான். கணையாழியை வாங்கிப் பார்த்துக் கணவனையே அடைந்தவள்போல மகிழ்கிறாள்.

**'பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜானகி முதிதா அபவத்'** 11

ஹனுமானை நன்றி நிறைந்த கண்ணோடு பார்க்கிறாள். அவன் செயல் மகத்தானது. ''நீ சாதாரண மனிதனல்ல. மகாசமர்த்தன், அறிவாளி, பராக்ரமம் நிறைந்தவன். உன்னையன்றி இவ்வரக்கர் ஊரில் எவர் காலெடுத்து வைக்க முடியும்?' என்கிறாள்.

**விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்தஸ்த்வம் ப்ராஜ்ஞஸ்த்வம் வானரோத்தம**
**யேனேதம் ராக்ஷஸபதம் த்வயைகேன ப்ரதர்ஷிதம்.** 12

இதற்கிணையான பாடலில் 'எனக்குத் தாயும் தந்தையும் நீ' என்று சொன்னதாக வர்ணிக்கிறார் கம்பன்.

**அம்மையாய் அப்பன் ஆய அத்தனே, அருளின் வாழ்வே**
**இம்மையே மறுமைதானும் நல்கினை இசையொடு என்றாள்.**

(திருமழிசைப்பிரானின் 'அத்தன் ஆகி, அன்னையாகி ஆளும் எம்பிரான்' என்ற பாடலை நினைவுபடுத்துகிறது.)

உடனே ராமனைப்பற்றி விசாரிக்கிறாள். 'நான் இல்லாமல் தவிக்கிறாரா? துக்கத்தை எப்படி சமாளிக்கிறார்?' என்று கேட்கிறாள்.

**கச்சின் நவ்யததே ராம: கச்சின் ந பரிதப்யதே** 13

''அன்று தருமம் காக்க நாடு துறந்தார். கால் நடையாய்க் கானகம் சென்றபோது என்னையும் நடத்திச் சென்றார். ஆனால் வருத்தமோ, பயமோ ஏற்படவில்லை. இன்று (நானில்லாதபோது) மனதில்

தைரியம் இருக்கிறதா?'' என்கிறுள். தன்னம்பிக்கையும் பெருமையும் ஒலிக்கின்றன.

தர்மாபதேசாத் த்யஜதஸ்ச ராஜ்யம் மாம்
சாப்யரண்யம் நயத: பதாதிம்
நாஸீத்வ்யதா யஸ்யநபீர்நசோக: கஸ்தித்ஸ
தைர்யம் ஹ்ருதயே கரோதி 14

பெருமைதான். அடுத்த அடியில் வெளிப்படையாய் வருகிறது. 'அவருக்குத் தாயோ, தந்தையோ, வேறு எவரும் என்னைவிட அன்புக்குகந்தவரில்லை. எனக்கு சமமாகக்கூடச் சொல்ல முடியாது. ஆதலால்தான் நான் அவரைப்பற்றி சேதி வரும்வரை உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேன்' என்கிறுள்.

ந சாஸ்ய மாதா நபிதாச நான்ய: ஸ்நேகாத்
விசிஷ்டோஸ்தி மயாஸமோ வா
தாவத்து அஹம் தூத ஜிஜீவிஷேயம் யாவத்
ப்ரவ்ருத்திம் ச்ருணுயாம்ப்ரியஸ்ய 15

கூப்பிய கரத்துடன் ஹனுமான் சொல்லுகிறுன், ''அங்கயற்கண்ணி, நீ இங்கிருப்பது ராமனுக்குத் தெரியாது. நான் போய்ச் சொன்னவுடன் வருவார் திரண்டதோர் சேனையுடன். சரமாரியாய் அம்புபொழிந்து லங்கையை அரக்கரற்ற இடமாக ஆக்கிவிடுவார், பார்.'

ராமன் எப்படி துக்கத்தை சமாளிக்கிருர் என்று கேட்டாள் அல்லவா? வர்ணிக்கிருன் ஹனுமான்.

''மது, மாம்ஸங்களைத் தவிர்த்து எளிய உணவையே உண்டு உயிர்வாழ்கிருர். உடல்மேல் ஊர்ந்து செல்லும் எறும்பு, பூச்சி, பூரான்களைக்கூட உதறித்தள்ளாமல் உன்னையே நினைந்து மெய்மறந்து இருக்கிருர். உன்பால் உள்ள காதலால் எப்போதும் தியானம், எப்போதும் சோகம். அவர் உறங்குவதேயில்லை. அப்படி ஒருவேளை உறங்கினுலும் 'ஸீதை' என்று இனிய பெயரைச் சொல்லிக் கொண்டே எழுந்திருக்கிருர். எங்காவது புஷ்பம், பழம், அல்லது இனிய பொருளைக் கண்டால் உன்னை நினைத்து 'என் கண்ணே' என்று உன்னேடு பேசத் தொடங்கிவிடுகிருர். தினமும் தவிக்கிருர். தினமும் உன்னைப்பற்றியே பேசுகிருர். உன்னை அடையவே உறுதிகொண்டு ஈடுபட்டிருக்கிருர், தேவி.''

ந மாம்ஸம் ராகவோ புங்தே ந சாபி மது ஸேவதே
வன்யம் ஸுவிஹிதம் நித்யம் பக்தம் அச்னுதி பஞ்சமம்
நைவதம்சான் ந மசகான் நகீடான் நஸரீஸ்ருபான்
ராகவோ அபநயேத் காத்ராத் த்வத்கதேனுந் தராத்மனு
நித்யம் த்யானபரோராமோ நித்யம் சோக பராயண:

ந அன்யத்சிந்தயதே கிஞ்சித்ஸது காமவசம் கத:
அநித்ரஸ்ஸததம் ராமோ ஸுப்தோபிச ந ரோத்தம:
ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரன் ப்ரதிபுத்யதே
த்ருஷ்ட்வாபலம் வாபுஷ்பம்வா யத்வா அன்யத்ஸுமனோஹரம்
பஹுசோ ஹாப்ரியே இத்யேவம் ச்வம்ஸஸ்த்வாம் அபிபாஷதே
ஸதேவி நித்யம்பரிதப்யமான: த்வாமேவ ஸீதேஇதி அபிபாஷமாண:
த்ருதவ்ரதோ ராஜஸுதோ மஹாத்மா தவைவ லாபாய
க்ருதப்ரயத்ன: 16

வர்ணனை முழுதும் உயர்ந்த காதலனுக்குரிய லக்ஷணங்கள். இதைக் கேட்டு எவள்தான் பெருமையடையமாட்டாள்?

மேகத்திலிருந்து விடுபட்ட சந்திரன்போல் பிரகாசித்தது ஸீதையின் முகம் என்கிறார் கவி.

24

# வேண்டினுள் தொழுது

ராமன் நிலையை வர்ணித்த ஹனுமானைப் பார்க்கப் பார்க்க ஸீதையின் முகம் மலருகிறது. 'நீ சொன்ன தெல்லாம் அமுதம்போல் இருப்பினும் அதில் ஒரு துளி நஞ்சும் கலந் திருக்கிறதே. ராமன் என்னையே நினைத்திருக்கிருர் என்பதோடு அவர் சதா துயரத்தில் ஆழ்ந்திருக்கிருர் என்றும் சொல்லிவிட்டாயே? ஆனுல் விதி யாரைவிட்டது? பரந்த செல்வத்திலும் ஆழ்ந்த துயரத் திலும் மனிதனை கட்டியிழுத்துச் செல்லும் சக்தி விதி. அதை தவிர்க்க முடியுமா? அல்லல்பட்டுத் தவிக்கும் ராமனையும் என்னையும் லக்ஷ்மணனையும்விட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?' என்கிருள்.

**அம்ருதம் விஷ ஸம்ஸ்ருஷ்டம் த்வயா வானர பாஷிதம்**
**யச்ச நான்யமனு ராமோ யச்ச சோக பராயண:**
**ஐச்வர்யே வாஸூ விஸ்தீர்ணே வ்யஸனே வாஸூதாருணே**
**ரஜ்வேவ புருஷம் பத்வா க்ருதாந்த: பரிகர்ஷதி**
**விதிர் நூனம் அஸம்ஹார்ய: ப்ராணினும் ப்லவகோத்தம**
**ஸௌமித்ரிம் மாம்ச ராமம்ச வ்யஸனை: பச்ய மோஹிதான்** 1

நீதியும் பொருளும் அடங்கிய பேச்சு என்று வர்ணிக்கிருர் கவி. (தர்மார்த்த ஸஹிதம் வச :)

ஆனுல் இத்துயரத்துக்கு முடிவு உண்டா? 'கடலில் கப்பல் உடைந்தபின் நீந்தி நீந்திக் களைப்புற்றவன் கரையை நோக்கி ஏங் குவது போல் சளைத்து நிற்கும் நிலை. இதற்கு வழி என்ன? முடிவு எப்போது' என்று கேட்கிருள் ஸீதை. 'ராமனின் துயர்தீருமோ?' என்கிருள். தான்படும் அல்லல் அற்பமெனத் தோன்றுகிறதுபோலும்.

**சோகஸ்யாஸ்ய கதா பாரம் ராகவோதி கமிஷ்யதி**
**ப்லவமான: பரிச்ராந்த: ஹதநௌஸ் ஸாகரே யதா** 2

ராவணன் கொடுத்த தவணையும் முடியப் போகிறது. 'ராமன் பெருமையும் வீரமும் எனக்குப் பயன்படுமோ?' இவ்வாறு புலம்பு கின்ற ஸீதைக்கு ஆறுதல் கூறுகிறான் ஹனுமான். 'நான் சென்று சேதி சொல்ல வேண்டியதுதான். உடனே வருவார் ராமன். பெருஞ் சேனையோடு வருவார்' என்கிறான். இன்னொரு யோசனையும் தோன்று கிறது. 'இன்றே காண வேண்டுமா ராமனை? என் தோள்மீது ஏறிக் கடல் கடந்து செல்வாய் தேவி. அதற்கு வேண்டிய வலிமை எனக்கு உண்டு' என்கிறான்.

ஸீதையை உடன் அழைத்துச் செல்வதே முறை என்று கருதி அவளிடமே நியாயம் கேட்கிறான் என்று கற்பனை செய்கிறார் கம்பன் ''பேரழகன் ராமனிடம் சென்று 'உயிர்தரும் மூலிகைக்கொப்பான உன் மனைவி வஞ்சனையரக்கர் சிறையில் விடுதலைபெறும் வழி தெரி யாமல் துயரில் ஆழ்ந்து இருக்கிறாள்' என்று சேதி சொன்னால் என்னை இங்கு தூதனாக அனுப்பியதன் பயன் என்ன? நீயே சொல்'' என் கிறானாம்.

**அருந்ததி! உரைத்தி அழகற்கருகு சென்றுன்**
**மருந்தனைய தேவி நெடுவஞ்சர் சிறை வைப்பில்**
**பெருந்துயரினோடும் ஒரு வீடு பெறல் இல்லாது**
**இருந்தனள் எனப் பகரின் என்னடிமை என்னும்?**

ஸீதைக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. அதற்கு மேல் வியப்பும் ஏற்படுகிறது. 'சிறிய உடல் கொண்ட நீ என்னை எப்படிச் சுமந்து செல்வாய்' என்று கேட்கிறாள். 'என் திறமை நீ அறியாய்' என்று நினைத்து உடலைப் பெருக்கிக் காட்டுகிறான் ஹனுமான். கடல் கடந்த சமயம் உடல் வளர்ந்து நின்றதுபோல் பேருருவம் கொண்டு நிற் கிறான்.

நம்பிக்கை வந்துவிட்டது. ஆனால் செல்வது உசிதமா? இல்லை யென்று உறுதியாய்த் தெரியும். எனினும் அதை நாஸுக்காகத்தெரி விக்கிறாள். 'நீ சுமந்து செல்லும்போது நான் பயத்தால் விழுந்து விடுவேன். அல்லது அரக்கர் நம்மைத் தொடர்ந்து வருவார்கள். உன்னைப் போருக்கழைப்பர், என்னை மீட்க நினைப்பர். அதுவும் பயங் கரமான நிலைதான். ஒருவேளை நீ அரக்கர் அனைவரையும் கொல்ல லாம். பின் ராமன் பெருமைக்கு வாய்ப்பே இல்லாமல் போய்விடும். அல்லது என்னைப் பிடித்து வேறு எங்காவது ஒளித்து வைப்பார்கள். பின் ராமனுக்கு எப்படித் தெரியும்? செய்ததனைத்தும் பயனில்லாமல் போய்விடுமே! மேலும், நான் கணவனைத் தவிர பிறனைத் தொட முடியுமா? ராவணன் தூக்கி வந்தபோது நான் அநாதை, தனிமையில். இருந்தேன். வலிய இழுத்து வந்தான். இன்று அவனைக் கொன்று வேரோடறுத்து என்னை மீட்டுச் சென்றால்தான் என் நாதனுக்குப் பெருமை' என்கிறாள்.

யதி ராமோ தசக்ரீவம் இஹ ஹத்வா ஸபாந்தவம்
மாம்இதோ க்ருஹ்ய கச்சேத தத்தஸ்ய ஸத்ருசம் பவேத் 3

இங்கு வேறொரு கருத்தையும் அமைக்கிறார் கம்பன். 'ராவணன் என் குடிசையில் வந்து உணவு உண்டு நன்றி கெட்ட நாய்போல வஞ்சனை செய்து கவர்ந்தான். நீயும் என்னை வஞ்சனையால் மீட்டுச் செல்ல நினைக்கிறாயோ?' என்று இகழ்வாய்க் கேட்கிறாளாம் ஸீதை.

**நன்றி என்பதன் வஞ்சித்த நாயவன்**
**நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ.**

அவரை இங்கு வரச்சொல். அதற்கான ஏற்பாட்டை விரைவில் செய். துன்பத்திலிருக்கும் எனக்கு இன்பம் வரும் வழி காட்டு' என வேண்டுகிறாள்.

சிராய ராமம்ப்ரதி சோக கர்சிதாம் குருஷ்வ
மாம் வானரமுக்ய ஹர்ஷிதாம் 4

ஸீதையின் சொல்லைக்கேட்டு சொல்லின் செல்வனான ஹனுமான் மகிழ்கிறான். 'உத்தமப் பெண்ணுக்குரிய பேச்சு. உண்மைதான். கடல் கடப்பது கடினம்தான். ஆனால் மற்றொரு காரணம் சொன்னாயே, தேவி, உன்னையன்றி வேறு யார் இப்படிச் சொல்ல முடியும்?'

ஏதத்தேஸத்ருசம் தேவி பத்னியாஸ்தஸ்ய மஹாத்மன:
காஹி அன்யாத்வாம்ருதே தேவி ப்ருயாத் வசனம் ஈத்ருசம் 5

'என் தலைவனிடம் உள்ள அன்பினால் உன்னை இன்றே அழைத்துச் செல்ல அவா ஏற்பட்டது. சரி, நீ வராவிட்டாலும் அடையாளம் ஏதாவது கொடு. ராமன் புரிந்துகொள்ள உதவும்' என்கிறான்.

'என் மனதுக்கு மிகவும் பிடித்த ஓர் அடையாளம் சித்ரகூடத்தில் நடந்த ஓர் சம்பவம். அதைக் கூறுவாய். நதியில் விளையாடித் திரும்பியபோது காக்கை ஒன்று வந்து என் முலை தீண்ட நான் அதை விரட்டினேன். கோபத்தில் மண் கட்டியை அதன்மீது வீசியதையும் என் ஆடை கலைந்திருந்ததையும் பார்த்து ராமன் நகைத்தார். வெட்கித்து நின்ற என்னை அருகில் அமர்த்தி ஆறுதல் சொன்னார். அன்போடு அணைத்தார். களைத்து உறங்கிவிட்டேன். அவர் மடியில் இருந்த என்னை அக் காக்கை மீண்டும் இம்சிக்கவே விழித்தெழுந்து பார்த்த ராமன் என் மார்பில் ரத்தம் கசிவதைக் கண்டார். வெகுண்டெழுந்து அக்காக்கையின்மீது பிரம்மாஸ்திரத்தை ஏவிவிட்டார்! எங்கெங்கோ சுற்றியும் விடாமல் விரட்டி ராமன் காலடியில்-கொண்டுவந்து வீழ்த்தியது அஸ்திரம். கருணை காட்டி அக்காகத்தின் ஒரு கண்ணைப் பறித்து உயிரைக் காப்பாற்றினார் ராமன்.

என்பொருட்டு ஒரு காகத்தின்மீது சீற்றம் கொண்டு பிரம்மாஸ்திரம் விடுவித்த பெருமகன் இன்று என்னையே தூக்கி வந்த அரக்கனை எப்படி விட்டு வைத்திருக்கிறார் என்று கேள். வில்லின் பெருமை எனக்குத் தெரியும். ஆனால் அதை ஏன் அரக்கர்மீது ஏவவில்லை? லக்ஷ்மணன் கூடவா வராமல் இருப்பது? என் விதி கொடியது சந்தேகமே இல்லை. அதனால்தான் அவர்கள் வலிமை எனக்குப் பயன்படவில்லை' என்கிறாள்.

**மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹததஸ்தி நஸம்சய:**
**ஸமர்த்தாவபி தௌ யன்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ** 6

விதியை நொந்து கொள்ளுகிறாள். ஆனால் விடுதலை பெற வழி சொன்ன ஹனுமானின் உதவியை மறுக்கிறாள். எண்ணிய முடிதல் வேண்டும்!

'உன்னைத் துயரத்திலிருந்து விடுவிப்பதே ராமனின் குறி. ஆணையாய்ச் சொல்லுகிறேன். ராமனுக்கோர் சேதி சொல்' என்று ஹனுமான் கேட்க, ஸீதை மேலும் பேசுகிறாள். 'கோசலை பெற்ற மைந்தனை என் சார்பாக வணங்குவாயாக. ஊரையும், உறவையும், பொருளையும், பெண்டையும் துறந்து ராமனோடு உடன் வந்த லக்ஷ்மணனையும் கேட்டதாகச் சொல். பெரியோரிடம் அடக்கம் உடையவன், அவன் யாரிடமும், அதிகம் பேசமாட்டான். பார்வைக்குச் சற்று தந்தையைப் போலவே உருவம். அவன் என்னைவிட அதிக அன்புக்குரியவன் ராமனுக்கு!' என்கிறாள்.

**மத்த: ப்ரியதரோ நித்யம் ப்ராதா ராமஸ்ய லக்ஷ்மண:** 7

ஆனால் முக்கியமான சேதி ஒன்று உண்டு. 'ஒரு மாதம்தான் உயிர்தரிப்பேன். ராவணன் என்னைத் துன்புறுத்துகிறான். பாதாளத்திலிருந்து பூதேவியை விஷ்ணு மீட்டு வந்ததுபோல் என்னைக் காப்பாற்றட்டும்' என்கிறாள்.

ஒரே மாதத் தவணைக்குள் வர வேண்டிய அவசரத்தை வற்புறுத்திக் கூற ஒரு கருத்தைக் கையாளுகிறார் கம்பன். 'ஒரு மாதத்துக்குள் இங்கு வராவிடில் கங்கை ஆற்றில் அவரது திருக்கையினாலேயே எனக்கு ஈமக்கடன் செய்யலாம் என்று சொல்லுவாயாக' என்றுளாம் ஸீதை! தைக்கும் சொல்.

**திங்கள் ஒன்றில் என்செய் தவம் தீர்ந்ததால்**
**இங்கு வந்திலனே எனில் யாணர்நீர்க்**
**கங்கையாற்றங்கரை அடியேற்குறுகுத் தன்**
**செங்கையால் கடன் செய்க என்று செப்புவாய்**

இம்மன நிலையில் என்னவெல்லாம் தோன்றுகிறது! 'நான் அந்த அழகருக்கு ஏற்ற தாரம் இல்லையோ, என்னமோ, அவர் நெஞ்சில்

ஈரம் இருக்கிறதோ என்னமோ, தனது வீரத்தைக் காக்க இங்கு வர வேண்டியது அவசியம்' என்கிறாளாம்.

**ஆரம்தாழ் திருமார்பற்கு அமைந்ததோர்**
**தாரம்தான் அலள் ஏனும் தயா எனும்**
**ஈரம்தான் மனத்திலை என்றாலும் தன்**
**வீரம் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்**

பிறகு, ஆடையில் சுற்றி வைத்திருந்த சூடாமணியை எடுத்துக் கொடுக்கிறாள். இதுவே பேரடையாளம் என்று அதைக் கொடுக்கும் போது 'என்னை நாடி இங்கு வந்து எனக்குயிர் தந்த நண்பா! இதைக் கொள்வாயாக' என்று சொன்னாளாம்.

**நாடிவந்து எனதின்னுயிர் நல்கிய நம்பா**
**கோடி என்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்**

(உடன் செல்ல மறுத்து நாதன் விரைவில் வர வேண்டுகிறாள் ஆதலால் 'மெய்ப்புகழ் கொண்டவள்' எனக் குறிக்கிறார்.)

இந்த சூடாமணியைக் கண்டதும் ராமனுக்கு என் நினைவுவரும். தாய் தந்தையரையும் நினைப்பார்' என்கிறாள்.

**மணிம் து த்ருஷ்ட்வா ராமோவை த்ரயாணாம் ஸம்ஸ்மரிஷ்யதி**
**வீரோ ஜனன்யா மமச ராக்ஞோ தசரதஸ்ய ச** 8

(விவாகத்தின்போது தசரதன் சொல்படி மருமகளுக்குக் கோசலை அளித்த பரிசு.)

'நீ எப்படியாவது முயற்சி செய்து என்துயர் நீங்கும் வழியைச் செய்' என்கிறாள். பதில் பேசாமல் வணங்கி, புறப்பட தயார் செய்கிறான் ஹனுமான். அதைக் கண்டு கலங்கி மேலும் சொல்லுகிறாள். 'எல்லோரையும் கேட்டதாகச் சொல். ராமன் வந்து என்னைக் காக்கும் வழியைச் செய். அவர் என்னை உயிருடன் காண ஓர் வழி செய். நீ ஊட்டும் உற்சாகத்தினால் அவருக்கு ரோஷம் உண்டாகி, நான் கூறிய மொழிகள் கேட்டு வீர்யம் மேலிட்டு அவர் இங்கு வரவேண்டும். அதற்கு உன்னையே நம்புவேன்.'

ஹனுமான் மீண்டும் ஆறுதல் கூறுகிறான், 'தேவி, அவர் வலிமைக்கு ஈடு ஏது? அவர் எய்யும் சரமாரி கொடியது அதுவும் உன் பொருட்டு ஏவிய பாணத்தை எவரால் தடுக்க முடியும்?'

'போய் வருகிறேன்' என்று சொன்ன ஹனுமானை ஸீதை மீண்டும் மீண்டும் பார்க்கிறாள். அளவிலா மதிப்பு! 'ஒரு நாள் தங்கிப் போகலாமே?' என்று விருந்தினரை உபசரிப்பதுபோல் கூறுகிறாள்.

'நான் சொல்வதைக் கேட்டால் ஒரு நாள் தங்கிப் போகலாம். எங்காவது அடர்ந்த புதரில் மறைந்திருந்து சற்று இளைப்பாறிவிட்டு நாளைக்குப் போகலாமே? (அவ்வளவுதான் அவள் செய்யக்கூடிய உபசாரம்) எனக்கும் சற்று ஆறுதலாயிருக்கும். உன் எதிரில் என் துயரை மறந்து சற்று தெம்பாக இருக்கிறேன். நீ போனபின், திரும்பி வரும்வரை என் உயிர் இருக்குமோ என்றே சந்தேகமாயிருக்கிறது. சந்தேகம் என்ன? (இருக்காதுதான்). மேலும், என் மனதில் ஒரு பெரும் கவலை இருக்கிறது. கடல் கடந்து இங்கு எப்படி வருவார்கள், ராமனும் அப்பெரும் சேனையும்?'

**யதிவா மன்யஸே வீர வஸைகாஹம் அரிந்தம**
**கஸ்மின்ஸ்சித் ஸம்வ்ருதே தேசே விச்ராந்த: ச்வோ கமிஷ்யஸி**
**மமசேதல்ப பாக்யாயாஸ் ஸாந்நித்யாத் தவ வானர**
**அஸ்ய சோகஸ்ய மஹத: முஹூர்த்தம் மோக்ஷணம் பவேத்**
**கதே ஹி ஹரிசார்தூல புனராகமனாய து**
**ப்ராணானாம் அபி ஸந்தேஹோ மமஸ்யாத் நாத்ரஸம்சய:**
**...............**
**...............**
**கதம் நு கலு துஷ்பாரம் தரிஷ்யந்தி மஹோததிம்**
**தானி ஹர்யருக்ஷ ஸைன்யானி தௌ வா நரவராத்மஜௌ** 9

நற்செய்தி கொண்டுவந்த நண்பன்மீது அபிமானம், அவன் போகிறானே என்ற ஏக்கம், விடுதலை கிடைக்குமா என்ற சஞ்சலம், எல்லாம் ஒருங்கே வெளிப்படுகின்றன. 'உன்போன்ற சக்தி யாருக்கு உண்டு'? என்ற புகழ்ச்சியும் தொக்கி நிற்கிறது.

ஆனால் மீண்டும் தன் உறுதியையும் ஆணையையும் நினைவுறுத்துகிறாள். ராமன் வந்து நேரில் நின்று போரில் வென்று மீட்டுச் சென்றால்தான் பெருமை! 'அம்புகொண்டு லங்கையைச் சல்லடையாய்த் துளைத்து என்னோடு திரும்புதல் அல்லவோ வீரனுக்குப் பெருமை?' என்கிறாள். 'அதற்கு நீ உதவ வேண்டும்'! சொல்லிலே ஆத்திரம், நெஞ்சிலே வீரம், குரலிலே கனிவு.

**பலைஸ்ஸமக்ரைர்யதி மாம் ராவணம் ஜித்ய ஸம்யுகே**
**விஜயீ ஸ்வபுரீம் யாயாத் தத்து மேஸ்யாத்யசஸ்கரம்**
**சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பர பலார்தன:**
**மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்** 10

இந்த ஆத்திரத்தை மிகைபடுத்திக் காட்டுகிறார் கம்பன். அரக்கியர் கழுத்தில் நூல் அற்றுப் போக, இலங்கை அரக்கரது எலும்புகளாலான மலைபோல் ஆக வேண்டும் என்று சொன்னாளாம் ஸீதை!

ஹனுமான் சொல்லும் பதில் அறிவும், அடக்கமும் நிறைந்ததாயிருக்கிறது.

எப்படி வருவார்கள் என்று கேட்டாள் அல்லவா? 'என் போன்றவர்கள் அநேகம் இருக்கின்றனர் சுக்ரீவன் சேனையில். என்னைவிட மேலானவர்கள் பலர். என்னைவிடச் சக்தியில் குறைந்தவர் யாருமில்லை. நானே இங்கு வந்து விட்டேனென்றால் அவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஒரே பாய்ச்சலில் தாண்டி வந்துவிடுவார்கள். சேதி சொல்லும் தூதனாய் அனுப்ப சாதாரண மனிதனைத்தானே தேர்ந்தெடுப்பார்கள்? ஆகையால் கவலைப்படாதே' என்கிறான்.

மத்விசிஷ்டாஸ்ச துல்யாஸ்ச ஸந்தி தத்ர வனௌகஸ:
மத்த: ப்ரத்யவர: கஸ்சித் நாஸ்தி ஸுக்ரீவ ஸந்நிதௌ
அஹம் தாவத் இஹ ப்ராப்த: கிம் புனஸ்தே மஹாபலா:
நஹி ப்ரக்ருஷ்டா: ப்ரேஷ்யந்தே ப்ரேஷ்யந்தே ஹி இதரே ஜனா: 11

'ராமனுக்குப் பணி செய்ய எண்ண முடியாத பேர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் நான். ஏவல் கூவினால் ஓடிப்பணி செய்பவன்' என்று சொன்னதாகக் கம்பன் வர்ணிக்கிறார்.

**எண்ணற்கரிய படைத் தலைவர் இராமற்**
**கடியார் யான் அவர் தம்**
**பண்ணைக் கொருவன் எனப் போந்தேன்**
**ஏவல் கூவல் பணி செய்வேன்**

கடைசியில் மீண்டும் ராமனைப் புகழ்கிறான். 'ராமன் காதலால் வாடுகிறார். ராமனுக்கு மிகையானவர் யார்? லக்ஷ்மணனுக்கு ஈடுதான் எவர்? காற்றும் நெருப்பும் சேர்ந்தது போல் அவரிருவரும் உன் பொருட்டுக் கனல் வீசுவர். ஆதலால் அழாதே, அம்மா. அவலமான யோசனை எதுவும் தோன்றாமல் பார்த்துக் கொள்' என்கிறான்.

மா ருதோ தேவி சோகேன மாபூத் தே மனஸ: அப்ரியம் 12

'விரைவில் ராமன் வருவார். நான் திரும்பிச் செல்லும்வரை பொறுத்துக்கொள்' என்கிறான்.

ந தே சிராத் ஆகமனம் ப்ரியஸ்ய க்ஷமஸ்வ
மத்ஸங்கம காலமாத்ரம் 13

'வீரனைக் காண்டலே குறை, பின்னும் காலம் வேண்டுமோ?' என்கிறார் கம்பன்.

இவ்வளவு இனிமையும் இதமும் கலந்து பேசும் நண்பன் புறப்பட இருக்கிறான். அவனைப் பார்த்தாலே மனம் மலருகிறது. எப்படி? பாதி விளைச்சலில் மழை பெய்த பூமிபோல் என்கிறார் வால்மீகி.

அர்த்த ஸஞ்ஜாத ஸஸ்யேவ வ்ருஷ்டிம் ப்ராப்ய வஸுந்தரா 14

'என் கணவனைக் கண்டு அணைக்கத் துடிக்கிறேன். தயை புரிவாய்' என வேண்டுகிறாள். மகிழ்ந்த நிலையில் இன்னுமோர் அடையாளம் சொல்லியனுப்புகிறாள். காட்டில் ஒருநாள் தனிமையில் இருக்கும் சமயம் ஸீதைக்கு நெற்றியில் திலகம் அழிந்திருந்தது. அது கண்ட ராமன் அருகிலிருந்த ஒரு காவிக் கல்லைக் கீழே உரைத்து அதை விரலால் எடுத்து, நெற்றியிலிடுவதற்கு பதிலாகக் கன்னத்தில் பொட்டிட்டானாம். (மட்டிலா அழகுக்கு திருஷ்டிப் பொட்டு!) 'அது நினைவிருக்கிறதா என்று கேள்' என்கிறாள். துயரத்தில்தான் அன்பு நினைவுக்கு வரும்.

**மன: சிலாயாஸ்திலகோ கண்ட பார்ச்வே நிவேசித:**
**த்வயா ப்ரநஷ்டே திலகே தம் கில ஸ்மர்த்தும் அர்ஹஸி** 15

இந்த விருத்தாந்தத்துக்கு பதிலாக வேறொரு கருத்தை உபயோகிக்கிறார் கம்பன். மிதிலையில் விவாகம் ஆன தினம் 'இந்தப் பிறவியில் வேறொருத்தியை மனதால்கூட அணுகமாட்டேன்' என்று வரம் அளித்தாராம் ராமன்! 'அதை நினைவுறுத்துவாயாக' என்கிறாள்.

(புதிய கருத்து. கம்பன் காலத்துக்குள் ராமனுக்கு 'ஏக பத்னீவ்ரதன்' என்ற பட்டம் கிடைத்துவிட்டது; அது இங்கே ஒலிக்கிறது.)

**வந்தெனைக் கரம்பற்றிய வைகல்வாய்**
**இந்த இப்பிறவிக்கிரு மாதரைச்**
**சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்**
**தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்**

ராமன் கொடுத்த வரம் எப்படியோ, இப்போது ஸீதை ஒரு வரம் வேண்டுகிறாள். 'நான் இப்படியே ஏங்கி இருந்து மாய்ந்து போனாலும் மீண்டும் ஒரு பிறவி எடுத்துவந்து பிறன் என் மேனியைத் தீண்டியதீவினையை தீர்த்துக் கொள்ள எனக்கு ஒரு வரம் அளிக்க வேண்டுமென்று சொல்' என்கிறாள். மாளாப் பழியைப் போக்கிக் கொள்ளத் துடிக்கிறது உள்ளம். பேச்சில் ஆத்திரம் பொங்குகிறது.

**ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்**
**மீண்டு பிறந்து வந்து தன் மேனியைத்**
**தீண்டலாவதோர் தீவினை தீர்வரம்**
**வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்**

('தன் மேனியைத் தீண்டாலவதோர் தீவினை தீர்வரம்' என்பதை 'ராமபிரானது திருமேனியைத் தழுவும்படியும் அதன் மூலம் குற்றத்தைப் போக்கும்படியும்வரம்' என்று வியாக்யானம் செய்வது

சம்பிரதாயம், பிராட்டியின் மேனியைப் பிறன் தீண்டினான் என்று சொல்ல மறுக்கும் மனப்பான்மையே இதற்குக் காரணமாயிருக்கலாம். சுவையை மட்டுமன்றிக் கவிதையின் எழிலைக் குலைத்து, இலக்கணத்தையும் சிதைக்கிறது இவ்விளக்கம்.)

ஏன் இன்னொரு பிறவியைப் பற்றிப் பேச வேண்டும்? இப் பிறவியில் இனி சுகத்துக்கு வழியில்லை. நம்பிக்கையும் இல்லை. 'திரும்பி அயோத்திக்குச் சென்று அரசு ஆளவும், யானைமீதேறி ஊர்வலம் போகவும், கல்யாணக் கோலங்கள் காணவும் பாக்யம் செய்யவில்லை. முற்பிறவியின் வினையைத்தான் சொல்ல வேண்டும்' என்கிறாள்! மனம் சோர்ந்துவிட்டது.

**அரசு வீற்றிருந்து ஆளவும் ஆய்மணிப்**
**புரசையானையின் வீதியிற் போகவும்**
**விரசுகோலங்கள் காண விதியிலேன்**
**உரைசெய்து என்பல? ஊழ்வினை உன்னுவேன்.**

இப் பிறவியில் சுகம் கிடைக்காது என்று நினைக்க ஒரு காரணத்தையும் கற்பிக்கிறார் கவி. ஊரார் அனைவரும் வருந்துகின்றனர் அயோத்தியில். அன்னை கோசலை துன்புற்றிருக்கிறாள். அருமை பரதன் இன்னல்பட்டுத் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறான். 'இதையெல்லாம் கருதி அங்கு ஏகுவதேயல்லாமல் தென் திசையில் வருவது எங்ஙனம்?' என்று நினைக்கிறாளாம்.

**தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்**
**அன்னை நோய்க்கும் பரதன் அங்கு ஆற்றும்**
**இன்னல் நோய்க்கும் அங்கு ஏகுவதன்றியே**
**என்னை நோக்கி இங்கு எங்ஙனம் எய்துமோ?**

இவ்வளவு தூரம் ஏக்கத்தை வளர்த்த கம்பர் அதைப் போக்கடிக்கும் சாதுர்யத்தைப் பாருங்கள். சீதை சோகத்தில் பிதற்றுகிறாள் என்றுணர்ந்த ஹனுமான் அவளை உற்சாகப்படுத்த ஏளனத்தைக் கையாளுகிறானும். 'நீ இங்கேயே கிடந்து இறப்பாய், உண்மைதான். ராமன் மட்டும் உயிரோடிருப்பான். அயோத்திக்குப்போய் மகுடமும் சூட்டிக்கொள்வான். இதெல்லாம் மெய்யல்லவா?' என்கிறான்! (இதை எதிர்மறையணி என்று சொல்வார்கள்.)

**வீவாய் நீ இவண் மெய்யஃதே**
**ஓய்வான் இன்னுயிர் உய்வானும்**
**போய்வான் அந்நகர் புக்கு அன்றே**
**வேய்வான் மௌலியும் மெய் அன்றே!**

ஏளனம் புரிகிறதோ இல்லையோ, உணர்ச்சியோடு இன்னெரு வார்த்தை சொல்லுகிறுன். 'நீ குறித்த அந்நாளில் இக்கொடுஞ் சிறை யினின்று உன்னை மீட்டுப் போகாமல் இருந்தால் ராவணன் அவன், ராமன் இவன் என்று ஆகிவிடும். அப்பழி என்றென்றும் நீங்காது' என்கிறுன். ராமன் வரத்தாமதித்தால் ராவணனை விடக் கொடிய வனுகி விடுவான் என்பது கருத்து!

குராவரும் குழலி, இக்குறித்த நாளிலே
விராவரும் நெடுஞ்சிறை மீட்கிலான் எனில்
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன் இவன் இராமன் என்றனன்

புறப்படத் தயாராக நிற்கும் ஹனுமானை பிரியாவிடை கொடுத் தனுப்புகிறுள் ஸீதை. கலங்கிய கண்ணெடு மீண்டும் கூறுகிறுள். 'என் துயரத்தின் கடுமையையும் அரக்கர் கொடுமையையும் அங்கு சென்ற உடன் ராமனுக்கு எடுத்துரைப்பாய். இடையூறின்றிப் போய், வா' என்று ஆசி கூறுகிறுள்.

இமம்ச தீவ்ரம் மமசோக வேகம் ரக்ஷோபிரேபி: பரிபர்த்ஸனம்ச
ப்ருயாஸ்து ராமஸ்ய கதஸ்ஸமீபம் சிவஸ்ச தே
அத்வாஸ்து ஹரிப்ரவீர 16

25

# ‘கண்டேன் ஸீதையை!’

ஸீதையிடம் சூடாமணி பெற்று விடை பெற்று வெளிக் கிளம்பிய ஹனுமான் ஓரிடத்தில் உட்கார்ந்து யோசிக்கிறுன். ‘நால்வகை உபாயங்களில் முதல் மூன்றும் இங்கு பயனற்றவை. அரக்கரிடம் ஸாமம் பலிக்காது. அவர்களுக்குள்ள செல்வத்தில் தானம் ஒரு பொருட்டென மதிக்கமாட்டார்கள். படைபலமும் செருக்கும் நிறைந்த இவர்களை பேதம் செய்வதும் சாத்தியமல்ல. தண்டகம் ஒன்றே சரி என்றெண்ணித் தன் பராக்ரமத்தைக் காட்டத் தீர்மானிக்கிறுன்.

எப்படி? ராவணனுக்குப் பிரியமான தோட்டத்தை அழிக்க முற்பட்டால் அவனுக்குக் கோபம் வரும். காவலாட்களை ஏவுவான். அவர்களைக் கொன்று கிஷ்கிந்தைக்குத் திரும்பினுல் அவனுக்கு ஓர் எச்சரிக்கை போலாகும்.

**இதம் வித்வம்ஸயிஷ்யாமி சுஷ்கம் வனம் இவானல:**
**நிஹத்ய தத் ராவண சோதிதம் பலம் ஸுகம்**
**கமிஷ்யாமி கபீச்வராலயம்.** 1

உடனே கோபத்தை வரவழைத்துக்கொண்டு சண்டமாருதம் போல் வனத்தை அழிக்கத் தொடங்குகிறுன் மாருதி. செடிகளும் புஷ்பங்களும் அழிந்து அலங்கோலமாய்க் கிடக்கின்றன. உருக்குலைந்து நிற்கிறது அசோகவனம்.

இக்காட்சியை விவரிக்கும் கம்பன் வினைச்சொற்களைக்கொண்டே ஒரு பாடல் இயற்றிவிடுகிறுர். அதில் சந்தமும் அமைக்கிறுர்!

முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த
இடிந்தன தகர்ந்தன வெரிந்தன கரிந்த
ஒடிந்தன ஓசிந்தன உதிர்ந்தன பிதிர்ந்த

சோலை அலங்கோலமாய்விட்டது. விழித்தெழுந்த அரக்கர்கள் ஸீதையிடம் சென்று 'இவன் யார்? உன்னோடு பேசினானும். இவன் எதற்கு இங்கு வந்தான்? என்ன சொன்னான்?' என்று கேட்கிறார்கள். பதிலுக்கு ஸீதை சாதுர்யமாகப் பேசுகிறாள் 'அரக்கர் நினைத்தபடி உருவம் எடுக்க வல்லவர்கள். எனக்கென்ன தெரியும்? உங்களுக்கல்லவா தெரிய வேண்டும்? பாம்பின்கால் பாம்புக்குத் தெரியும்' என்கிறாள்! 'நானும் பயந்துவிட்டேன், யார் இவன்?' என்றும் கேட்கிறாள்

அஹிரேவ ஹி அஹே: பாதன்வி ஜானாதி ந ஸம்சய:
அஹம் அபி அஸ்ய பீதாஸ்மி நைனம் ஜானாமி கோன்வயம். 2

(பிராட்டியார் பொய் சொல்லலாமா? என்று தர்க்கம் செய்தால் சாதுர்யமாகப் பேசி சமாளிக்கப் பார்க்கிறாள் என்ற எளிய உண்மை புலப்படாது.)

இதை எல்லாரும் நம்புவார்களா? சிலர் நிற்கச் சிலர் விரைந்து சென்று ராவணனிடம் முறையிடுகின்றனர். 'பேருருவம் கொண்ட வானரன் அசோகவனத்தை அழிக்கிறான். ஸீதையோடு பேசினான். ஆனால் பலமுறை கேட்டும் அவன் யாரென்று சொல்ல மறுக்கிறாள் அவள். அவன் ராமனால் அனுப்பப்பட்ட தூதனென்றே தோன்றுகிறது. ஏனெனில் ஸீதையிருக்கும் இடத்தைவிட்டு மற்றதையெல்லாம் அழிக்கிறான்.' என்கிறார்கள்.

கோபத்தால் சிவந்த கண்ணோடு 'அவனை அடக்கிப் பிடித்து வாருங்கள்' என்று உத்தரவிடுகிறான் ராவணன். தடி, கம்பு, சூலம் முதலிய ஆயுதங்கள் ஏந்திக் கூக்குரல் செய்தவண்ணம் ஓடுகிறார்கள் கிங்கரர்கள்.

மரத்தின் மேலே இருந்த வண்ணம் வீரகோஷம் செய்கிறான் ஹனுமான். 'ராமனுக்கு வெற்றியுண்டாகட்டும். சுக்ரீவனுக்கு ஜே!. ராம தூதன் நான். ஆயிரம் ராவணர் எனக்கு ஈடாகமாட்டார் போரினிலே. லங்கையை நாசம் செய்து ஸீதையைக் கண்டு வணங்கி உங்கள் கண்ணெதிரே வெற்றியோடு திரும்புவேன்,

ஜயத்யதிபலோ ராமோ லக்ஷ்மணஸ் ச மஹாபல:

.. .........

............

ஸம்ருத்தார்த்தோ கமிஷ்யாமி மிஷதாம் ஸர்வ ரக்ஷஸாம் 3

ப்ரஹஸ்தனின் புதல்வனுன ஜம்புமாலி என்ற வீரனேடு சண்டையிட்டுக் கொன்றபின் பஞ்சசேனு நாயகர்களை எதிர்த்து நிற்கிருன். அவர்களையும்வென்று ராவணன் மைந்தனுன அக்ஷனையும் கொன்று விடுகிருன். இதைக் கேட்டு ரோஷம் கொண்ட ராவணன் இந்திரஜித்தை ஏவுகிருன். 'மூவுலகிலும் உனக்கொப்பான வீரன் யார்? தவத்திலும் பராக்ரமத்திலும் என்போன்ற மைந்தன் நீ. வீரர் பலரும் மாண்டபின் உன்னையே போருக்கனுப்ப வேண்டியிருக்கிறது. உன் மந்திரத்தாலும் அஸ்த்ர பலத்தாலும் ஹனுமானை வென்று வருவாயாக' என்கிருன். தந்தையை வலம் வந்து வணங்கிச் செல்கிருன் இந்த்ரஜித்.

தேரில் ஏறி விரைந்துவரும் இந்த்ரஜித்தைக் கண்டு பேரொலி செய்கிருன் ஹனுமான். இருவரும் போர் செய்கின்றனர். தந்திரமாகப் பேராடுகின்றனர். ஆனுல் ஒருவன் யுக்தி மற்ருெருவனுக்குப் புரியவில்லை என்கிருர் வால்மீகி.

ஹனுமதோ வேத ந ராக்ஷஸோந்தரம் ந மாருதிஸ்
தஸ்ய மஹாத்மனேந்தரம் 4

இந்நிலையில் ஹனுமானது போர்த் திறமையை மெச்சி மகிழ்ந்தான் இந்திரஜித் என்கிருர் கம்பன். ஆனுல் பார்ப்பவர் எல்லாம் நடுங்கினராம்!

**அன்றது கண்ட ஆழி அனுமனை அமரின் ஆற்றல்**
**நன்றென உவகை கொண்டான் யாவரும் நடுக்க முற்ருர்.**

சிறிது நேரத்துக்குள் வியப்பு. என்ன செய்தாலும் கொல்ல முடியவில்லையே! அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு செல்ல நினைத்து பிரம்மாஸ்திரத்தை ஏவுகிருன் இந்திரஜித்; அவன் வலிமையை உணர்ந்த ஹனுமான் பிரமனுக்கு மரியாதை செலுத்தும் நோக்கத்தோடு கட்டுப்படுகிருன். 'இவர்கள் அழைத்துச் சென்ருல் ராவணனையும் கண்டு பேசலாம்' என்றெண்ணுகிருன்.

கட்டியிழுத்துச் செல்லுகின்றனர். வழியில் பார்ப்போரெல்லாம் 'கொல்லுங்கள், நெருப்பிலே போடுங்கள், வெட்டித் தின்னலாம்' என்று ஆரவாரம் செய்கின்றனர்.

ராவணன் சபையில் நிற்கிருன் ஹனுமான். அரியாசனத்தில் வீற்றிருக்கும் ராவணன் உதயசூரியனைப்போல் பிரகாசிக்கிருன். சிவப்பும் மஞ்சளும் கலந்த வர்ணத்தில் பட்டாடையுடுத்தி, விலையுயர்ந்த ஆபரணங்கள் அணிந்து, திரண்ட புஜங்களோடு உயர்ந்ததோர் பளிங்கு

பீடத்தின்மீது அமர்ந்திருக்கிறான். மந்திரிகள் புடைசூழ வீற்றிருக்கும் ராவணன் இந்திரன் போல் தோன்றுகிறானும் ஹனுமானுக்கு.

**மந்த்ரி பிர்மந்த்ர தத்வக்ஞைரன்யைஸ்ச சுபபுத்திபி:**
**அன்வாஸ்ய மானம் ரக்ஷோபிஸ் ஸுரைரிவ ஸுரேச்வரம் 5**

ராவணனது தேஜஸ் ஹனுமானின் மனதைக் கவருகிறது. 'என்ன அழகு! என்ன துணிவு! என்ன செல்வம்! எல்லாம் பொருந்திய இவ்வரசனுக்கு அதர்மம் ஓங்கி நிற்கிறதே! இல்லையேல் இந்திர லோகத்துக்கே தலைவனாக அமைவான்' என்று மனதுக்குள் நினைக்கிறான். வியந்து நிற்கிறான்.

**அஹோ ரூபம் அஹோ தைர்யம் அஹோ ஸத்வம் அஹோ த்யுதி:**
**அஹோ ராக்ஷஸ ராஜஸ்ய ஸர்வலக்ஷண யுக்ததா**
**யத்யதர்மோ ந பலவான் ஸ்யாத்அயம் ராக்ஷஸேச்வர:**
**ஸ்யாதயம் ஸுர லோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா 6**

ஒரே ச்லோகத்தில் ஐந்து முறை 'அஹோ' என்ற சொல்லை அமைத்து வியப்பின் அளவை உணர்த்துகிறார் வால்மீகி.

ராவணனே இவனைக் கோபமாகப் பார்க்கிறான். மந்திரியான ப்ரஹஸ்தனைப் பார்த்து 'இந்த முட்டாள் யார்? எதற்கு வந்தான்? ஏன் வனத்தை அழித்தான்? கேள்' என்கிறான். (அரசனே நேரில் பேசலாமா?)

ப்ரஹஸ்தன் ஹனுமானைக் கேட்கிறான், 'பயப்படாதே. நிதானித்துக்கொண்டு உண்மையைச் சொல். இந்திரன் உன்னை அனுப்பினானா? அல்லது குபேரன் ஏவினானா? யமன், வருணன் முதலியோர் அனுப்பினரோ? அல்லது விஷ்ணுவின் தூதனா நீ? உண்மையைச் சொல். பொய் சொன்னால் பிழைப்பது அரிது.' ராஜாவுக்கு மேல் கடுமையாய் இருக்கிறான் மந்திரி!

'நீ சொன்னவர் யாரும் என்னை ஏவவில்லை. குபேரனோடு எனக்கு நட்பில்லை. விஷ்ணுவை நான் கண்டேனா? நான் வானரன். அரக்கர் கோமகனைக் காணவே வந்தேன். அந்த நோக்கத்தோடுதான் வனத்தை அழித்தேன். ராமதூதன் நான். ஆதலால் நான் சொல்வதை கவனமாய்க் கேட்கவேண்டும்' என்கிறான் ஹனுமான்.

ராவணனைப் பார்த்துப் பேசுகிறான். 'சுக்ரீவன் ஆணைப்படி நான் இங்கு வந்தேன். அவர் உங்களை விசாரித்ததாக சொல்லச் சொன்னார். அவர் சொல்லியனுப்பிய இதமான மொழிகளையும் கேளுங்கள்' என்றுகூறி ராமனுடைய வரலாற்றைத் தெரிவிக்கிறான். வனத்தில் அவர் மனைவி காணாமல் போய்விட்டாள் என்கிறான்! ('நீ அபகரித்து வந்தாய்' என்ற சொல்லைத் தவிர்க்கிறான் சாதுர்யமான தூதன்.)

**தஸ்ய பார்யா வனே நஷ்டா ஸீதா பதிமனுவ்ரதா 7**

'ஸீதையைத் தேடிப் பலர் சென்றனர். தென்திசை நோக்கி வந்தவர்க்குள் நான் ஒருவன். தேடி அலைந்து கொண்டிருந்தபோது உங்கள் மாளிகைத் தோட்டத்தில் கண்டேன் ஸீதையை. தருமம் அறிந்தவர் தாங்கள். தவத்தில் மிக்கவர். பிறர் மனைவியைக் கைப் பற்றுதல் அழகல்ல' என்கிறான்.

**தத் பவான் த்ருஷ்டதர்மார்த்தஸ் தப : க்ருதபரிக்ரஹ:**
**பரதாரான் மஹாப்ராக்ஞ நோப ரோத்தும் த்வமர்ஹஸி** 8

'பவான்' என்ற சொல் மரியாதைக்குரியவன் என்பதைக் காட்டும்.

ஸீதையை ராமனிடம் கொண்டு சேர்ப்பதே நலம் என்கிறான். தவறினால் என்ன நேரும் என்றும் எச்சரிக்கை செய்வதுபோல் மேலே பேசுகிறான். 'ஸீதை சோகத்தில் ஆழ்ந்து நஞ்சு ஆகிவிட்டாள். அதை உண்டு ஜீரணம் செய்ய வல்லவர் தேவர்களிலும் இல்லை. தவத்தால் அடைந்த மேன்மை அனைத்தையும் இழப்பது நியாயமா?' என்கிறான்.

ஒன்றும் பதிலில்லை. துணிச்சல் மேலிடுகிறது. 'தருமமும் தவமும் பலன் அளித்தன. சந்தேகமில்லை. இந்த அதர்மத்தின் பலனை விரைவில் காண்பீர்கள். ஜனஸ்தானத்தில் கரதூஷணர் மடிந்தது, வாலி உயிர் துறந்தது, ராம சுக்ரீவர்கள் பிரியா நட்பு, இதையெல்லாம் கருதி ஒரு முடிவுக்கு வாருங்கள்' என்கிறான்.

**ப்ராப்தம் தர்ம பலம் தாவத்பவதா நாத்ர ஸம்சய:**
**பல மஸ்யாப் யதர்மஸ்ய க்ஷிப்ரமேவ ப்ரபத்ஸ்யஸே** 9

(தர்மத்தைப் பற்றி புகழும்போது தாங்கள் 'பவான்' என்கிறான் அடுத்த அடியில் அதர்மத்தைப் பற்றிச் சொல்லும்போது 'நீ' என்கிறான்!)

''ஸீதை உன்வசம் சிக்கிய பெண் அல்ல., அவள் இலங்கையை அழிக்கவல்ல பத்ரகாளி.' என்கிறான்.

**யாம் ஸீதே த்யபி ஜானஸி யேயம் திஷ்டதி தே வசே**
**காலராத்ரி இதிதாம் வித்தி ஸர்வலங்கா விநாசினீம்** 10

ஒரு வார்த்தை பேசாமல் தண்டனை விதிக்கிறான் மன்னன் : 'வானரனைக் கொல்லுங்கள்'! கோபம் தலைக்கேறிவிட்டது. சபையில் நிற்கும் விபீஷணன் இதை உணர்ந்துவிட்டான். உடனே ஹிதமான வார்த்தையை எடுத்துரைக்கிறான். 'சற்றுப் பொறு, அண்ணா! இது ராஜ தர்மத்துக்கு விரோதமானது. உலகோர் நிந்திக்கத்தக்க செயல் உனக்கும் ஒப்பானதல்ல.'

ராஜதர்ம விருத்தம் ச லோகவ்ருத்தேஸ்ச கர்ஹிதம்
தவ சாஸத்ருசம் வீ ரகபேரஸ்ய பரமாபணம், 11

ஆனுல் குற்றவாளியை விட்டுவிட வேண்டுமென்று சொல்ல வில்லே. 'இவன் பகைவன்தான். செய்ததும் தவறு. ஆனுல் தூதனைக் கொல்வது முறையல்ல. குற்றத்தை ஆராய்ந்து பார்த்து தூதனுக் குரிய தண்டனையை விதிக்கலாம்' என்கிருன்.

என்ன? குருபியாக்கலாம். சூடு போடலாம். மொட்டையடிக்க லாம். சாட்டையாலடிக்கலாம். 'ஆனுல் கொல்வது என்பது இது வரை கேள்விப்படாத விஷயம்' என்கிருன் 'தாங்களே இப்படிக் கோபித்துக் கொண்டால்...?' நற்குணமுடையோர் கோபத்தை அடக்கிக் கொள்ளுவார்கள் என்று புகழ்ச்சியாகப் பேசி மீண்டும் காரணம் காட்டுகிருன். 'இந்த வானரனைக் கொல்வதில் ஒரு பயனும் இருப்பதாகத் தெரியவில்லே. இவனை யார் அனுப்பினுர்களோ அவர் களைத் தாக்க வேண்டும்' என்கிருன்.

ந சாப்யஸ்ய கபேர்காதே கஞ்சித் பச்யாம்யஹம்குணம்
தேஷ்வயம் பாத்யதாம் தண்டோ யைரயம் ப்ரேஷித : கபி : 12

'அரக்கர்படையில் பல வீரர் இருக்கின்றனர். சிலரைப் பொறுக்கி யெடுத்து அனுப்பு. அவர்கள் அந்த முட்டாள்கள் இருவரையும் எதிர்த்துப் போராடி நம் பெருமையை நிலேநாட்டட்டும்' என்கிருன்.

மாபெரும் வீரன் ராவணன் சகோதரனின் சொல்லே அங்கீகரிக் கிருன். 'நன்று நீ சொல்வது. கொல்வதைத் தவிர வேறு ஏதாவது செய்ய வேண்டியதுதான். வானரத்துக்கு அழகு வால். அதைக் கொளுத்துங்கள்' என்று உத்தரவிடுகிருன். 'வாலில்லாக் குரங்கைப் பார்க்கட்டும் அவன் நண்பர்கள்!' என்கிருன்.

வந்தவன் தூதன். தனக்குச் சமமாகப் பேச உரிமையற்றவன். ஆதலால் ப்ரஹஸ்தனை விட்டு விசாரிக்கச் சொன்னுன். ஹனுமான் சொன்னதற்கெல்லாம் பதிலே பேசாமல் தண்டனை விதித்தான்.

இது கம்பனுக்கு இயற்கையெனத் தோன்றவில்லே போலும். வந்தவனுடன் பேசி உளவு அறிவதாகச் சித்தரிக்கிருர். இடையே ஏளனமும் செய்கிருனும். 'தனது தமையனைக் கொல்ல வைத்து, கொன்றவன்மீது அன்பு செலுத்திய உன் தலேவனுன சுக்ரீவன் அனுப்பிய தூது என்ன?' என்று கேட்கிருன் ராவணன்.

**தம்முனைக் கொல்வித் தன்னுற் கொன்றவர்க் கன்புசான்ற**
**உம்மினத் தலேவனேவ யாதெனக் குரைத்தலுற்றது?**

அடுத்த அடியில், 'தூதனாய் வந்த நீ போர் செய்யக் காரணம் என்ன? உன்னைக் கொல்ல மாட்டோம். அச்சமில்லாமல் சொல்' என்கிறான்.

எம்முனைத் தூதுவந்தாய் இகல்புரி தன்மை என்னை?
நும்மினைக் கொல்லாநெஞ்சம் அஞ்சலை நுவறியென்றான்

(மாபெரும் மன்னன் வனத்தை யழித்த தூதனுடன் சபை நடுவிலே பேசும் பேச்சா இது? சிந்தனைக்குரியது.)

தூதனைக் கொல்லலாகாது என்று வாதாடிய விபீஷணன் வாயிலாக ஒரு மொழி சொல்லுகிறார் கம்பன். மாதரைக் கொன்றவர் இருக்கிறார்கள். ஆனால் தூதரைக் கொன்றவர் யாராவது உண்டோ?

மாதரைக் கொலை செய்தார்கள் உளரென வரினும் வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்?

ஹனுமானைக் கட்டியிழுத்துச் செல்லுகின்றனர். கிழிந்த துணிகள், குப்பை, கூளம், சுள்ளி எல்லாம் வைத்துக் கட்டி வாலைக் கொளுத்துகின்றனர். அதில் எண்ணெயும் ஊற்றுகின்றனர். பெண்களும் சிறுவர்களும் கூடி வேடிக்கை பார்க்கின்றனர்.

உருவத்தில் ஓங்கி சினத்தால் வீங்கி இலங்கையை எரிக்கிறான் ஹனுமான். இதைக் கண்ட சிலர் ஸீதையிடம் சென்று 'உன்னோடு பேசினானே அந்த வானரன் வாலில் தீயுண்டு ஓடுகிறான்' என்று சேதி சொல்லுகிறார்கள். துயரத்தால் வாடுகிறாள் ஸீதை. அக்னி தேவனைத் துதிக்கிறாள். 'நான் என் கணவனுக்குச் செய்த கடமையும் கிடந்த தவமும் உண்மையானால் ஹனுமானுக்குத் தீயே தண்மையுண்டாக்கட்டும்' என ஆணையிடுகிறாள். 'எனது பாக்கியம் துளியாவது எஞ்சியிருந்தால் அவனுக்குக் கேடுவராமலிருக்கட்டும்' என்கிறாள்.

நற்செய்தி கொண்டுவந்த தூதனுக்குத் தன் தவத்தையும் பாக்யத்தையும் பணயம் வைக்கத் துணிகிறாள் உத்தமி. 'வந்திங்கு எம்பிரான் நாமம் சொல்லித்தந்தான் உயிர்' என்றாள் அல்லவா? 'அம்மையாய் அப்பனாய் அத்தனே!' என்று பட்டம் சூட்டினாள் அல்லவா? இப்போது மதிப்பைச் செயலில் காட்டுகிறாள் ஸீதை.

லங்கையில் பல வீடுகள் கொழுந்துவிட்டு எரிகின்றன. மழை காலத்து மேகம் போல் புகை சூழ்ந்து நிற்கிறது. எங்கும் கலவரம். பேரிரைச்சல். இடையே தனக்கு ஒரு தீங்கும் உண்டாகாதது கண்டு வியக்கிறான் ஹனுமான். ராமன் மஹிமையோ அல்லது ஸீதையின் பெருமையோ!

திடீரென்று ஒரு கவலை. ஊரே பற்றி எரியும்போது ஸீதைக்கு என்ன ஆயிற்றோ? 'நொடிப்பொழுதில் அறிவற்ற காரியம் செய்து விட்டேனே' என்று ஏங்குகிறான். அசோகவனத்தை நோக்கி விரைந் தோடுகிறான். க்ஷேமமாயிருக்கும் அவளைக் கண்டு வணங்கி மீண்டும் விடை பெற்றுப் புறப்படுகிறான்.

நீரைக் கிழித்துக் கொண்டு வரும் ஹனுமானைக் கண்டு ஆரவாரம் செய்கின்றனர் வானரர். குன்றின்மீது நின்று தென் திசையை நோக்கிப் பார்த்தவண்ணம் இருந்தவர்கள் பரபரப்போடு பேசுகின்றனர். என்ன ஆயிற்றோ? மரங்களிலும் கிளைகளிலும் உலர்த் தப்பட்ட துணிகள் போல் காட்சியளிக்கிறது வானரக் கூட்டம்!

மகேந்திர கிரியின் மரங்களிடையே வந்து கரை ஏறுகிறான் ஹனுமான். சௌக்யமாய்த் திரும்பிய வீரனை உட்காரவைத்து உப சரிக்கின்றனர். பழங்கள் கொண்டு தருகின்றனர். ஜாம்பவான், அங் கதன் முதலிய பெரியோர்களை வணங்கி 'கண்டேன் ஸீதையை' என்று சுருக்கமாய்ச் சொல்லுகிறான்.

த்ருஷ்டா ஸீதேதி விக்ராந்த: ஸங்க்ஷேபேண ந்யவேதயத் 13

பிறகு ஓரிடத்தில் அமர்ந்து, கைகோர்த்துக்கொண்டு அங்கத னிடம் பேசுகிறான். மற்றவர் சூழ்ந்து நிற்கின்றனர். 'அசோகவனத் தில் கண்டேன் ஸீதையை. அரக்கியர் காவலில் இருக்கிறாள். ஆனால் ஊண் உறக்கமின்றி மெலிந்து ராமனையே நினைத்து ஏங்கித் துறவி போல் இருக்கிறாள்.'

மீண்டும் ஆரவாரம். அவனைப் பேசவிடாமல் கூச்சல் இடுகின் றனர். சிலர் ஏறிக்குதித்து அருகில் சென்று ஹனுமானைத் தொட்டு மகிழ்கின்றனர். வெற்றி கண்ட வீரனைப் பாராட்டும் தோழர்கள்!

அவனைச் சுமந்து சென்றனர் என்கிறார் கம்பன். மகிழ்ச்சி மேலிட்டு அழுதனர் என்கிறார். சிலர் அள்ளி விழுங்குவார் போல் மொய்த்தனராம். சிலர் தொழுதனர். மனித இயல்பு எத்தனைவிதம்!

**அழுதனர் சிலவர் முன்னின்றார்த்தனர் சிலவர் அண்மித்**
**தொழுதனர் சிலவ ராடித் துள்ளினர் சிலவரள்ளி**
**முழுதுற விழுங்குவார் போன் மொய்த்தனர் சிலவர் சுற்றும்**
**தழுவினர் சிலவர் கொண்டு சுமந்தனர் சிலவர் தாங்கி**

மீண்டும் அமைதி. கடலை எப்படித் தாண்டினாய்? லங்கை எப்படி இருக்கும்? ஸீதையை நீ எப்படிக் கண்டாய்? என்று கேள்வி கள் எழுகின்றன. ஜாம்பவான் சொல்லுகிறான், 'நடந்ததெல்லாம்

விவரமாகச் சொல். நாம் திரும்பிச் சென்று அங்கு எதைச் சொல்ல லாம், எதைச் சொல்லலாகாது என்பதையும் எடுத்துச் சொல்'

**யஸ்சார்த்தஸ் தத்ர வக்தவ்யோ கதைரஸ்மாபிராத்மவான்**
**ரக்ஷிதவ்யம் ச யத்தத்ர தத்பவான் வ்யாகரோது ந:** 14

ஹனுமான் கூறும் வரலாறு சுவைமிக்கதாய் இருக்கிறது எல்லாச் சம்பவங்களையும் சொல்லுகிறான். ஆனால் எதைச் சொல்லலாகாது என்று கருதுகிறானோ அதை அவனே தவிர்க்கிறான்.

கணையாழி கொடுத்து அதற்குப் பதிலாகச் சூடாமணி கொண்டு வந்ததைக் கூறுகிறான். அவள் சொல்லியனுப்பிய மற்ற இரு அடையாளங்களைச் சொல்லவில்லை. இவர்களுக்கு என்ன சம்பந்தம்? சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லுவான். இங்கிதம்!

மாபெரும் செயல் வெற்றிகரமாய் முடிந்த நிலையில் ஹனுமானின் ஆற்றலை மெச்சுவதா, அவன் இங்கிதம் அறிந்தவன் என்று வால்மீகி நுட்பமாய்க் காட்டும் அழகை ரசிப்பதா?

# 26

## ஓகை, உவகை

கூடி நின்று கேட்கும் வானரர்கள் மேலும் மேலும் தூண்டிக் கேட்கின்றனர்.

ஸீதையின் நிலையை உணர்ச்சியோடு வர்ணிக்கிறான் தூதன். ராவணன் அசோகவனத்தில் அவளையணுகியபோது உடல் நடுங்கிய போதிலும் உறுதி குன்றாமல் அவள் பேசிய நிலையைச் சித்தரிக்கிறான். 'நான் மேலே மரத்தில் உட்கார்ந்த வண்ணம் பார்த்துக் கொண் டிருந்தேன் 'என்கிறான்.

'ராவணன் இரண்டு மாதம் தவணை கொடுத்தான். ஆயினும் அவள் அவனை ஏசினாள் அதனால் கோபம் கொண்டு அவளைக் கொல்ல முற்பட்டான். கூடியிருந்த பெண்களெல்லாம் நடுங்கி நிற்க அவன் மகிஷி மண்டோதரி எழுந்து அவனைத் தடுத்தாள். பல பெண்கள் புடைசூழத் தன் அந்தப்புரத்துக்குப் போய்ச் சேர்ந்தான் ராவணன்' என்கிறான்.

வரா மண்டோதரீ நாம தயா ஸ ப்ரதிஷேதிக :
........................................ . ...... ................ ..................
ப்ரஸாத்ய ஸஹஸா நீதோ பவனம் ஸ்வம் நிசாசர: 1

நிகழ்ச்சிகளுக்கு முரண்பாடாக இருக்கிறது இங்கு கூறும் கதை. 'ராவணன் அளித்த ஒரு வருடத் தவணையில் இன்னும் இரண்டு மாதங்களே எஞ்சியிருக்கின்றன' என்று ஸீதை ஹனுமானிடம் சொன்னாள். ராவணன் கொல்ல முற்பட்டுக் கையை ஓங்கினான் என்பது மிகைபடக் கூறல். மிரட்டினான். ஆனால் கொல்லத் துணியவில்லை. (அவனா கொல்லுவான்!) அவன் மனதை மாற்றி அழைத்துச் சென்றவள் தான்ய மாலினி, மண்டோதரி அல்ல.

நிகழ்ச்சிகளை நினைவுறுத்தி மீண்டும் கூற நேர்ந்தால் இத்தகைய வேறுபாடு ஏற்படும் என்று குறிக்கிறார் போலும் வால்மீகி ஹனுமானுக்கே சற்று மறந்திருக்கலாம், மிகைபடக் கூறவேண்டிய மனநிலை ஏற்பட்டிருக்கலாம்; அல்லது விவரங்களைப்பற்றி இவர்களுக்கென்ன? என்ற அசிரத்தையும் ஏற்பட்டிருக்கலாம்!

ஸீதையைக் கண்டு பேசி அவளிடமிருந்து சூடாமணி பெற்ற விவரத்தையும் கூறுகிறான். 'அவள் முழுமனதுடன் ராமத்யானத்தில் ஈடுபட்டிருக்கிறாள். பராக்ரமசாலியான ராவணனைக் கண்டு பயப்படவில்லை. லக்ஷியமும் செய்யவில்லை. புழுதியடைந்த ஆடை. வெறும் தரையே படுக்கை. துறவிபோல் காலம் கழிக்கிறாள். இனி, நாம் செய்யவேண்டிய காரியத்தைத் துரிதமாய்ச் செய்யவேண்டும்' என்கிறான். ராமனும் சுக்ரீவனும் நண்பர்கள் என்ற சேதிகேட்டு மகிழ்ந்தாள் ஸீதை என்கிறான். வானரருக்கு உற்சாகமூட்டும் வார்த்தை!

அங்கதனுக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. 'செய்யவேண்டிய காரியம் என்ன? ஸீதையை ராமனிடம் சேர்க்க வேண்டியது. 'பார்த்தோம். ஆனால் அவளை மீட்டு வரவில்லை' என்று சேதி சொல்வது உசிதமில்லை. ஆகையால் நாமே சென்று ஸீதையை விடுவித்து, அழைத்துச் செல்லுவோம். ராமன் மகிழ்வான்' என்கிறான் திடீரென்று தைரியம் வந்துவிட்டதுபோலும்.

**கிமன்யத்ர கர்த்தவ்யம் க்ருஹீத்வா யாம ஜானகீம்.** 2

அனுபவம் முதிர்ந்த ஜாம்பவான் மறுத்துப் பேசுகிறான். 'ஸீதையைத் தேடச் சொன்னான் தலைவன். கொண்டுவரச் சொல்லி உத்தரவில்லை. அரசகுலத்தில் பிறந்த ராமன் தானே சென்று போரில் வென்று மனைவியை மீட்பார். ஆகையால் ராமனிடம் சென்று சேதி சொல்வதே போதும், வாருங்கள்' என்கிறான்.

மகேந்திர மலைக்குன்றை விட்டு அகன்று கிஷ்கிந்தையை நோக்கி வருகிறார்கள். ஹனுமானைச் சுமந்து செல்கின்றனர் போலும். அண்ணாந்து பார்த்துச் செல்லும் வானரர்கள் அவனைத் தங்கள் பார்வையிலேயே சுமந்து செல்வதுபோல் தோன்றினராம்! அவ்வளவு அபிமானம்.

**ஹனுமந்தம் மஹாவேகம் வஹந்தஇவ த்ருஷ்டிபி:** 3

வழியில் சுக்ரீவனது பூந்தோட்டமான மதுவனம். பலவித மதுபானங்கள் நிறைந்த இடத்தைப் பார்த்ததும் உவகை தாங்காமல் உள்ளே புகுந்து குடிக்க ஆரம்பிக்கிறார்கள். காவலனான ததிமுகன் தடுத்தும் கேட்கவில்லை. அவனைக் கேலி செய்து அவனது ஆட்களை அடித்து விரட்டி, மனதாரக் குடித்துக் களிக்கிறார்கள்.

குடிவெறியில் என்னவெல்லாம் செய்கின்றனர்! சிலர் பாடுகின்றனர், சிலர் விழுந்து வணங்குகின்றனர், சிலர் எழுந்து நடனம் ஆடுகின்றனர், சிலர் உறக்கச் சிரிக்கின்றனர். ஒருவரையொருவர் அணுகிப் பேசுபவரும், நகைப்பவரும், அழுது புலம்புவோருமாய்க் காட்சியளிக்கின்றனர். ஒருவன் தனிமையில் பாடிக்களிக்கிறான். சிரித்துக்கொண்டே அவனை அணுகுகிறான் மற்றொருவன். சிரிப்பவனையண்டி நிற்கும் ஒருவன் அழுதுகொண்டிருக்கிறான். அழுபவனை உற்சாக மூட்டுகிறான் இன்னொருவன். அவனோடு சேர்ந்து மேலும் உற்சாகம் ஏற்படுத்துகிறான் ஒருவன்.

*காயந்தம் அன்ய: ப்ரஹஸன்னுபைதி ஹஸந்தமன்ய:*
*ப்ரருதன்னுபைதி*
*ருதந்தமன்ய: ப்ரணுதன்னுபைதி நுதந்தமன்ய: ப்ரணுதன்னுபைதி 4*

மனம் நிறையக் குடித்து மதிமயங்கிப் போகாதவன் ஒருவனுமில்லை என்கிறார் வால்மீகி.

இக்காட்சியைச் சித்தரிக்கும் கம்பன் பாடலைப் பாருங்கள். ஒருவன் குடிக்க இருக்கும் பானத்தை இன்னொருவன் அனாயாசமாக எடுத்துக் குடித்துவிட்டுப் போகிறான். கையிலிருக்கும் மதுவைப் பறித்துக்கொண்டு ஓடுகிறான் மற்றொருவன். வானரர் ஒருவரையொருவர் தழுவிக்கொள்ளுகின்றனர். ஏறி நின்று 'ஆஹா, ஆனந்தம்' என்று எக்களிக்கின்றனர்.

ஒருவர்வாய்க் கொள்ளுந் தேனை யொருவருண்டு
எளிதிற்போவார்
ஒருவர்கைக் கொள்ளுந்தேனை யொருவர்கொண்டு
ஓடிப்போவார்
ஒருவரோ டொருவரொன்றத் தழுவுவர் விழுவரோடி
ஒருவர்மே லொருவரேறி ஓகையென்று உவகை கூர்வார்.

தெற்கே சென்று போர் செய்ய விரும்பிய உற்சாகத்தை இதில் செலுத்துகிறார்கள். படையினரின் இயற்கை!

# 27

## தூதனே தோழன்

அட்டகாசம் அளவுக்கு மீறியவுடன் ததிமுகன் விரைந்து சென்று சுக்ரீவனிடம் முறையிடுகிறான். தன்மேல் குற்றம் வராமலிருக்க விநயமாய் வணங்கிப் பேசுகிறான். 'எவ்வளவோ சிரமப்பட்டுக் காத்து வந்த தோட்டம். வாலியோ தாங்களோ இதை ஒரு பொழுதும் பொதுமக்களுக்காகத் திறந்துவிடவில்லை. அப்படியிருக்க வானரர்கள் புகுந்து அட்டகாசம் செய்கிறார்கள்' என்கிறான்.

சுக்ரீவன் பதில் சொல்லாமல் கேட்டுக் கொண்டிருக்கிறான். அருகில் நிற்கும் லக்ஷ்மணன் 'என்ன ஆயிற்று?' என்று கேட்க, சுக்ரீவன் மகிழ்ச்சியோடு பேசுகிறான். 'எடுத்த காரியத்தை வெற்றிகரமாய்ச் செய்து முடித்திராவிட்டால் இப்படிக் கோலாகலம் செய்வரோ? அதுவும் ஹனுமான் ஒருவனே சாதித்திருப்பான்' என்கிறான்.

**த்ருஷ்டா தேவீ ந ஸந்தேஹோ ந சான்யேன ஹனூமதா** 1

'அவர்கள் உண்டு களித்ததைக் கேட்டு மகிழ்கிறேன். வெற்றி நிலையில் செய்ததைப் பொருட்படுத்தக்கூடாது' என்று கூறி ததிமுகனுக்கு விடை கொடுத்தனுப்புகிறான் தலைவன்.

தலைவனின் செயல் விந்தையாயிருப்பினும் அதற்குத் தக்கபடி தன் மனதை மாற்றிக் கொண்டு வானரர்களை உபசரித்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறான் ததிமுகன்! 'உங்களைச் சீக்கிரம் வரச்சொன்னார்' என்று மட்டும் தெரிவிக்கிறான்.

அவர்கள் வருமளவும் பொறுமையின்றிக் கலங்கி நிற்கிறான் ராமன். சுக்ரீவன் ஊகித்தது சரிதானே?

வெற்றி முழக்கத்தோடு வருகிறது வானரப்படை. முன்னணியில் ஹனுமான் தோன்றுகிறான். வந்து வணங்கி 'தேவியைக் கண்டேன். மனம் ஒடுங்கியபோதிலும் மானம் இழக்காதிருக்கிறாள்' என்று தெரிவிக்கிறான்.

நியதாம் அக்ஷதாம் தேவீம் ராகவாய ந்யவேதயத் 2

மனதை மகிழ்வித்த தூதனை நெடுநேரம் நன்றியோடு பார்க்கிறான் ராமன். பிறகு 'எங்கிருக்கிறாள் ஸீதை? என்பால் எப்படியிருக்கிறாள்?' என்று கேட்கிறான்

இதைக் கேட்ட வானரர் எல்லாம் ஹனுமானை உற்சாகமூட்டி முன்னுக்கு உந்தி விடுகின்றனர். 'ஸீதையைப்பற்றிச் சொல்வதில் வல்லவன்' (ஸீதாவ்ருத்தாந்த கோவித :) என்கிறார் வால்மீகி. பலமுறை ஒத்திகை செய்தாகிவிட்டதல்லவா?

'கடல் கடந்து லங்கையென்னும் நகரம் அடைந்தேன். அங்கு ராவணன் சிறை வைத்திருக்கும் தேவியைக் கண்டேன். ரகு வம்சத்தின் பெருமையைச் சொல்லக் கேட்டு மகிழ்ந்தவள் என்னிடம் நம்பிக்கை கொண்டு பேச ஆரம்பித்தாள். உமது நினைவிலேயே ஈடுபட்டு தவத்திலிருக்கும் ஸீதை எனக்கு அடையாளம் கொடுத்தனுப்பினாள். சித்திரகூடத்தில் நீர் காகாசுரன்மீது ஏவிய பாணத்தை நினைவுறுத்தினாள். இந்த சூடாமணியையும் கொடுத்தாள். ஒருநாள் அவள் நெற்றியில் திலகம் அழிந்திருப்பது கண்டு நீர் காவிக்கல்லை உரைத்துக் கன்னத்தில் பொட்டிட்டதையும் சொல்லச் சொன்னாள். ஆனால் ஒரு மாதத்திற்குமேல் அரக்கரிடையே உயிர்தரிக்க இயலாது என்றும் சொன்னாள்' என்கிறான். மான் விழியாள் இன்று துயரத்தால் வாடி நிற்கும் நேர்வழியாள்'

ஊர்த்தவம் மாஸான் ந ஜீவேயம் ரக்ஷஸாம் வசமாகதா
இதி மாம் அப்ரவீத் ஸீதா க்ருசாங்கீ தர்ம சாரிணீ
ராவணாந்த : புரே ருத்தா ம்ருகீவோத் புல்லோசனா 3

சூடாமணியை வாங்கிப் பார்க்கிறான் ராமன். அழுகை தாங்கவில்லை. மணியை மார்போடணைத்துக் கண்ணீர் விடுகிறான் வீரன். 'விவாகத்தின்போது என் தந்தை அவளுக்கு அளித்த பரிசு' என்கிறான். இனி ஒரு கணமும் அவளைப் பிரிந்து உயிர்வாழ முடியாது' என்கிறான்.

க்ஷணம் ஸௌம்ய ந ஜீவேயம் வினா தாமஸிதேக்ஷணாம்
நய மாமபி தம் தேசம் யத்ர த்ருஷ்டா மம ப்ரியா 4

ஆனால், 'ஸீதை என்ன சொன்னாள் என்று மறுபடியும் சொல். இன்னும் ஒருமுறை சொல். உயிர்போகும் தருவாயில் இருப்பவனுக்கு நீர்போலிருக்கிறது உன் பேச்சு.' என்கிறான் ராமன்.

கிமாஹ ஸீதா ப்ருஹி ஸொம்ய புன : புன :
பராஸுமிவ தோயேன ஸிஞ்சந்தீ வாக்யவாரிணு 5

'என்னைப் பிரிந்தவள் என்ன சொன்னுள்?' இதமான பேச்சை மீண்டும் மீண்டும் கேட்கத் துடிக்கிறது உள்ளம். இந்தப் பரபரப்பைக் குறிக்க எட்டு அடிகளில் இருமுறை 'கிமாஹ' (என்ன சொன்னுள்?) என்ற சொல்லைப் பிரயோகிக்கிருர் வால்மீகி.

ராமனிடம் வந்து சேதி சொல்லும் ஹனுமானை வர்ணிக்கும் போது கம்பனுக்கு பக்தி பெருக்கெடுத்து ஓடுகிறது. அருகில் வந்த ஹனுமான் ராமனது பாதங்களை வணங்கவில்லையாம். அதற்குப் பதிலாகத் தாமரையில் தோன்றிய தேவியிருக்கும் திசையை நோக்கியபடியே நெடுக விழுந்து வணங்கினுன் என்கிருர் கவி. ராமனைக் கண்டவுடன் உணர்ச்சிமேலிட்டு, தவங்கிடக்கும் தேவியை நினைத்தான், அதைக்குறிப்பினுல் உணர்த்தக் கருதினுன் என்றும் சொல்லலாம்.

எய்தினன் அனுமனுமெய்தி யேந்தறன்
மொய்கழல் தெழுதிலன் முளரிநீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகந் தழீ இ நெடிதிறைஞ்சி வாழ்த்தினுன்.

ராமன் அவனைக் கூர்ந்து கவனித்துக் குறிப்பினுல் உணருகிருனும். என்ன உணருகிருன்? ஸீதை க்ஷேமமாயிருக்கிருள், இவன் அவளைக் கண்டுவந்திருக்கிருன், அவள் கற்பும் களங்கமற்றது. (இல்லையேல் கும்பிடுவானு?) என்று தெரிந்து கொள்கிருன். மிகைபடக் கூறிய கருத்தை எழில்படப் பயனுக்குகிருர் கவி.

திண்டிற லவன் செயல்தெரிய நோக்கினுன்
வண்டற லோதியும் வலியன் மற்றிவன்
கண்டது முண்டவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினு லுணருங் கொள்கையான்.

ஹனுமான் இதை வாய்விட்டுச் சொல்லுகிருன். 'கற்புக்கணியான தேவியைக் கண்ணுற் கண்டேன். தென் திசைக் கடல் தாண்டி லங்கையில் இருக்கக் கணடேன். இனித் துயரம் வேண்டாம். எங்கிருக்கிருளோ, இருக்கிருளோ இல்லையோ? என்ற சந்தேகமும் வேண்டாம்.'

கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர் நாயக வினித்தவிர் தியையமும்
பண்டுள துயரும் என்றனுமன் பன்னுவான்.

மேலும் விவரித்துக் கற்பு, குலப்பண்பு, பெருந்தன்மை, முதலிய குணங்களைப் புகழ்ந்து கூறுகிறான் ஹனுமான். 'உனக்கு அவள் தேவி. எனக்குத் தெய்வம், ஐயா' என்கிறான். 'பொன்னையல்லாது வேறொன்றும் பொன்னுக்கு ஒப்பாகாது. அதுபோல, தனக்கு நிகர்தானே என்று நிலைநாட்டும் அளவுக்குப் பொறுமையோடிருக்கிறாள். தன் உறுதியின் மூலம் தனக்குக் கிடைத்த உன்னையல்லால் வேறெவரும் உனக்கீடில்லை யென்று காட்டினாள். என்னையல்லால் வேறெவரும் எனக்கு ஒப்பில்லையென்று எனக்கும் பட்டம் தந்தாள்' என்கிறான்! ராமனது மகிமையும் ஸீதையின் துணிவும் ஹனுமானின் தீரமும் ஒருங்கே வெளியாகின்றன.

**பொன்னலதில்லைப் பொன்னையொப்பெனப்**
**பொறையினின்றாள்**
**தன்னலதில்லைத் தன்னையொப்பெனத் தனக்குவந்த**
**நின்னலதில்லை நின்னையொப்பென நினக்குநேர்ந்தாள்**
**என்னலதில்லை என்னையொப்பென எனக்குமீந்தாள்**

('தன்னைத் தானலது ஒப்பிலாதான்' என்று முன்பு ராமனைக் குறிப்பிட்டது நினைவுக்கு வருகிறது.)

எல்லாவற்றிற்கும் சிகரமாய் விளங்கும் பாடலில் கருத்தும் கவிதையும் இணைந்து திகழ்கின்றன. 'லங்கையில் தவம் கிடக்கும் பெண்ணையா கண்டேன்? உயர்குலப் பிறப்பு, அளவிலாப் பொறுமை, கற்பு, இம்மூன்றும் பாத்திரங்களாக உருவெடுத்து நடனம் ஆடுகின்றன, அதையல்லவோ கண்டேன்?' என்கிறான்.

**இற்பிறப் பென்பதொன்று மிரும்பொறை யன்பதொன்றும்**
**கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக்கண்டேன்**

உணர்ச்சி மேலிட்டுப் பாடுகிறார் கம்பன். ஹனுமான் வாயிலாகத் துதிக்கிறார் சீதையை. ஆனால் ஆறு பாடல்களில் மும்முறை கற்பைப்பற்றிப் பேசுகிறார்.

வால்மீகி எளிதில் கையாண்ட நிலை. 'உன் நினைவிலேயே ஈடுபட்டுத் தவத்திலிருக்கிறாள்,' என்று சொல்லிச் சூடாமணி கொடுத்த பின் விவரமும் வேண்டுமோ? 'ஒரு மாதத்துக்குள் வராவிட்டால் உயிர் துறப்பேன்' என்ற சபதம் போதாதோ? கம்பன் விவரிக்கிறார். ஏன்? தமிழ்ப் பண்பிலும் இலக்கியத்திலும் 'கற்பு' ஒரு முக்ய அம்சம் என்ற காரணத்தால் கவி அதை இங்கு வற்புறுத்தியிருக்கலாம். அல்லது அவர் காலத்துக்குள்ளாகவே 'ராவணன் மாளிகையில் எப்படித் தூய்மையோடிருந்திருக்க முடியும்?' என்ற கேள்வி தோன்றி

விட்டதுபோலும். அதனுல்தான் வற்புறுத்திக் காட்ட நேர்ந்ததோ? ராவணன் சீதையைத் தரையோடு பெயர்த்துக் கொண்டு போனுன் (கீண்டான் நிலம்,' 'மண்ணெடுங் கொண்டு போனுன்') என்ற கருத்தைக் கம்பன் புகுத்தியதும் இதனுல்தானே?

'சரி, இனி அவள் துயரத்தைத் தீர்க்க விரைவோம்' என்று துரிதப்படுத்துகிருன் ஹனுமான். உணர்ச்சி வசப்பட்ட ராமன் பேருதவி செய்த நண்பனுக்கு நன்றிகூற மறக்கவில்லை. கூடியிருக்கும் அன்பர்களிடம் சொல்லுகிருன், 'அரிய செயல். உலகிலே பிறரால் நினைக்கவும் இயலாத செயல். ராவணன் கோட்டையில் புகுந்து உயிரோடு வெளிவர முடியுமா? ஹனுமான் சுக்ரீவனை மகிழ்வித்ததோடன்றி என்னையும் என் குலத்தையுமே காப்பாற்றிவிட்டான். அதற்கேற்றபடி நான் பிரதியுபகாரம் செய்யாததற்குக் காரணம் தற்போதைய எளியநிலைதான். இப்போது என்னுல் இயன்றது இதுதான்' என்றுகூறி ராமன் ஹனுமானை அணைத்துக் கொள்கிருன். தூதன் தோழனுகிவிட்டான்.

இதம்து மம தீனஸ்ய மனோ பூய : ப்ரகர்ஷதி
யதிஹாஸ்ய ப்ரியாக்யாதுர் ந குர்மி ஸத்ருசம் ப்ரியம்
ஏஷ ஸாவஸ்வ பூ தோஸ்து பரிஷ்வங்கோ ஹனுமத் :
மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ்ய மஹாத்மன : 6

# 28

## எங்கும் ஏக்கம்

ஹனுமானைக் கட்டியணைத்து மகிழ்ந்த ராமனுக்கு நேரம் செல்லச் செல்ல அவள் க்ஷேமமாயிருக்கிருள் என்பதிலுள்ள மகிழ்ச்சி குறைந்து 'அவளை மீட்பது எப்படி?' என்ற கவலை அதிகரிக்கிறது. கடல் கடந்து சேனையை நடத்திச் செல்வதும் அரக்கரை வெல்வதும் எளிதான காரியமா? மனம் கலங்கி நிற்கிருன் ராமன்.

தூது சென்று வெற்றிகண்ட ஹனுமானையே இதற்கும் யோசனை கேட்கிருன்.

> யத்யப்யேஷது வ்ருத்தாந்தோ வைதேஹ்யா கதிதோ மம
> ஸமுத்ர பாரகமனே ஹரீணாம் கிமிவோத்தரம் 1

கேள்வியைக் கேட்டுத் துயரத்தில் ஆழ்ந்து நின்ருன் எதிரியை முறியடிக்கும் வீரன் என்கிருர் கவி. மனக் குழப்பமும் தனிமையில் தோன்றும் ஏக்கமும் ஒருங்கே வதைக்கின்றன.

'ஏன் கவலை? நீர் இப்படித் தவிக்கலாமா? எமது வீரர்கள் உமக்காகத் தீயில் புகவும் துணிவார்கள். பாலம் அமைத்தாலன்றி நீரைக் கடந்து லங்கையில் புகுவது அசாத்யம். ஆகையால் அதற்கான ஏற்பாட்டைச் செய்வோம்' என்று கூறி உற்சாகமூட்டுகிருன் சுக்ரீவன்.

ஆனல் இதெல்லாம் போதவில்லை போலும். நேரிடையாக புகழ ஆரம்பிக்கிருன் சுக்ரீவன். 'உம்போன்ற வீரர்கள் சோகம் அடையலாமா? அது யாவற்றையும் அழிக்குமன்ருே? நீர் அறிவிற்

சிறந்தவர். எல்லாம் அறிந்தவர். என்னைப்போல் நண்பர்கள் இருக்கும்போது எதிரியை வெல்வது எம்மாத்திரம்? மூவுலகிலும் உம்மை யெதிர்த்துப் போராடும் வல்லமையுள்ளார் யாருமில்லை. விரைவில் ஸீதையைக் காண்பீர். சோகத்தை ஒழித்து எதிரிமேல் கோபத்தை மேற்கொள்ளுவீராக.'

> சூராணும் ஹி மனுஷ்யாணும் த்வத்விதாணும் மஹாத்மனும்
> விநஷ்டே வா ப்ரநஷ்டே வா சோக: ஸர்வார்த்த நாசன:
> தத்லம் சோகமாலம்ப்ய க்ரோதமாலம்ப பூபதே 2

கடைசியாக 'நல்ல சகுனங்கள் ஏற்படுகின்றன. என் மனதில் உவகை ஓங்கி நிற்கிறது' என்று சொல்லிப் பேச்சை முடிக்கிறுன் சுக்ரீவன். அது கேட்ட ராமன் 'என் தவ வலிமையாலேயே சேதுபந்தனம் செய்ய முடியும். கடலையே நீரற்றுப் போகவும் செய்யமுடியும். ஆனுல் லங்கையைப் பற்றிய முழு விவரம் வேண்டும். எத்தகைய கோட்டை, எவ்வளவு படைபலம், எங்கெங்கு வாயில்கள்? ரகசியம் அனைத்தும் அறிந்த அனுமனே! நீ கூறு' என்கிறுன்.

> தபஸா ஸேதுபந்தனே ஸாகரோச் சோஷணேன வா
> ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கனே
> யதாஸுகம் யதாவத்ச லங்காயம்அஸி த்ருஷ்டவான்
> ஸர்வமாசக்ஷ்வ தத்வேன ஸர்வதா குசலோஹ்யஸி 3

அறவே உற்சாகமிழந்து அனதைபோலத் தவிப்பதும் பிறர் தைரியம் ஊட்டிப் புகழ்ந்தவுடன் 'உலகையே எதிர்த்து நிற்பேன்' என்று ஆவேசம் கொண்டு பேசுவதும் ராமனது இயல்பு என்பதைக் குறிக்கிறுர் வால்மீகி. இது தனிமையில், நெருங்கிய நண்பருடனிருக்கையில்தான் தோன்றும். பலர் முன்னிலையில் சிந்தையை யடக்கிச் சீரான முகம் காட்டிப் பாங்கான பேச்சு பேசுவது அரசகுலத்தில் பிறந்ததால் உண்டான குணவிசேஷம்.

ஹனுமான் லங்கையைப் பற்றிச் சொல்லி அங்குள்ள ஆயுத பலத்தையும் தான் கண்ட வரை எடுத்துக் கூறுகிறுன். வெகுதூரம் கற்களை விட்டெறிந்து எதிரிகளைக் கொல்லும் யந்திரங்கள் இருக்கின்றன. கதவுகள், அகழிப் பாலங்களெல்லாம் யந்திரத்தாலே திறந்து மூடிக்கொள்ளுகின்றன என்கிறுன். வியப்பு உண்டாகிறது. ('யந்த்ரைஸ்தைரவகீர்யந்தே' என்று வர்ணிக்கிறுர் கவி.)

'எப்படியாவது நம் படையினர் கடல்கடந்து சென்றுவிட்டால் லங்கை நகரமே அழிந்தது என்று வைத்துக் கொள்ளுங்கள்' என்கிறுன் ஹனுமான்.

எப்படி? இனி சிந்தனைக்கு நேரமில்லை. காரியத்தில் இறங்க வேண்டும். 'உடனே கிளம்புவோம், சுக்ரீவனே! எனக்கும் சகுனங்

கள் தோன்றுகின்றன. வலக்கண் துடிக்கிறது' என்கிறுன் ராமன். 'நீலன் முன்னே செல்லட்டும். கஜன், கவாக்ஷன், ஜாம்பவான், ஸுஷேணன் முதலியோர் தொடரட்டும்' என்று உத்தரவு போடு கிறுன். இதுவரை சுக்ரீவனைத் தலைவனுகக் கருதிய ராமன், தானே அவன் படைகளுக்கு உத்தரவிடுகிறுன். ஹனுமான் கூறிய நுட்பங் களை ஆராய்ந்தபின் லங்கையில் புகவேண்டுமானுல் தானே முன் நின்று படைகளை நடத்த வேண்டும் எனத் துணிந்தானே? அல்லது ஸீதையைக் காணத் துடிக்கும் அவசரம் காரணமோ?

திரள் திரளாகக் கூடிப் பெருகிய சேனை தென் திசையை நோக் கிச் செல்லுகிறது. வழியெல்லாம் ஒரே ஆரவாரம். லக்ஷ்மணனுக் கும் மனதில் உற்சாகம் ஏற்படுகிறது. 'அண்ணு, ஸீதையை மீட்டு வெற்றியோடு அயோத்திக்குத் திரும்புவோம் என்றே நினைக் கிறேன். எங்கு பார்த்தாலும் நல்ல சகுனங்கள் தோன்றுகின்றன,' என்று சொல்லி ராமனை ஊக்குவிக்கிறுன்.

மகேந்திர கிரியை அடைந்ததும் ஒரு குன்றின் மீதேறிப் பார்க் கிறுன் ராமன். (ஹனுமான் இங்கிருந்துதான் லங்கைக்குச் சென்றுன்) எங்கும் நீர்! சமுத்திரம் போல் தோன்றுகிறது நீர்நிலை. கடக்கும் உபாயம் என்ன? 'சிந்தனைக்குரியது' என்கிறுன். 'எல்லோரும் இளைப் பாறலாம். ஆனுல் அவரவர் தம் அணியைவிட்டு அகன்று செல்லக் கூடாது' என்று உத்தரவிட்டுக் கடலைக் கூர்ந்து கவனிக்கிறுன். எல் லோரும் நின்று பார்க்கிறுர்கள். காற்று வீசுகிறது. நுரைமிக்க அலை கள் எழுந்து விழுந்து மறைவதைப் பார்த்தால் கடலே சிரித்து நடனம் புரிவதுபோல் தோன்றுகிறதாம்!

**ஹஸந்தமிவ பேனௌகைர் ந்ருத்யந்தமிவ சோர்மிபி :** 4

நீலக்கடல் ஆகாயத்தைப் போல் தோன்றுவதால் எது கடலின் எல்லை, எங்கு வானம் துவங்குகிறதென்றே விளங்கவில்லை. வியப்பு தான் ஓங்கி நிற்கிறது.

ராமனுக்கு மீண்டும் ஏக்கம். லக்ஷ்மணனிடம் சொல்லுகிறுன், 'காலம் செல்லச் செல்லத் துயரம் குறையும் என்பார்கள். எனக்கோ அவளைப் பார்க்காமல் நாளுக்கு நாள் வளருகிறதே துயரம்?'

**சோகஸ்சகில காலேன கச்சதா ஹ்யபகச்சதி**
**மம சஅபச்யத: காந்தாம் அஹன்யஹனி வர்ததே** 5

அதற்கொரு காரணமும் கூறுகிறுன் ''ராவணன் பறித்துச் சென்ற சமயம் 'நாதா!' என்று கூக்குரல் இட்டிருப்பாள். அது என் உடலில் பாய்ந்து விஷம்போல் வதைக்கிறது'' என்கிறுன் உயிர்த்துணைவி அபலையாய் நின்ற நிலையில் அநாதையாகித் துடித்த

போது உதவ முடியாமல் போனதை நினைக்க நினைக்க உள்ளம் குமுறுகிறது.

எதிரே உள்ள நீர்நிலை ஏக்கத்தை வளர்க்கத்தான் உதவுகிறது. 'எப்போது காண்பேன் அவளை?' என்கிறான். 'அவ்வுத்தமி என்கழுத்தைக் கட்டியணைத்துக் கண்ணீர் சொரியும் நாள் வருமா?'

கதா நு கலு மாம் ஸாத்வீ ஸீதா ஸுர ஸுதோபமோ
ஸோத் கண்டா கண்டமாலம்ப்ய மோக்ஷயதி ஆனந்தஜம்பய : 6

'ஸாத்வீ' (உத்தமி) என்று குறிக்கிறான். (முன்பு அவள் காணாமல் போனவுடன் 'துயரத்தையெல்லாம் மறந்து, துணைவியாகி நின்று இனிமையாய்ப் பேசுவாள்' என்று மெச்சி 'ஸாத்வீ' என்றான். அத்தகைய நினைவெல்லாம் இங்கு ஒலிக்கிறது.)

இவர்கள் இங்கு ஏங்கி நிற்க, ராவணன் கக்ஷியிலும் ஏக்கம். அக்கரையில் சேதி எட்டிவிட்டது போலும். ராவணன் சபை கூட்டி மந்திராலோசனை செய்கிறான். 'ஒரு பாமரனான வானரன் ஸீதையைக் கண்டு பேசி லங்கையை மூளியாக்கிவிட்டுப் போய்விட்டான். இன்று பெரும்படையோடு வந்து நிற்கும் ராமனை நாம் எப்படி எதிர்ப்பது? எப்படியும் கடலைக் கடந்துவிடுவான். நம்மைவந்து தாக்குவான். நம்படை வலிமையையும் நாட்டின் நலத்தையும் நன்கு ஆராய்ந்து யோசனை கூறுங்கள்' என்று மந்திரிகளிடம் சொல்லுகிறான் அரக்கர் வேந்தன்.

உடனே கைகூப்பிய வண்ணம் சபையினர் ஏகமனதாகப் புகழ ஆரம்பிக்கின்றனர். 'நம்மிடம் படைகளுக்கென்ன குறைவு, எத்தனை வித ஆயுதங்கள்! எதற்காக பயப்பட வேண்டும்?' என்கிறான் ஒருவன். 'தேசம் தேசமாய்ச் சென்று வெற்றி கண்டதையெல்லாம் மறந்தீரோ? தானவர்களின் தலைவன் உமக்கு பயந்து பெண்ணைக் கொடுத்து மகிழ்விக்கவில்லையா?' என்று பழைய வெற்றிகளை நினைவுறுத்துகிறான் மற்றொருவன். 'நீங்கள் சிரமப்படவேண்டிய அவசியமேயில்லை. இந்த்ரஜித் ஒருவனே போதும் ராமனையும் வானரப்படையையும் அழிக்க' என்கிறான் இன்னொருவன். 'பாமர மனிதரால் நமக்கு என்ன ஆபத்து வர முடியும்?' என்று எல்லோரும் ஏகோபித்துச் சொல்லுகின்றனர்.

தொடர்ந்து பிரகஸ்தன், துர்முகன், நிகும்பன் முதலியோரெல்லாம் 'நான் ஒருவனே சென்று அவர்களையெல்லாம் யமலோகத்துக்கனுப்பிவிடுவேன்' என்று வீம்பு பேசுகின்றனர். 'தாங்கள் கவலையை ஒழித்து இஷ்டம் போல் காரியங்களை கவனிக்கலாம். கேளிக்கையில் மனதைச் செலுத்தலாம். மதுவை மனதார அருந்தலாம்' என்கிறான் வஜ்ரஹனு.

அண்டிப் பிழைக்கும் அறிவிலிகளின் மனப்பான்மையைக் குறிக்கிறார் கவி. ராவணன் எதிரியின் பலம் உணர்ந்து பேசுகிறான். இவர்கள் அதையறியாமலே வெறும் புகழ்ச்சியில் ஈடுபடுகிறார்கள். இவர்களையடக்கிப் பேசுபவன் விபீஷணன். 'ஸாம, தான, பேதம் என்ற மூன்று தந்திரங்களும் பயனற்றுப் போனால் வலிமையைக் காட்ட வேண்டும். கடல் கடந்து தனியே வந்து செயற்கரிய சாகஸம் செய்து சென்ற ஹனுமானை மறந்துவிட்டீர்களா? எவனாவது அப்படிச் செய்ய முடியும் என்று எப்போதாவது நினைத்திருப்பீர்களா? பகைவரின் பலத்தை நன்கு உணர வேண்டும். ராமன் நம் தலைவனுக்கு என்ன தீங்கிழைத்தானென்று அவன் மனைவியை அபகரித்தார் அரசன்? ராமன் கரனைக் கொன்றான். ஆனால் எதிர்த்து வரும் சத்ருவை வென்றோ, கொன்றோ தன்னைக் காத்துக் கொள்ளும் உரிமை யாருக்கும் உண்டு. ஏதோ பூசல் கொண்டு அவளைக் கொண்டுவந்திருந்த போதிலும் ஸீதையை இப்போது ராமனிடம் சேர்ப்பது முறை. அவன் வீரன். தருமத்தை அனுசரிப்பவன். அவனோடு நமக்கு ஏன் பகைமை?'

> ஆஹ்ருதா ஸா பரித்யாஜ்யா கலஹார்த்தே க்ருதேன கிம்
> ந ந: க்ஷமம் வீர்யவதா தேன தர்மானுவர்த்தினா
> வைரம் நிரர்த்தகம் கர்தும் தீயதாமஸ்ய மைதிலீ 7

மேலும் அழுத்தமாக 'ராமனது அன்பு மனையாளை விடுவிக்காத போனால் லங்கையும் அரக்கரும் அழிவது திண்ணம். உன்மீதுள்ள பாசத்தால் சொல்லுகிறேன், கோபத்தைவிடு, அண்ணா! ஸீதையையும் விடு' என்கிறான். 'ஸீதையை விட்டுவிடு' என்று மும்முறை கூறுகிறான். ('ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ')

விபீஷணன் உளவு அறிந்து பேசுகிறான்; துணிவோடும் பேசுகிறான். மகள் த்ரிஜடையின் மூலம் அவன் அறிந்து கொண்டதைவிட அதிகம் யாருக்குத் தெரியும்? ஆனால் ராமனோடு நேர்ந்த பூசலைக் குறிப்பிட்டபோது சூர்ப்பனகைக்கு நேர்ந்த அவமானத்தைப் பற்றிச் சொல்லாதது கவனத்துக்குரியது. அதைப் பெரிதென மதிக்கவில்லையோ? அல்லது அதை நினைவுறுத்தி ராவணனின் கோபத்தைப் பெருக்க விரும்பவில்லையோ?

கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்த ராவணன் சபை கலையலாம் என்று கூறி எழுந்து போகிறான்!

மறுநாள் மீண்டும் சபை கூடுகிறது. சேனாபதியான ப்ரஹஸ்தனைக் காவற்படையை வலிவாக்கும்படி உத்தரவிடுகிறான் ராவணன். குழுவினரைப் பார்த்து, 'உங்களைக் கேட்காமல் ஒரு காரியமும் துவங்கியதில்லை' என்று ஆரம்பிக்கிறான்! மனதைவிட்டுச் சொல்லப் போகிறான். 'நன்மை தீமை, இன்ப துன்பம், லாபநஷ்டம் எதுவானாலும் அறம், பொருள் இன்பங்களில் நேரிடும் பேராபத்தையும் உங்

களுக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்' என்று மேலும் பீடிகை போடுகிருன்.

**ப்ரியாப்ரியே ஸுகம்துக்கம் லாபாலாபௌ ஹிதாஹிதே**
**தர்மார்த்த க்ருச்ரேஷு யூயமர்ஹத வேதிதும்** 8

'விஷயம் என்னவென்ருல், தண்டகாரண்யத்திலிருந்து ஜானகியைத் தூக்கிவந்தேன். அவள் என்னை விரும்பவில்லை. ஆனால் அவளைப் போல் ஒருத்தியை நான் மூவுலகிலும் கண்டதில்லை. துடியிடையும் மதிவதனமும் பொன்னெழிலும்...அவள் மாயையால் படைத்த மங்கை. அவளது காலுக்கு நிகர்உண்டோ? பொருந்திய பாதம். கமலம்போல் சிவந்த கட்டைவிரல் நகம் ஒன்றேபோதும். அதைக் கண்டதும் என் உடலில் காமம் கொழுந்துவிட்டெரிகிறது' என்கிருன்.

**தனுமத்யா ப்ருதுச்ரோணீ சாரதேந்து நிபானனு**
**ஹேம பிம்பநிபா ஸௌம்யா மாயேவ மயநிர்மதா**
**ஸுலோஹித தலௌ ச்லக்ஷ்ணௌ சரணௌஸுப்ர திஷ்டிதௌ**
**த்ருஷ்ட்வா தாம்ர நகௌ தஸ்யா தீப்யதே மே சரீரஜ:** 9

ஆழ்ந்த ரசனையுள்ளவன்! தவிர்க்க முடியாத ஈடுபாடு அவனை வாட்டுகிறது என்பதையும் குறிக்கிருர் வால்மீகி.

'இப்போது எதிரிகள் அக்கரையை அடைந்துவிட்டார்கள். நீங்களெல்லாம் யோசித்து ஒரு யுக்தி சொல்லுங்கள். ஸீதையைவிட முடியாது, ராமலக்ஷ்மணர்களைக் கொல்ல வேண்டும். இதற்கு வழி தேடுங்கள்' என்கிருன்.

**அதேயா ச யதா ஸீதா வத்யௌ தசராத்ம ஜௌ**
**பவத் பிர் மந்த்ரயதாம் மந்த்ர: ஸுநீதம் ச அபிதீயதாம்** 10

காதலால் வாடியபோதிலும் அரசியலில் அறிவு மழுங்கவில்லை. முக்கிய பிரச்சினையைத் தெளிவாகக் கூறுகிருன். விபீஷணனின் கருத்து சபையிலே வலிவடையக் கூடாதென்ற கருத்தும் நன்கு விளங்குகிறது!

கும்பகர்ணன் முதலில் பேசுகிருன். ஆனல் மிகுந்த சினங்கொண்டு பேசுகிருன். 'முன்பு நீ தனியே சென்று ஸீதையைக் கொண்டு வந்தாயே, அதுசமயமல்லவா எங்களை யோசனை கேட்டிருக்க வேண்டும்? கேட்டுச் செய்திருந்தால் ராமனைக் கொன்று, பின்னர் அவளையடைவதே சரியென்று உனக்கே புலப்பட்டிருக்கும். நீ செய்ததெல்லாம் உன் இயல்புக்கு ஏற்றதும் அல்ல, அரசே!' என்கிருன்.

ஸர்வ மேதன் மஹாராஜ க்ருதம் அப்ரதிமம் தவ
விதீயதே ஸஹாஸ்மாபி: ஆதௌ ஏவ அஸ்ய கர்மண: 11

கும்பகர்ணனின் உரையை ஏளனம் பொருந்தியதாக அமைக்கிறார் கம்பன். 'அழகிய நகரம் அழிந்துவிட்டதே என்று ஏங்கி வெட்கப்படுகிறாயே, அண்ணா! உன்மீது உயிரை வைத்துக் காத்துக்கிடக்கும் தேவிகள் பலர் இருக்க, பிறன் மனைவியின் காலில் விழுந்து விழுந்து தொழுகிறாய், அவள் மறுக்கிறாள், இது வெட்கப்படாமல் பெருமைப்பட வேண்டிய விஷயமோ?' என்கிறானும் கும்பகர்ணன்.

**நன்னக ரழிந்ததென நாணினை நயத்தால்**
**உன்னுயி ரெனத்தகைய தேவியர்களுன்மேல்**
**ஒண்ணகை தரத்தர வொருத்தன் மனையுற்றாள்**
**பொன்னடி தொழத்தொழ மறுத்தல்புகழ் போலாம்!**

சீதையிடம் கொண்ட காதல் செய்விக்கும் கூற்று வெட்கப்படத் தக்கதாக மட்டும் அமையவில்லை. வீரத்துக்கே இழுக்கு வந்தது என்கிறான். எப்படி? 'குற்றமற்ற பெண் ஒருத்தி பிறன் மனைவி. அவளைக் கொண்டுவந்து கடுங்காவலில் வைக்கிறோம். ஆனால் மேலான புகழ் நிலைக்க விரும்புகிறோம். மானம் பெரிதென்று விரிவாய்ப் பேசுவோம். ஆனால் இடையிலே போற்றுவது காமம்! எல்லாவற்றிற்கும் மேலாக, மனிதரைக் கண்டு அஞ்சுகிறோம். அழகுதான் நம் வீரம்!' என்று ஏசுகிறான். பேச்சிலே ஆதரிக்கும் கொள்கைக்கும் செயலிலே காட்டும் செய்கைக்கும் இடையே உள்ள மடுவை எடுத்துக்காட்டும் பாடல்.

**ஆசில் பரதாரம் அவை வெம்சிறை யடைப்போம்**
**மாசில் புகழ் காதல் உறுவேம் வளமைகூரப்**
**பேசுவது மானம் இடை பேணுவது காமம்**
**கூசுவது மானுடரை நன்று நம் கொற்றம்!**

இவ்வளவும் சொன்னபின் முடிவு என்ன? 'உன்செயல் முன் யோசனையற்றது. நல்ல வேளையாக ராமன் (விரைவில் திரும்பிவந்து) அன்று உன்னைக் கொல்லாமல் விட்டான்! ஆனால் நீ அரைகுறையாய்ச் செய்ததை நான் பூர்த்தி செய்கிறேன். உன் எதிரிகளை நான் கொல்லுவேன்' என்கிறான் அருமைத் தம்பி.

தஸ்மாத் த்வயா ஸமாரப்தம் கர்ம ஹ்யப்ர திமம் பரை:
அஹம் ஸமீ கரிஷ்யாமி ஹத்வா சத்ருன்ஸ்தவானக 12

ராவணன் முகம் கடுத்து மௌனமாயிருக்கிறான். 'விஷயம் விபரீதமாய் வளர்ந்துவிட்டதே' என்ற ஏக்கம் போலும். மஹாபார்ச்வன் ஒரு தந்திரம் சொல்லுகிறான். வீணாக ஏன் தாமதம்? 'சீதையைக் கோழி போல் பலாத்காரமாய் அடையலாமே?' என்கிறான்.

பலாத் குக்குடவ்ருத்தேன வர்த்தஸ்வ ஸுமஹாபல
ஆக்ரம்யாக்ரம்ய ஸீதர்ம்வைததா புங்க்ஷ்வ ரமஸ்வ ச 13

'கும்பகர்ணன், இந்தரஜித் முதலான நாங்களெல்லாம் எதிரிகளை கவனித்துக்கொள்ளுகிறோம்' என்று தைரியம் சொல்லுகிறான்.

'பலாத்காரம்' என்ற சொல் ராவணனைப் பழைய நினைவுகளில் ஆழ்த்துகிறது. ரகசியமான விஷயம் ஒன்றைக் கூறுகிறான். 'எனது பாட்டனார் வீட்டை நோக்கி ஒரு அப்ஸரப்பெண் போய்க் கொண்டிருந்தாள். அவளது அழகில் மயங்கி அவளைக் கட்டாயப்படுத்தி ஆட்கொண்டேன். வாடிய கொடிபோல் தள்ளாடி அவள் வருவதைக் கண்டு குறிப்புணர்ந்துவிட்டார் பெரியவர். சினங்கொண்டு எனக்கு சாபம் இட்டார். ''இனி நீ எவளையாவது பலாத்காரமாய் அடைந்தால் அன்றே உன் தலை வெடித்துப் போகக்கடவது'' என்றார். அதனால் பயந்து நான் பலாத்கார முறையைக் கைவிட்டுவிட்டேன் இதுதான் ரகசியம்' என்கிறான்.

இத்யஹம் தஸ்ய சாபஸ்ய பீத: ப்ரஸபமேவ தாம்
நாரோபயே பலாத்ஸீதாம் வைதேஹீம் சயனே சுபே 14

ஸீதையை அடையவேண்டும்; ஆனால் கட்டாயப்படுத்தக் கூடாது. எதிரியோ வந்துவிட்டான்; ஆனால் அவளை திரும்பித்தருவது இயலாத காரியம். சண்டை ஒன்றே வழி! இத்தகைய எண்ணங்கள் ஒருங்கே வருகின்றன போலும். ஆத்திரத்தோடு பேசுகிறான் ராவணன். 'எனது வலிமையும் வேகமும் கடலையும் காற்றையும் ஒக்கும். அதை அறியாமல் ராமன் இங்கு வருகிறான். உறங்கும் சிங்கத்தை எழுப்புகிறான். தீவட்டிகள் யானையை விரட்டுவதுபோல் எனது பாணங்கள் அவனை விரட்டிவிடும். இந்திரனும் வருணனும் குபேரனும் கண்டு நடுங்கும் என்னையா ராமன் எதிர்த்துவருகிறான்? சூரியன் உதித்தவுடன் நக்ஷத்திரம் மங்கிவிடுவது போல் அவன் ஒளி என்னிடம் வந்துவிடும்' என்கிறான். தன்னை சிங்கத்துக்கும் ராமனை யானைக்கும் ஒப்பிட்டுப் பேசுகிறான். தானே சூரியனென்றும் சொல்லுகிறான், தனது சபையில்!

தச்சாஸ்ய பலமாதேஸ்யே பலேன மஹதாவ்ருத:
உதயன்ஸவிதா காலே நக்ஷத்ராணமிவ ப்ரபாம். 15

விச்ரவஸ் முனிவரின் புதல்வர் மூவரும் எப்படி வளர்ந்திருக்கிறார்கள்! கூடிநிற்பவர் புகழ்ந்தும் இகழ்ந்தும் குழப்பம் உண்டாக்கினாலும் தெளிவாகத் தன் கருத்தை வற்புறுத்திக் கூறுகிறான் மூத்தவன் ராவணன். 'தவறு நேர்ந்துவிட்டது. ஆனால் ஆபத்து வந்தபின் அதை உணர்ந்து நிலையை மாற்றிக்கொள்வதில் தவறில்லை'யென்கிறான் விபீஷணன். 'செய்தது தவறுதான். ஆனால் செய்தவன் தமையன், தலைவன். ஆதலால்தான் ஆபத்தில் உடன் நின்று கை கொடுக்க வேண்டும்' என்கிறான் மூன்றாவது மகன்.

29

# இங்கிதமோ, வஞ்சகமோ?

'ராமனை விரட்டியடிக்கிறேன்' என்று வீரமுழக்கம் செய்யும் ராவணனைப் பார்த்து சற்று திகைக்கிறான் விபீஷணன். மகாபார்ச்வன் முதலியோரின் சொல்தான் செவியில் ஏறுகிறது போலும். அல்லது கும்பகர்ணன் கூறிய உறுதிமொழி தலைக்கேறிவிட்டதோ?

விபீஷணன் மீண்டும் பேசுகிறான். 'ராமனின் அம்புகள் அரக்கர் சிரங்களை அறுக்கும் முன்னமே, ஸீதையை அவனிடம் சேர்ப்பது நலம். இவர்கள் ஒருவராலும் அவனெதிரில் நிற்கவும் முடியாது.' படபடப்பான பேச்சு. தன் சொல்லை ஏற்கவில்லையென்ற மனத் தாங்கல்.

ப்ரஹஸ்தன் இடைமறித்துப் பேசுகிறான். 'தேவர்களாலேயே நம்மை ஒன்றும் செய்ய முடியாது. மானுடன் எம்மாத்திரம்?'

புகழ்ச்சி நிறைந்த சொல். ஆனால், ஹிதமில்லாத பேச்சு என நினைக்கிறான் விபீஷணன். ஆதலால் மேலும் பேசுகிறான் அரசனின் நன்மையைக் கோருபவன் (''ராஜஹிதானு காங்க்ஷீ'' என்கிறார் வால்மீகி.) ''நீங்கள் எல்லோரும் சொல்லுவது தவறு. விரைவிலே ராமபாணம் உன் நெஞ்சைப் பிளக்கும், ப்ரஹஸ்தனே! அதனால்தான் நீ இப்படி உளருகிறாய். அரசன் கவலையுற்றிருக்கிறான். ஆனால், உன் போன்றவர்களைக் கலந்து ஆலோசிக்கிறான். அவனோ ஆழ்ந்த முன் யோசனையற்றவன். நீங்களோ இப்படிப் பேசுகிறீர்கள். இது அரக்கரின் அழிவுக்கு அறிகுறி'' என்று எச்சரிக்கை செய்து தனது கொள்கையை எடுத்துரைக்கிறான். வரப்போகும் ஆபத்தை உணர்ந்து பேசுகிறான்.

''ஆயிரம் தலை நாகம் ஒன்று அரசனைச் சுற்றிக்கொண்டுவிட்டது. ராவணனை எழுப்பி நிற்கவைத்துப் பாம்பின் பிடியிலிருந்து விடுவிப்பதே உங்கள் கடமை.''

அநந்தபோகேன ஸஹஸ்ரமூர்த்ந நாகேன பீமேன மஹாபலேன
பலாத் பரிக்ஷிப்தமிமம் பவந்தோ ராஜானமுத்க்ஷிப்ய
விமோசயந்து 1

ஸீதையின்பால் கொண்ட காதல் விஷம்போல் கட்டுப்படுத்திய தென்று குறிக்கிறான் போலும். 'ஆயிரம் தலைகொண்ட பகைவன்' என்று பொருள்படுத்தினால் விஷ்ணு (ஸஹஸ்ரசீர்ஷா)வின் அம்சமான ராமனைக் குறிக்கிறார் கவி என்ற சிலேடை நயமும் காணலாம்.

ஆதலால், 'தலைக்கு ஆபத்து நேருவதற்கு முன், பேய்பிடித்தவனைக் கட்டிப்பிடித்துக் காப்பதுபோல் அரசனைக் காப்பாற்றி (அவனிஷ்டப்படி செய்யவிடாமல்) கவனித்துக் கொள்வது நம் கடமை' என்கிறான்.

நிக்ருஹ்ய ராஜா பரிரக்ஷிதவ்யோ பூதைர்யதா பீமபலைர் க்ருஹீத: 2

கடைசியாக, 'என் கருத்தை மீண்டும் சொல்லுகிறேன். ராமன் மனைவியை அவனிடம் சேர்ப்போமாக. பகைவரின் வலிமை, தமது படைபலம், ஏற்றத்தாழ்வு, நன்மை தீமை இவையறிந்து தலைவனுக்கு நற்புத்தி கூறுபவனே மந்திரி' என்று உணர்ச்சியோடு கூறுகிறான் விபீஷணன். கருத்தில் தெளிவு. நெஞ்சில் வலிமை.

பரஸ்ய வீர்யம் ஸ்வபலம் ச புத்வா ஸ்தானம் க்ஷயம் சைவ
ததைவ வ்ருத்திம்
ததா ஸ்வபக்ஷே ப்யனும்ருச்ய புத்யா வதேத் க்ஷமம் ஸ்வாமி
ஹிதம் ச மந்த்ரீ 3

இதைக் கேட்டதும் துள்ளியெழுகிறான் இந்த்ரஜித். மற்றவரெல்லாம் சிந்தனையில் ஈடுபட்டிருக்கின்றனர் போலும். அல்லது நிலையை உணர்ந்து, இங்கிதம் தெரிந்து பேசாமல் இருக்கின்றனரோ?

'இதெல்லாம் இழிவான பேச்சு? பொருளற்றது. பேடித்தனம். இக்குலத்தில் பிறந்தவர், இனி பிறக்கப் போகிறவர் எவரும் இப்படிப் பேசவோ செய்யவோ மாட்டார்கள். வீரம், பராக்ரமம், தைர்யம், வலிமை இவையெல்லாம் அற்ற ஒரு பிறவி தனிமையில் தோன்றியிருக்கிறார், தந்தையே! அவர்தான் உமது தம்பி விபீஷணன்' என்கிறான் சிறுவன்.

ஸத்வேன வீர்யேன பராக்மேண சௌர்யேண தையேர்ண ச
தேஜஸா ச
ஏக : குலேஸ்மின் புருஷோ விமுக்தோ விபீஷணஸ்தாத
கனிஷ்ட ஏஷ : 4

தனது வலிமையையும் இந்திரனை வென்ற பெருமையையும் மீண்டும் நினைவுறுத்துகிறான் வாலிபன். விபீஷணன் பதில் கூறுகிறான். 'வீரருக்குள் மேலோன் பொருள்படக் கூறுகிறான்' என்கிறார் வால்மீகி. ('சஸ்த்ரப்ருதாம்வரிஷ்ட:')

''மந்திராலோசனையில் பங்கு கொள்ள உனக்கு இன்னும் பக்குவம் ஏற்படவில்லை. நீ சிறியவன். அதனால்தான் அர்த்தமில்லாமல் பேசுகிறாய். புத்ரனென்ற உருவில் ராவணனுக்கு சத்ரு நீ.''

புத்ரப்ரவாதேனது ராவணஸ்ய த்வமிந்த்ர ஜின்மித்ர
முகோஸி சத்ரு : 5

கொஞ்சம் கொஞ்சமாய்க் கோபம் அதிகரிக்கிறது போலும். தொடர்ந்து, 'உன்போன்ற அறிவிலியைக் கொன்றால் என்ன? உன்னை இங்கே வர அனுமதி கொடுத்தவரையல்லவா தண்டிக்க வேண்டும்?' என்கிறான் விபீஷணன். மூடன், அயோக்யன் என்று பல வசைமொழிகள் கூறிப் பேச்சை முடிக்கிறான். முடிக்குமுன் 'ஸீதையை ராமனிடம் சேர்ப்போமாக. அதோடு, உயர்ந்த ஆடையாபரணங்களும் சமர்ப்பிக்கவேண்டும்' என்கிறான். கடைசியாகச் சொல்லும் வார்த்தையே விபரீதம் விளைவிக்கிறது.

ராமனுக்குக் கப்பம் கட்டவேண்டுமா? அவமானம்! இதைச் சொல்பவன் ஒரு தம்பியா? போதாததற்கு அருமை மகன் இந்த்ரஜித்தை 'சத்ரு' என்றான், கொல்லவேண்டுமென்றான். இவன்மேல் ஆத்திரம் மூளுகிறது அரசனுக்கு! ரோஷத்துடன் வருகிறது ராவணன் பேச்சு.

''கொடிய பாம்புடன் கூட வாழலாம். எதிரியுடன் வாழலாம். ஆனால், நண்பன்போலப் பேசிப் பகைவருக்குதவி செய்பவனை அண்டவிடலாகாது. மனிதன் துயரத்தில் சிக்கியபோது உறவினர் மகிழ்வர். இது அவர்கள் இயற்கை என்பதை நன்கு அறிவேன். தலைவன் அறிவாளியாகவும் மேதையாயுமிருந்தால் அவமதிக்கவும் துணிவார்கள். ஆனால் தாழ்ந்த புத்தியுள்ளவரோடு கொள்ளும் நட்பு யானை நீராடியபின் தனது தலையில் மண்ணைவாரித் தூவிக் கொள்வதற்கு ஒப்பாகும். நீ சொன்ன சொல் வேறொருவனிடமிருந்து வந்திருந்தால் இந்நிமிடம் அவன் உயிரோடிருந்திருக்க மாட்டான். நீயோ குலத்தைக் கெடுக்க வந்தவன். வெட்கம். சீ, போ!'' என்கிறான்.

அன்யஸ்த்வேவம் விதம் ப்ரூயாத் வாக்யமேதந்நிசாசர
அஸ்மின் முஹூர்த்தே ந பவேத் த்வாம்து திக் குலபாம்ஸனம் 6

நியாயத்தை எடுத்துரைத்த விபீஷணனுக்கு இதைக் கேட்டதும் கோபம் உண்டாகிறது. ஆனால், சிந்தையை உள்ளடக்கிப் பேசுகிறான். 'அந்தரிக்ஷகத :' என்கிறார் கவி.

('அந்தரிக்ஷ' என்ருல் ஆகாயம் என்றும் அர்த்தம். ஆதலால், விபீஷணன் எழுந்து ஆகாயத்தில் நின்றவண்ணம் பேசினன் என்று சொல்வது சம்பிரதாயம்)

''அரசே! நீ என் சகோதரன்! ஆகையால் என்ன வேண்டுமாஞலும் சொல்லலாம். ஆனல் இந்த அபாண்டமான பேச்சை நான் பொறுக்கமாட்டேன். உனது நன்மையைக் கோரியே நான் பேசினேன். நீ விரும்பும் வகையில் பேசுபவர் எங்கும் கிடைப்பர். ஆனல் விருப்பமற்ற நேர்வழியை எடுத்துரைப்பவர் கிடைப்பதரிது. அதை ஏற்றுக்கொள்பவர் அதிலும் அரிது' என்கிருன். இந்த்ரஜித்திடம் காட்டிய கோபத்துக்கும் இந்த அடக்கத்துக்கும் எவ்வளவு வித்யாசம்!

கடைசியாக, 'ராமனது அம்புகள் உன்னை வீழ்த்துவதைக் காண விரும்பவில்லை. ஆதலால் நான் போகிறேன். நான் கூறியதில் தவறு இருந்தால் மன்னித்துவிடு. எப்படியாவது நாட்டையும் உன்னுயிரையும் காத்துக் கொள்' என்றுகூறி வெளியேறுகிருன்.

> ந த்வாம் இச்சாம்யஹம் த்ரஷ்டும் ராமேண நிஹதம் சரை :
> ஸ்வஸ்தி தேஸ்து கமிஷ்யாமி ஸுகீபவ மயா விஞ 7

சகோதரரிடையே கருத்து வேறுபாடு இருப்பது சகஜம். மனக் கலக்கம் உண்டான நிலையில் அது பிளவை உண்டாக்கும் என்பதை வற்புறுத்துகிருர் கவி. இது சிறு விரிசலாகத் தோன்றிப் பெரும் பிளவாகத் தென்படுகிறது. சபையிலும், தனிமையிலும் தனது கருத்தை வெளியிட்டான் விபீஷணன். அப்போதெல்லாம் அவனுக்கு மரியாதை கொடுத்தான் மன்னன். கருத்தை ஏற்காவிட்டாலும் விச்வாசத்தை ஏற்றுக் கொண்டான். இன்னும் ப்ரஹஸ்தனை எதிர்த்து வாதாடியதுபோதுகூட ('அரசனுக்குப் பேய் பிடித்திருக்கிறது' என்ருன்) விபீஷணன்பால் விரஸமான எண்ணம் உதிக்கவில்லை. ஆனல் மகன் இந்த்ரஜித்தை என்ன பேச்சு பேசினன்! சபையிலும் குடும்பத்திலும் ஒருங்கே பிளவு ஏற்படுவதை உணர்ந்துவிட்டான் ராவணன். அதற்குக் காரணமான விபீஷணனை அப்புறப்படுத்துவது ஒன்றே வழி!

விபீஷணன் மனதிலும் போராட்டம். ஆபத்தான நிலையில் நேர்வழியைத் தெளிவாக எடுத்துச் சொல்லுகிருன். அதை ஏற்காமல் பழைய பெருமைகளைப் பேசி மன்னன் மனதைக் கலைக்கிருர்கள் மந்திரிகள். ப்ரஹஸ்தன் மீது ஆத்திரம். ஆயினும் மந்திரிக்குரிய லக்ஷணங்களைக் காட்டி எவ்வளவு உயர்ந்த கருத்தைச் சொன்னன்! இதற்கு மேல் பேச வேண்டியவன் அரசன். அதுதான் முறை. ஆனல் பதில் கூறியது யார்? மகன்! அவன் சொன்னதெல்லாம் ஏளனம், வசை மொழி. அப்போதும் அவனையடக்கிப் பேசி மீண்டும் தன் கருத்தை

வெளியிட்டான் விபீஷணன். ஆனால் உள்ளே தோன்றிய ஆத்திரத்தை அடக்க முடியவில்லை!

ராவணனும் குழம்பிய மனநிலையிலிருந்ததால் படபடப்பாகப் பேசிவிட்டான் போலும். (முன்பு போலிருந்தால் 'சபை கலையலாம்' என்று கூறி எழுந்து போயிருப்பான்!) தனிப்பட்ட கருத்துகளை அனுமதிக்க இனி நேரமில்லை. பேராபத்தில் உடன் நின்று உதவாதவர்க்கு இங்கு இடமில்லை. உடன் பிறந்தோரிடையே தோன்றிய பிளவு கடுஞ் சொற்கள் விழவிழக் கடக்க முடியாத அகழிபோல் ஆவதை சித்தரிக்கிறார் வால்மீகி*

இக்காட்சியை மாற்றியமைக்கும் கம்பன் இந்த்ரஜித்துக்கும் விபீஷணனுக்குமிடையே வாக்கு வாதத்தைத் தவிர்க்கிறார். (சிறுவன் சிற்றப்பனை ஏசுவது முறையல்ல வெனத் தோன்றியதோ தமிழ் நாட்டுக் கவிக்கு?) ஆனால், இரணியன் கதையைப் புகுத்துகிறார்.

கும்பகர்ணன் இடித்துக் காட்டிப் பேசியதாக வர்ணித்தாரல்லவா? அவன் 'நாம் நமது வலிமையைக் காட்ட வேண்டியதுதான் என்று முடிக்கிறான். அப்போது இந்த்ரஜித் தந்தையிடம் கூறுகிறான். 'நான் ஒருவன் இருக்கிறேன். வெற்றி உனதாகச் செய்யாவிடில் என்னைப் பெற்று என்ன பயன்? நான் பிறந்திலேன் என்றே ஆகும்.'

**வெற்றியுன தாக விளையாதொழியி னென்னைப்**
**பெற்றுமிலையான்நெறி பிறந்துமில னென்றான்.**

அப்போது விபீஷணன் அவனைக் கண்டித்துப் பேசுகிறான். 'கற்பனையுமின்றிக் கண்பார்வையுமின்றி ஒருவன் சித்திரத்தைத் திருத்தியமைக்க முற்படுவது போலிருக்கிறது உன் பேச்சு. பெரியோரும் மேலோரும் கூடியிருக்கும் சபையில் இருக்கத் தகுதி உண்டோ உனக்கு? முறை அறியாதவனே!' என்கிறான். பின்னர் தலைவனைப் பார்த்து, 'எனக்குத் தந்தை நீ, தாயும் நீ முன்தோன்றித் தவ வலிமையால் தொழத்தக்க தெய்வம் நீ. எனக்கு நீயே எல்லாம். ஆனால், இப்போது இந்திர பதவிக் கொப்பான நிலையை இழக்கப்போகிறாயே என்று நினைத்தால் மனம் நொந்து போகிறேன். ஆதலால் சொல்வதைக் கேள்' என்கிறான். 'முழுவதும் கேட்ட பின் கோபித்துக் கொள்ளலாம்' என்றும் சேர்த்துக் கொள்ளுகிறான்!

''அழகிய பட்டணமும் உனது வெற்றிக் கொடியும் ஒருங்கே அழிவுற்றது எதனால்? ஒரு வானரம் சுட்டதால் என்று நினைக்கிறாயா?

*இதில் ஏழு ஸர்க்கங்கள், அதாவது மறுநாள் சபைகூடியதும் வாக்கு வாதம் வளர்ந்ததும், இடைச் செருகல் எனக் கருதப்படுகின்றன.

ஜானகி யென்ற பெயர் கொண்ட உலகுக்கே தாய் போன்றவளின், கற்பினுல் அல்லவா வெந்தது!'' என்று பீடிகை போடுகிருன்.

> கோநகர் முழுவதும் நினது கொற்றமும்
> சானகியெனும் பெயர் உலகின் தம்மனே
> யானவள் கற்பினுல் வெந்ததல்லது ஓர்
> வான ரஞ் சுட்டதென்றுணர்தல் மாட்சியோ ?

சீதையை 'உலகின் தம்மனே' (ஜகன் மாதா) என்று குறிப்பிட்டது கவியின் கூற்று. விபீஷணன் வாயிலாக அமைத்த இப்புகழுரை நிலைமைக்குப் பொருந்துமா? சிந்தனைக்குரியது. 'கற்பினுல் வெந்தது' என்பது வால்மீகியின் சொல்லணி. ஆனல் அவர் ஹனுமான் வாயிலாகச் சொல்லுகிருர். (ராவணனிடம் பேசும்போது 'ஸீதாயாஸ் தேஜஸாதக்தாம்' என்று லங்கையைக் குறிப்பிட்டானும் ஹனுமான்.) அக்கருத்தை இங்கு கையாளுவதன் விளைவு கதாபாத்திரங்களின் இயற்கைக்கும் சூழ்நிலைக்கும் முரண்பாடாகத் தோன்றும்வகையில் அமைகிறது.

மேலும் கூறுகிருன். 'புகழும் செல்வமும் குலப் பெருமையும் எஞ்சி நிற்கவேண்டுமானல், பழியும் கீழான தன்மையும் ஓங்கி (அதன் மூலம்) சுற்றத்தாருடன் மடிந்து போகாமல் கற்பில் உறுதி குன்ருத அப்பெண்ணை விட்டுவிடு. இதைவிடப் பெரிய வெற்றி இல்லை.' விபீஷணனை 'அறிஞரின் மிக்கான்' என்று குறிக்கிருர் கவி.

> இசையும் செல்வமும் உயர்குலத்தியற்கையும் எஞ்ச
> வசையும் கீழ்மையும் மீக்கொளக்கிளையோடு மடியாது
> அசைவில் கற்பின் அவ்வணங்கை விட்டருளுதி அதன் மேல்
> விசையமில் லெனச்சொல்லினன் அறிஞரின் மிக்கான்

இதைக் கேட்டு கைகொட்டி நகைக்கிருன் ராவணன்! 'எனக்கு ஹிதமான நீதி மொழி சொல்வதாக ஆரம்பித்தாய். ஆனல் பைத்தியக்காரன் போல் பேசினுய். என் வலிமையை அற்ப மனிதர் வென்றுவிடுவார் என்ருய். நீ இப்படிப் பேசியது பயத்தினுலா அல்லது அவர்கள் மேல் அன்பினுலா? எதனல் ஐயா?' என்கிருன்.

> இச்சை நல்லென உறுதிகள் இசைக்குவன் என்ருய்,
> பிச்சர் சொல்லுவ சொல்லினே என்பெரு விறலைக்
> கொச்சை மானுடர் வெல்குவர் என்றனே, குறித்தது
> அச்சமோ அவர்க்கன்பினே யாவதோ ஐயா ?

(உறுதிகள் அறம், பொருள், இன்பம், வீடு எனப்படும் புருஷார்த்தங்கள்)

எதிரிகள்மீது அன்பு ஏற்பட்டுவிட்டதென்று சுட்டிக் காட்டுகிறன். (மித்ரப்ரவாதேன சத்ருஸேவீ' என்பதன் எதிரொலி) மேலும் நாடிழந்து, தாரமிழந்து, மானம் இழந்து வாழும் அந்த மனிதனை உன்னையன்றி யார் மதிப்பர்?' என்றும் இடித்துக் கூறுகிறன்.

இதுவே இரணியன் கதைக்கு வாய்ப்பு. 'அவன் மனிதனல்ல; ஆதிமுதல் பொருளாகிய திருமால் மனிதனுகி வந்தவதரித்திருக்கிறன்' என்கிறுனும் விபீஷணன். அதற்கு மேல், 'உன்னைவிட வலிமை மிக்க பெரியோர் திருமாலின் சினத்துக்கு இலக்காகி மடிந்து போயினர்' என்று கூறி இரணியன் அழிந்த விவரம் சொல்லுகிறன்.

'பிரம்மதேவன் மனமுவந்து வேதங்கள் கற்பித்தார் இரணியனுக்கு. பல வரங்கள் பெற்று இணையிலாத் தலைவனென வாழ்ந்தான். ஆனல் அகந்தையால் உலகோர் அனைவரும் தன் பெயரே சொல்லித் துதிக்குமாறு அமைத்துத் திருமாலின் பெயரே கேட்காத படி செய்தான். அவனுக்குப் பிறந்த அருமை மகன் வித்தை கற்றுக் கொள்ள முற்பட்டுத் தந்தையின் பெயரைச் சொல்ல மறுத்து 'ஓம் நமோ நாராயணய' என்றுன். அசைவற்று மனமுருகித் தொழுது கண்ணீர் சுரந்தான். பாடம் கற்பித்த அந்தணன் நடுங்கி நின்றுன்' என்கிறுன்.

**ஓ நமோ நாராயணய வென்றுரைத் துளமுருகித்**
**தானமைந் திரு தடக்கையுந் தலைமிசைத் தாங்கிப்**
**பூநிறக் கண்கள் புனலுக மயிர்ப்புறம் பொடிப்ப**
**ஞான நாயகனிருந்தனன் அந்தணன் நடுங்க**

(முதலடியில் வடமொழிச் சொல் தொடரை முழுமையோடமைத்துவிட்டார் கவி.)

பல வகையிலும் துன்புறுத்திப் பிரஹ்லாதனின் விஷ்ணுபக்தியை விரட்ட முயன்றுன் இரணியன். ஒரு நாள் சினங்கொண்டு 'உன்னைக் கொன்றுவிடுவேன்' என்று விரட்ட, பிரஹ்லாதன் 'தந்தையே, என் உயிர் இவ்வுலகைப் படைத்த பரம்பொருளுக்கே உரியது' என்றுன். 'அவனே பல உயிர்களிலும் தோற்றுகிறன் மலரில் மணமும் எள்ளில் எண்ணையும் போல எங்குமிருக்கிறன், திருமால்' என்றுன். 'அப்படியானல் இத்தூணில் இருக்கிறன பார்ப்போம்' என்றுகூறி நகைத்தான் இரணியன். அதற்கு மகன் கூறிய பதில்: ''ஒரு சாண் இடத்திலும் உள்ளான். அணுவைப் பிளந்து நூறு பாகமாய் ஆக்கினல் அச்சிறு பகுதியிலும் உள்ளான். மேருபர்வதத்திலும் இருக்கிறன். இங்குள்ள தூணில் இருக்கிறன். அது மட்டுமல்ல, நீ சொன்ன சொல்லிலும் நிற்கிறன் பரம்பொருள். இவ்வுண்மையை விரைவில் காணலாம்'' இதைக்கேட்டு நகைத்தான் இரணியன்.

காணிலுமுளன் ஓர் தண்மையணுவினைச்சத கூறிட்ட
கோணினுமுளன் மாமேருக் குன்றினுமுளன் இந்நின்ற
தூணினுமுளன் நீ சொன்ன சொல்லினுமுளன் இத் தன்மை
காணுதி விரைவின் என்றான் நன்றெனக் கனகன் நக்கான்.

(கடவுளை வைதாலும் புகழ்ந்தாலும் சொல்லிலே நிற்பது கடவுள்தான் என்ற கருத்தை அழகாய் உபயோகிக்கிறார் கவி.)

பின்னர் இரணியன் அத்தூணை அறைய அதிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கம் அண்டம் கிடுகிடுக்க சிரித்தது. (சிரித்தது வெங்கட்சியம்'). ''இரணியனை அவனது மாளிகையின் வாயிலிலே தனது மடியில் இருத்தி நகத்தால் கீறிக் கொன்ற நரசிங்கம் திருமாலே'' என்று கூறி முடிக்கிறான் விபீஷணன்.

நற்புத்தி கூறி எச்சரிக்கை செய்வதாக நினைக்கிறான் தம்பி. ஆனால் ராவணன் அதை எப்படி எடுத்துக் கொள்ளுகிறான்? 'பெற்ற தந்தையின் மார்பைக் கிழித்துக் கொன்றவனைக் கண்டு மகிழ்ந்த பிரஹ்லாதனும், பகைவனுக்கு நட்பு செய்ய விரும்பும் நீயும் நிகர் தான். வேறு யார்உங்களுக்கு சமானம்?' என்கிறான்.

ஆயவன் வளர்த்ததன் தாதை யாகத்மை
மாயவன் கல்லிய மகிழ்ந்த மைந்தனும்
ஏயும்நம் பகைஞனுக் கினிய நண்புசெய்
நீயுமேநிகர் பிறர் நிகர்க்க நேர்வரோ.

ஒருவனது நாணயத்தில் நம்பிக்கை குறைந்துவிட்டால் அவன் சொல்வது எல்லாமே விபரீதமாகவே தோன்றும்!

'நான் தோற்றுவிட்டால் இரணியன் புதல்வனைப்போல் நீயும் என் பதவியைக் கைப்பற்றலாம் என நினைக்கிறாயோ?' என்கிறான். கோபம் மேலிட்டு, 'நீ இருக்க எனக்கு வேறு பகைவர் வேண்டுமோ?' என்கிறான். கடைசியாக, 'பழிக்கு அஞ்சி உன்னைக் கொல்லாமல் விடுகிறேன். வாய்க்கு வந்தபடி பேசுவதை நீ விட்டபாடில்லை. இங்கிருந்து போய்விடு. என்னெதிரில் நின்றால் அவமானம் அடைதல் நிச்சயம்' என்கிறான். ராவணனை 'அழிவினை எய்துவான்,' 'அறிவு நீங்கினான்' என்ற சொற்களால் குறிக்கிறார் கம்பன். ('காலசோதித:' என்ற வால்மீகியின் பதம் ஒலிக்கிறது.)

பழியினை யுணர்ந்தியான் படுக்கிலேன் உனை
ஒழிகிலை புகழுதல் ஒல்லை நீங்குதி
விழியெதிர் நிற்றியேல் விளிதி யென்றனன்
அழிவினை யெய்துவான் அறிவு நீங்கினான்,

('விளி' என்றால் அழிதல், அவமானமடைதல் என்ற இரு பொருளும் உண்டு.)

புறப்படும் தறுவாயில் விபீஷணன் நிதானத்தோடு பேசுகிறான். 'எத்தனையோ வகையில் நியாயம் எடுத்துரைத்தேன், நீ உணரவில்லை. எனது பிழை பொருத்தருள வேண்டும்' என்று கூறி லங்கையைவிட்டுச் செல்லுகிறான். இங்கு விபீஷணனை 'உத்தமன்' என்று குறிக்கிறார் கவி. இது வால்மீகியின் 'ஸ்ரீமான்' என்ற அடைமொழிக்கு நிகரானது.

**எத்துணை வகையினும் உறுதி யெய்தின**
**ஒத்தன வுணர்த்தினேன் உணரகிற்றிலை**
**அத்தவென் பிழைபொருத்தருளு வாயென**
**உத்தமன் அந்நகரொழியப் போயினான்,**

நீண்டதோர் 'இரணிய வதைப்படலம்' (176 பாடல்) முடிந்ததும் வால்மீகியின் கதைப்போக்கில் வந்து கலந்து கொள்கிறார் கம்பன். ஆனால், 'இப்படலத்தை ஏன் புகுத்தினார், அது காவியத்தை எப்படி பாதிக்கிறது?' என்பது கவனிக்கத்தக்கது.

கம்பன் காலத்துக்குள் ராமன் அவதார புருஷனென்பது மக்கள் மனதில் ஊன்றிவிட்டது. விஷ்ணு இவ்வுலகில் வந்து அரக்கரை அழித்தது ராமாவதாரத்தில் மட்டுமல்ல. வாமன, நரசிங்க, கூர்ம அவதாரங்களின் கதையும் இதுவே. ஆதலால், 'அழிவுக்காலம் நெருங்கிய' ராவணன் இரணியனை நினைவூட்டினான் போலும். ஆனால், இக்கதையை விபீஷணன் வாயிலாகக் கூறி ராவணனுக்கோர் எச்சரிக்கையாய் அமைத்தது ஏன்? விபீஷணனை விஷ்ணு பக்தனாய் உருவகப்படுத்திய மரபு காரணமாய் இருக்கலாம்.*

எப்படியாயினும், ராவணன் சபையில் மந்திராலோசனை நடக்கும் நிலையில் இக்கதையும் விரிவுரையும் இயற்கையாய் அமையவில்லை யென்றே சொல்லவேண்டும். விபீஷணனுக்குத் தெரிந்த கதை ராவணனுக்கும் தெரிந்திருக்காதா? 'இரணியன் என்பான்' கதையைப் புதிதுபோல் சொல்லுவானேன்? கதைக்குப் பீடிகையாக 'ராமனே விஷ்ணு' என்றும் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இது கவிக்குத் துணை செய்தாலும் விபீஷணனின் பாத்திரத்துக்கு மாசு ஏற்படும் வகையில் இருக்கிறதே என்ற ஏக்கம் வாசகர்களுக்குத் தோன்றத்தான் செய்கிறது.

இந்த்ரஜித்தின் வாலிபம் சிற்றப்பனை ஏசத்தூண்டியது. தரும வழியில் தனித்து நின்ற விபீஷணனின் ஆத்திரம் சிறுவன்மீது சீற்றம்

*தேரழுந்தூரில் நரசிங்கப் பெருமாள் கோயிலை வழிபட்ட கம்பன் அந்த அவதாரத்தைப் புகழ்ந்து பாடினார் என்பது சிலர் கருத்து. 'கம்பன் என்ற பெயரே தூணில் தோன்றிய நரசிங்கனின் காரணப்பெயர் என்று சொல்வாரும் உளர்.

X
?

கொள்ளத் தூண்டியது. மகன்மீதுள்ள பாசம் ராவணனை விபீஷணனே சத்ருவென்று கருதத் தூண்டியது. இவ்வாறு படிப்படியாக வளர்த்து வார்த்தைகளை முற்றவைத்துப் பகைமை மூளுவதைக் காட்டினார் வால்மீகி. இதைத் தவிர்த்து இரணியன் கதையை விவரித்த கவிக்கு ஏதோ காரணம் இருந்திருக்க வேண்டும். ஆராய்ச்சிக்குரிய பொருள்.

'நான் போகிறேன். நீ சுகமாய் வாழ்வாயாக' என்று கூறி வெளிக்கிளம்பிய விபீஷணன் விரைவிலே ராமனிருக்குமிடத்துக்கு வந்து சேருகிறான். இச்செயல் சற்று விந்தையாய்த்தானிருக்கிறது. முன்கூட்டி எவ்வித அறிகுறியுமின்றி ஏன் இப்படிச் செய்தான்? ராவணன் சபையில் 'ராமபாணம் உன்னை வீழ்த்தினால் காணச் சகியேன்' என்று சொன்னவன் ராமனிடத்திலேயே நேராக வந்து நிற்பானேன்? அங்கு பேசிய பேச்சிலே சூது இருந்ததோ, அல்லது வெளியே வந்த பின்னர் தோன்றிய யோசனையோ?

வால்மீகி மௌனமாயிருக்கிறார். ஆனால் விபீஷணன் இங்கு வந்தான் என்ற சேதியைப் புதிய ஸர்க்கத்தில் முதல் வரியாக அமைத்திருப்பதைப் பார்த்தால், (ஆஜகாம முஹூர்த்தேன) இடைவேளையில் தோன்றிய எண்ணம் என்று ஊகிக்க முடிகிறது. படபடப்பாய்ப் பேசி வெளியே வந்துவிட்டான். ஆனால் எங்கே செல்வது? நாட்டை விட்டுப் போகவேண்டியதுதான். இருந்தால் அவமானம், ஆபத்து. வெளியே வந்து பார்த்தால் வடதிசையில் கடலும் அதற்கப்பால் ராமனின் சேனையும் தென்படுகிறது. 'அங்கு போய்ச் சேர்ந்துகொண்டால் என்ன?' என்று நினைக்கிறான் போலும். இந்த்ரஜித் கூறிய வசைமொழியும் அவனை ஆதரித்து ராவணன் பேசிய நிந்தனையும் நெஞ்சையறுக்கின்றனவோ? ஆத்திரம் மிகுந்து வஞ்சம் தீர்க்கவும் முற்படுகிறானோ?

குன்றின்மேல் நின்ற வண்ணம் வானரர்களைப் பார்க்கிறான். துணைவர் நால்வரோடு நிற்கும் விபீஷணனைப் பார்த்த சுக்ரீவன் 'இவன் நம்மைக் கொல்ல வந்திருக்கிறான்' என்கிறான். வானரர் கையிலே கழியும் கல்லும் ஏந்தி 'உத்தரவிட்டால் உடனே கொல்லுவோம்' என்கிறார்கள். இவர்கள் சைகையை உணர்ந்து விபீஷணன் நீர்க்கரையின் அருகே நின்று இரைந்து பேசுகிறான். (எதிர்க்கரையில் காது கேட்கவேண்டுமல்லவா?)

''ராவணன் என்றொரு தீயவன், அரக்கர் தலைவன். அவனது தம்பி நான். அவன் ஜனஸ்தானத்தில் ஜடாயுவைக் கொன்று சீதையுடன் இங்கு வந்தான். பாவம், அவள் அரக்கியரிடையே சிறையிருக்கிறாள். பலவிதமாய்க் காரணம் காட்டி, சீதையை ராமனிடம் சேர்க்கும்படி மீண்டும் மீண்டும் சொன்னேன். அவன் கேட்கவில்லை. போதாதற்கு என்னை வைது அவமானப்படுத்தி வேலைக்காரன்போல் நடத்தினான். ஆதலால் மனைவி மக்களையும்விட்டு ராமனிடம் வந்து

சேர்ந்தேன். அவனே சரணம். ராமனுக்குச் சேதி சொல்லுங்கள்'' என்கிறான்.

ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ரக்ஷஸேச்வர :
தஸ்ய அஹம் அனுஜோ ப்ராதா விபீஷண இதி ச்ருத :

..........................................................................................

ஸர்வலோக சரண்யாய ராகவாய மகாத்மனே
நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம். 8

சுருக்கமாய்ச் சொன்னாலும் சாதுர்யமாய்ச் சொல்லிவிட்டான். 'ராவணன் தீயவன்' என்ற பீடிகையிலேயே, தான் தனிப்பட்டவன் என்று காட்டி சீதையின்பால் தனக்குள்ள கருணையையும் காட்டித் தன்னை ஏற்றுக் கொள்வதற்கான சூழ்நிலையை உண்டாக்குகிறான். ஆனால் ராவணன் 'அவமானப்படுத்தி வேலைக்காரன்போல் நடத்தினான்' ('தாஸவச் சாவமானித :') என்பது குறிக்கத்தக்கது? இதுவே இங்குவரத் தூண்டியது. இதனாலேயே 'ராவணன் தீயவன், 'ஸீதை தவிக்கிறாள்' என்ற மொழிகள் எல்லாம் எழுகின்றனவோ'?

விபீஷணன் இங்கு வந்து சேர்ந்ததற்கு ஒரு காரணம் கற்பிக்கிறார் கம்பன். ராவணன் சபையிலிருந்து வெளியேறியபின் 'இனி என்ன செய்வது?' என்று தோழர்களைக் கேட்கிறானும் விபீஷணன். 'தருமமே பெரிதெனக் கருதி வாழும் ராமன்பால் அன்புகொண்டுவிட்டேன். ஆனால் நற்பெயரும் புகழுமே எனது நோக்கம். அரசுபெற விரும்பவில்லை. உடன் பிறந்தவன் என் ஆலோசனையை ஏற்கவில்லையென்று துறந்துவிட்டேன். இனிச் செய்யவேண்டியதென்ன?' என்று கேட்க, அவர்கள் ராமனிடம் செல்லும்படி தூண்டுகிறார்கள்.

**அறந்தலை நின்றவற்கன்பு பூண்டனன்**
**மறந்து நன் புகழலால் வாழ்வு வேண்டலன்**
**பிறந்த வென்னுறுதி நீ பிடிக்கலாமெனத்**
**துறந்தனனினிச் செயல் சொல்லுவீரென்றான்**

நண்பர்களைக் கலந்து ஆலோசிப்பதால் முன்னமே பகைவர் பக்ஷம் சேரும் எண்ணம் இருக்கவில்லையென்று குறிக்கிறார் போலும் கவி. ஆனால் (ராமன் பால்) 'அன்பு பூண்டனன்' என்றபின் வேறு வழி ஏது?

எதிரே குன்றின்மேல் விபீஷணனைக் கண்டதும் சுக்ரீவன் ராமனை எச்சரிக்கிறான். 'இவன் ராவணன் அனுப்பிய வேவுகாரன். இங்கு வந்து நம்முள் பிளவு ஏற்படுத்துவான். இயற்கையில் அரக்கன். நம் பகைவனின் உடன்பிறந்தோன். இவனை எப்படி நம்பலாம்?' என்று கூறி விபீஷணனைக் கொல்வதே முறை என்கிறான்.

ப்ரக்ருத்யா ராக்ஷஸோ ஹ்யேஷ ப்ராதா அமித்ரஸ்யதே ப்ரபோ
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே க்ஷமம் க்ஷமவதாம் வர 9

அருகிலிருக்கும் மற்ற வீரரையும் கேட்கிறான் ராமன். அங்கதன் முதலில் பேசுகிறான். விபீஷணனைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும். குணம் நிறைந்தவனானால் ஏற்றுக் கொள்ளலாம் தோஷம் நிறைந்தவனாயிருந்தால் ஏற்கக் கூடாது' என்கிறான். எப்படிப் பரிசோதிப்பது?

விபீஷணன் மீது வேவுகாரரை ஏவலாம் என்ற அழகிய யோசனை சரபனிடமிருந்து எழுகிறது! வயது முதிர்ந்த ஜாம்பவான் சொல்லுகிறான். 'எதிரிகள் வைரம் கொண்டுள்ளனர். இவனோ தகாத சமயத்தில் தகாத இடத்தில் நம்மை நாடுகிறான். எனக்குச் சந்தேகமாய்த் தானிருக்கிறது.'

அதேசகாலே ஸம்ப்ராப்த : ஸர்வதா சங்க்யதாமயம் 10

இனி ஹனுமான் பேசுகிறான். 'இவர்கள் சொன்னது ஒன்றும் சரியெனத் தோன்றவில்லை. பயன் என்னவென்றும் தெரியவில்லை. குணதோஷங்களை ஆராய அவனைச் செயலில் காணவேண்டும். ஆனால் அறியாத ஒருவனை எப்படிச் செயலில் அமர்த்துவது? வேவுகாரரை நாம் அனுப்புவதும் இயலாதது. தகாத சமயத்தில் தகாத இடத்தில் இவன் வந்தானென்பதைப் பற்றியும் ஒன்று கூறவிரும்புகிறேன். ஒருவனை விட்டு இன்னொருவனையடைய, தீமையைவிட்டு நலத்தை நாட, இதுவல்லவோ தக்க சமயம்? ராவணனின் தீய நடத்தையையும் உமது வலிமையையும் உணர்ந்துதான் இங்கு வந்திருக்கிறான் அறிவாளி' என்கிறான்.

மேலும், 'அவன் பேச்சிலே தீய குணம் தோன்றவில்லை. முகமும் மலர்ந்திருக்கிறது. கெட்ட எண்ணத்தை மறைக்க முடியாது' என்கிறான். கடைசியாக ஒரு கருத்தை அழுத்தமாகச் சொல்லுகிறான். 'வாலியைக் கொன்று சுக்ரீவனையரசனாக்கினீரல்லவா? அதைக் கேள்விப்பட்டிருக்கிறான் விபீஷணன். ராவணனோ தீமையில் ஈடுபட்டு நிற்கிறான். நீரோ முயற்சியால் படைதிரட்டி வந்துவிட்டீர். இதையெல்லாக் பார்த்துத் தனக்கும் ராஜ்யம் வேண்டுமென்று கேட்கவே முன்யோசனையோடு வந்திருக்கிறான்' என்றுகூறி முடிக்கிறான். 'அறிவாளி'யென்றது இதனால்தான் போலும். முத்தாய்ப்பு வைத்தாற் போல் சொன்னசொல் ராமன், சுக்ரீவன், விபீஷணன் மூவரையும் குத்திக் காட்டுவதுபோல் அமைந்திருக்கிறது.

உத்யோகம் தவஸம்ப்ரேக்ஷ்ய மித்யாவ்ருத்தம்சராவணம்
வாலினஸ்ச வதம் ச்ருத்வா ஸுக்ரீவம் சாபிஷேசிதம்
ராஜ்யம் ப்ரார்த்தய மானஸ்ச புத்திபூர்வம் இஹாகத : 11

புத்திகூர்மையும் தெளிவான கருத்தும் வெளிப்படும் வண்ணம் பேசுகிறான் ஹனுமான். அதையடுத்து ராமன் பேசுகிறான்.

'விபீஷணனைப்பற்றி நானும் ஒன்றுகூற விரும்புகிறேன். நண்ப னென்ற முறையிலே வந்த எவனையும் தள்ளலாகாது. அவனிடம் குற்றம் இருப்பினும் மேலோர்க்கு அவனை ஏற்பது தவறாகாது' என் கிறான்.

மித்ர பாவேன ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதம்சன
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாம் ஏததகர்ஹிதம் 12

ராமன் பேச்சைக் கேட்டு விமரிசனம் செய்பவன் போல் பேசு கிறான் சுக்ரீவன். 'இவன் தீயவனே நல்லவனே, துயரம் வந்த சமயம் தமையனை விட்டு வந்தவன் நம்மையும்விட்டுச் செல்வது சகஜம் தானே?' என்கிறான். இதைக்கேட்டு ராமன் புன்னகை செய்கிறான். (ஈஷதுத்ஸ்மயமான :) தமையனோடு இணைந்து நிற்கவேண்டியதைப் பற்றிப் பேசுவது யார் என்று நினைக்கிறான் போலும்! (ஹனுமான் சொன்னதைக் கவனமாய்க் கேட்டிருந்தால் தமையனை விட்டு வந் தவனைப் பற்றிப் பேசியிருக்கமாட்டான் சுக்ரீவன். அல்லது, கேட்டும் இப்படிப் பேசுவதுதான் அவனது இயற்கை போலும்.)

ராமன் மேலும் பேசுகிறான். 'ஒரு நுட்பமான விஷயம் நினைவுக்கு வருகிறது,— அரசரிடையே எங்கும் காணலாம். அக் குலத்தில் பிறந்தவர் சிநேகமற்றவராகவோ வெளியூரில் வசிப்பவ ராகவோ இருந்தால் ஆபத்தில் கலகம் செய்வர். அதனாலேதான் இவன் இங்கு வந்திருக்கிறான். ஆனால் குற்றமற்றவராயினும் தமது நன்மையைத் தேடிக் கொள்வர். இவனே ராஜ்யத்தில் ஆசைவைத்து நம்மை நாடுகிறான். ஆகையால் சேர்த்துக் கொள்ளலாம். பிளவு பட்ட மனத்தினரும் களிப்புடைய மனத்தினரும் சேர்ந்து வாழமுடி யாது. இவன் பயந்து ஓடிவந்துவிட்டான். குரலிலே ஏழ்மை தொனிக் கிறது. ஆகையால் சேர்த்துக் கொள்ளலாம்' என்கிறான்.

அமித்ராஸ் தத்குலீனஸ்ச ப்ராதி தேச்யாஸ் ச கீர்த்திதா :
வ்யஸனேஷு ப்ரஹர்த்தார : தஸ்மாத் அயம் இஹ ஆகத :
..................
நவயம் தத்குலீனஸ்ச ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ : 13

சேர்த்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்கிறான். ஆனால் நல்லவனே தீயவனே என்பதைப் பொறுத்தல்ல. அவன் 'அரசுபெற விரும்புவன்' என்பதால். (ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ:) இந்த ஒரு சொல்லிலே காண்கிறான் விபீஷணனை. இது ஹனுமானின் கருத்து. அவனது புத்தி கூர்மையில் ராமனுக்கு அளவிலா மதிப்பு என்பதே இங்கு வெளியாகிறது.

அக்கருத்தை உறுதியாக்கிவிடும்படி இன்னொன்று சொல்லு கிறான் ராமன். 'எல்லாச் சகோதரரும் பரதனுக்கு ஒப்பாவரோ? என் போன்ற மகனும் உண்டோ? அல்லது உன் போன்றநண்பரும் கிடைப் பாரோ?' என்கிறான்.

நஸர்வே ப்ராதரஸ்தாத பவந்தி பரதோ பமா :
மத்விதா வா பீது : புத்ரா : ஸுஹ்ருதோ வா பவத்விதா : 14

முயற்சியின்றிக் கிடைத்த மகுடத்தை வலுவிலே நிராகரித்த பரதனைப் புகழுகிறான். முறைப்படி கிடைத்த மகுடத்தை மகிழ்ச்சியோடு தம்பிக்குத் தந்த தன்னையும் குறிப்பிடுகிறான். இந்த அளவுக்கு எங்கிருப்பர் உடன் பிறந்தோர்? குலப்பெருமை ஒலிக்கிறது. விபீஷணனையும் ராவணனையும் இகழ்வாய்க் குறித்துச் சொன்ன வார்த்தை. அது சுக்ரீவனுக்கும் 'சுருக்'கென்று தைக்கிறது போலும். 'உன்போன்ற நண்பர் கிடைப்பாரோ?' என்று சேர்த்துச் சொல்லி சமாளிக்கிறான் ராமன்.

ஆனால் அதைப் புகழ்ச்சியாய் எடுத்துக் கொண்டு, இங்கிதம் தெரியாமல் மேலே பேசுகிறான் சுக்ரீவன். 'ராவணனே இவனை அனுப்பியிருக்கிறான். இவனைக் கொல்வதே முறை. ஆனால் நம்பி நம்முடன் சேர்த்துக் கொண்டால், உம்மையோ, லக்ஷ்மணனையோ, என்னையோ துன்புறுத்துவான்' என்கிறான் 'உன்போன்ற நண்பன் இல்லை' என்றவுடன் உச்சி குளிர்ந்துவிட்டதுபோலும். தனக்குப் போட்டியாய் இன்னொரு நண்பன் வருவதை விரும்பவில்லையென்பதும் தெளிவாகிறது.

ராமன் மனதை திடப்படுத்தி விட்டான் என்பது அவன் கூறும் பதிலில் தொனிக்கிறது. சுக்ரீவன் சொன்ன ஆக்ஷேபணைக்குச் சமாதானம் அளிக்கும் முறையில் ஆரம்பிக்கிறான். ஆனால் 'அவன் நல்லவனோ தீயவனோ எனக்கொரு தீங்கும் செய்யச் சக்தியற்றவன்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பேச்சின் போக்கை வேறுவழியில் திருப்பி நீதிமொழிகள் கூறுகிறான் ராமன்.

''முன்னாள், தன் துணைவியைக் கொன்ற வேடனுக்குத் தனது உடலையும் உணவாய் அளித்து உதவியதாம் ஒரு புறா. அவன் பகைவனாயினும் வேண்டி நின்றான் என்ற காரணத்தால் உபசரித்தது புறா. அப்படியிருக்க, என் போன்றவர் என்னதான் செய்யக்கூடாது? மேலும் கண்டு என்னும் முனிவர் கூறிய வாக்குப்படி கைகூப்பி வணங்கி எளிமையோடு சரணடைந்து யாசித்து நிற்பவனை ஒருபொழுதும் கொல்லலாகாது. அவன் பகைவனே ஆயினும் சரி' என்கிறான்.

பத்தாஞ்சலிபுடம் தீனம் யாசந்தீம் சரணாகதம்
ந ஹன்யாத் ஆந்ருசம்ஸ்யார்த்தம் அபி சத்ரும் பரந்தப 15

பகைவன் எளிய மனத்தோடு வந்தாலும் அகந்தையோடிருப்பினும் தஞ்சமடைந்தால் அவனைக் காப்பாற்றியே தீரவேண்டும். அதற்காக உயிரையே கொடுத்தாலும் தகும் என்ற உபநிஷத்து வாக்

யத்தையும் நினைவுறுத்துகிருன் ராமன். உடனே 'அதன்படியே நடப்பேன்' என்றும் ஆணையிடுகிருன்*

கரிஷ்யாமி யதார்த்தம் து கண்டோர் வசனமுத்தமம் 16

''நீயே துணை என்று அடைந்தவனை யாராயினும் காத்து உடனே அபயம் அளிப்பேன். இதுவே என்கொள்கை'' என்கிருன்.

ஸக்ருதேவ ப்ரபன்னய தவாஸ்மீதிச யாசதே
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம் மம 17

இக்கொள்கையின்படி 'அவனை வரச்சொல் அவன் ராவணனே ஆயினும் சரி' என்கிருன்! வீரமும் நீதியும் நிறைந்த பேச்சு.

உடனே சுக்ரீவன் 'என்ன பெருந்தன்மை!' என்று புகழ்ந்து பேசுகிருன். 'நானும் ஆராய்ந்து பார்த்தேன். விபீஷணன் நல்லவன் என்றே சொல்லுகிறது என் உள்ளம். அவன் நமது நண்பனுகலாம்' என்கிருன்.

மம சாப்யந்த ராத்மாயம் சுத்தம் வேத்தி விபீஷணம்
அனுமானச்ச பாவாச்ச ஸர்வத: ஸுபரீக்ஷித: 18

முரண்பாடான கருத்துகளை இடைவிடாமல் தெரிவிக்கும் பிறவிகளில் சுக்ரீவனும் ஒருவன்.

ராமன் தனது பேச்சில் கருத்து மாற்றம் அமைத்தது கவனிக்கத்தக்கது. முதலில் அரசியல் நுணுக்கத்தை எடுத்துக் காட்டி விபீஷணனைச் சேர்த்துக் கொள்வதில் நலம் உண்டு என்ருன். சுக்ரீவன் வாதாடினுன். பின்னர் தரும நீதி எடுத்துரைத்துத் தன் கொள்கையை நிலை நாட்டினுன். சுக்ரீவன் ஆமோதித்தான்! உலகநீதியும் பகுத்தறிவும் புலனுக்கெட்டாத போதிலும் தருமத்தின் பெயரிலே எதைச் சொன்னுலும் ஒப்புக் கொள்வது பாமர இயல்பு. கருத்து அதுவேதான். காரணம் வேறு. எடுத்துச் சொல்லும் முறை வேறு. இதன் மூலம் கேட்பவரின் மனதில் உணர்ச்சி வேறுபட்டு, முன்பு எதிர்த்து வாதாடிய தீர்மானத்தை ஆதரிக்கச் செய்கிறது!

அருகில் வந்த விபீஷணன் அடிபணிந்து நிற்கிருன். 'ராவணன் என்னை அவமானப்படுத்திவிட்டான்' என்ற பீடிகையோடு ஆரம்

*கண்டோபநிஷத்தை எடுத்துக் காட்டி தருமவழி கூறும் இச்சம்பவத்தை ராமனே திருமால் என உறுதிகொண்டோர் சரணுகதி சாஸ்திரம் என்று உரைப்பர். ராவணன் சபையிலிருந்து வெளியேறிய சமயமே, பக்தனை விபீஷணனுக்குப் பரந்தாமனிடம் உள்ளம் லயித்துவிட்டது என்று சொல்வது வழக்கம்.

பிக்கிறான். (நெஞ்சில் புண் ஆறவில்லை.) ஆதலால், 'உம்மிடம் சரணம் புகுந்தேன். லங்கை, நண்பர், செல்வம் எல்லாம் துறந்தேன். எனது ராஜ்யம், சுகம், வாழ்வு எல்லாம் இனி உமது கையில் இருக்கிறது' என்கிறான்.

அனுஜோ ராவணஸ்யாஹம் தேன சாப்யவமானித:

.................................................................................................................

.................................................................................................................

பவத் கதம் மே ராஜ்யம் ச ஜீவிதம் ச ஸுகானிச 19

ராஜ்யமா? 'ஓடிவந்தேன், துறந்தேன்' என்கிறான். 'சுகம், வாழ்வு' என்று பேசுகிறான். விஷயம் விளங்கிவிட்டது. இவன் அரசை விரும்பியே வருகிறான் என்று நினைத்தது எவ்வளவு உண்மை!

தருமநீதியும் கண்டோபநிஷத்தும் பயன்படாத நிலையல்லவோ இது? அரசியல் முறையே பயன்படும் என முடிவு செய்தவன் போல், விபீஷணனைப் பார்த்து 'அரக்கர் வலிமையை உள்ளபடி உரைப்பாய்' என்கிறான் ராமன். போர்க்காலத்தில் எதிரிதரப்பிலிருந்து வரும் ஒருவனை இப்படித்தானே கேட்கவேண்டும்? இனிமையாய்ப் பேசி ஆறுதல் சொல்லி விஷயத்தைக் கேட்கிறான். விபீஷணனை விழுங்குவது போல் விழித்துப் பார்க்கிறான். (உண்மையை அளந்து பார்க்கிறான் போலும்!)

வசஸா ஸாந்த்வயித்வைனம் லோசனாப்யாம் பிபன்னிவ
ஆக்யாஹி மம தத்வேன ராக்ஷஸானாம் பலாபலம் 20

உடனே எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறான் விபீஷணன். ராவணன் பெற்ற வரம், கும்பகர்ணனின் போர் வலிமை, ப்ரஹஸ்த னென்றபடைத் தலைவனின் வெற்றிகள் எல்லாம் சொல்லி, இந்த்ர ஜித்தின் மாயபலத்தைப் பற்றி உளவு சொல்லுகிறான். 'கவசம் பூண்டவன். பிறர் காணுமல் போர்புரிவான். தீயிலே ஓமம் செய்து போரிலே இறங்கினால் பகைவரைக் கொல்லுவான்' என்கிறான்.

முக்கிய விவரம் எல்லாம் கிடைத்துவிட்டது. விரைவில் நிலையை உணர்ந்த ராமன், 'ராவணனைக் கொன்று, ப்ரஹஸ்தன் முதலோரை யழித்து உன்னையே அரசனாக்குவேன். இது சத்தியம்' என்கிறான்.

அஹம் ஹத்வா தசக்ரீவம் ஸப்ரஹஸ்தம் ஸபாந்தவம்
ராஜானம் த்வாம் கரிஷ்யாமி ஸத்யமேதத் ப்ரவீமி தே. 21

மேலும் 'ராவணனைக் கொல்லாமல் அயோத்திக்குத் திரும்ப மாட்டேன்' என்று உறுதி கூறுகிறான். உடனே தலைவணங்கிச் சொல்லுகிறான் விபீஷணன், 'அரக்கரை ஒழிக்கவும் இலங்கையை அழிக்கவும் என் உயிருள்ள வரை உதவுவேன். உமது சேனையையும்

லங்கைக்குள் நடத்துவேன்.' ஆணைக்குப் பதில் ஆணை. நீதியும் தருமமும் பேசியவன் எப்படி மாறிவிட்டான்!

மனம் குளிர்ந்து ராமன் அவனை அணைத்துக் கொள்ளுகிறான். லக்ஷ்மணனையழைத்து, 'கடலின் நீர் கொண்டுவா. மேதையான விபீஷணனுக்கு அபிஷேகம் செய்து அரக்கர் வேந்தனாய் ஆக்குவோம். என் மனம் நிறைந்திருக்கிறது' என்கிறான்.

அப்ரவீத் லக்ஷ்மணம் ப்ரீத: ஸமுத்ராத் ஜலமானய
தேன சேமம் மஹாப்ராக்ஞம் அபிஷிஞ்ச விபீஷணம்
ராஜானம் ரக்ஷஸாம் க்ஷிப்ரம் ப்ரஸன்னே மயி மானத. 22

உடனே நீர்க்குடங்கள் வர விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கிறது! வானர வீரர்கள் பாராட்டி மகிழ்கின்றனர். இதுவே பெரும் வெற்றி.

விபீஷணன் அடைக்கலம் புகுந்ததைக் கம்பனும் இதே விதமாய்க் கையாளுகிறார்.

அவனைச் சேர்த்துக் கொள்ளலாமா என்ற கேள்விக்கு சுக்ரீவன் சொல்லுகிறானும்: 'மாண்புமிக்க தமையனையோ, தாயையோ, தந்தையையோ, ஆசிரியரையோ, அரசனையோ பகைத்துக்கொண்டு இங்குவருதல் தகாத செயல். அது ஏளனத்துக்குரியதே அன்றி ஏற்கத்தக்கதோ?'

**தகையுறு தம்முனைத் தாயைத் தந்தையை**
**மிகையுறு குரவரை யுலகின் வேந்தனைப்**
**பகையுற வருதலுந் துறந்த பண்பிது**
**நகையுறலன்றியே நயக்கற் பாலதோ.**

கருத்து நன்றாயிருக்கிறது. ஆனால் அதை சுக்ரீவன் சொல்லும்போது 'நகையுற'த்தக்கதாய் அமைகிறது!

ஜாம்பவான் கூறும் ஆலோசனையில் ஒரு நுட்பத்தைக் காட்டுகிறார் கவி. 'முன்பு களங்கமற்ற மான்போல் வந்தான் ஒருவன். அவன் இழைத்த கொடுமைபோல் இவனும் செய்வான். அவனது வரவுபோல் ஆகும் இவன் வருகை' என்கிறானும்.

**மானென வந்தவன் வரவை மானுமிவ்**
**வேனையன் வரவுமென்றினிது கூறினன்.**

ஹனுமான் ஆராய்ந்து சொன்ன கருத்தைக் கம்பன் அப்படியே அமைக்கிறார். ('வாலினஸ்ச வதம் ச்ருத்வா' என்ற சுலோகம்).

விபீஷணனை 'அரசு எய்துவான் விரும்பி மேயினன்' என்கிறார். (ராஜ்யம் ப்ரார்த்தயமான:)

வாலி விண்பெற வரசிளையவன் பெறக்
கோலிய வரிசிலையுங் கொற்றமும்
சீலமு முணர்ந்து நிற்சேர்ந்து தெள்ளிதின்
மேலர செய்துவான் விரும்பி மேயினன்.

இதை ஆமோதித்துப் பேசும் ராமன், 'மாருதி சொன்ன யோசனையே சரி. இனிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? வெற்றி பெற்றாலும் சரி, தோற்றாலும் சரி, அடைக்கலம் என்று வந்தவனை ஏற்காமல் வேறு வழி உண்டோ?' என்கிறான்.

மற்றினியுரைப்பதென்னோ மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றியன்ன தன்றெனிற் பிறிதொன்றாலும்
வெற்றியே பெறுக தோற்க வீக வீயாது வாழ்க
பற்றுதலன்றி யுண்டோ வடைக்கலம் பகர்கின்றானை.

(சுக்ரீவனோடு நட்புக்கொண்ட போதும் 'மற்றினியுரைப்ப தென்னோ' என்றான் ராமன்!)

விபீஷணனைக் கட்டியணைத்து நண்பனாகக் கொண்டவுடன் 'தாழ் கடல் இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' என்று சொல்லி லக்ஷ்மணனை மகுடம் சூட்டும்படி ஏவுகிறான். இங்கு ராமனை 'ஆழியான்' (திருமால்) என்று வர்ணிக்கிறார் கம்பன்.

அவமானம் தாங்காமல் வெளியேறினான் விபீஷணன். ஆனால் உள்ளத்தில் குமுறிய ஆத்திரம் அவனை எதிரியின் காலடியில் கொண்டு போய்ச் சேர்த்தது. அவன் ராவணனை இகழ்ந்து சீதையை புகழ்ந்தான். எனினும் அவனை 'அரசு விரும்புவோன்' என்றே கருதினர். அணுகி வந்ததும் அவன் ராவணனைப் பற்றி எல்லாம் சொன்னான். தனது நேர்மையை நிலைநாட்ட விரும்பினான் போலும். இவர்களுக்கோ அவன் பேச்சு தமது கருத்தை ஊர்ஜிதம் செய்ய ஓர் ஆதாரமெனத் தோன்றுகிறது! கட்டாந்தரையில் நிற்கவைத்து நீராட்டி 'இலங்கை வேந்தன்' எனச் சொல்லவும் அவன் அகமகிழ்ந்து போனான். ஆனால் அவன் சூட்டியது மகுடமா? 'அரசு விரும்புவோன்' (ராஜ்யகாங்க்ஷி) என்ற பட்டம் அன்றோ?

வால்மீகி கதை சொல்லும் அழகே அழகு.

30

# பாற் கடல்!

இனி கடல் கடந்து செல்வது எப்படி? விபீஷணனையே கேட்கிறான் ராமன். 'கடலைச் சரண் புகுவதுதான் முறை' என்கிறான் விபீஷணன். உடனே கடலோரமாய்ப் புல்லை விரித்து விரதம் பூண்டு படுக்கிறான் ராமன்.*

இக்காட்சியை வர்ணிக்கும் கம்பன் நயமானதோர் கருத்தைப் பிரயோகிக்கிறார். வருணனைக் குறித்து மந்திரம் சொல்லியவண்ணம் ராமன் படுத்திருந்தபோது கருணைக் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததுபோல் தோன்றிற்றாம்.

**கருணையங்கடல் கிடந்தது கருங்கட னோக்கி**
**வருண மந்திரமெண்ணிணன் விதிமுறை வணங்கி**

(திருவாய்மொழியில் 'கருணையங் கடல் கருங்கடல் நோக்கிக் கிடந்தது என்னும்படியிறே' என்ற வரியை இங்கு அப்படியே அமைத்துவிட்டார் கம்பன்) ராவணனது ஒற்றர்களில் ஒருவனான சார்தூலன் இதையெல்லாம் கவனித்து ராவணனிடம் விரைந்து சென்று சேதி சொல்லுகிறான். 'கடலுக்கப்பால் நிற்கும் சேனை கடல் போன்றதாகவே இருக்கிறது' என்கிறான். உபாயத்தால் சமாளிக்க வேண்டுமென்கிறான். உடனே சுகன் என்ற ஒற்றனையழைத்து ''சுக்ரீவனிடம் போய்ச் சொல். 'நீயோ பேரரசன், பலவான். நமக்குள் ஒருவித நன்மை தீமையில்லை; ஆதலால் சகோதரன் போன்றவன் நீ. நான் ராமன் மனைவியை அபகரித்தால் உனக்கென்ன? கிஷ்கிந்தையை நோக்கிச் செல். தேவர்களாலேயே வெல்ல முடியாத லங்கையில் மானுடரும் வானரரும் என்ன செய்வர்?' என்று கேள்'' என்கிறான்.

---

*பெருமுயற்சி துவக்குமுன் பஞ்சபூதங்களில் ஒன்றாகிய நீரை வழிபடுவது பண்டைய மரபு.

நண்பரிடையே பிளவு ஏற்படச் செய்வது (மித்ரபேதம்) ஒரு ராஜதந்திரம்.

த்வம் வை மஹாராஜ குலப்ரஸூதோ மஹாபலஸ்ச
ருக்ஷர ஜஸ்ஸூதஸ்ச
................................................ ....................
...............................................................................
தேவைரபி ஸகந்தர்வை : கிம்புனர் நரவானரை : 1

*சுகன் இங்கு வந்து நுழைந்ததும் அவனைப் பிடித்து உதைக்கின்றனர் வானரர். ராமனிடம் முறையிட்டு அவன் தயவால் உயிரோடு தப்பிச் செல்லுகிறான் தூதன். ஆனால் வந்த காரியத்தை மறக்கவில்லை! 'ராவணனுக்கு என்ன பதில் சொல்லுவது?' என்றும் கேட்கிறான். அதற்கு சுக்ரீவன், 'நீ எனது நண்பன் அல்ல, உபகாரமோ அனுதாபமோ பெறுவதற்குத் தகுதியுள்ளவனும் அல்ல. ராமனது சத்ரு நீ. அதனால் வாலியைப்போல் நியும் கொல்லத்தக்கவன்' என்று சொல் என பதில் கூறுகிறான்.

அரிஸ்ச ராமஸ்ய ஸஹானுபந்த : ஸமேஸிவாலீவ வதார்ஹவத்ய : 2

முன்பு ராமன், 'இனி சுகமும் துக்கமும் நம் இருவருக்கும் ஒன்றே' என்று கூறிய உறுதியை நினைவில் கொண்டே பேசுகிறான் போலும். 'என் எதிரியான வாலியை ராமன் கொன்றான். அவனெதிரியான ராவணன்பேரில் நான் மாளாப்பகை கொண்டுள்ளேன்' என்பது தொக்கி நிற்கிறது. பகைவனென்ற முறையில் வாலியும் ராவணனும் ஒன்றுதான். இருவரும் 'தாரம் கவர்ந்தோன்'. இக்கருத்து மீண்டும் மீண்டும் ஒலிக்கிறது.

வருணனை வேண்டிக் கிடக்கும் ராமன் மூன்று நாள் தவம் புரிந்தும் பயனில்லை. ஆத்திரமும் கோபமும் ஒருங்கே தோன்ற 'கடலையே வற்றச் செய்கிறேன்' என்று உறுமுகிறான் ராமன். 'மரியாதையாகச் சொன்னால் கேட்பதில்லை. எங்கும் வலிமையையே மதிக்கிறார்கள். வெற்றி வேண்டுமானால் சத்தியமார்க்கம் பயன் தராது. போர் வலிமையே வழி' என்கிறான்.

ந ஸாம்னா சக்யதே கீர்த்திர் ந ஸாம்னா சக்யதே யச :
ப்ராப்தம் லக்ஷ்மண லோகேஸ்மின் ஜயோ வா ரணமூர்தனி. 3

வருணனுக்கு என்னைக் கண்டால் லக்ஷியமில்லையென்றுகூட நினைக்கிறான். ஏன் அப்படி என்பதற்கு ஒரு காரணமும் கற்பிக்கிறார் கம்பன். 'வில்லின் பெருமைக்கு இழுக்கு நேர்ந்துவிட்டது. ஏனென்றால் ராவணன் என் மனைவியைக் கவர்ந்து சென்றுவிட்டான். ஆகையால் வீரம் அற்ற மனிதன் என்றெண்ணி இகழ்ச்சி மேலிட்டுக் கருணை காட்டாதிருக்கிறான்' என்கிறானாம்.

*சுகன் வந்து தூது சொன்ன சம்பவம் இடைச் செருகலெனக் கருதப்படுகிறது.

**பார நீங்கிய சிலையினன் இராவணன் பறிப்ப**
**தார நீங்கிய தன்மைய ளுதலின் தகைசால்**
**வீர நீங்கிய மனிதனென்றிகழ்ச்சி மேல் விளைய**
**ஈர நீங்கிய தெறிகடலாமென விசைத்தான்.**

('தாரம் மற்ளெருருவன் கொள' என்ற கிஷ்கிந்தா காண்டப் பாடலின் எதிரொலி.)

கொடிய பாணங்களை வீசி இந்திரன் வஜ்ராயுதத்தை எறிவது போல் உலகையே கலக்கினன் என்கிருர் வால்மீகி. உடனே அலைகள் வரிசை வரிசையாய் எழுந்து காற்றேடு கலந்து பேரிரைச்சலை உண் டாக்குகின்றன. கலக்கிய கடலிலிருந்து சங்கு, முத்துச்சிப்பியெல்லாம் வெளிப்படுகின்றன.

இக்காட்சியை விவரிக்கும்போது வானமே நீல நிறம் நீக்கி செந் நிறமாகிவிட்டதென்கிருர் கம்பன். காலாக்கினியைப் போன்ற பாணங்கள் சுற்றிலும் விழுதலால் நீலநிற ஆடையைக் களைந்துவிட் டுப் பூநிறச் செம்மையான ஆடையைச் சுற்றிக்கொண்டே பெண் போலத் தோன்றினுளாம் பூதேவி. சரமாரியாய் விழுந்த பாணங்கள் வானளாவி நின்றதால் செந்நிற ஆடை போலவே தோன்றிற்ரும்.

**கால வான் கடுங்கணை சுற்றுங் கவ்வலால்**
**நீல வான் துகிலினை நீக்கிப் பூநிறக்**
**கோலவான் கழிநெடுங் கூறை சுற்றினுள்**
**போல மா நிலமகள் பொலிந்து தோன்றினுள்.**

நிலமகளுக்கு வரப்போகும் நற்சகுனத்தைக் குறிக்க 'கூறை சுற் றினுள்' என்கிருர் கவி. (ராவண வதம் ஆனவுடன் மகுடம் தாங்கு வான் ராமன். அது நிலமகளின் பாக்யம் அல்லவா? மேலும், சீதையே நிலமகள் என்ற சிலேடைக் கருத்தும் அடங்கியிருக்கிறது.)

வரப்போகும் கடும் போருக்கு முன்னேடியாக அமைந்த காட்சி இது. அத்புதரஸம் நிறைந்த இப்பகுதியை சாதாரணமாகப் படித் தால் 'கடல்மீது போர் தொடுப்பதா?' என்றுதான் தோன்றும். கவிகளின் வர்ணனை அத்புதரஸத்தை வளர்க்கத் தக்கபடியே அமைந் திருக்கிறது. முன்பு ஹனுமான் கடல் தாண்டிய சமயம் எத்தகைய உவமையெல்லாம் கண்டோம்!

சமுத்ர ராஜனுகிய வருணன் எதிரே தோன்றிச் சரணம் அடை கிருன். மன்னிப்புக்கோரி, பாலம் அமைக்குமாறு யுக்தி சொல்லு கிருன். வானரப்படையில் நளன் என்ற நிபுணன் இருப்பதையும் உணர்த்துகிருன்.

உற்சாகங் கொண்ட படையினர் ஒருங்கே உழைத்துப் பாலம் அமைக்க, எல்லோரும் கடல் கடந்து லங்கைப்புறம் வந்து சேருகின் றனர்.

படைகளை முறைப்படி அணிவகுத்து எல்லோரையும் ஜாக்ரதை யாய் இருக்கும்படி உத்தரவிடுகிறான் ராமன். பிரளய காலத்தில் தோன்றும் சகுனங்கள் சில தோன்றுகின்றன. யுத்தம் துவங்கப் போகிறது என்பதற்கு அறிகுறி.

பேரிரைச்சலும் ஜெயகோஷமும் செய்து கொண்டு மெள்ள முன்னேறுகின்றனர். வானரர் செய்யும் சப்தமே ராமனுக்கு மகிழ்ச்சி தருவதாயிருக்கிறது.

அழகிய பட்டணம் லங்கை. குன்றின்மேல் ஓங்கி வளர்ந்து வானை முட்டும் வண்ணம் அமைந்த நகரத்தைப் பார்த்து வியக்கிறான் ராமன். மனம் ஸீதைபால் செல்ல, பெருமூச்சு விட்டுக் கலங்கு கிறான். 'இங்கல்லவா அடைந்து கிடக்கிறாள் அவள்?' என்று புலம்பு கிறான் லக்ஷ்மணனிடம்.

மனதைத் தேற்றிக்கொண்டு லங்கையைக் கூர்ந்து கவனிக்கிறான். 'மலைமீதிருக்கும் நகரம், கோபுரங்களும் மாடங்களும் நிறைந்து நிற் கிறது. எங்கும் பூக்கள், செடி, கொடிகள். வெண் மேகங்கள் சூழ்ந்த வானமே விஷ்ணுவின் இருப்பிடமாகிய பாற்கடல் போலல்லவா தோன்றுகிறது' என்கிறான் ராமன்!

**விமானைர் பஹுபிர்லங்கா ஸங்கீர்ணா புவி ராஜதே**
**விஷ்ணோ: பதமிவாகாசம் சாதிதம் பாண்டுரைர்கனை: 4**

31

# மாயையோ ?

தூது சென்ற சுகன் நடுங்கிய வண்ணம் திரும்புகிறுன். அவனைப் பார்த்து நகைக்கிறுன் ராவணன். பயந்து கொண்டே பேசுகிறுன் சுகன். (இவன் தண்டிப்பான் என்ற பயம் வேறு) 'விராதன், கபந்தன், கரன் முதலியோரைக் கொன்றவன் வந்துவிட்டான். சுக்ரீவன் உதவியால் ஸீதை யிருக்குமிடம் நாடி வருகிறுன். கடல் கடந்துவிட்டான். ஆயிரக்கணக்கான வானரர்கள் மலைபோல் குவிந்துவிட்டார்கள். கோட்டையை நெருங்குவதற்குள் இரண்டில் ஒன்று செய்யவேண்டும்: ஸீதையை விடுவிக்கலாம் அல்லது கடும்போர் தொடங்கலாம்' என்று சுருக்கமாய்ச் சொல்லுகிறுன்.

ஸீதாம் வாஸ்மை ப்ரயச்சாசு ஸுயுத்தம் வா ப்ரதீயதாம் 1

அவனை எரித்து விடுவதுபோல் கனலெழ விழிக்கிறுன் ராவணன். ஒரு தூதன் அறிவு கூறும் அளவுக்கு வந்துவிட்டதா நிலை? 'உலகமே என்னை எதிர்த்து ஒருங்கே வந்தாலும் ஸீதையை விடமாட்டேன்' என்று ரோஷத்தோடு சொல்லுகிறுன்.

நைவ ஸீதாம் ப்ரயச்சாமி ஸர்வலோக பயாதபி 2

தனது பெருமையை மீண்டும் சொல்லிக் கொள்ளுகிறுன். (அடிக்கடி தனக்குத்தானே தைரியம் ஊட்டவேண்டிய நிலை வந்து விட்டது.) ஆனல், இருக்கை கொள்ளவில்லை. மீண்டும் சுகனை ஏவு கிறுன். ஸாரணன் என்ற ஒற்றனையும் அனுப்புகிறுன். 'இதென்ன விந்தை! இதுவரை ஒருவரும் செய்யாத செயல், கடலிலே பாலம் அமைத்துச் சேனையுடன் வந்துவிட்டானு ராமன்? எப்படிச் செய் தான்? வானரப் படையின் பலம் என்ன? நான் அறிய வேண்டும்' என்று கூறி அனுப்புகிறுன்.

இருவரும் வானரர் போல் வேடம் தரித்துச் செல்லுகின்றனர். ஆனால், உடனே கண்டு பிடித்துவிடுகிறான் விபீஷணன்! அவர்களை ராமனிடம் கொண்டு சேர்க்கிறான். உயிருக்கஞ்சி நிற்கும் ஒற்றர்கள் 'படைபலம் அறிய வந்தோம்' என்று சொல்லிவிடுகிறார்கள். ராமன் சிரிக்கிறான். (அடிக்கடி ஒற்றர்கள் வருவதிலிருந்தே எதிரி தைரிய மிழந்து நிற்கிறான் என்று ஊகிக்கிறான் போலும்.) 'எல்லாம் பார்த் துத் தெரிந்து கொண்டீர்களா? ஏதாவது பாக்கியிருந்தால் விபீஷணன் காட்டுவான்' என்கிறான். 'உங்கள் மனிதனே எங்கள் துணைவன்' என்ற ஏளனம் தொக்கி நிற்கிறது.

அத கிஞ்சித் அத்ருஷ்டம் வா பூயஸ்தத்த்ரஷ்டுமிச்சத :
விபீஷணோ வா கார்த்ஸ்ன்யேன பூயஸ்ஸந்தர் சயிஷ்யதி. 3

திருப்பியனுப்புவதற்கு முன் ஒரு சேதியும் சொல்லியனுப்பு கிறான் ராமன். 'எந்த வலிமையை நம்பி என் மனைவியைக் கவர்ந் தாயோ அதைக் காட்டத் தருணம் வந்துவிட்டது. நாளை காலை நகருக்குள் நுழைவோம். எனது கடுஞ்சினத்தை நாளை காண்பாய்' என்று ராவணனிடம் சொல்லச் சொல்லுகிறான். கவலையும் எளிமை யும் நீங்கி வலிமையும் வீரமும் தோன்றுவதைச் சிறிது சிறிதாய்க் காட்டுகிறார் கவி.

யத்பலம் ச ஸமாச்ரித்ய ஸீதாம் மே ஹ்ருதவானஸி
தத்தர்சய யதாகாமம் ஸஸைன்யஸ் ஸஹபாந்தவ : 4

ஒற்றர்கள் திரும்பிச் சென்று மீண்டும் வானரப் படையையும் ராமன் பெருமையையும் சொல்ல, ராவணன் மீண்டும் கோபம் காட்டுகிறான். 'எவன் என்னை வெல்ல நினைக்கிறான்?' என்று கர்ஜனை செய்கிறான். உடனே சுகஸாரணர்களை அழைத்துக்கொண்டு உயர்ந் ததோர் உப்பரிகையின் மீதேறிப் பார்க்கிறான். கண்ணுக்கெட்டிய வரை எங்கும் வானரசேனை!

படை பலத்தைப்பற்றிய விவரங்களெல்லாம் கேட்டுக் கொண்டே சிந்தனையில் ஆழ்ந்து நிற்கிறான் ராவணன். 'சுக்ரீவன் யாருடைய சொல்லுக்குக் கட்டுப்படுகிறான்?' என்று குறிப்பாகக் கேட்கிறான். அவனைப் பிரித்துவிட்டால் ராமனுக்கு வலிமை ஏது?

நளன், நீலன், ஜாம்பவான், ஹனுமான், அங்கதன் எல்லோரை யும் பற்றிச் சொல்லுகிறான் ஸாரணன். படையினரின் தொகை எண்ண முடியாது என்று சொல்லி, 'விபீஷணனும் அவனைச் சேர்ந்த மூன்று அரக்கர்களும் அருகில் நிற்க, சுக்ரீவன் போரில் உன்னைச் சந் திக்கக் காத்திருக்கிறான்' என்கிறான். ராவணன் கேள்விக்குப் பதில்! விபீஷணன் உடந்தையாய் நிற்பதையும் கூறிவிட்டான்.

விபீஷணேன ஸசிவை : ராக்ஷஸை : பரிவாரித :
ஸுக்ரீவோ வானரேந்த்ரஸ்த்வாம் யுத்தார்த்தமபி வர்த்ததே. 5

மேலே நின்றவண்ணம் நாலுபுறமும் பார்வையைச் செலுத்து கிறான் ராவணன். தொலைவில் ராமன், அருகே விபீஷணன்! இடது புறம் லக்ஷ்மணன், சுக்ரீவன் நிற்கின்றனர். எங்கும் ஜனத் திரள்.

பார்த்தவுடனே ராமனைக் கண்டு கொண்டான் ராவணன் என் கிறார் கம்பன். எப்படி? தன்னையறியாமல் அவனது உடலே 'இவனே ராமன்' என்று உணர்வித்ததாம்.

**ஏனையோனிவன் இராமனெனத்தன்**
**மேனியே யுரைக்கின்றது.**

பகைவனைக் கண்டதும் உணர்ந்து கொள்ளும் ஆற்றல். (பரந் தாமனைக் கண்டதும் அறிந்து கொண்டான் என்றும் கொள்ளலாம்.)

உணர்ச்சி நெஞ்சையழுத்துகிறது. சீற்றமும் பொங்கி எழுகிறது. கோபத்தை தூதர்கள் மேல் காட்டுகிறான் ராவணன் என்கிறார் வால் மீகி!

**கிஞ்சிதாவிக்ன ஹ்ருதயோ ஜாதக்ரோதஸ்ச ராவண:**
**பர்த்ஸயமாஸ தௌ வீரௌ கதாந்தே சுகஸாரணௌ 6**

'மன்னனுக்கு விரோதமான பேச்சைச் சொல்ல உங்களுக்கு என்ன துணிச்சல்! ஆயினும் நீங்கள் செய்த பணியை முன்னிட்டு உங்களைக்கொல்லாமல் விடுகிறேன்' என்கிறான். வெட்கித் தலைகுனிந்து வெளியே செல்லுகின்றனர். ஆனால், மறுபடி சார்தூலனை வரவழைத்து அவனுடன் ஒற்றர்களை வேவு பார்க்க அனுப்புகிறான். 'ராமனைப்பற்றிய முழுவிவரமும் அறிந்து வாருங்கள்' என்று உத்தர விடுகிறான்.

சார்தூலனும் திரும்பி வந்து ராமனது பெருமையைச் சொல் லத் துணிகிறான். 'உலகிலே அவனுக்கிணை எவருமில்லை. அவன் பெரு மையைச் சொல்ல வல்லாருமில்லை' என்கிறான். கேள்வியுற்றதைச் சொல்லுகிறான் போலும்; அல்லது பயந்துவிட்டானோ? மேலும் 'உன்னுடன் பிறந்த விபீஷணன் லங்கையை முற்றுகையிட்டு ராமனுக் குதவியாய் நிற்கிறான்' என்கிறான்.

உடனே ஒரு அவசரக் கூட்டம் போட்டுத் தன் மந்திரிகளைக் கலந்தாலோசிக்கிறான் ராவணன். அவர்கள் ஒன்றும் புதிதாய்ச் சொல்லவில்லை போலும். சபையைக் கலைத்துவிட்டுத் தனிமையில் தன் மாளிகைக்குச் செல்லுகிறான். ஒரு புதிய யோசனை தோன்று கிறது. வித்யுஜ்ஜிஹ்வனென்ற மந்திரவாதியை வரவழைத்து 'ஸீதையை மாயையால் மோசம் செய்வோம். ராமனது தலையைக் கையிலேந்தி என் அருகில் வந்து நில்' என்று கூறி ஸீதையிருக்கு மிடம் நோக்கி விரைந்து செல்லுகிறான்.

தலைகுனிந்து தரைநோக்கித் துயரத்திலே ஆழ்ந்திருக்கிறாள் ஸீதை. 'சமாதானமாய்ச் சொன்னேன். கேட்கவில்லை. பார், உன் வீரன் போரில் மடிந்துவிட்டான். உனது அகம்பாவமும் வேரோடு நாசமாயிற்று, இவ்வளவு துக்கம் நேர்ந்த பின்னாவது எனக்கு மனைவி ஆக இசைவாய், ஸீதே. உன் பிடிவாதத்தை விடு. அவனோ இறந்து விட்டான்' என்கிறான்.

**வ்யஸனேனுத் மனஸ்ஸீதே மம பார்யா பவிஷ்யஸி**
**விஸ்ருஜே மாம் மதிம் மூடேகிம் ம்ருதேன கரிஷ்யஸி.** 7

கணவன் இறந்துவிட்டானென்ற சேதி சொல்லி அதே மூச்சில் தன் காதலையும் சமர்ப்பிக்கிறான். அவ்வளவு அவசரம்! அநாதையாகி விட்ட நிலையில் உறுதிகுலையாதிருப்பது கடினம் என்ற தத்துவத்தைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறான். மேலும், இப்போது ஸீதை மனமிளகினால்கூடப் போதும். ராமனது படையை முறியடிப்பது கடினமென்றால், ஸீதையின் உறுதியைத் தகர்த்துவிட்டால்போதுமே, வெற்றி இவனுக்குத்தானே? படைகள் எத்தனை ஆயின் என்ன? கடல் கடந்து வந்துதான் என்ன பயன்?

எப்படி 'ராம வதம்' ஆயிற்று என்று விவரிக்கிறான். 'வழிநடந்த களைப்பிலே எல்லாரும் அயர்ந்து தூங்கிவிட்டார்கள். அப்போது என் வீரர்கள் புகுந்து முறியடித்து, ராமனது தலையை வெட்டி, விபீஷணனையும் சிறைப்படுத்திவிட்டார்கள்' என்கிறான். (தம்பிமேல் ஆத்திரம் தீரவில்லை).

போரைப் பற்றிய பல விவரம் கூறுகிறான். 'வானரர்கள் தவிடு பொடியாகிவிட்டார்கள். யானைகளைச் சிங்கங்கள் விரட்டுவதுபோல் அரக்கர் அவர்களை விரட்டியடித்துக் கடலில் கொண்டுபோய் வீழ்த்தினார்கள்' என்று சொல்லிக்கொண்டே போகிறான். தனது வெற்றியைக் கற்பனை செய்து ஸீதையிடம் சொல்லாமல் இனி யாரிடம் சொல்லப் போகிறான்?

மந்திரவாதி மாயத் தலையைக் கொண்டு வந்து காட்டுகிறான்' 'கைப்பற்றிய' வில்லையும் காட்டுகிறான். 'இனி சந்தேகமில்லை'யென்று நினைத்து ஸீதை புலம்புகிறாள். முதலில் கைகேயிதான் நினைவுக்கு வருகிறாள் 'இனி மனம் குளிர்ந்திருக்கலாம், கைகேயீ. நீ செய்த கலகத்தால் குடும்பமே அழிந்துவிட்டதே! ராமன் உனக்கென்ன தீங்கு செய்தான்? மரவுரி தந்து எங்களை விரட்டினாயே' என்று புலம்புகிறாள்.

**ஸகாமா பவ கைகேயி ஹதோயம் குலநந்தன ;**
**.............................................................................**
**யன்மயா சீ ரவஸனஸ்த்வயா ப்ரஸ்தாபிதோ வனம்** 8

'என்னையும் கொன்று தலையோடு தலையாக வைத்துவிடு' என்று வேண்டுகிறாள் ராவணனை. மாயத் தலையையும் வில்லையும் மாறி மாறிப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறாள். (இது வீரபத்னிக்குரிய

லக்ஷணம். வாலியை அம்புகொண்டு வீழ்த்திய ராமனுக்கு இதே வேண்டுகோள் விடுத்தாள் தாரை), இச்சமயம் தூதன் ஒருவன் விரைந்து வந்து ப்ரஹஸ்தன் முதலிய மந்திரிகள் அவசரமாய்ச் சந்திக்கக் காத்திருக்கிருர்கள் என்று சேதி சொல்ல ராவணன் அசோக வனத்தை விட்டுச் செல்லுகிருன். ஏதோ விபரீதம் நேர்ந்துவிட்டது போலும். அவன் சென்றவுடன் மாயத் தலையும் மாயமாய் மறைந்து விடுகிறது.

தலை மறைந்து போன போதிலும், மதிகுலைந்து மனமொடுங்கி நிற்கும் ஸீதைக்கு கலவரமே அதிகரிக்கிறது. மாயமான் விளைவித்த தீமை மறக்குமா? இதைக் கண்ட ஸரமா அவளையணுகிச் சமாதானம் சொல்லுகிருள். (ஸரமா விபீஷணனின் மனைவி. அவன் அங்கு சென்றதும் இவள் இங்கு நெருங்கிச் கொள்ளுகிருள். த்ரிஜடையின் தாய் என்ற முறையிலும் நட்புக்குரியவள்.)

'நீ கவலைப்படாதே. நான் மறைந்திருந்து எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதானிருக்கிறேன். ராவணன் ஏன் அவசரமாகப் போய்விட்டான் என்பதும் தெரியும்!' என்கிருள். போரில் ஏதோ பிரதிகூலமான செய்தி கிடைத்திருக்கிறதென்று குறிப்பிடுகிருள்.

ராமனை உறங்கிக் கொண்டிருந்தபோது கொன்றதாகச் சொன்ஞனல்லவா? 'அது ஒருகாலும் இயலாது' என்கிருள் ஸரமா. ராவணன் காட்டியதெல்லாம் மாயை என்று உறுதிகூறி 'உனக்கு விரைவிலே மங்களம் உண்டாகும்' என்றும் சொல்லுகிருள். ஏன்? 'ராம லக்ஷ்மணர்கள் பெரும் படையோடு கோட்டைக்கு வெளியே நிற்கின்றனர். நானே பார்த்தேன். அதனுல்தான் அவசரமாக மந்திரிகளையழைத்து ஆலோசனை செய்கிருன் ராவணன்' என்கிருள். வெளியே படைகளின் ஆரவாரம் கேட்கிறது.

ராமனுக்குத் தீங்கு நேர்ந்திருந்தால் ஆரவாரம் கேட்குமா? 'விரைவிலே நீ உன்நாதனையடைவாய். உனது ஒற்றைப் பின்னலுக்கு ஒரு விடிவு காலம் வரும்.' சட்டையுரித்த பாம்புபோல் விடுதலை பெறுவாய் என்று வாழ்த்துகிருள்.

**மோக்ஷ்யஸே சோகஜம் வாரி நிர்மோகமிவ பன்னகி** 9

ராமனைக் கண்டதும் துயரக் கண்ணீர் தோன்றும் என்கிருள். துக்கம் பீறிட்டுக்கொண்டு வருமல்லவா? ஆனுல் மழைபெய்து வரண்ட பூமியைத் தழைக்கச் செய்வதுபோல் ராமன் உன்னை மகிழ்விப்பான் என்கிருள் ஸரமா.

சற்று மனம் தெளிந்த ஸீதை, 'நீ உண்மையில் எனக்கு நன்மை செய்ய விரும்பினுல் ராவணன் என்ன செய்து கொண்டிருக்கிருன் என்று அறிந்து வா. அடிக்கடி என்னை மிரட்டுகிருன். என் மனம்

நிலையில் இல்லை. அவன் கருத்துதான் என்னவென்று பார்த்து வா' என்கிறாள். இதமாகப் பேசியவளை உளவறிய ஏவுகிறாள்!

திரும்பி வந்து சேதி சொல்லுகிறாள் ஸரமா. அவளைக் கண்டதும் தனது ஆசனத்தை அவளுக்களித்து ஆவலோடு அருகில் நிற்கிறாள் ஸீதை. 'உட்கார்ந்து கொண்டு விவரமாகச் சொல்' என்கிறாள். மனதின் அங்கலாய்ப்பைக் கண்முன் காட்டுகிறார் கவி.

பரிஷ்வஜ்ய சஸஸ் நிக்தம் ததௌச ஸவயமாஸனம்
இஹாஸீனு ஸுகம் ஸர்வம் ஆக்யாஹி மமதத்வத: 10

புதியதோர் சேதி சொல்லுகிறாள் ஸரமா. அது பெண்களுக்கே உரித்தான பாணியில் அமைகிறது.

'ராவணன் தனது தாய்* சொல்லை ஏற்கவில்லை வயதில் முதிர்ந்த மந்திரி பேச்சையும் கேட்கவில்லை. உன்னைத் திருப்பித் தரும்படி எல்லோரும் சொல்லுகின்றனர். ஆனல் பணக்காரன் பணத்தைவிட விரும்பாததுபோல் உயிருள்ளவரை உன்னைவிடமாட்டேனென்கிறான். முடிவு காலம் வந்து விட்டது. அதனல்தான் இப்படி ஆகிவிட்டான்' என்கிறாள்.

ஜனன்யா ராக்ஷஸேந்த்ரோவை த்வன்
மோக்ஷார்த்தம் ப்ருஹத்வச:
.................................................................
.................................................................
நோத்ஸஹத்யம்ருதோ மோக்தும் யத்தே த்வாமிதி மைதிலீ 11

'ராமன் ராவணனைப் போரில் கொன்று உன்னை மீட்டுச் செல்வார்' என்று உறுதி கூறி முடிக்கிறாள் ஸரமா. த்ரிஜடையின் குரல் இதிலும் ஒலிக்கிறது.

---

* கைகஸியென்னும் பெயர் கொண்டவள். அவள் விச்ரவஸ்ஸை மணந்து அவரிடம் பெற்ற மகன் ராவணன். அவள் தூண்டுதலின் பேரில் தான் மந்திரமும் தவ வலிமையும் கிடைத்தது.

# 32

## 'தேவியை விடுக'

போரை அறிவிக்க பேரிகை முழங்குகிறது. மந்திரிகளை அழைத்துப் பேசுகிறான் ராவணன். எல்லோரையும் உற்று நோக்கியபின், 'ராமன் கடல் கடந்துவிட்டான், அணை கட்டிவிட்டான் என்று நீங்கள் சொல்லியாய்விட்டது. நீங்கள் பராக்ரமசாலிகள் என்பதை நான் அறிவேன்! ராமனது வீரத்தைப் புகழ்ந்து ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளுகிறீர்களே!' என்று இடித்துக் காட்டுகிறான்.

> **பவதஸ் சாப்யஹம் வேத்மி யுத்தே ஸத்ய பராக்ரமான்**
> **தூஷ்ணீகான் ஈக்ஷதோ அன்யோன்யம் விதித்வா ராமவிக்ரமம்** 1

மால்யவான் எழுந்து நிற்கிறான். அவன் ராவணனுக்குத் தாய் வழிப்பாட்டன். ராஜதர்மம் எடுத்துரைத்து, 'ராமனுடன் தோழமை கொள்வதே சிறந்தது. எவள் பொருட்டுப் பகைமை மூண்டதோ அவளைத் தந்துவிடு. தேவர்களும் கந்தர்வர்களும் பிற இனத்தவரும் அவனது வெற்றியை விரும்புகின்றனர். ஆதலால் அவனுடன் விரோதம் வேண்டாம்' என்கிறான்.

> **தன்மஹ்யம் ரோசதே ஸந்தி: ஸஹராமேண ராவண**
> **யதர்த்த மபியுக்தா: ஸ்ம ஸீதா தஸ்மைப் ப்ரதீயதாம்** 2

இதைச் சொல்லியபின், ராவணன் மனதையறிய விரும்பி வாளாவிருக்கிறான். அவனோ கோபத்தால் புருவத்தை நெரித்துப் பேசுகிறான். இந்தப் பேச்சு விபீஷணனோடு ஒழிந்தது என்று நினைத்தான்; மீண்டும் எழுகிறதே! 'எதிரி பக்ஷம் பேசுகிறாய். இத்தகைய பேச்சை நான் கேட்டதேயில்லை. நீ எதை வைத்துக் கொண்டு ராமனை சமர்த்தனென்று நினைக்கிறாய்? அவன் எளியவன், ஒருத்தன். தகப்பனே விரட்டியபின் அவன் அடைக்கலம் புகுந்த நண்பனோ

வானரன்! அரக்கர் குலத் தலைவன் நான். தேவர்களும் எனக்கஞ்சு கின்றனர். எல்லாம் நிறைந்த என்னை ஈனனாய் மதிக்கிறாயே?' என்கிறான்

மானுஷம் க்ருபணம் ராமம் ஏகம் சாகாம்ருகாச்ரயம்
ஸமர்த்தம் மன்யஸே கேன த்யக்தம் பித்ரரவனாலயம்
ரக்ஷஸாம் ஈச்வரம் மாம்ச தேவதானாம் பயங்கரம்
ஹீனம்மாம் மன்யஸே கேன ஹ்யஹீனம் ஸர்வ விக்ரமை; 3

'தாமரையிலிருந்து பெயர்த்தெடுத்த லக்ஷ்மியைப் போல் கொண்டு வந்திருக்கிறேன் ஸீதையை. இன்று பயந்துபோய்த் திருப் பியா கொடுப்பேன் அவளை?' என்று ரோஷத்தோடு கேட்கிறான். ராமனுடன் தோழமை கொள்ளச் சொன்னானல்லவா? அதுவும் பயத் தின் அறிகுறியென்று நினைக்கிறான் ராவணன். 'என்னை இரண்டாக ஒடிக்கலாம். ஆனால் வளைந்து நான் ஒருவருக்கும் வணங்கமாட்டேன். இது எனது இயற்கையான குறை. சுபாவத்தை மாற்ற முடியாது' என்று ஆவேசமாய்ச் சொல்லி முடிக்கிறான் வீரன்.

த்விதா பஜ்யேயமபி ஏவம் ந நமேயம்து கஸ்யசித்
ஏஷமே ஸஹஜோ தோஷ ஸ்வபாவோ துரதிக்ரம: 4

எதிரியின் பலாபலம். ஸீதையின் மேல் தனக்கு உள்ள காதல், அதனால் ஏற்பட்ட உறுதி, எல்லாவற்றையும் ஒரே மூச்சில் சொல்லி விட்டான். கருத்தில் எப்போதும் தெளிமை.

'ராமன் கடல் கடந்து வந்தது தெரியும். ஆனால் அவன் உயி ரோடு திரும்பப் போவதில்லை' என்று சபதம் செய்கிறான். வயது முதிர்ந்த மால்யவான் வெட்கித் தலை குனிந்து பேசாமல் வெளியேறு கிறான். எஞ்சியிருப்போர் ஜயகோஷம் செய்கின்றனர். படைத் தலைவருக்கு உத்தரவிட்டுப் பெருமிதத்தோடு காரியம் கைகூடிவிட் டது' என்றெண்ணித் தன் இருப்பிடம் செல்லுகிறான் ராவணன்.

இங்கு ராமனது முகாமிலும் சபை கூடியிருக்கிறது. எல்லோரும் லங்கையைப் பார்த்தாகிவிட்டது. ஆயினும் உளவு தெரிந்த விபீஷ ணன் பேசுகிறான். 'என்னுடன் வந்த தோழர்களான அனலன் முதலி யோர் ஊருக்குள் சென்று கண்டுவந்த விஷயம் சொல்லுகிறேன், கேளுங்கள். தீயவனான ராவணன் நான்கு புறமும் கோட்டைக் கதவு களைக் காக்கப் பிரகஸ்தன் முதலியோரை நியமித்து வடக்கு வாயிலைத் தானே நின்று காக்கிறான்' என்று கூறி விவரங்கள் சொல்லுகிறான். ராவணனைத் தீயவன் 'துராத்மா' என்று குறிப்பிடுகிறான் இரு முறை. தனது நற்குணம் வெளிப்படும் என்ற எண்ணமோ?

அவனது எண்ணம் வீண்போகவில்லையென்று காட்டுவதுபோல் அமைகிறது ராமன் பேச்சு. படைத் தலைவருக்கு ஏவல் கூறி, 'நானும் லக்ஷ்மணனும் எனது தோழன் விபீஷணனும் ஒன்றாய் நின்று போர் புரிவோம்' என்கிறான்.

அருகிலிருக்கும் ஸுவேல மலை மீதேறிப் பார்க்கிறான். லங்கை முழுதும் தோற்றுகிறது. 'அவன் அழிந்து போவதற்கே என் மனைவியைத் தூக்கி வந்தான். தருமமும் நீதியும் அறியாதவன். அவன் ஒருவனால் குலமே அழியப் போகிறது' என்று உறக்கப் பேசியவண்ணம் நாலு புறமும் பார்வையைச் செலுத்துகிறான் ராமன்.

இதற்கிடையில் சுக்ரீவனுக்கொரு எண்ணம் உதிக்கிறது. தனியே புறப்பட்டுச் சென்று எதிர் மாளிகையின் உப்பரிகை மீது நிற்கும் ராவணனைத் தாக்குகிறான். 'நான் ராமதாஸன். அவனது நண்பன்' என்றுகூறி மல்லுக்கழைக்கிறான். பாய்ந்து அவன் மகுடத்தையும் வீழ்த்துகிறான். ஒரு அறை கொடுத்து அவனைக் கீழே தள்ளுகிறான் ராவணன்; 'சுக்ரீவா உன் கழுத்தை, முறித்து விடுவேன்' என்று எச்சரிக்கிறான். (க்ரீவ்' என்றால் கழுத்து அதைச் சிலேடையாய் உபயோகிக்கிறார் வால்மீகி. 'என்னைப் பார்க்காத வரையில்தான் நீ ஸுக்ரீவன், அழகிய கழுத்தையுடையவன். இனி நீ 'ஹீனக்ரீவன்' அதாவது கழுத்தை இழந்தவன் ஆகிவிடுவாய்' என்கிறானும்!

**ஸுக்ரீவஸத்வம் பரோக்ஷம்மே ஹீனக்ரீவோ பவிஷ்யஸி** 5

இருவரும் சிறிது நேரம் உணவுக்குச் சண்டையிடும் பூனைகள் போலச் சீறுகின்றனர். ராவணனது மகுடத்தில் பதித்திருந்த சில மணிகளைப் பறித்துச் செல்லுகிறான் ஸுக்ரீவன்.

அவனைக் காணாது தவிக்கும் நண்பர்கள் அன்போடு வரவேற்று மகிழ்கின்றனர். 'என்னிடம் சொல்லாமல் போகலாமா? தீரச் செயல் செய்துவிட்டாய்! ஆனால் இனிச் செய்யாதே. உனக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால், பிறகு எனக்கு என்ன வேண்டும்? ஸீதையால் என்ன, தம்பியரால் என்ன, என் உயிரே போனால் என்ன? நீ திரும்பி வராவிட்டால் விபீஷணனுக்கிங்கு முடி சூட்டி, அயோத்தியில் பரதனை அரசனாக்கி என் உயிரைப் போக்கிக் கொள்வது என்று முடிவு செய்து விட்டேன்' என்கிறான் ராமன்.

**த்வயி கிஞ்சித் ஸமாபன்னே கிம் கார்யம் ஸீதயா மம**
..................................................................
..................................................................
**பரதே ராஜ்யமாவேச்ய த்யக்ஷ்யே தேஹம் மஹாபல** 6

சுக்ரீவனுக்கும் திருப்தி ஆகிவிட்டது. இத்தகைய நட்பின் உறுதியையும் சிறிது புகழ்ச்சியையும் கேட்கவே தீரச் செயலில் ஈடுபட்டான் போலும்! விபீஷணனைத் தோழன் என்று குறிப்பிட்டால் இவன் சும்மா இருப்பானா?

ஆனால், 'யோசனையில்லாமலா காரியம் செய்தேன்?' என்று கேட்கும் வண்ணம் பேசுகிறான் சுக்ரீவன். 'ராமா, உன் தாரம் கவர்ந்தானைக் கண்டபின் எங்ஙனம் பொறுப்பேன்?' என்கிறான்.

**தவ பார்யாபஹர்தாரம் த்ருஷ்ட்வா ராகவ ராவணம்**
**மர்ஷயாமி கதம் வீர ஜானன் பௌருஷம் ஆத்மன:** 7

'தாரம் கவர்ந்தான்' என்றசொல் கிஷ்கிந்தையில் நடந்ததனைத்தையும் நினைவுக்குக் கொண்டு வரும் சக்தி வாய்ந்தது.*

இக்கருத்தைச் சற்று விவரித்துரைக்கிறார் கம்பன். 'எனது பகையைத் தீர்த்து எனக்கு உயிர் தந்தாய், அரசும் தந்தாய். ஆனால், பதிலுக்கு நான் உனது பகையைத் தீர்க்காமல் நீயே முடிக்க வேண்டிய காரியமாய் வைத்துவிட்டேன். இன்னும் உயிரோடிருக்கிறேனே!' என்கிறானும் சுக்ரீவன்.

**என்பகை தீர்த்தென்னு வியரசொடு மெனக்குத்தந்த**
**உன்பகை யுனக்குத் தந்தேனுயிர் சுமந்துழலா நின்றேன்**

ராமன் அவனை மெச்சி, மேலே நடக்க வேண்டிய காரியங்களை கவனிக்கிறான். படைகளைத் தத்தம் இடத்தில் இருத்திவிட்டு மீண்டும் யோசனையில் ஈடுபட்டு, ஒரு தூதனையனுப்பி ராவணனுக்கு இறுதி மொழிகூற நிச்சயிக்கிறான். விபீஷணனும் இதை ஆமோதிக்கிறான். அங்கதன் தூது செல்கிறான்.

இந்நிலையில் தூது எதற்கு? இருபுறமும் படையினர் போருக்குத் துடித்து நிற்கும் சமயம் சமரஸப் பேச்சு ஏற்குமா? ராஜதர்மத்தை ஒட்டியே முடிவு செய்தான் ராமன் என்கிறார் வால்மீகி. ஒருவேளை, ஸுவேலமலை மீதேறிப் பார்த்தபின் 'வெற்றி நமதே'யென்ற உறுதி தளர்ந்துவிட்டதோ? அல்லது, வெற்றியே பெறினும் மனைவியை உயிருடன் காண்பதரிது என்ற ஏக்கமோ (போரில் தோல்வி நேரும் போல் கண்டால், ராவணன் ஸீதையைக் கொன்றுவிடலாமல்லவா?)

எனினும் இந்நிலை தூதனுப்புவதற்குகந்ததல்ல என்றுதான் தோன்றுகிறது. கம்பனும் இப்படியே கருதுகிறார் போலும். லக்ஷ்மணன் வாயிலாக வெளியிடுகிறார். 'தேவியைச் சிறையில் வைத்தான்' என்று நினைவுறுத்துகிறான் வீரன். 'நின்னையும் துயரில் வைத்தான்' என்று சொல்லி, 'அன்னவன் தனக்குயிர் அருளுவாயா?' என்று கேட்கிறான். அப்படியானால் 'இலங்கை மன்னவன் நீயே என்று வந்தடைந்தவனுக்குச் சொன்ன சொல் என்ன ஆகும்?' என்கிறான். 'சிறந்தது போரே' என்று முடிக்கிறான்.

அங்கதனிடம் சொல்லியனுப்பும் சேதியை ஆராய்ந்து பார்த்தால் இதற்கெல்லாம் பதில் கிடைக்கும். 'அறிவிழந்த அரக்கனே!

---

* **'ஏகம் துக்கம் ஸுகம் சநௌ' என்று ராமன் சொன்னதும், 'வானிடை மண்ணில் நின்னைச் செற்றார் எம்மைச் செற்றார்' என்ற சபதமும், 'உன் தாரம் கவர்ந்தானை இன்று கொல்வேன்' என்ற உறுதியும் அதை நிறைவேற்றிய செயலும் கண்முன் நிற்கின்றன.**

உலகோருக்கெல்லாம் நீ இழைத்த தீமையின் பலன் எதிரே நிற்கிறது. சிவனருளால் கிடைத்த வரமெல்லாம் உன்னுள் ஊட்டிய கர்வம் தாரமிழந்த ஒருவனுல் அழிவுபடப் போகிறது. மைதிலியைக்கொண்டு சேர்த்து என்னைத் தஞ்சமென்றடையாவிட்டால் இவ்வுலகையே அரக்கர் அற்றதாய் ஆக்கிவிடுவேன். தருமம் தெரிந்த விபீஷணன் இங்கு வந்து சேர்ந்தான். அவனே லங்கைக்கு அதிபன் ஆவான். மூடர்களைத் துணையாய்க் கொண்ட உனக்கு வீர்யமிருந்தால் எதிரில் நின்று போர் செய். எனது பாணங்கள் உன் புலன்களை முற்றிலும் அடக்கிவிடும். உயிர் போன பிறகுதான் உனது மாசு நீங்கும்!' என்று சொல்லியனுப்புகிருன். கண்ணெதிரே தோன்றினுல் உயிரோடு திரும்ப முடியாது என்றும் எச்சரிக்கிருன்.

ப்ரஷ்டசரீக கதைச்வர்ய முமூர்ஷோ நஷ்டசேதன
..............................................................
..............................................................
மம சக்ஷுஷ்பதம் ப்ராப்ய நஜீவன் ப்ரதியாஸ்யஸி 8

விபீஷணனை அரசனுக்குவேன் என்று சொல்லி எதிரிகளிடையே ஒற்றுமையின்மையைக் குறிக்கிருன். தஞ்சமடைந்தால் உயிர் பிழைக்கலாம் என்று சொல்லி அவனைச் சிறுமைப்படுத்துகிருன். தாரமிழந்தவன் ரோஷம் அடைந்தவனுகிவிட்டான் என்பதையும் தெரிவிக்கிருன். ராஜ தர்மத்தை ஒட்டி ஒரு தூதனுப்புவதாகத் தோன்றிய போதிலும் ராவணனுக்கு ஒரு குட்டு வைப்பதுபோல் அமைகிறது தூது. இதைச் சொல்ல அங்கதனை அனுப்புவதும் ஆழ்ந்த கருத்தோடு தான். நட்புக்கொண்ட சுக்ரீவன் மட்டுமல்ல, உயிரைப் பறித்த வாலியின் மகனும் தன்னிடம் விசுவாஸத்தோடிருக்கிருன் என்பதை ராவணனுக்கு உணர்த்த விரும்புகிருன் போலும் ராமன்.

அங்கு சென்று அப்படியே சொல்லுகிருன் அங்கதன். விபீஷணன் அரசனுவான் என்றும் தெரிவிக்கிருன். ராவணனே அவனிடம் நேராகப் பேசாமல் 'இந்த முட்டாளைக் கொண்டுபோய்க் கொல்லுங்கள்' என்று தனது ஆட்களுக்கு உத்தரவிடுகிருன். முன்பு ஹனுமானுக்குச் செய்த அதே மரியாதை!

'என்னை இரண்டாய் வெட்டினுலும் நான் ஸீதையை விடமாட்டேன்' என்று ஆணையிட்டவன் அவளையும் விட்டுப்பின் தஞ்சமும் அடையமாட்டானே? தான் இறந்தபின் துரோகியான தம்பிக்கு ராஜ்யம் கிடைத்துவிடுமே என்ரு இப்போது கவலை? இந்த தூதுக்கு அர்த்தமேயில்லையென்று நினைக்கிருன் போலும்.

ஆனுல் கம்பன் ஒரு சம்பாஷணையைக் கற்பிக்கிருர். (முன்பு ஹனுமான் ராவணனைச் சந்தித்த நிலையிலும் வால்மீகியின் கதையில் பேச்சு இல்லை. கம்பன் கதையில் வாக்குவாதம் இருந்தது). அங்கதன் சொன்ன சேதியைக் கேட்டு ராவணன் ராமனைப் பரிகசித்துப் பேசுகிருனும். தொடர்ந்து, பிளவுபடுத்துமாறு ஒரு யுக்தி செய்கிருன்.

அங்கதனைப் பிரித்துத் தன் வசமாக்கிக் கொள்ளப் பார்க்கிறான். எப்படி? ராமன் கையாண்ட முறையேதான்! 'நீ இங்கேயே இரு. உன் தந்தையைக் கொன்றவன் பின்னால் கைகும்பிட்டு வாழ்ந்துவிட்டாய். அந்தப் பழிச்சொல்லும் தீரும். எனக்கும் ஒரு மகன் கிடைத்தது போலாகும். (உன்னுதவியால்) ஸீதையையும் அடைவேன்' என்கிறான். அவனுக்கு நம்பிக்கை உண்டாகும் பொருட்டு 'எனக்கு செய்தற்கரியது ஒன்றுமில்லை' என்று சொல்லுகிறான்.

**தாதையைக் கொன்றான் பின்னே தலை சுமந்திருகை நாற்றிப்**
**பேதைய னென்ன வாழ்ந்தா னென்பதோர் பிழையுந்**
**தீர்ப்பாய்**
**சீதையைப் பெற்றேனுன்னைச் சிறுவனுமாகப் பெற்றேன்**
**ஏதெனக் கரியதென்றான் இறுதியினெல்லை கண்டான்**

(முதலில் ஸீதையைக் கண்டபோதும் 'இராவணற்கரிது என்? என்று பெருமை பேசினான்).

இங்கு ராவணனை 'இறுதியின் எல்லை கண்டான்' என்று குறிக்கிறார் கம்பன். 'கால சோதித :' என்ற பதத்தின் தமிழாக்கம் அழகாயிருக்கிறது.

அரிது ஒன்றுமில்லை என்பதை விளக்கிக் கூறுகிறான். 'அந்த மனிதர்கள் இன்றோ, நாளைக்கோ அழிந்து போவர். சந்தேகமேயில்லை. உன் அரசை உனக்கே தந்து மன்னவனென மகுடம் சூட்டுவேன்' என்கிறான். 'தந்தைக்குப் பிறகு மகன்' என்ற முறையை மாற்றித் தம்பிக்கு அரசு தந்த ராமனது தீர்ப்பையும் மாற்றுவேன் என்ற கருத்து தொக்கி நிற்கிறது.

**அந்நர ரின்று நாளை யழிவதற் கையமில்லை**
**உன்னர சுனக்குத் தந்தேன் ஆளுதி ஊழிக்காலம்**
**பொன்னரி சுமந்த பீடத்திமையவர் போற்றி செய்ய**
**மன்னவனாக யானே சூட்டுவன் மகுடம் என்றான்**

அங்கதன் இதைக் கேட்டுச் சிரிக்கிறான். 'உங்களுக்கெல்லாம் முடிவு காலம் நெருங்கிவிட்டதென்று தெரிந்துதான் உன் தம்பி எங்களிடம் வந்துசேர்ந்துவிட்டான்' என்கிறான். கடைசியாக 'தேவியை விடு, இல்லையேல் ஆவியைவிடு' என்று ராமன் சொன்ன சேதியை அழகாய் உரைக்கிறான்.

**தேவியை விடுக அன்றேல் செருக்களத் தெதிர்ந்து தன்னின்**
**ஆவியை விடுக என்றான் அருளினம் விடுகிலாதான்**

ராமனை 'இன்னமும் அருள் விடாதவன்' என்று குறிப்பிட்டுத் தன் தலைவன் பெருமையை உணர்த்துகிறான்.

'ஆவியை,' 'தேவியை' என்று சொற்கள் வாலியின் இறுதிப் பேச்சை நினைவுறுத்துகின்றன. 'ஆவியை, அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்த பின்னர் திகைத்தனை போலும் செய்கை' என்று ராமனை ஏசினான் அம்பு பட்ட வாலி. அதைக் கேட்டு நின்ற மகன் மனதில் அச்சொற்கள் பதிந்து நிற்கின்றன என்று ஸூக்ஷ்மமாய்க் காட்டுவது போல் அமைந்திருக்கிறது இப்பாடல்.

# 33

## ‘இன்று போய் நாளை வா’

அங்கதன் திரும்பி வந்துவிட்டான். இனி, போர் நடந்தே தீரும் என்ற நிலை வந்துவிட்டது. துயரத்தில் ஏங்கியிருக்கும் ஸீதையை மனதில் கொண்டு போரைத் துவக்கு கிறான் ராமன். உறுதியுடன் போர் புரிய ஒரு லக்ஷியம் வேண்டும் அல்லவா?

‘சோகத்தில் ஆழ்ந்து, மெலிந்து, வாடி, வெறும் தரையில் படுத்துக் கிடக்கிறாள் என் பொருட்டு ஸீதை’ என்று கூறிப் படை யினரை ஊக்கப்படுத்துகிறான்.

> **அத்ர ஸாம்ருகசாபாக்ஷீ மத்க்ருதே ஜனகாத்மஜா**
> **பீட்யதே சோக ஸந்தப்தா க்ருசா ஸ்தண்டில சாயினீ** 1

இதைக்கேட்டு வானரர்கள் சிங்கநாதம் செய்கிறார்கள். ‘லங் கையை அழிப்போம். கல்லைக் கொண்டோ, கை வலிமைகொண்டோ, பிளந்தே தீருவோம்’ என்று ஆரவாரம் செய்துகொண்டே முன்னேறு கிறது சேனை. கோட்டையின் நான்கு வாயில்களையும் முற்றுகையிடத் தலைவர்களை ஏவி வடக்கு வாயிலைத் தாக்கத் தானே செல்லுகிறான் ராமன்.

எதிரிகளை நோக்கி வெளிப்படுகின்றனர் அரக்கர்.

கவசம் அணிந்த வீரரும் தேர் பூட்டி வரும் தலைவரும் கூட்டம் கூட்டமாய் வர அவர்களை எதிர்த்துப் போர் புரிகின்றனர் வானரர். ஆங்காங்கு மல்யுத்தம் நடக்கிறது. அங்கதனை எதிர்த்துச் சண்டை யிடுகிறான் இந்த்ரஜித்.

சூரியன் மறைந்த பின்னும் போர் முடியாமல் தொடர்ந்து இரவிலும் நடக்கிறது. காரிருளிலும், ‘நீ அரக்கன்’ ‘நீ வானரன்’

என்று குரல் கொடுத்தவண்ணம் 'கொல்லு,' 'எங்கே ஓடுகிறாய்?', 'தோலை உரி' என்று ரோஷச் சொற்களுக்கிடையே பரஸ்பரம் தாக்குகின்றனர். அவர்களது குரல்களில் எழும் பேரிரைச்சல் த்ரிகூட மலையில் எதிரொலி செய்து 'மலையே பேசுகிறதோ?' என்று வியக்கச் செய்கிறது. ராமனது பாணங்கள் மின் மினிப் பூச்சிகள் போல எங்கும் பறக்கின்றன.

இந்த்ரஜித்துடன் போர் செய்யும் அங்கதன் அவனது தேரை ஒடித்துக் குதிரைகளைக் கொன்றுவிடுகிறான். அவன் மறைந்து சென்றதும் வானரர்கள் வெற்றி முழக்கம் செய்திருக்கின்றனர். ஆனால் திடீரென்று எங்கிருந்தோ அம்புகள் வந்து விழுகின்றன! மாயையால் ராமனையும் லக்ஷ்மணனையும் கட்டிப் போடுகிறான் ராவணன் மைந்தன்.

அம்பு வரும் திசையையும் இந்த்ரஜித்தின் இருப்பிடத்தையும் அறிந்து வருமாறு அங்கதன், நீலன் முதலியோர் சென்றும் பயனில்லை. மேலும் மேலும் விழுகின்ற விஷம் தோய்ந்த அம்புகளின் விஷத்தால் மூர்ச்சையுற்று விழுகின்றனர் ராமனும் தம்பியும். ரத்தம் கசியும் உடலில் அங்குல இடைவெளிகூட இல்லாமல் அம்பு தைத்துக் கிடக்கிறது. மேலே பறக்கும் கொடி கயிறு அறுபட்டுக் கீழே விழுவதுபோல் படபடக்கின்றனர் என்கிறார் வால்மீகி. துயரத்தில் ஆழ்ந்து எல்லோரும் சூழ்ந்து நிற்கின்றனர்.

எதிர்ப்புறம் தனது வீரரை உற்சாகமூட்டிப் பெருமை பேசுகிறான் இந்த்ரஜித். 'கரதூஷணர்களைக் கொன்றவர்கள் அழிந்தார்கள். இனி, தேவர்களே வந்தாலும் இவர்களை விடுவிக்க முடியாது. ஒரு ஜாம நேரமும் உறக்கமின்றித் தவிக்கும் என் தந்தையின் எதிரியை வீழ்த்திவிட்டேன். பெருக்கெடுத்த ஆறு போல் இலங்கையைச்சுற்றிய துயரம் தீர்ந்தது' என்கிறான்.

> **யத்க்ருதே சிந்தயானஸ்ய சோகார்தஸ்ய பிதுர்மம**
> ....................................................................
> ....................................................................
> **ஸோயம் முலஹரோனர்த்த:ஸர்வேஷாம் நிஹதோ மயா** 2

அசைவற்றிருக்கிற ராமனைப் பார்த்து அவன் இறந்ததாகக் கருதி ஆரவாரம் செய்கின்றனர் அரக்கர். நேரே சென்று தந்தையை வணங்கிச் செய்தி சொல்லுகிறான் இளைஞன். அரியாசனத்தை விட்டெழுந்து மகனை அணைத்துக் கொள்ளுகிறான் ராவணன். உச்சிமுகந்து விவரம் கேட்கிறான் 'நாக பாசத்தால் கட்டிவிட்டேன். அசைவற்றுக் கிடக்கின்றனர்' என்கிறான் இந்த்ரஜித். ('கொன்று விட்டேன்' என்று சொல்லாதது அளந்து பேசும் அறிவைக் குறிக்கிறது).

ராவணனுக்கு ஒரு எண்ணம் உதிக்கிறது. ஸீதையைச் சுற்றி நிற்கும் அரக்கியரை வரவழைக்கிறான். 'ராமலக்ஷ்மணர் மடிந்தனர்

என்று அறிவியுங்கள். என் மகன் கையால் மாண்டனர். புஷ்பக விமானத்தில் ஏற்றிச் சென்று அவளுக்குக் காட்டுங்கள்' என்கிறான்.

அவள்மீது ஆத்திரமா? அல்லது மகன் பெருமையா? இல்லை. அவள்மீது ஆசை! வாய்விட்டுச் சொல்லுகிறான். 'இனி அவளுக்கு சந்தேகம் வேண்டாம். இடையூறும் ஒழிந்தது. பழைய நம்பிக்கைக்கும் இடமில்லை. ஆடை ஆபரணங்களுடன் என்னை வந்து அடையலாம்' என்கிறான். இவனது நம்பிக்கை அதிகரிக்கிறது!

**நிர்விசங்காநிருத்விக்னா நிரபேக்ஷா ச மைதிலீ**
**மாமுபஸ்தாஸ்யதே ஸீதா ஸர்வாபரண பூஷிதா.** 3

இன்னொன்று சொல்லி முடிக்கிறான். அதில் தன்னையறியாமல் தனது ஈன புத்தியை வெளிப்படுத்தி விடுகிறான். 'இன்று இறந்து கிடக்கும் ராமனைப் பார்த்தவுடன் மனமிடிந்து வேறு கதியின்றி என்னை அடைவாள்' என்கிறான். சிறை கிடக்கும் பேதையை முற்றிலும் கதியற்ற நிலையில் காட்டி அவளையடைய விரும்புகிறான். காம வெறி இந்நிலைக்கு அவனைத் தாழ்த்தியபின் சூழ்ச்சியன்றி வேறு கதியற்றவனாக ஆகிவிடுகிறான்! எப்படியாவது இதில் வெற்றி காண வேண்டும் என்ற பேராசையால் மூர்ச்சித்து விழுந்த எதிரியை மடிந்தவனாய்க் காட்ட முற்படுகிறான். ஒரு பெண்ணையும் போர்க்களத்துக்கு அழைத்துச்சென்று, இடையிலே தோற்றும் வெற்றி தோல்விகளைக் காட்டத் தூண்டியது அவனுக்கே உரித்தான விஷமம்.

இங்கு துயரமும் குழப்பமும் அதிகரிக்க, கட்டுண்ட ராமனைப் பார்த்து பயத்தால் நடுங்குகிறான் சுக்ரீவன். அவனது கண்ணீரைத் துடைத்து தைரியம் ஊட்டுகிறான் விபீஷணன்! 'அழுகையை நிறுத்து. போர் என்றால் இப்படித்தான் இருக்கும். வெற்றியென்பது உறுதியில்லை. நமக்கு அதிர்ஷ்டமிருந்தால் விரைவில் மூர்ச்சை தெளிந்து விடுவார் ராமன். தைரியமாயிரு. எனக்கும் தைரியம் சொல்லு' என்கிறான். 'என்ன ஆகுமோ?' என்ற கவலை இவனையும் உள்ளூர அரிக்கிறது போலும். ஆயினும் வானரர்கள்மனமிடிந்து நிற்பதை மாற்றப் பார்க்கிறான். 'ஒருவருக்கொருவர் காதோடு ஏதோ பேசுகின்றனரே? என்னைப் பார்த்து பயம் தெளியட்டும்' என்கிறான்.

புஷ்பக விமானத்தில் ஏற்றி ஸீதையை அழைத்து வருகின்றனர் அரக்கியர். வழியெல்லாம் 'இந்த்ரஜித் ராமனையும் லக்ஷ்மணனையும் கொன்றான்' என்ற சேதியை உரக்கக் கூறுகின்றனர். லங்கை முழுதும் தோரணங்கள்; எங்கும் வெற்றிக்கொடி பறக்குமாறு உத்தரவிட்டு மேல் பார்வை செலுத்துகிறான் ராவணன்.

ஒடுங்கிய வானரப் படையையும் களிக்கும் அரக்கர் படையையும் பார்க்கிறாள் ஸீதை. உடலெல்லாம் புண்; அம்பு தைத்த வடுக்களும் ரண காயங்களும் நிறைந்திருக்கின்றன. கணவனையும், லக்ஷ்மணனையும் மாறி மாறிப் பார்க்கிறாள். வீரர் இருவரும் சிறு குழந்தை

கள் போல் அண்டிப்படுத்து அசைவற்றிருக்கின்றனர். சுற்றிலும் அம்புகள் விரித்த பாய்போலக் கிடக்கின்றன.

இறந்துவிட்டனர் என்றே சந்தேகிக்கிறுள். பழையனவெல்லாம் நினைவுக்கு வருவது இயல்புதானே? அதை அழகாக அமைக்கிருர் வால்மீகி. சிறு பெண்ணுயிருக்கும்போது இவளைப் பார்த்து ஸாமுத்ரிகா லக்ஷணம் அறிந்த பெரியோர் எத்தனை பேர் மக்கட்பேறுடைய சுமங்கலியென்று அறிவித்தனர்! அனைவரும் இன்று பொய்யராயினர். பின்னர் வீரபத்னியென்றும் சக்ரவர்த்தியின் மகிஷியென்றும் ஆசி கூறினரே, அந்த ஞானியர் அனைவரும் பொய்யராயினர் என்று புலம்புகிருள். நலம் கூறியது பலிக்காவிட்டாலும் விபரீதமாக நேர்ந்துவிட்டால் மனம் பதைக்குமல்லவா?

ஊசுர் லக்ஷணிஞே யே மாம் புத்ரிணி அவிதவேதி ச
தே அத்ய ஸர்வே ஹதே ராமே ஞானிஞே அந்ருத வாதின : 4

ராமனது வரவை எதிர்பார்த்து அயோத்தியில் ஏங்கும் அன்னை கௌஸல்யையை நினைத்து வருந்துகிருள் ஸீதை. அருகில் நிற்கும் த்ரிஜடை அவளைத் தேற்றுகிருள். 'உன் கணவன் இறக்கவில்லை. முகத்தை நன்ருய் கவனி. மேலும் பிறர் முகங்களையும் கவனி. தலைவன் இறந்துவிட்டால் படையினர் முகத்தில் கோபமும் துயரமும் காணுது. கலவரப்பட்டு ஓடுவரேயன்றி இம்மாதிரி அண்டி நின்று காப்பரோ?'' என்கிருள். கடைசியில், 'நீ இந்த சோகத்தைவிடு. ராம லக்ஷ்மணர்கள் உயிரில்லாமல் இருப்பது நடவாத காரியம்' என்று முடிக்கிருள். இரட்டை எதிர் மறையால் சொல்லி இறந்துபோவது என்ற அவச்சொல்லைத் தவிர்த்துவிடுகிருள்!

ராமலக்ஷ்மண யோரர்த்தே நாத்ய சக்யம் அஜீவிதும் 5

வேருென்றும் சொல்லத் தோன்ருமல் கைகூப்பி 'அப்படியே இருக்கட்டும்' என்று பிரார்த்தித்த வண்ணம் திரும்பிச் செல்லுகிருள் ஸீதை. ஆறுதல் சொன்ன த்ரிஜடை ஒன்றுமறியாதவள்போல் அவளை அசோகவனத்தில் கொண்டு சேர்க்கிருள். மன்னவன் ஏவலை நிறைவேற்றியாய்விட்டது!

சிறிது நேரம் கழித்து மூர்ச்சை தெளிந்த ராமனே லக்ஷ்மணனைப் பார்த்து மடிந்துவிட்டானென்று கருதி மனம் பதைக்கிருன். 'இனி ஸீதை கிடைத்தாலென்ன? நானே உயிருடனிருந்துதான் என்ன? இவனைப் போன்ற தம்பி கிடைப்பானு? நான் தனியே எப்படி அயோத்திக்குச் செல்லுவேன்?' என்று புலம்புகிருன். 'தலைநிமிர்ந்து சுமித்திரையை எப்படிப் பார்ப்பேன்? உன்னேடு துணைவந்த என்மகன் எங்கே?' என்ற கேள்விக்கு என்ன பதில் சொல்லுவேன்?' என்கிருன்.

ராமனுக்கும் பழையனவெல்லாம் நினைவுக்கு வருகின்றன. 'நான் கானகம் சென்றபோது என்னோடு வந்தான் வீரன். இன்று அவனோடு நான் யமனுலகு செல்வேன்' என்கிறான்.

யதைவ மாம் வனம் யாந்தம் அனுயாதோ மஹாத்யுதி :
அஹமப்யனுயாஸ்யாமி ததைவைனம் யமக்ஷயம் 6

ராமன் மனமிழந்து விட்டான். அதன் விளைவாக அறிவிழந்து பேசுகிறான். சுக்ரீவனை கிஷ்கிந்தைக்குத் திரும்பிப்போய் சுகமாயிருக்கச் சொல்லி வேண்டுகிறான். கூடவே, விபீஷணனை அரசனுக்குவேனென்ற சத்தியம் பொய்க்குமே என்று கவலைப்படுகிறான்! ஹனுமான் முதலியவர்களுக்கு நன்றி கூறி 'இஷ்டப்பட்டபடி போகலாம்' என்று விடை கொடுக்கிறான். மனிதனால் விதியை வெல்ல முடியாது என்றும் சொல்லுகிறான்.

ந ச அதிக்ரமிதும் சக்யம் தைவம் ஸுக்ரீவ மானுஷை :
அனுஞாதா மயாஸர்வே யதேஷ்டம் கந்துமர்ஹத 7

சுற்றியிருக்கும் வானரர்கள் கண்ணீர் விடுகின்றனர். ராமன் சொல்லைப் பொருட்படுத்தாவிட்டாலும் அவனது துயரத்தைப் பொருட்படுத்துகின்றனர். ஆனால் குழப்பமுற்றுச் செயலற்று நிற்கின்றனர். குழப்பத்துக்கறிகுறியாக விரைந்துவரும் விபீஷணனை இந்த்ரஜித் எனக்கருதி அங்குமிங்கும் மருண்டு ஓடுகின்றனராம்! ராமன் முதல் பாமரன் வரை எல்லோரும் குழப்ப முற்றிருக்கும் நிலையை விவரித்து, லக்ஷ்மணன் எவ்வளவு இன்றியமையாத இளவீரன் என்று காட்டுகிறார் வால்மீகி.

அருகில் வந்து நிற்கிறான் விபீஷணன். தீய தந்திரம் செய்த இந்த்ராஜித்தை நிந்திக்கிறான். ஆனால் இவர்களுக்கு தைரியம் ஊட்டுவதற்கு பதில் அவனும் புலம்புகிறான். எதற்கு? தன் கவலைதான்! 'ஆதாரமென நம்பி வந்த வீரர்கள் நினைவற்றுக் கிடக்கின்றனரே! நான் உயிர் சுமந்து பயன் இல்லை. எனக்கு ராஜ்யம் கிடைக்குமென்ற ஆசையும் அழிந்தது' என்கிறான்.

யயோர் வீர்யமுபாச்ரித்ய ப்ரதிஷ்டா காங்க்ஷிதாமயா
தாவுபௌ தேஹநாசாய ப்ரஸுப்தௌ புருஷர்ஷபௌ
ஜீவன்னத்ய விபன்னோஸ்மி நஷ்டராஜ்ய மனோரத : 8

'அரசு விரும்புவோன்' (ராஜ்ய காங்க்ஷீ) என்று இவனுக்குப் பட்டம் அளித்தது எவ்வளவு பொருத்தம்!

'இனி ராவணனது கருத்தும் நிறைவேறும்' என்கிறான். தனது ஆசை நிறைவேறாதது ஒருபுறம், தமையன் ஸீதையையும் அரசையும் இருத்திக் கொள்வான் என்ற ஆத்திரம் ஒருபுறம். இரண்டும்

மேலிட்டு, அவனைப் 'பகைவன்' என்று குறிப்பிடுகிறான். சுக்ரீவனுடன் பேசும்போது தமையனுக்கிந்த அடைமொழி உகந்தது எனவும் கருது கிறான் போலும்!

ப்ராப்தப்ர திஞஸ்ச ரிபு: ஸகாமோ ராவண : க்ருதா: 9

சுக்ரீவன் அவனை அணைத்து ஆறுதல் சொல்லுகிறான். 'உனக்கு அவசியம் லங்கா ராஜ்யம் கிடைக்கும். ராவணனது கருத்து நிறை வேறாது. மயக்கம் தெளிந்தவுடன் இவர்கள் அவனை முடித்துவிடுவர்' என்கிறான். மேலும், ஸுஷேணன் என்ற மாமனிடம் சொல்லுகிறான், 'ராம லக்ஷ்மணர்களை எடுத்துக் கொண்டு படைகளுடன் பத்திரமாக கிஷ்கிந்தைக்குப் போய்விடு. நான் ராவணனைக் கொன்று பூண் டோடழித்து ஸீதையை மீட்டு வருவேன்!' தலைவன் இல்லாத சமயம் தலைமை தாங்க விரும்புவோன் உணர்ச்சி வசப்பட்டுப் பேசும் பிதற்றல்.

முதிர்ந்த ஸுஷேணன் மூலிகைகள் கொண்டு வந்து மூர்ச்சித்துப் போனவீரரைச் சிகிச்சை செய்யுமாறு யுக்தி சொல்லுகிறான். இதற் குள் பெரும் புயல்வீச இடியும் மின்னலும் தோன்றிப் பாம்புகளனைத் தையும் விரட்டுகின்றன. கருடன் ஆகாயத்தில் தோன்றவும் நாகாஸ் திரத்தின் வலிமை ஓய்ந்து வீரர்களும் வானரரும் நினைவு பெற் றெழுகின்றனர். மீண்டும் உற்சாகம், ஆரவாரம். குழப்பமுற்றிருந் தவரெல்லாம் கடும்போர் புரியத் துடிக்கின்றனர்!

கோட்டைக்கு வெளியே ஆரவாரம் கேட்டு வியக்கிறான் ராவணன். ஆட்களையனுப்பிக் கண்டு வரச்சொல்லுகிறான். நாக பாசத்தால் அசைவற்றுக் கிடந்தவர்கள் கட்டிய கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடும் யானைபோல் காட்சியளிக்கின்றனர் என்ற சேதி சொல்லுகிறார்கள். 'இதுவரை பயன்தந்த நாகாஸ்திரம் பயனற்றுப் போய்விட்டதா?' என்று பெருநாகம் போல் பெருமூச்சு விடுகிறான் அரக்கர் வேந்தன். தூம்ராக்ஷன் என்ற வீரனையழைத்துப் போருக் கனுப்புகிறான்.

அவன் மேற்கு வாயிலையடைகிறான். வெளியே வானரச்சேனை திரளாய் நிற்கிறது, ஹனுமான் தலைமையில். போரில் ஹனுமானே அவனைக் கொன்று விடுகிறான். பின்னர் வஜ்ரதம்ஷ்ட்ரன் வெளிக் கிளம்பி தென்புறமாய்ச் சென்று அங்கதனை எதிர்க்கிறான். அவனும் பல அரக்கர்களும் அங்கு மடிய, அகம்பனன் என்ற சேனாதிபதி போருக்கு வருகிறான். அவனும் ஹனுமானுடன் சண்டையிட்டு மடிந்து போகிறான்.

சினங்கொண்ட ராவணன் ப்ரஹஸ்தனை உற்சாகப்படுத்திப் போருக்கனுப்புகிறான். 'நம்மில் யாராவது சென்றால்தான் முற்றுகை யிலிருந்து நகரம் விடுபடும். என்ன சொல்லுகிறாய்?' என்கிறான்.

'இதெல்லாம் முன்பே பேசி முடித்த விஷயம். நம்முள் அபிப்பிராய பேதமும் நேர்ந்தது. ஸீதையை விடுதலே நன்று என நான் சொன்னதை தாங்கள் ஏற்கவில்லே. இன்று போர் மூண்டுவிட்டது. ஆனல் எனக்கு மனேவி மக்கள் பெரிதல்ல. என்னேப் பலவிதத்திலும் பெரிது படுத்திய தங்களுக்கே உரியது என் உயிர்' என்று கூறிச்செல்லுகிருன்.

**ஸோ அஹம் தாரைஸ்க மானைஸ்ச ஸததம் பூஜி தஸ்த்வயா**
**ஸாந்த்வைஸ்ச விவிதை: காலே கிம் நகுர்யாம் ப்ரியம்தவ** 10

நன்மை கோருபவர் கூறிய நல்வழியைப் புறக்கணித்த செருக்கைச் சுட்டிக்காட்டும் வேளே வந்துவிட்டது.

வில்லின் வலிமை கொண்ட ப்ரஹஸ்தனே எதிர்த்துப் போர் புரிகிருன் நீலன். நீலனது ஆயுதம் மரமும் கல்லும்! அம்புகளே லக்ஷியம் செய்யாமல் அருகிலே நெருங்கி கழியாலும் கல்லாலும் அடித்தே கொல்லுகிருன் ப்ரஹஸ்தனே. தலேயிலே பட்ட கல்லினல் பிளவுற்று ரத்தப் பெருக்குற்று மடிகிருன் ப்ரஹஸ்தன்.

இச்செய்தி காதுக்கெட்டியதும் ராவணனுக்குத் துயரமும் கோபமும் ஒருங்கே உண்டாகித் தானே போருக்குச் செல்ல முற்படுகிருன். நீலனென்ற வானரன் தனது படை வீரனேக் கொன்ருன் என்பது கேட்டு, 'வானரப்படை அனேத்தையும் அம்பு கொண்டு எரித்து வனத்தைத் தீ வைத்து அழிப்பதுபோல் அழித்துவிடுகிறேன், ராமன் லக்ஷ்மணன் உள்பட' என்று கர்ஜிக்கிருன்.

அழகிய குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிச் செல்லும் ராவணனே 'தேவேந்திரனின் பகைவன்' என்று குறிக்கிருர் வால்மீகி. அவனது பழைய வெற்றிகளே எல்லாம் நினேவுறுத்தும் அடைமொழி. அரக்கர் உற்சாகமுற்று ஆரவாரம் செய்கின்றனர்.

பெரும்படை முன்னேறி வருவதைக் கண்ட ராமன் விபீஷணனே அழைத்து விவரம் கேட்கிருன். படைத்தலேவர் ஒவ்வொருவரையும் சுட்டிக் காட்டி விவரம் கூறுகிருன் விபீஷணன். 'நடுவிலே வெண்குடையின் கீழ் கம்பீரமாய் நின்று பூதகணங்களுக்கிடையே சிவன் போல் விளங்கும் வீரனே அரக்கர் பெருமகன்' என்கிருன்.

ராமன் கூர்ந்து கவனிக்கிருன். 'ஆஹா என்ன ஒளி பொருந்திய உருவம்! சூரியனேப் போல் கண்ணேக் கூசும் பிரகாசம்' என்று வியந்து பாராட்டுகிருன் வீரன்.

**அஹோ தீப்தோ மஹாதேஜா ராவணே ராக்ஷஸேச்வர:**
**ஆதித்யஇவ துஷ்ப்ரேக்ஷோ ரச்மிபிர்பாதி ராவண:** 11

'இவனது தேஜஸ் தேவர்களுக்குமில்லை, தானவர்களுக்குமில்லை' என்றும் கூறுகிறான். ஆனால் தனக்கிழைத்த பெருந்தீங்கை நினைத்த வுடன், 'இந்தப் பாவி இன்று கண்ணெதிரே அகப்பட்டு விட்டான். ஸீதையைக் கவர்ந்த வஞ்சத்தை இன்று தீர்ப்பேன்' என்று கூறி வில்லை எடுக்கிறான்.

திஷ்ட்யாயம் அத்ய பாபாத்மா மமத்ருஷ்டிபதம் கத :
அத்ய க்ரோதம் விமோக்ஷ்யாமி ஸீதாஹரண ஸம்பவம் 12

('இன்று தீர்ப்பேன்' என்ற சொல்லில் முன்பு வில்லெடுத்து வாலிமீது தொடுத்த அம்பு தவறான இலக்கைத் தாக்கிவிட்டது என்ற கருத்து அடங்கியிருக்கிறது.)

போருக்கு வரும் ராவணன் ஒரு பெரு மீன் கடலில் நுழைவது போல் தோன்றுகிறான் என்கிறார் கவி. சூழ்ந்திருக்கும் வானரப்படை சமுத்திரம் போல் காட்சியளிக்கிறது. நீரைக் கிழித்துக்கொண்டு வருகிறது திமிங்கலம்! பெருமீன் சிறு மீன்களை விழுங்கிவிடும் என்ற கருத்தும் அடங்கியிருக்கிறது.

வ்யதாரயத் வானர ஸாகரௌகம் மஹாஜஷ :
பூர்ணம் இவார்ணவௌகம் 13

முதலில் சுக்ரீவன் அவனை எதிர்க்கிறான். பின்னர் லக்ஷ்மணன், ஹனுமான் முதலியோர் ராவணனுடன் போர் புரிகின்றனர் சிறிது காலம். ராவணன் பிரமனிடம் பெற்ற சக்தியஸ்திரம் கொண்டு லக்ஷ் மணனைத் தாக்கியதும் ராமனே வருகிறான். எளிதிலே போர் செய்ய உதவுமாறு அவனைத் தோளிலே சுமந்து செல்லுகிறான் ஹனுமான். தேரில் நிற்கிறான் ராவணன். அவனைப் பார்த்து 'நில்' 'எனக்குத் தீங்கிழைத்து எங்கு செல்லுவாய்? எட்டு திக்கிலும் ஆகாயத்திலும் பாதாளத்திலும் சென்று ஒளிந்தாலும் நீ தப்ப முடியாது' என்று விரட்டுகிறான் ராமன்.

பதிலுக்கு, ஹனுமானை அம்புகளால் அடிக்கிறான் ராவணன். உடனே ராமன் அவனது தேரையும் குதிரைகளையும் நாசப் படுத்துகிறான். சிறிது நேரத்துக்குள் ராவணன், கையிலிருக்கும் வில்லையும் தலையில் சுமக்கும் கிரீடத்தையும் இழந்து நிற்கிறான். இந்நிலையில் ராமன் அவனிடம் சொல்லுகிறான், 'நீ அரியதோர் செயல் புரிந்துவிட்டாய். எனது வீரர் பலரையும் வீழ்த்தினாய். இப்போது களைத்து நிற்கிறாய். ஆதலால் உன்னை யமனிடம் அனுப்பமாட்டேன். நீ போ. இன்றிரவு களைப்பு நீங்கி வில்லும் தாங்கித் தேரில் ஏறி வந்து எனது வலிமை காண்பாய்!'

க்ருதம் த்வயா கர்ம மஹத்ஸுபீமம் ஹதப்ரவீரஸ்ச
க்ருதஸ்த்வயாஹம்
ஆச்வாஸ்ய நிர்யாஹி ரதீச தன்வீ ததாபலம்
த்ரக்ஷ்யஸிமே ரதஸ்த: 14

நிராயுத பாணியாயிருப்பவனைத் தாக்க இசையாதிருத்தல் தர்ம யுத்தத்தின் லக்ஷணம். மற்றொரு விஷயம்; பகைவனாயினும் அவனது வீரத்தை மெச்சுவது உண்மை வீரனின் பெருமை.*

இந்நிலையிலிருக்கும் ராவணன் பார்வையைக் கீழே செலுத்தி நிலத்தைக் கால் விரலால் கீறிய வண்ணம் நிற்கிறான் என்று வர்ணிக்கிறார் கம்பன். அவனுக்கு ராமன் அறத்தை நினைவூட்டி உயிர் பிழைக்க ஒரு வழியையும் சொல்லுகிறானாம். அது என்ன? சிறையில் வைத்தவளை விட்டுத் தம்பியை இறைவனாக்கி அவனுக்கு ஏவல்செய்து வாழ்வது!

மேலும் சொல்லுகிறான். 'பெரும் புயலில் பூளைப்பூக்கள் சிதறிப் பறப்பது போல் உனக்குத் துணையாய் வந்த சேனைகள் சிதறிப் போயின. நீ இன்று போய் நாளைவா போருக்கு' ('ஆச்வாஸ்ய நிர் யாஹி' என்பதன் தமிழாக்கம்.)

**ஆளையா உனக்கமைந்தன மாருதம் அறைந்த**
**பூளையாயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு**
**நாளைவாவென நல்கினன் நாகிளங்கமுகின்**
**வாளை தாவுறு கோசலை நாடுடைவள்ளல்.**

தேரிழந்து, வில்லிழந்து, கிரீடமிழந்து போனதோடல்லாமல் அமைதியும் இழந்து கர்வமுமிழந்து லங்கைக்குள் புகுந்தான் ராவணன் என்கிறார் வால்மீகி.

**ஸ ஏவமுக்தோ ஹததர்பஹர்ஷோ நிக்ருத்தசாப: ஸஹதாச்வஸூத:**
**சரார்தித: க்ருத்த மஹாகிரீடோ விவேச லங்காம்**
**ஸஹஸா ஸராஜா** **15**

மாபெரும் வீரன் உடலும் உள்ளமும் ஒடுங்கி வருகிறான். அவன் நடந்து வருவதை வர்ணிக்கிறார் கம்பன். திக்கஜங்களாகிய யானைகளுடன் போர் புரிந்த மார்பின் வலிமை என்ன, கைலயங்கிரியைப் பெயர்த்த தோளின் பெருமை என்ன, நாரத முனிவரும் வியக்கும்படி வேதமும் பாடிய நாவன்மை என்ன, பூமாலை சூடிய மகுடம் என்ன, சிவபெருமான் கொடுத்த வாள் என்ன, இவையனைத்தையும் தனது வீரத்தையும் போர்க்களத்தில் இழந்து வெறுங் கையோடு லங்கைக்குள் புகுந்தான் என்கிறார்.

---

* (பழைய சமஸ்கிருத காவியங்களில் தோற்றும் இவ்வியல்பு கிரேக்க காவியங்களிலும் பிரதிபலிக்கிறது. இதற்கு EIDOS என்று பெயர்)

வாரணம் பொருத மார்பும் வரையினையெடுத்த தோளும்
நாரதமுனிவற்கேற்ப நயம்படவுரைத்த நாவும்
தாரணி மவுலிபத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போக்கி வெறுங்கையோடிலங்கை புக்கான்

படிப்படியாக ராவணனின் பெருமைகளை அடுக்கியபின் 'வெறுங் கையோடு' சென்றுன் என்று எதிர் பாராத திருப்பத்தை அமைத்து சிகரம் போன்ற செயல்களையும் இன்றைய வீழ்ச்சியையும் காட்டி விடுகிறுர் கம்பன்— ஒரே பாடலில். வாள், மகுடம் போன்ற பொருள்கள் மட்டுமின்றி, வலிமை, நாவன்மை முதலிய பெருமை களும் போயின என்பது கருத்து.

மேலும் ஒரு சித்திரம். மனமிழந்து, கர்வம் குலைந்து, தலை குனிந்து செல்லும் ராவணனை வர்ணிக்கிறுர். (வழக்கப்படி) நாலு திசைகளிலும் பார்வையைச் செலுத்தவில்லை. நகரையும் கூடிவந்த மக்களையும் பார்க்கவில்லை. கடல் போன்ற சேனையையும் கவனிக்க வில்லை. ஆங்காங்கு தனித்தனியே நின்று மாதர்கள் இவனையே பார்க் கிறுர்கள். இவன் பூமியென்ற நங்கையை நோக்கிய வண்ணம் உள்ளே நுழைகிறுன்.

மாதிரம் எவையும் நோக்கான் வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான் கடல் பெருஞ்சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தல் மாதர் தனித்தனி நோக்கத்தான் ஓர்
பூதலமென்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்

கருணரஸம் சொட்டுகின்ற பாடல். அவன் நடந்து செல்வதை நாம் பார்க்கிறேம்! விரும்பிய மாத்திரத்திலே தேவமாதர் காத்துக் கிடக்கும் பெருமையை எட்டிய வீரன் என்ன கதிக்கு வந்துவிட்டான்!

சூழ்ந்து நிற்கும் சேனையையும் ஏங்கி நிற்கும் பெண்களையும் கண்ணெடுத்துப் பார்க்காமல் தரையை நோக்கிய வண்ணம் நடந்து வருகிறுன் ராவணன். தோற்ற நிலையிலும் பெண்ணசை விடவில்லை யென்று குறிக்க 'பூதலம் என்னும் நங்கை' என்கிறுர் கவி. நிலமக ளாகிய சீதைமேல் வைத்த காதல்தான் இந்நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது, ஆதலால் நிலத்தை நோக்கி நடக்கிறுன் என்பதும் உள்ளடங்கிய கருத்து.

ஒரே கருத்தில் லயித்து ஒருமித்துவிடும் இயல்பு படைத்தவன் ராவணன். முன்பு சூர்ப்பனகை வந்து ஸீதையை வர்ணித்த வுடன் கரன் மாண்டதை மறந்து, தங்கையின் மூக்கையறுத்ததையும் மறந்து, எல்லாவற்றையும் மறந்து, தான் கேள்வியுற்ற ஸீதையை

மட்டும் மனதில் இருத்திக் கொண்டான் அல்லவா? ('கேட்ட மங் கையை மறந்திலாதான்')

இன்று தோல்வியும் அதை விளைவித்த காதலும் ஒருங்கே அழுத் துகின்றன. வீழ்ச்சியுற்ற வீரன் தலைகுனிந்து நடக்கிறான். சுற்றி நிற் போர் பலர் இருந்தும் தனிமையில் நடக்கிறான் என்கிறார் கவி. அந்த அளவுக்கு, சூழ்நிலையில் ஈடுபாடற்றுத் தன்னிலையில் தவிக்கிறான்.

இப்படி அவனை வாட்டும் பொருள் என்ன? நாணம்! சீதை யென்ற பெண் நிறைகொண்ட நெஞ்சினிலே நாணம் நிரம்பி நிற் கிறது. அதை வெளிப்படுத்தி அகற்றவே அடிக்கடி பெருமூச்சுவிடு கிறானும்!

உண்ணிறை மானம் தன்னையுமிழ்ந்தெரிய உயிர்ப்பதானான்

நாணம் எதனால்? ராமனிடம் உற்ற தோல்வியாலா? இல்லை. வானவரும் மானிடரும் தன்னைப் பார்த்து நகைப்பார்கள்; தான் இதுவரை நகைப்புக்குரியவராய்க் கருதிய பகைவரெல்லாம் இன்று நகைப்பர். ஆனால் இதற்கெல்லாம் நாணவில்லை. (போர் வீரனுக்கு வெற்றி தோல்வி சகஜம்). வேலைப் பழிக்கும் விழியும், செவ்வாயு முடைய மெல்லியாள், இந்த மிதிலைப் பெண் ஜானகி தன்னைப் பார்த் துச் சிரிப்பாள் என்ற ஒரே காரணம்தான். நாணத்தால் வாடி உலர் கிறான்.

**வான் நகும் மண்ணும் எல்லாம் நகும் மணிவயிரத்தோளான்**
**நான் நகு பகைஞரெல்லாம் நகுவர் என்றதற்கு நாணான்**
**வேல் நகு நெடுங்கண் செவ்வாய் மெல்லியள் மிதிலை வந்த**
**சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்புகின்றான்.**

பெருமையிழந்து சோர்ந்த நிலையில் மனிதன் பொருட்டாக மதிப் பது ஒன்றுதான்—எவருடைய நன்மதிப்பைப் பெரிதெனக் கருது கிறானே அவரது அபிப்பிராயம். அது ஒரு பெண்ணாயிருந்தால், கேட் கவும் வேண்டுமோ?

'நாளை வா' என்றான் ராமன். ஆனால், இவன் மீண்டும் போருக் குச் சென்றால் அது ராமனது சூளுரையால் ரோஷம் கொண்டல்ல; சீதையின் ஏளனத்துக்கு அஞ்சியே என்பது நம் மனதில் உறுதியாகிறது.

# 34

## ‘கும்பிட்டு வாழ்கிலேன்’

தனியே தலைகுனிந்து நடந்து வந்து தன் இனத்தாரோடு சேர்ந்து கொள்ளுகிறான் ராவணன். சுற்றி நிற்கும் வீரர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்; ஆனால், தனக்குள் பேசிக் கொள்வதுபோல் அமைகிறது பேச்சு. ‘வரம் தந்த பிரமன் மனிதரிடம் ஜாக்ரதையாயிருக்கும்படி எச்சரித்தார். தேவ, கந்தர்வ, ராக்ஷஸ வர்க்கத்தினரெல்லாம் என்னைக் கொல்ல முடியாதிருக்க வரம் வேண்டினேன். மனிதரைப் பற்றிக் கேட்காமல் போனேனே!’ என்கிறான்.

**தேவதானவ கந்தர்வைர்யக்ஷ ராக்ஷஸ பன்னகை :**
**அவத்யத்வம் மயா ப்ராப்தம் மானுஷேப்யோ ந யாசிதம்** 1

இன்றைய நிலைக்கு மூலகாரணமான ஸீதையை நினைக்கிறான். பழையதோர் சம்பவம் ஞாபகம் வருகிறது. ‘முன்பு நான் வேதவதி யென்ற பெண்ணைக் கற்பழித்தபோது அவள் மீண்டும் பிறந்து வந்து என்னைப் பழி வாங்குவதாக சபதம் செய்து உயிர் நீத்தாள். அவள் தான் ஸீதையாய்த் தோன்றிவிட்டாள்’ என்கிறான். (சாகுந்தருவாயில் தசரதனுக்கும் முன்புதான் செய்த பாவம் நினைவுக்கு வந்ததல்லவா? சிக்கலான நிலையில் பழைய தவறுகள் எல்லாம் நினைவில் தோன்றி வாட்டுகின்றன.)

**சப்தோ ஹம் வேதவத்யாச யதா ஸா தர்ஷதா புரா**
**ஸேயம் ஸீதா மஹாபாகா ஜாதா ஜனக நந்தினீ** 2

நிலைமை மோசமாகிவிட்டதென்று தோன்றியதும் கும்பகர்ணனை எழுப்பச் சொல்லி உத்தரவிடுகிறான். சிரமப்பட்டு அவனை எழுப்பு

கிறார்கள். நகர்ந்து வரும் மலைபோலத் தெருவோடு வருகிறான் கும்ப கர்ணன். தமையனை வணங்கி, 'அழைத்த காரணம் என்ன?' என்று கேட்கிறான். 'உனக்கு பயம் உண்டாகும்படி செய்தவன் யார்?' என் கிறான்.

வானரரும் மானிடரும் இழைத்ததீங்கை எடுத்துரைத்து, 'லங் கையைக் காப்பாற்று. கிழவரும் சிறுவருமே எஞ்சி நிற்கின்றனர்' என்கிறான் ராவணன்.

**த்ராயஸ்வ இமாம் புரீம் லங்காம் பாலவ்ருத் தாவசேஷிதாம்** 3

'காப்பாற்று' என்று ஒருவரை வேண்டிக் கொள்ளும் காலம் வந்துவிட்டது இலங்கை வேந்தனுக்கு. அவன் பேசும்பொழுது கண் சற்று உள்ளடங்கியிருந்தது என்கிறார் வால்மீகி. ('ஈஷத் பரிவ்ருத் தாப்யாம் நேத்ராப்யாம்') 'நான் இதுகாறும் இப்படி ஒருவரையும் வேண்டியதில்லை' என்றும் சொல்லுகிறான்.

இதைக் கேட்டுச் சிரிக்கிறான் கும்பகர்ணன் : 'முன்பு நாம் எதிர் பார்த்தது வந்துவிட்டது. நன்மையைக் கோருபவனின் பேச்சைக் கேட்காததால் வந்த வினை. முன்பு சிறிதும் யோசியாமல் செய்த காரியம் இது, அரசனே! அதன் விளைவு என்னவென்று ஆராய்ந்து பார்க்கவிடாமல் செய்தது வலிமையை நம்பிய செருக்கு' என்கிறான்.

**ப்ரதமம் வை மஹாராஜ க்ருத்யமேதத் அசிந்திதம்**
**கேவலம் வீர்ய தர்ப்பேண நானுபந்தோ விசாரித :** 4

ராவணன் புருவத்தை நெரித்துப் பேசுகிறான். கோபமும் தோன்றுகிறது. 'நான் பெரியவன். உன் மதிப்புக்குரியவன். நீ எனக்கு புத்தி சொல்லுகிறாயா? நிலையை ஆராய்ந்து, அறிந்து பேசு. போனது போகட்டும். அதை நினைத்துப் பயன் இல்லை' என்கிறான். உடனே ஒரு எண்ணம் உதிக்கிறது. முன்பு கும்பகர்ணன் கூறியதை நினைத்துப் பேசுகிறான் போலும். 'என்னால் நேர்ந்த தீமையை உனது திறமை யைக் கொண்டு தீர்த்துவை,—உனக்கு என்னிடம் அன்பு இருந்தால். ஆபத்தில் எளியோனாகி நிற்பவனுக்குத் துணை புரிபவனே நண்பன்' என்கிறான்.

**மமாப நயஜம் தோஷம் விக்ரமேண ஸமீகுரு**
**ஸ ஸுஹ்ருத் யோ விபன்னார்த்தம் தீனம் அப்ய வபத்யதே** 5

தன்னை 'எளியோன்' என்று சொல்லிக் கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டான்! இதைக் குறிப்பாக உணர்ந்த தம்பி உடனே வேறு வகையில் பேசுகிறான் : 'அண்ணா! போதும். துயரத்தை விடு. நான் உயிரோடிருக்கும்வரை உன் மனதில் கலக்கம் வேண்டாம். உன்னைக் கலங்க வைத்தவனை நான் நாசம் செய்கிறேன். நீ சுகமாய் வாழ் வாய், ஸீதை துக்கப்படப் போகிறாள்' என்கிறான் உணர்ச்சியோடு.

ஸீதையால்தான் துயரம் வந்ததென்று இங்கு எல்லோரும் கருதுகின்றனர்!

சகோதரர் சந்திப்பைக் கம்பன் எப்படிக் காட்டுகிருர் பார்க்கலாம். கும்பகர்ணனை எழுப்பியதும், 'போர் வந்துவிட்டதா?' என்று கேட்கிருனும். ஸீதையை விட்டொழித்து ராமனுடன் நட்பு கொள்ளும்படி கூறிவிட்டு உறங்கச் சென்ருன் அல்லவா? 'ஒப்பிலாக் கற்புடைய ஜானகியின் துயரம் இன்னும் தீரவில்லையோ? உலகெங்கும் பரவிய நம் புகழ் அழிந்துவிட்டதா? முடிவு காலம் நெருங்கிவிட்டதா?' என்கிருன்.

**ஆனதோ வெஞ்சமர்? அலகில் கற்புடைச்**
**சானகி துயர் இனம் தவிர்ந்த தில்லையோ?**
**வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்**
**போனதோ? புகுந்ததோ பொன்றுங்காலமே?**

ஆயினும் யோசனை கூறுகிருன். இழந்த பெருமையை நிலைநாட்டும் வகையென அமைகிறது அவன் கருத்து. 'சீதையை விடுதலே நன்று. பின் ராமனது அடி வணங்குவது முறை' என்கிருன். (பயத்தால் அல்ல; செய்த தவறுக்கு பரிகாரம்). இது முன்பு சபை கூட்டிய போதே சொன்ன யோசனைதான். அதை வற்புறுத்துகிருன். இன்றைய நிலையில் வேருெரு கருத்தும் தெரிவிக்கிருன். 'ஒரு குற்றமும் செய்யாத தம்பியுடன் நட்பாக இருத்தல் பிழைக்கும் வழி' என்கிருன்! ஆனல் இது ராவணனுக்குப் பிடிக்கவில்லை போலும். உடனே குறிப்பறிந்தவன் போல், 'இன்னெரு திறமைமிக்க வழியும் உண்டு' என்கிருன். அது என்ன? 'தினமும் சிறு சிறு படைகளை அனுப்புவது, அவர்கள் மடிந்தவுடன் மனச்சோர்வு அடைந்து கலங்குவது, இதெல்லாம் தக்க திட்டம் அன்று. நம் படைபலம் அனைத்தையும் ஒருங்கே சேர்த்து எதிரியைத் தாக்குதல்தான் நமது கடமை' என்கிருன். சொல்லும்போதே உணர்ச்சி வசப்படுகிருன் என்று முடிக்கிருர் கம்பன். குடும்பத்தில் பாசம், நன்மை தீமைகளில் பகுத்தறிவு, போர் முறையில் வல்லமை இவையனைத்தும் ஒருங்கே தோற்றும் இருபாடல்களையும் ஒன்ருய் அமைக்கிருர்.

**தையலைவிட்டு அவன் சரணம் தாழ்ந்து நின்**
**ஐயறு தம்பியோடளவளாவுதல்**
**உய்திறம் அன்றெனின் உளது வேறு மோர்**
**செய்திறம் அன்னது தெரியக் கேட்டியால்**

**பந்தியில் பந்தியில் படையை விட்டு அவை**
**சிந்துதல் கண்டு நீ இருந்து தேம்புதல்**
**மந்திரமன்று நம் வலி யெலாம் உடன்**
**உந்துதல் கருமம் என்றுணரக் கூறினுன்.**

ஆனுல் ராவணன் மனதில் கும்பகர்ணன் பயந்து போய்விட்டான் என்றே தோன்றுகிறது! 'நீ அச்சம் கொண்டு பேசுகிருய். சரி, போய்த் தூங்கு' என்கிருன். நின்று கொழுத்துத் தூங்கவே பிறந்தவன் எனக் கருதுகிருன். 'மானுடரை வணங்கச் சொல்லுகிருய் பின் அக்குரங்கையும் கும்பிட்டு வாழவேண்டும்! அப்படிப்பட்ட வாழ்வு உடல்மேலாசை கொண்ட உனக்கும் உன் தம்பிக்குமே உரியது. நான் அதை நினைக்கவும் மாட்டேன். எழுந்துபோ' என்று அருவருப்போடு சொல்லுகிருன் அரசன்.

ஒரே கருத்து அவரவர் கண்களுக்கு வெவ்வேறு விதமாய்ப்புலப்படுவதைக் காட்டுகிருர் கவி. (விபீஷணனின் பெயர் சொல்லாமல் 'உன் தம்பி' என்ற ஏளனம் குறிக்கத்தக்கது.)

**மானிடர் இருவரை வணங்கி மற்றுமக்**
**கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்**
**ஊனுடை யும்பிக்கும் உனக்குமே கடன்**
**யான் அது நினைக்கிலேன் எழுக போக என்ருன்.**

'உன்னை நம்பியிருக்கிறேன். நகரைக் காப்பாற்று' என்று புகழ்ச்சியால் வேண்டினுன் என்பது வால்மீகியின் வர்ணனை. 'பயந்துவிட்டாய், பேடி. எழுந்து போ' என்று இடித்துக்கூறி ரோஷத்தை உண்டாக்கினுன் என்பது கம்பனின் கற்பனை.

அதோடல்லாமல், 'நானே போருக்குச் செல்லுகிறேன்' என்றும் கூறி 'தருக என் தேர்ப்படை' என்கிருனும் ராவணன். உடனே கும்பகர்ணன் அடிபணிந்து 'பிழை பொறுப்பாய்' என வேண்டி புறப்படுகிருன். ஆனுல் மீண்டும் தனது கருத்தைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. 'நான் வெற்றியோடு திரும்புவேன் என்று நினைக்கவில்லை. விதி எதிரே நிற்கிறது. பிடர் பிடித்து உந்துகிறது. நான் இறந்துவிடுவேன். அப்படி இறந்தால் சீதையை விட்டுவிடு, நல்லவனே!' என்கிருன். வெற்றி பெறுவது கடினம், ஆயினும் போர் செய்வது உறுதியென்று கூறித் தன் நாணயத்தையும் சகோதர வாஞ்சையையும் வெளிப்படுத்துகிருன்.

'நான் இறந்த பின்னராவது அதை எச்சரிக்கையாகக் கொண்டு சீதையை விடுவித்து நன்மையைத் தேடிக்கொள்' என்று கூறுவது இறுதி மொழியாய் அமைகிறது.

**வென்றிவண் வருவனென்று ரைத்திலேன் விதி**
**நின்றது பிடர் பிடித்துந்த நின்றது**
**பொன்றுவன் பொன்றிஞல் பொலன் கொள்தோளியை**
**நன்றென நாயக விடுதி நன்று அரோ.**

இக்கருத்தை விவரித்துச் சொல்லிவிடுகிறுன், அடுத்த பாடலில். 'என்னை வென்றுவிட்டால் உன்னையும் வெல்லுவர் பிறகு வருந்திப் பயன் இல்லை' என்கிருன். (அத பூர்வம் ஹதே தேன மயி த்வாம் ஹந்தி ராகவ: என்ற ச்லோகத்தின் கருத்தே இது) IX

எழுந்து செல்லும் வீரனைப் பார்க்கிருன் ராவணன். கண்ணில் நீர் வழிகிறது. 'அவனுடன் உதவியாகப் பெரும்படையை அனுப்புங் கள்' என்று கட்டளையிடுகிருன். 'எழுந்து போ, பேடி' என்று கடிந்து சொன்ன தமையன் உதவியளித்து வழியனுப்பும் நிலைக்கு மாறிவிட் டான். அதுவே கும்பகர்ணனின் பெருமை.

போர் நடக்கும் முன்னர் ஒரு சம்பவத்தைக் கற்பிக்கிருர் கம்பன். கும்பகர்ணனின் வலிமையை விவரித்துக் கூறுகிருனும் விபீஷணன். அப்போது, 'அவனையும் நம்முடன் சேர்த்துக் கொள் வதே முறை'யென சுக்ரீவன் சொல்ல, விபீஷணனையே தூதனுக அனுப்புகிருனும் ராமன்.

கும்பகர்ணனையணுகி வணங்கி, 'எனக்கு ராமன் தந்த லங் காபுரி ராஜ்யத்தை உனக்குத் தருகிறேன். உனதடிமையாய் நிற் பேன். இதை ஏற்று என் மனதைத் தேற்றி நம் குலத்தையும் காக்க ஒரு வழி செய்' என்கிருன். தனது செயலுக்கு ஒரு காரணம் கூறு கிருன்: நன்மை தீமைதான் முக்யம்; உறவினரென்றும் பார்த்தல் தவறு.

தலைவனென்ற முறையில் போற்றத்தக்கவனுயினும் ஒருவன் செய்த தீமைக்காக, குற்றமற்ற சுற்றத்தார் அனைவரும் அழிந்து போவதா? இதுவே ப்ரச்சினை.

**தீவினையொருவன் செய்ய அவனெடுந் தீங்கிலாதோர்**
**வீவினை யுறுதல் ஐய! மேன்மையோ கீழ்மைதானே**

தம்பியை அணைத்து அன்புடன் பேசுகிருன் கும்பகர்ணன். 'நீரில் எழுதிய கோலம் எப்படியோ அப்படி நிலையற்றது வாழ்வு. அதன் மேலுள்ள ஆசையால், இவ்வளவு நாள் என்னை வளர்த்து இன்று போர்க்கோலம் பூட்டி அனுப்பிய தமையனுக்கு உயிரைக் கொடுக் காமல் நான் ராமனிடம் போக மாட்டேன். நீ போய் விரைவில் ராமனிடம் சேர்ந்துகொள்,' என்கிருன். 'என்னை வளர்த் தவன் ராவணன்' என்ற சொல்லில் உடன்பிறந்த பாசமும், ராஜ விசுவாசமும் பொங்கி வருகிறது.

நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்குயிர் கொடாது
அங்கு போகேன்
தார்க்கோல மேனிமைந்த என்துயர் தவிர்த்தியாயின்
கார்க்கோல மேனியானைக் கூடுதி கடிதின் ஏகி

நன்மை தீமையைப் பற்றிப் பேசிய விபீஷணனுக்கு பதிலும் கூறுகிறான். அதைப்பற்றிப் பேச இதுவா தருணம்? அறிவில்லாத செயலைத் தலைவன் செய்ய நினைத்தால் அதைத் தவிர்க்க முடிந்தால் அன்றே திருத்தலாம். முடியாவிட்டால் (பிறர் பக்கம் சேர்ந்து) போர் செய்தல் சரியோ? போருக்குரியவராகி நின்று (தலைவனுக்கு) முன்னமே உயிரை விடுதல்தான் உண்டவர் செய்யும் நன்றி என்று உணர்ச்சியோடு சொல்லுகிறான். ஒரே விஷயத்தில் உடன்பிறந் தோரிடை எவ்வளவு கருத்து வேற்றுமை!

கருத்திலா இறைவன் தீமை கருதினுல் அதனைக் காத்துத்
திருத்தலாமாகின் அன்றே திருத்தலாம் தீராதாயின்
பொருத்துறு பொருள் உண்டாமோ பொருதொழிற்
குரியராகி
ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க் குரியதம்மா

தருமத்தில் ஈடுபட்டவனுயிருந்தால் முன்பே தீயவனைக் கைவிட் டிருக்கலாமே, ராமனைக் கண்ட பிறகு கொள்கைப்பற்று தீவிர மாகிறதோ? இடித்துக்காட்டு தொக்கி நிற்கிறது.

தமையனைப் பற்றி நினைத்தவுடன் அவன் பெருமையும், நாட் டின் பெருமையும் கண்முன் நிற்கிறது. லங்கை எப்படிப்பட்ட நகரம்! செப்புத் தகடுகள் பதித்து வலியுறுத்திய மதில்சுவர். செல்வம் நிறைந்த நகர். 'ஆனுல் அதை ஒரு பொருட்டாக நினைத்து என் கண் ணெதிரே என் தமையனது உயிரை வாங்கிய பகைவனை வாழ்த்து வேனே? அம்பு பட்டதுபோல் நெஞ்சிலே புண் நிற்குமல்லவா? புண் பட்ட நெஞ்சோடு வாழ்நாள் முழுதும் கும்பிட்டு வாழமாட்டேன். யமனையும் ஆட்டி வைப்பேன்' என்கிறுன்.

செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர் செல்வம் தேறி
வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை
வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை
நெஞ்சொடு ஐய
கும்பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும்
ஆடல் கொண்டேன்

'உன்னைப் போன்றவனல்ல நான்' என்பது தெளிவாகிறது. தம்பியை அன்புடன் அணைத்துப் பேசியவன் கடுஞ்சொற்கள் வீசுவானேன்? போருக்குப் புறப்படும்போது, 'கும்பிட்டு வாழ்வது உனக்கும் உன் தம்பிக்குமே உரியது' என்றனல்லவா ராவணன்? அது மனதில் உறுத்திக் கொண்டேயிருக்கிறது போலும்.

'சரி, நீ புறப்பட்டுப் போ' என்று விடை கொடுக்கிறன். ஆனல் என்மேல் இரக்கப்பட வேண்டியதில்லை என்கிறன். ஏன்? 'ஆக வேண்டியது ஆகும்; அழிவது அழியும். அருகிலே நின்று கட்டிக் காத்திருந்தாலும் போவது திண்ணம்.'

**ஆகுவது ஆகும் காலத்து அழிவதும் அழிந்து சிந்திப்**
**போகுவது அயலே நின்று போற்றிலும் போதல் திண்ணம்**

இந்நிலையில் பிரிகின்றனர் சகோதரர். அவரவர் தனக்கென வகுத்துக்கொண்ட வழியிலே செல்லுகின்றனர். ஆனல் இக்கற்பனைக் காட்சியின் மூலம் பாத்திரங்களின் குணவிசேஷத்தை வற்புறுத்திக் காட்டிவிட்டார் கம்பன்.

போருக்குச் சென்று ராமன் கையால் மடிகிறன். வில்லாண்ட வீரனின் வலிமையை மெச்சுகிறன் கும்பகர்ணன். 'ஐயன் வில் தொழிற்கு ஆயிரம் இராவணர் அமைவிலர்' என்கிறன், ஈடற்ற வில் வீரனை நேரில் கண்டவுடன்!

அதற்கு முன் வழியிலே லக்ஷ்மணனைப் பார்க்கிறன். உடனே தனது சகோதரிக்கு நேர்ந்த வினையை நினைக்கிறன். 'தவம் செய்த பயனக எமதிடையே ஒரு பெண் பிறந்தாள். நிரபராதியான அவளது மூக்கை அறுத்த வீரனே! உன் கையை வெட்டி வீழ்த்தப் போகிறேன், காத்துக்கொள்' என்று இடித்துக் காட்டுகிறன். குடும்பத்திலே பற்றுடைய மனம், பெண்ணுக்குத் தீங்கிழைத்தவனைக் கண்ட சினம் இரண்டும் ஒருங்கே தோற்றமளிக்கின்றன.

**பெய்தவத்தின் ஓர் பெண்கொடி எம்முடன் பிறந்தாள்**
**செய்த குற்றம் ஒன்றில்லவள் நாசி வெஞ்சினத்தால்**
**கொய்த கொற்றவ மற்றவள் கூந்தல் தொட்டீர்த்த**
**கை தலத்திடைக் கிடத்துவென் காக்குதி என்றன்.**

கடைசியில் வெட்டுண்டு சிதைவுற்று மடிந்து போகும் வேளையில் ராமனிடம் ஒரு சிறு வேண்டுகோள் விடுக்கிறன். அது என்ன? 'விபீஷணனைத் தனியே விடாமல் காப்பாற்று' என்கிறன்! 'போரில் ராவணன் இவனைக் கண்டுவிட்டால் தம்பியென்றும் பாராமல் இரக்கமின்றிக் கொன்றுவிடுவான். ஆகையால், இவன் எப்போதும் உன்னையும் லக்ஷ்மணனையும் ஹனுமானையும் விட்டுப் பிரியாமலிருக்கும்படி பார்த்துக்கொள்' என வேண்டுகிறன்.

தம்பியென நினைந்திரங்கித் தவிரான் அத்தகவில்லான்
நம்பி இவன்தனைக் காணின் கொல்லும் இறை நல்கானல்
உம்பியைத்தான் உன்னைத்தான் அனுமனைத்தான்
ஒருபொழுதும்
எம்பிரியான் ஆக அருளுதி, யான் வேண்டினேன்

துரோகம் செய்தவனை ராவணன் மன்னிக்கமாட்டான் என்ற கருத்து ஓங்கி நிற்கிறது. மேலும் போரின் நெருக்கடியான நிலையில் பகைவரினத்திலிருந்து பிரிந்து வந்த விபீஷணனைக் கைவிட்டுத் தனது வெற்றியை முழுமையாக்கிக் கொள்ள வேண்டுமென்று ராமன் நினைத்தால் அதுவும் இயற்கை. இதை உணர்ந்து கொண்ட அனுபவம் பேசுகிறது.

தன்னைப் பற்றியும் ஒரு வேண்டுகோள். மூக்கை வெட்டிவிட்டான் ராமன். இனி 'மூக்கரையன்' என்று தேவர்களெல்லாம் ஏசுவார்கள். ஆகையால் உயிர் நீங்கியதும் தன் தலையைக் கடலில் அமுக்கி விடும்படி வேண்டுகிறான். மூக்கை அறுத்த அவமானம் சூழ்ந்து நிற்பது பொறுக்கவில்லை.

கும்பகர்ணன் இறந்துவிட்டான் என்று தெரிவிக்கிறார்கள். ராவணன் மனம் ஒடிந்து நிற்கிறான். 'இனி எனக்கு ராஜ்யம் வேண்டுமா? ஸீதையே கிடைத்தால் என்ன? கும்பகர்ணன் போனபின் வாழவும் வேண்டுமா?' என்று புலம்புகிறான். உடன்பிறந்த பாசத்தைக் குறிக்கிறார் வால்மீகி.

ராஜ்யேன நாஸ்திமே கார்யம் கிம் கரிஷ்யாமி ஸீதயா
கும்பகர்ண விஹீனஸ்ய ஜீவிதே நாஸ்தி மே ரதி : 7

லக்ஷ்மணன் மூர்ச்சித்து விழுந்தபோது 'ஸீதையைப்போல் மனைவி எங்கும் கிடைப்பாள். சகோதரன் எங்கு கிடைப்பான்?' என்று புலம்பிய ராமனுக்கு ஒப்பாக ராவணனை உயர்த்திவிட்டார் கவி. இரு நிலையிலும் 'ஸீதையால் இனி என்ன?' என்ற பேச்சு எழுகிறது. அது பேச்சளவில்தான் என்பது ரஸம்!

35

# ‘பெண்ணெலாம் நீரே’

சீறிது நேரத்துக்கெல்லாம் ஆவேசம் கொண்டு பேசுகிருன். பழிக்குப்பழி வாங்கத் துடிக்கிருன் ராவணன். ‘என் தம்பியைக் கொன்றவனை இன்றே கொல்லுவேன்’ என்று சொல்லுகிருன். ஆனுல் கும்பகர்ணனை இழந்தபின்‘ இனி இந்திரனைப் போரில் வெல்லுவேனு?’ என ஏங்குகிருன். விபீஷணனையும் நினைக்கிருன். அவன் பேச்சை ஏற்றுக் கொள்ளவில்லையே’ என வருந்துகிருன்; அது அறியாமை என்றும் சொல்லுகிருன். தம்பியை ‘உயர்ந்தோன்’ (மஹாத்மா) என்கிருன்! (யதஞாஞன்மயா ந க்ருஹீதம் மஹாத்மன :)

‘நல்லவனை, தருமம் அறிந்தவனை விரட்டியதாலன்ரோ துயரம் சூழ்ந்து நிற்கிறது?’ என்று வாய்விட்டுச் சொல்லுகிருன். ஆழ்ந்த துயரத்தில் அறிவு தெளிமையுற்று விளங்குகிறது.

தஸ்யாயம் கர்மண : ப்ராப்தோ விபாகோ மம சோகத :
யன்மயா தார்மிக : ஸ்ரீமான் ஸ நிரஸ்தோ விபீஷண : 1

ஒரு தம்பியை இழந்தபொழுதில் எஞ்சியிருப்பவனின் பெருமை புலப்படுகிறது என்பதை நுட்பமாகக் குறிக்கிருர் போலும் கவி.

த்ரிசிரஸ் என்ற புதல்வன் ராவணனைத் தேற்றுகிருன். ‘மேலோர் இவ்வண்ணம் புலம்புவது முறையல்ல. மூவுலகுக்கும் ஈடு கொடுக்கும் வல்லமையுடையவரல்லவா நீர்? பாமரன் போல் நினைத்துப் பேசுகிறீரே’ என்கிருன்.

ஸ கஸ்மாத் ப்ராக்ருத இவ சோசஸ்யாத்மானமீத்ருசம் 2

'பாமரன் போல் பேசாதே' என்பது நல்ல ஆயுதம். ஸீதை யைக் காணுது புலம்பிய ராமனுக்கும் இதே வார்த்தை சொன்னுன் லக்ஷ்மணன். துயரத்தை அடக்கி உட்கொண்டு தெளிந்த மனதோடு செயலில் ஈடுபடுவதே மேலோர்க்கு அழகு என்பது கருத்து.

மகனது சொல்லைக் கேட்டுப் புத்துயிர் பெற்று நிற்கிருன் ராவணன். ('புனர்ஜாத மிவாத்மானம் மன்யதே')

கும்பகர்ணன் போரில் மடிவதற்கு முன் ஒரு சம்பவத்தைக் கற்பிக்கிருர் கம்பன். அவனுக்குப் போர்க்கோலம் செய்து அனுப்பிய பின்னர், மகோதரனின் யோசனையின் பேரில் மாயையால் ஜனகனை உருவாக்கி, அவனை ஸீதைக்குக் காட்டி அவளது மனதை மாற்றப் பார்க்கிருன். இந்த மாயாசனகப் படலத்துக்கு வால்மீகியின் கதை யில் ஆதாரமில்லை. எனினும், ராவணன் சபையில் மகோதரன் கூறிய ஆலோசனையில் இச்சூழ்ச்சி புதைந்து கிடக்கிறது. 'நாங்கள் ஓடிவந்து ராமனைக் கொன்று தின்றுவிட்டோமென்று அறிவிக்கிருேம். உடனே தாங்கள் வெகுமதி வழங்கி, வெற்றியை முழங்கச்செய்து, ஸீதைக்கு ஆறுதல்கூறி, அவள் அனுதையாய் நிற்கும் நிலையில் செல்வமும் நகை யும் வழங்கி மனதைப் பறிகொள்ளுங்கள். கணவன் மடிந்ததை யுணர்ந்த பின்னர் எளிதில் வசமாகிவிடுவாள்' என்று யுக்தி சொன் ஞன். (64-வது ஸர்க்கம்) அதன் வேறுபாடுதான் மாயாசனகப் படலம். கதை ஒருபுறம் இருக்க, இங்கு கவிதையே குறிக்கத்தக்கது.

அசோகவனத்துக்குப் போகிருன் ராவணன். அவளது மனதிலே கலக்கம் விளைவிப்பதென்ற நோக்கத்தோடு போகிருன். ஆனுல் எப்படி ஆரம்பிக்கிருன்?

'எனக்கு வஞ்சனையாக நேர்ந்தது நானே. பெண் வடிவு கொண்ட அமுதம் பருக விரும்பினேன். அதன் அடியிலே விஷமல்லவா படிந்திருக்கிறது? நாள்தோறும் தேய்ந்துபோன நெஞ்சம் நேர்மை யடைந்துவிட்டது! ஆயினும் உன்னை நினைப்பதை விட்டுவிட்டால் ஆவி நீங்கிப் போகுமேயென்று அஞ்சுகிறேன். நான் உனது அடைக் கலம், அமுதில் வந்த தேவீ!' என்கிருன்.

**வஞ்சனேன் எனக்கு நானே மாதரார் வடிவு கொண்ட**
**நஞ்சுதோய் அமுதம் உண்பான் நச்சினேன் நாளுந்தேய்ந்த**
**நெஞ்சு நேரானதும்மை நினைப்புவிட்டு ஆவி நீக்க**
**அஞ்சினேன் அடியனேனும் அடைக்கலம் அமுதின் வந்தீர்**

கலக்கம் விளைவிக்க வந்தவன் தனது கலக்கத்தை வெளியிடு கிருன்! கும்பகர்ணனும் மடிந்துபோவானென்ற பயத்திலே தான்

செய்த வினை தெளிவாய்த் தோற்றுகிறது போலும்! 'அமுதம் உண்பான் நச்சினேன்' என்ற இரண்டாமடி சொற்றொடர் 'அமுதின் வந்தீர்' என்று சிலேடையாக முடிந்து சீதையை லக்ஷ்மியின் உருவமாகக் காட்டும் அழகு பெரிது. (வந்தீர்) என்று மரியாதையடங்கிய சொல் 'இனி தனக்கு இசையமாட்டாள்' என்று உணர்ந்துவிட்ட மனப்பான்மையைக் குறிக்கிறது போலும். (பழக்கமில்லாத பெண்ணை 'நீர்' என்று குறிப்பிடுவது பழந்தமிழ் வழக்கம்.)

முன்பும் பலமுறை 'அடைக்கலம், ஏற்றுக்கொள்' என வேண்டியிருக்கிறான். ஆனால் அது அவள் காதலைப் பெறுவதற்காக. இன்று, 'தேய்ந்த நெஞ்சு நேரானது.'

அது எப்படி நேர் ஆயிற்று? சீதையிடம் பெற்ற தோல்வியால்! 'என்னைத் தோற்கடித்துவிட்டீர். காதலை உண்டாக்கி, நிலவும் தென்றலும் பகையெனச் செய்து, இன்னல் விளைவித்தீர் (இதுவரை இன்னல் ஒன்றும் அறியாதவன் நான்). அமரர்க்கெல்லாம் அச்சம் தீர்த்துவிட்டீர். இன்னும் என்னென்ன செய்துதீர்க்கப் போகிறீர், அம்மா?' என்கிறான், இலங்கை வேந்தன்.

**தோற்பித்தீர் மதிக்குமேனி சுடுவித்தீர் தென்றல் தூற்ற**
**வேற்பித்தீர் வயிரத்தோளை மெலிவித்தீர் வேனில்வேளை**
**ஆர்ப்பித்தீர் என்னை யின்னலறிவித்தீர் அமரரச்சம்**
**தீர்ப்பித்தீர் இன்னமென்னென் செய்வித்துத் தீர்திரம்மா**

('அம்மா' என்ற சொல்லில் அற்புதம் அடங்கியிருக்கிறது).

காதல் என்றால் எப்படி? அதைச் சற்று விவரித்துக் கூறுகிறான். எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் சீதை, எந்தப் பெயரைக் கேட்டாலும் சீதை, எந்தக் கண்களைப் பார்த்தாலும் சீதையின் கண்கள்! அப்படிப்பட்ட காதல். 'இந்நிலையில் காமன் எய்யும் கணைகளால் தோன்றும் புண் எல்லாம் எனக்கே ஆக்கிவிட்டீர். விபரீதம் செய்துவிட்டீரே?' என்று புலம்புகிறான்.

**பெண்ணெலாம் நீரேயாக்கிப் பேரெலாம் உமதேயாக்கிக்**
**கண்ணெலாம் நுங்கண் ஆக்கிக் காமவேள் என்று நாமத்து**
**அண்ணல் எய்வானுமாக்கி வையங்கணையறியத்தக்க**
**புண்ணெலாம் எனக்கேயாக்கி விபரீதம் புணர்த்துவிட்டீர்.**

அழகையும் உடலையும் அங்க அங்கமாக வர்ணிக்கும் நிலை மாறி, தன் உறுதியால் மன்னனைத் தலைபணிய வைத்த பெண்ணின் உள்ளப் பெருமையை உணர்ந்து பேசுகிறான். இது தனக்குக் கிடைக்காத

அரிய பொருள் என்ற அறிவு நெஞ்சு தேய்ந்து நேரான பின்புதான் தோன்றுகிறது.

பாடலை மறுபடி படித்துப் பாருங்கள்: ஓய்ந்துபோன மனப் பான்மை புலப்படும். விளக்கில் விழும் விட்டில் பூச்சியின் உருவமும் கண்ணில் தோன்றும். வால்மீகியின் 'த்வாம் த்ருஷ்ட்வா ஸ்வேஷு தாரேஷு ரதிம் நோபல பாம்யஹம்' என்ற சுலோகம் இதன் அடிப் படையென்று சொல்லலாம். ஆனல் தவிர்க்க முடியாத தவிப்பை ஓவியமெனச் சித்தரித்து விட்டார் கம்பன். (ஆங்கிலத்தில் Obsession என்ற சொல் ஒன்றுதான் இந்நிலையைக் குறிக்க உதவும்.)

'ஈசன் முதல் மனிதர் வரை யாவரும் அஞ்சும்படியான எனது ஆண்மை ஆசை நோயால் மாசடைந்துவிட்டதே' என்கிருன். அந்த நோயின் தன்மையால் 'இறந்து இறந்து பிழைக்கிறேன். இது யாருக்குத் தெரியும்?' என்கிருன்.

**இறந்திறந்துய்கின்றேன்யான் யார் இது தெரியும் ஈட்டார்**

இங்கு ஒரு கற்பனை. சற்று துணிச்சலாகவே உபயோகிக்கிருர் கம்பன். அதில் ஒரு அழகு அமைகிறது. 'முன்பு அகலிகை இந்திரனைத் தழுவி மகிழ்ந்தாள். அதனல் அவளுக்கு என்ன தீமை ஏற்பட்டுவிட்டது?' என்று கேட்கிருனும் ராவணன். தெரிந்த விவரத்தைச் சான்று கூறி மனதைத் திருப்புவது இயற்கை தானே? மேலும், அந்த அகலிகைக்கே அபயம்தந்து அவளைப் புனிதமாக்கிய உன் கணவன் உன்னை ஏசமாட்டான் என்ற கருத்து தொக்கி நிற்கிறது. காமவெறி தலைக்கேறிவிட்டால் எதையும் சொல்வது எளிது என்ற கருத்தும் புதைந்து கிடக்கிறது.

இப்படிப்பட்ட நோய்க்கு மருந்துமில்லை, மந்திரமுமில்லை. 'அமுதம் போன்ற சொல்லும் அந்த வாயமுதமும்தான் தீர்க்கும்' என்கிருன்.

**அந்தரமுணரின் மேல்நாள் அகலிகை என்பாள் காதல்**
**இந்திரனுரத்தைப் புல்கியெய்தினுள் இழுக்குற்ருளோ**
**மந்திரமில்லை வேருர் மருந்தில்லை மையல்நோய்க்குச்**
**சுந்தரக்குமுதச் செவ்வாய் அமுதலால் அமுதச் சொல்லீர்**

இடையே இப்படிக் காரணம் காட்டுகிருனே ஒழிய இறைஞ்சி வேண்டுகின்ற மனப்பான்மையே ஓங்கி நிற்கிறது. தனது மகுடம் தரையிலே படும் வண்ணம் நீண்டு விழுந்து வணங்குகிருன் சீதையை.

அவளுக்கோ உறுதியும் கோபமும் சிறிதுகூடக் குறையவில்லை. 'பழிக்கும் பாவத்துக்கும் அஞ்சாத நிலையில் சொல்லத்தகாத பேச்

சைப் பேசுகிருய். உன் நெஞ்சு இன்னும் பிளந்து போகவில்லையே' என்று ஏசுகிருள். 'தேய்ந்த நெஞ்சு நேரானது' என்கிருன் அவன். அந்த நெஞ்சு கிழியவில்லையே என்று வருந்துகிருள் இவள்!

'இறந்து இறந்து உய்கின்றேன்' என்ருனல்லவா ராவணன்? தானும் அப்படித்தான் என்கிருள். ஆனல் காரணம்? ''அரக்கர் குலத்தை அடியோடழித்து உன் தலையையும் வீழ்த்தி, ராமன் வெற்றியும் அருளும் நிறைந்து நிற்கும் கோலத்தைக் காண வேட்கை கொண்டுள்ளேன். அதனல்தான் என் ஆவி சென்று சென்று திரும்புகிறது'' என்கிருள் ('சென்று சென்றழியுமாவி திரிக்கும்').

இனி இவளை வேண்டுவதில் பயனில்லையென்று பயத்தை உண்டாக்க முற்படுகிருன் ராவணன். 'என்படைகள் அயோத்திக்கும் மிதிலைக்கும் போயிருக்கின்றன' என்று கூறி மகோதரன் படைத்த ஜனகனை வரவழைக்கிருன். (மருத்தன் என்ற அரக்கன் ஜனகன் வேஷம் பூண்டு வருகிருன்.) மனம் கலங்கிப் புலம்புகிருள். 'என்னல் என் தந்தைக்கும் கேடு வந்ததோ?' என்கிருள். கட்டுண்ட தந்தையைப் பார்த்து ஏங்கிய சீதையை ஆசை காட்டி மயக்க முயற்சிக்கிருன் ராவணன்.

'காதல் மேலிட்டு, என்ன செய்கிறேனென்று தெரியாமல் உன் தந்தையைக் கட்டியிழுத்து வந்துவிட்டேன். என் பிழை பொறுப்பாய். நீ விரும்பினல், இலங்கையை இவனுக்குக் கொடுத்துவிட்டு நான் வேறு எங்காவது போய் வாழ்கிறேன்' என்கிருன். அது மட்டுமல்ல. 'இந்திரன் சூட்டிய மகுடத்தை இவனுக்குச் சூட்டி, தேவலோக மடந்தையர் உரிய பணிகள் செய்யும்படி அமைப்பேன். நானே அவர்கள் தலைமையில் நின்று பணிகள் புரிவேன்' என்கிருன். எல்லாம் எதற்காக? சீதை பவழச் செவ்வாயால் ஒரு மொழி சொன்னல் போதும்! (குறிப்பால் உணர்ந்து கொள்வான்.)

**இந்திரன் கவித்த மௌலி இமையவர் இறைஞ்சி யேத்த**
**மந்திர மரபிற்சூட்டி வானவர் மகளிர் யாரும்**
**பந்தரின் உரிமை செய்ய யானிவன் பணியில் நிற்பன்**
**சுந்தரப் பவளவாயால் ஒரு மொழி சிறிது சொல்லின்**

இசைந்தால் என்னென்ன கிடைக்குமென்று பெருமையோடு விவரிக்கிருன். மூதாதையான பிரமனே வந்து வரன்கள் கொடுப்பார் (அவ்வளவு செல்வாக்கு). சில சமயம் சீதையைப் பார்த்தால் அமுதில் வந்த திருமகள் போலத் தோன்றுகிருள். இல்லாவிட்டால், அந்த தேவியையும் ஏவலில் அமைக்கும் சக்தி வாய்ந்தவனும். எல்லாம் ஒரு சொல்லுக்காக.

**செந்திரு நீர் அல்லீரேல் அவளும் வந்து ஏவல்செய்யும்**

'இவ்வளவு அருமை பெருமைகளோடு மூவுலகுக்கும் தலைவனாக ஆளும் செல்வம் உன் தந்தைக்குக் கொடுத்து உன்னைப் பெண்ணாகப் பெற்றபயனைப் பூர்த்தி செய்' என்கிறான்.

ஜனகன் மீது எவ்வளவு கரிசனம்!

**மூவுலகு ஆளும் செல்வம் கொடுத்து அது முடித்தி என்றான்**

(இந்த மூன்று பாடல்களும்

> **விஜித்ய ப்ருத்வீம் ஸர்வாம் நானாநகர மாலினீம்**
> **ஜனகாய ப்ரதாஸ்யாமி தவஹேதோர் விலாஸினீ.**

என்ற சுலோகத்தின் எதிரொலி.)

'தேவலோகத்து மங்கையர் திருமகளுக்குப் பணி செய்வது போல் இங்குள்ள பெண்கள் உனக்குச் சேவை புரிவர்' என்று சீதையை வேண்டி நின்றான் என விவரிக்கிறார் வால்மீகி. அந்த வானவர் மகளிர் எல்லாம் ஜனகனுக்கே பணிப் பெண்களாக நிற்பார்கள் என்று ஆசை காட்டுகிறான் கம்பன் படைத்த ராவணன்!

பதிலுக்கு அவள் என்ன சொல்லுகிறாள்? 'ஏனம் செய்த வண்ணம் ராம பாணங்கள் உன் நெஞ்சிலே புகுந்து புண்களையெல்லாம் வெளிப்படுத்தும். அப்போதுதான் அறிவு ஏற்படும்.' 'புண்ணெலாம் எனக்கே ஆக்கி' என்றானல்லவா? அதற்கு நிவர்த்தி சொல்லுகிறாள்!

இதற்குள் ராவணன் சார்பினருக்கே உரித்தான ஒரு அசட்டுத்தனம் நேர்ந்துவிடுகிறது. ஜனகன் வேஷத்தில் நிற்கும் மருத்தன் ராவணனுக்கு இணங்கும்படி சீதையிடம் கூறுகிறான். 'அமரர்க்கும் அரசனாவான். அவனது தேவியாயிருத்தல் தீதோ?' என்கிறான். சந்தேகம் நிவர்த்தியாகிவிட்டது! ஜனகன் வேஷம் போட்டவன் ஜனகன் ஆவானா?

வேஷதாரியை ஏசி, ராவணனை இடித்துக் காட்டுகிறாள். 'நீ என்னையும் கொல்லமாட்டாய், இங்கு நிற்கும் ஜனகனையும் கொல்ல மாட்டாய். உன்னையே கொன்று கொள்ளவும் மாட்டாய். ராமன் அம்பினால் பூண்டோடு அழிந்து போவாய்' என்கிறாள்.

இந்நிலையில் தூதர்கள் வந்து கும்பகர்ணன் மடிந்த சேதியைத் தெரிவிக்க, ராவணன் மனம் நொந்து புலம்பி அங்கிருந்து போகிறான். நடந்ததெல்லாம் மாயை என்று த்ரிஜடை சொல்லித் தேற்றுகிறாள்.

மாயா சனகப்படலம் அவசியமா? இக்கேள்விக்கு 'வஞ்சனேன்,' 'தோற்பித்தீர்,' 'பெண்ணெலாம் நீரேயாக்கி' என்ற மூன்று பாடல்களே பதில். எம்மொழியிலும் சிறந்த கவிதைத் தொகுப்பு ஒன்று பிரசுரம் செய்தால் அதில் இடம் பெறத்தக்க பாடல்கள்.

# 36

## ‘சீதையை விடுவதுண்டோ?’

தொடர்ந்து போர் நடக்கிறது. பிரிய மனைவியான தான்ய மாலினியின் மகன் அதிகாயன் லக்ஷ்மணன் கையால் மடிகிறான். ராவணன் சிந்தனையில் ஈடுபடுகிறான். மாபெரும் வீரர்கள் மடிந்து போய்க் கொண்டிருப்பதை நினைத்துப் பார்க்கிறான். ஒரு சந்தேகம் தோன்றுகிறது. மாயத்தாலும் வீரத்தாலும் வெல்ல முடியாத ராமன் மனிதன் அல்லவோ? தேவர்கள் வணங்கும் நாராயணன் என்பது இவனோ? முன்பு அரக்கர் குலம் அவனாலல்லவோ நசித்துப்போயிற்று!

**யஸ்ய விக்ரமம் ஆஸாத்ய ராக்ஷஸா நிதனம் கதா :**
**தம் மன்யே ராகவம் வீரம் நாராயணம் அனாமயம்** 1

எப்படியும் நகரைக் காக்கவேண்டும். எல்லோருக்கும் அவரவர் கடமையைச் சொல்லி அனுப்பிவிட்டுத் தன்னிருப்பிடம் செல்லு கிறான் ராவணன். தனிமையில் போகும் அரக்கர் வேந்தன் துயர் எனும் அம்பை நெஞ்சில் தாங்கிச் செல்லுகிறான் என்கிறார் கவி.

**மன்யு சல்யம் வஹன் தீன : ப்ரவிவேச ஸ்வமாலயம்.** 2

(அம்புக் கிரையாகி ஒவ்வொருவராய் மடியும் நிலையில் காமன் அம்பு தாங்கி நின்ற தலைவன் இன்று துயரம்பு பட்டு எளிய நிலையில் இருக்கிறான்.)

துயரம் கோபமாக மாறியவுடன் ‘இந்த்ரஜித்தை வரவழைத் துப் போருக்கனுப்புகிறான். ‘நேரிலோ, பிறர் கண்ணில் படாமலோ போர் செய்ய வல்லவன் நீ. ராம லக்ஷ்மணர்களைக் கொன்று வா’ என்கிறான் ராவணன்.

வேகமாய் விரைந்து செல்லும் இந்த்ரஜித் பாய்ச்சலாய்ப் புகுந்து புறப்படுகிறான் போர்க்களத்தில். வெண்மேகத்திடையே செல்லும் சூரியன் போல் என்கிறார் வால்மீகி. அவன் உருவமோ, வில்லோ கண்ணுக்குத் தெரியவில்லை. அம்புகள் மட்டும் மழைபோல் விழுகின்றன!

இடையே, மறைந்து சென்று மாயையால் சீதைபோல் ஒருத்தியைத் தேரில் இருத்திப் போர்க்களத்தில் இறங்குகிறான். (மருத்தன் போல் இவளும் வேஷக்காரி) முதலில் ஹனுமான் பார்க்கிறான். 'ராமா' வென்றலறியழும் அபலையைப் பார்த்து அவனே குழம்பி விடுகிறான். (சமீபத்தில் பார்த்தவன் அவன் தானே?)

மயிரைப் பிடித்திழுத்து வாளை ஓங்குகிறான் அரக்கன். ஹனுமான் அவளுக்காகப் பரிந்து பேசுகிறான்; அரக்கனைப் புகழவும் தயாராயிருக்கிறான். 'ப்ரும்மரிஷியின் குலத்தில் தோன்றிய நீயா இக்காரியம் செய்கிறாய்! பாவச் செயல் அல்லவா? இரக்கம் வேண்டாமா? வீடிழந்து நாடிழந்து, கணவனைப் பிரிந்து நிற்கும் மைதிலி உனக்கு என்ன தீங்கு செய்தாள்?' என்கிறான்.

ச்யுதா க்ருஹாச்ச ராஜ்யாச்ச ராமஹஸ்தாச்ச மைதிலீ
கிம் தவைஷா அபராத்தாஸி யதேனாம் ஹந்துமிச்சஸி. 3

'இவளை மட்டுமல்ல, ராமனையும் அவன் தம்பியையும் கொன்று, உன்னையும் உன் அரசனையும் கொன்று, எம்மிடை தோன்றிய கடையன் விபீஷணனையும் இன்றே கொல்லப் போகிறேன்' என்று உறுமுகிறான் இந்த்ரஜித். சிற்றப்பன்மீதுள்ள சீற்றம் ஓங்கி நிற்கிறது. அவனை மட்டும் 'கடையன்' (அனார்ய) என்று குறிக்கிறான்.

இமாம் ஹத்வா ததோ ராமம் லக்ஷ்மணம் த்வாம்ச வானர
ஸுக்ரீவம் ச வதிஷ்யாமி தம் ச அனார்யம் விபீஷணம் 4

வேஷக்காரியை ஒரே வீச்சால் வெட்டி வீழ்த்தி, தேரில்ஏறி எக்களித்துச் செல்லுகிறான். பதை பதைக்கும் ஹனுமான் ராமனிடம் விரைந்து சென்று சேதி சொல்லுகிறான். அவனும் ஏங்கி நிற்கிறான்.

தமையனை அணைத்து ஆறுதல் சொல்லுகிறான் லக்ஷ்மணன். ஆனால் இடித்துக் காட்டாமல் இருக்க முடியவில்லை. 'தருமம், தருமம் என்று சொன்னாயே, அனர்த்தம் நேர்ந்துவிட்டதே? இதைத் தவிர்க்க முடியாத தருமத்தால் என்ன பயன்?'

அனர்த்தேப்யோ ந சக்னோதி த்ராதும் தர்மோ நிரர்த்தக: 5

'யார் அதர்மத்தைக் கைப்பிடிக்கிறார்களோ அவர்கள்தான் முன்னுக்கு வருகிறார்கள். அதைக் கண்டு தரும வழியில் செல்பவர்களும் தடுமாறுகிறார்கள் ஆகையால் இதெல்லாம் வீண்' என்கிறான்.

யஸ்மாதர்த்ரா விவர்தந்தே யேஷ்வதர்ம : ப்ரநிஷ்டி த :
க்லிச்யந்தே தர்மசீலாஸ்ச தஸ்மாதேதௌ நிரர்த்தகௌ 6

தருமத்தை மேலும் நிந்தித்துப் பேசுகிறான். 'எல்லோரும் அவரவர் இஷ்டப்படிதான் நடக்கிறார்கள். இதுதான் தருமம் என்று நான் நினைக்கிறேன்' என்கிறான். 'நீ முடிதுறந்து வந்தாயே, அப்போதே தர்மத்தை வேரோடு அழித்துவிட்டாய்' என்றும் சொல்லிவிடுகிறான். மனக் கடுப்பு பீறிட்டுக்கொண்டு வருகிறது. (விட்டு வந்ததால்தானே இத்தனை இன்னல்கள்?)

தர்மமூலம் த்வயா சின்னம் ராஜ்யம் உத்ஸ்ருஜதா ததா 7

கடைசியாக உலக ரீதியை சுருக்கமாய்ச் சொல்லி விளங்க வைக்கிறான். 'எவனிடம் செல்வம் இருக்கிறதோ அவனுக்குத்தான் தோழரும் உறவினரும். பொருளுடையவனே மனிதன். அவனே பண்டிதன், சமர்த்தன், புத்திமான், நற்குணங்களனைத்தும் பொருந்திய பெருமகன்' என்கிறான். 'பொருளில்லார்க்கிவ்வுலகில்லை' என்ற பழமொழியின் விரிவுரை!

யஸ்யார்த்தாஸ்தஸ்ய மித்ராணி யஸ்யார்த்தாஸ்தஸ்ய பாந்தவா :
யஸ்யார்த்தா : ஸபுமான் லோகே யஸ்யார்த்தா : ஸச பண்டித :
யஸ்யார்த்தா : ஸச விக்ராந்தோ யஸ்யார்த்தா : ஸசபுத்திமான்
யஸ்யார்த்தா : ஸ மஹாபாகோ யஸ்யார்த்தா : ஸமஹாகுண ; 8

முன்பு காட்டில் வசிக்கத் தொடங்கியபோது அயோத்தியில் நடந்ததை நினைத்துப் பேசிய ராமன் 'காமமே தர்மத்தையும் அர்த்தத்தையும் விடப் பெரிது. தந்தை செய்ததைப் பார்' என்றான். ('காம ஏவ அர்த்த தர்மாப்யாம் கரீயானிதிமே மதி:'). எல்லாமிழந்த நிலையில் இன்று அர்த்தம் (செல்வம்) பெரிது என வாதாடுகிறான் லக்ஷ்மணன். தருமத்தைப் பற்றியே பலரும் பேசுகின்றனர். அறம், பொருள், இன்பம் இவை மூன்றையும் நிலைமைக்கேற்றபடி பல கோணங்களில் ஆராய்ந்து பார்க்கும் இயல்பைச் சித்தரிக்கிறார் வால்மீகி.

பொருளைக் கைவிட்டதால் விபரீதங்கள் நேர்ந்தன எனினும், செயல்கொண்டு துயரை நீக்கலாம் என்கிறான் இளையவீரன். 'எழுந்திரு, அண்ணா. உன் பெருமையும் வீரமும் உனக்கே தெரியவில்லையா?' என்று கூறி உற்சாக மூட்டுகிறான்.

கிம் ஆத்மானம் மஹாத்மானம் ஆத்மானம் நாவபுத்யஸே 9

இதற்குள் விபீஷணன் வருகிறான். 'ராவணனா ஸீதையைக் கொலை செய்வான்? மாயையால் வானரப் படையைக் கலங்கச் செய்துவிட்டான் இந்த்ரஜித். அவன் நிகும்பிலையாகம் செய்யப் போகிறான்.

அதற்குள் தடுக்க வேண்டும். உடனே வீரர்களை என்னுடன் அனுப்புங்கள்' என்றுகூறி உற்சாகப்படுத்துகிறுன்.

துயரத்திலாழ்ந்திருக்கும் ராமன் அவன் சொல்லைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. பேச்சு சற்று வியக்கத்தக்கதாயும் இருந்ததோ? 'மீண்டும் சொல்' என்கிறுன்.

பூயஸ்தத்ச்ரோதும் இச்சாமி ப்ருஹியத்தே விவக்ஷிதம் 10

விவரமாய்ச் சொல்லுகிறுன் விபீஷணன். 'ஸீதையை அடைய வேண்டுமானுல், நான் சொல்வதைக் கேளுங்கள். நிகும்பிலை யாகம் செய்யப் போயிருக்கிறுன் இந்த்ரஜித். அது முடிந்துவிட்டால் அவனை எவராலும் அணுக முடியாது. நாமெல்லோரும் அழிந்துவிட்டோம் என்று வைத்துக்கொள்ளலாம். அப்படி வரம் பெற்றிருக்கிறுன். அதற்குள் அவனைத் தாக்கவேண்டும். ஆனுல் இந்த்ரஜித் மடிந்தால் ராவணனும் அவனேடு அரக்கர் குலமே அழிந்ததென்று வைத்துக்கொள்ளலாம். விரைவில் லக்ஷ்மணனை அனுப்புங்கள்' என்கிறுன் விபீஷணன். நுட்பமான உளவையும் சொல்லி, முன் நின்று தாக்கவும் உதவுகிறுன் சரணடைந்த அரக்கன்!

ராமன் ஆசிகூறி அனுப்புகிறுன் தம்பியை. 'அரக்கனைக் கொன்று வா. ஹனுமான், ஜாம்பவான் முதலியோரை உதவிக்கழைத்துச் செல். இவ்வரக்கப் பெருமகன் அவ்விடமெல்லாம் நன்கு அறிந்தவன். உன் பின்னேயே வருவான்' என்கிறுன்.

அயம்த்வாம் ஸசிவைஸ்ஸார் தம் மஹாத்மா ரஜனிசர:
அபிஞஸ்தஸ்ய தேசஸ்ய ப்ருஷ்டதோனுக மிஷ்யஸி. 11

வழி காட்டி, உளவு சொல்ல விபீஷணன், ஆனுல் போரில் உதவ ஹனுமான் என்று வகுத்துக் கூறியது ராஜதந்திரம், புத்திகூர்மை, இரண்டையும் எடுத்துக் காட்டுகிறது. விபீஷணனை மட்டும் நம்பி லக்ஷ்மணனை அனுப்பிவிட்டால் அங்கு போய் என்ன நேருமோ? இனம் இனத்தைச் சேரும் என்ற பழமொழியும் நினைவுக்கு வந்தது போலும்.

அடர்ந்த காட்டின் நடுவிலே அமர்ந்து வேள்வி நடத்துகிறுன் இந்த்ரஜித். சுற்றிலும் அரக்கர் குழுமி நிற்கின்றனர். 'கூட்டத்தை முதலில் கலை. அப்போதுதான் அவனைப் பார்க்கலாம்' என்று யுக்தி சொல்லுகிறுன் விபீஷணன். லக்ஷ்மணன் அம்புகளை வீச, வானரர் மரங்களையும் கற்களையும் எறிந்து கூட்டத்தைக் கலைக்கின்றனர். 'அதோ ராவணன் மகன்' என்று காட்டுகிறுன் விபீஷணன்.

அருகில் சென்று 'போருக்கு வா' என்றழைக்கிறுன் லக்ஷ்மணன். அவன் நிமிர்ந்து பார்க்கிறுன். எதிரே விபீஷணன்! லக்ஷ்மணனைப் பொருட்படுத்தாமல் சிற்றப்பனைப் பார்த்துப் பேசுகிறுன் இளைஞன். 'தந்தைக்கு உடன் பிறந்த சகோதரன், எனக்குத் தந்தை போன்ற

வன். வயதில் பெரியவன். நீ என்னை வஞ்சிக்கிறாயே? உறவையும், இனத்தையும், உடலிலோடும் ரத்தத்தையும், தருமத்தையும் புறக் கணித்துவிட்டாய், மூடனே! தன்னினத்தவருடன் சேர்ந்து வாழ் வதற்கும் தாழ்ந்தவரையண்டிப் பிழைப்பதற்கும் உள்ள வித் யாசத்தை நீ உணரவில்லையே. ராமன் உன்மூலம் உபாயம் அறிந்து எங்களைப் போரில் வென்றால், பின் உன்னைக் கொல்வான். ஏனெனில், ராவணன் தம்பியென்ற முறையில் நீ ராமனுக்கு சத்ருதான்' என் கிறான்.

**இஹத்வம் ஜாதஸம்வ்ருத்த : ஸாக்ஷாத்ப்ராதாபிதுர்மம**
**கதம் த்ருஹ்யஸி புத்ரஸ்ய பித்ருவ்யோ மம ராக்ஷஸ**

.....................................................................................................

.....................................................................................................

**சத்ருஸ்த்வமஸி ராமஸ்ய ராவணஸ்யானுஜோஸி யத்** 12

இத்தகைய சொல்லை லக்ஷ்மணன் எதிரில் சொல்லிவிட்டான் இந்த்ரஜித்! அதற்குப் பரிகாரம் செய்யும் வண்ணம் பேசுகிறான் விபீ ஷணன். 'நான் அரக்கர் குலத்தில் பிறந்த போதிலும் அரக்கரியல்பு அற்றவன். கொடுமையும் அதர்மமும் எனக்குப் பிடிக்காது. ஆதலால் தருமத்தை விட்டு விலகிய தமையனைக் கைவிட்டேன். பிறர் மனைவி யைக் கைப்பற்றியவனை, தீப்பற்றி எரியும் வீட்டைத் துறப்பதுபோல் துறந்துவிட வேண்டும் என்று சொல்லுவார்கள். தீய குணங்கள் காரணமாகக் கைவிட்டேன் உன் தந்தையை. இனி லங்கையும் இல்லை, நீயும் இல்லை, உன் தந்தையும் இல்லையென ஆகப்போகிறது. தசரதன் புதல்வரை அவமானத்துக்குள்ளாக்கிய பின் நீ வாழ முடியாது. மாந் தருக்குள் வீரனான லக்ஷ்மணனுடன் போர் செய்ய வா' என்கிறான். தனது முழுவிசுவாசமும் ராமன் கக்ஷியில் இருப்பதாகக் காட்டத் துடிக் கிறான் போலும்!

இந்த்ரஜித் படபடப்பாகப் பேசினான்; ரத்தபாசம் ஒலித்தது. விபீஷணன் நியாயம் கூறுகிறான்; அரசியல் வாதம் நாணமற்றுத் தோற்றுகிறது.

இந்நிலையில் கம்பனும் இந்த்ரஜித்தைப் படபடப்புள்ள இளைஞனாகத்தான் காட்டுகிறார். ராம லக்ஷ்மணர் சொல்வதையே சொல்லுகிறானாம் விபீஷணன். அதனால் அவனை 'முரசு' என்று ஏசு கிறான் சிறுவன். யார் எப்படி அடித்தாலும் அப்படியே ஒலி செய்யு மல்லவா முரசு!

**இரட்டுறு முரசமென்ன விசைத்ததே யிசைக்கின்றாய்.**

'ராமனுடன் சேர்ந்து ராஜ்யத்தைப் பெற்றாலும் நீ யாரை ஆளப்போகிறாய்?' என்று கேட்கிறான். ஏன்? 'நீருள்ள வரையில்தான் மீன். அதேபோல ராவணன் இருக்கும்வரை அரக்கர். அவர்கள் அனை

வரும் வேரோடு மடிந்து போவாரேயன்றி மீளமாட்டார். நீ லங்கைக்குள் வரும்போது ஒருவனாய் நிற்பாய். தனிமையில் வசிக்க வேண்டி வரும். அரசு வீற்றிருக்கச் சுற்றிலும் யார் உளர்?' என்று இடித்துக் காட்டுகிறான்.

நீருளதனையும் உள்ள மீனென நிருதரெல்லாம்
வேருளதனையும் வீவர் இராவணனோடு மீளார்
ஊருளது ஒருவன்நின்றாய் நீ உளை உறைய நின்னோடு
ஆருளர் அரக்கர் நிற்பார் அரசு வீற்றிருக்க, ஐயா.

விபீஷணன் ஒருவன் நீங்கலாக லங்கை முழுதும் ராவணனுக்காக உடன் நின்று உயிர்விடும் என்று கூறித் தங்கள் பெருமையையும், நீங்கிச் சென்ற சிற்றப்பனின் சிறுமையையும் ஒப்பிட்டுக் காட்டுகிறான்.

'நான் தருமத்தையே துணையாய்க் கொண்டு வாழ்பவன்' என்கிறான் விபீஷணன். 'அதர்மத்தைத் துணைகொண்டு மாளாப் பழியொடு வாழமாட்டேன். நான் மெய்ம்மையைத் துறக்கவில்லை. அணுகி வரும் பொய்மையைத் துறந்தேன். ராவணன் பிழை செய்த அக்கணமே நான் உடன்பிறந்தவனல்லாமல் போய்விட்டேன்' என்கிறான்.

அறந்துணையாவதல்லால் அருநரகமைய நல்கும்
மறந்துணையாக மாயாப்பழியொடும் வாழமாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை எய்தும் பொய்மையே
துறப்பதல்லால்
பிறந்திலேன் இலங்கைவேந்தன் பின் அவன்
பிழைத்தபோதே

('ந ரமே தாருணேனாஹம் ந சாதர்மேண வை ரமே' என்ற ச்லோகத்தின் எதிரொலி.)

'நீ பெறப்போகும் செல்வமெல்லாம் எனது அம்பு பட்டவுடன் இறுதிச்சிறப்பு என ஆகிவிடும்' என்கிறான் இந்த்ரஜித். செல்வமும் அரசும் பெறவே ராவணனைத் துறந்தான் விபீஷணன் என்ற கருத்து அடங்கியிருக்கிறது. எதிரி கக்ஷியில் சேர்ந்த பின் தருமத்தின் பெயரால் சொல்வது எதுவும் ஏற்குமா?

பின் லக்ஷ்மணனைப் பார்த்து வீரவாதம் செய்கிறான் இந்த்ரஜித். 'சொல்லின் வலிமையை விட்டொழித்துச் செயலில் காட்டு' என்று தூண்டுகிறான் லக்ஷ்மணன்.

வாக்பலம் த்யஜ துர்புத்தே க்ரூர கர்மாஸி ராக்ஷஸ
குரு தத்கர்ம யேனாஹம் ச்ரத்தத்யாம் தவகத்தனம் 13

இருவரும் நெருங்கிப் போர் செய்கின்றனர். உடலெல்லாம் புண்ணுகி நிற்கும் வீரர் இலையுதிர்ந்து பூ நிறைந்த செம்பருத்தி மரமெனத் திகழ்கின்றனர் என்கிருர் வால்மீகி.

ஸுபுஷ்பாவிவ நிஷ்பபத்ரௌ வனே சால்மலிகிம்சுகௌ 14

விபீஷணனும் அவனுடன் வந்த நால்வரும் போரில் புகுந்து அரக்கரைத் தாக்குகின்றனர். இந்த்ரஜித் அவனை லக்ஷியம் செய்யாமல் லக்ஷ்மணனை எதிர்க்கிருன். வெகு நேரம் சண்டையிட்டும் முடிவில்லாமல் நடக்கிறது. லக்ஷ்மணன் இந்த்ரஜித்தினுடைய தேர்ப் பாகனையும் குதிரைகளையும் குறித்து அம்பெய்கிருன். சமமாக நின்று போர் செய்யட்டும் என்ற நோக்கமோ? தேர் இழந்த இந்த்ரஜித் தரையில் நிற்கிருன். தனது படையினரைத் தொடர்ந்து போரை நடத்தச் சொல்லி உற்சாகப்படுத்தி ஊருக்குள் சென்று நொடிப் பொழுதில் தேரிலேறித் திரும்புகிருன்.

இந்த இடைவேளையில் தந்தையைக் கண்டு பேசியதாகக் கற்பனை செய்கிருர் கம்பன். அம்பு தைத்த தோளைக் கண்டு கலங்குகிருன் ராவணன். நிகும்பிலை வேள்வி முற்றுப்பெறவில்லை யென்றறிந்து கொண்டு 'நிகழ்ந்ததென்ன?' என்று கேட்கிருன். 'என் மாயத்தை யெல்லாம் உன் தம்பியே உளவு சொல்லித் தவிர்த்து விட்டான்' என்கிருன் மகன். இதற்கு மாருக, எதிரியின் தம்பியைப் புகழ்ந்து பேசுகிருன். அவன் சினம் கொண்டால் மூவுலகையும் அழிப் பான் என்கிருன். எப்படி? 'நான் எய்த பாணங்களெல்லாம் அவனை வலம் செய்து போயின. வேறு என்ன வேண்டும்? நமது குலம் செய்த பாவத்தால் கொடும் பகையைத் தேடிக் கொண்டாய்' என்று தகப் பனிடம் சொல்லுகிருன். வானையும் நிலத்தையும் படைத்த திருமாலின் படையில் லக்ஷ்மணன் நின்றதால்தான் என்கிருன்.

**நிலம்செய்து விசும்புஞ்செய்து நெடியமால் படைநின்ருனை**
**வலஞ்செய்து போயிற்றென்ருல் மற்றினி வலியதுண்டோ**
**குலஞ்செய்த பாவத்தாலே கொடும்பகை**
**தேடிக்கொண்டாய்**
**சலஞ்செயின் உலகமூன்றும் இலக்குவன் முடிப்பன்தானே.**

பகைவனின் திறமையை மெச்சுகிருன் வீரன். 'ஆனல் நான் பயப்படவில்லை' என்கிருன். ஒரு யோசனையும் கூறுகிருன். 'நீ அந்த சீதையின்பால் உள்ள ஆசையை விட்டுவிட்டால் வந்தவர் கோபம் தணிந்து இங்கிருந்து போய்விடுவர். நாம் செய்த தீமையையும் பொறுத்துக் கொள்வர். நான் சொல்வதெல்லாம் உன் மேலுள்ள அன்பினுல்' என்கிருன்.

ஆதலால் அஞ்சினேன் என்றருளலே ஆசைதான் அச்
சீதைபால் விடுதியாயின் அனையவர் சீற்றம் தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்பர் உன்மேல்
காதலால் உரைத்தேன் என்றான் உலகெலாம் கலக்கி
வென்றான்

இந்த்ரஜித்தை 'உலகெலாம் கலக்கி வென்றவன்' என்று குறிக்கிறார் கம்பன். அத்தகைய வீரனே தாழ்ந்து போகும்படி யுக்தி கூறுகிறான் தந்தைக்கு.

ஆனால் ராவணனா கேட்பவன்? 'சீதையை விடு' என்று இவன் ஒருவன் சொல்லாததுதான் குறை! இன்று இவனும் சொல்லிவிட்டான். ஆனால் குலம் செய்த பாவத்தால் பகை வந்தது என்று சொன்னானல்லவா? 'பிறர்மீது பழிபோடாதே' என்பவன்போல் இறுமாப்புடன் பதில் சொல்லுகிறான். 'என்னை நம்பியேதான் இந்த நெடும் பகை தேடிக் கொண்டேன்' என்கிறான். 'முன்பு போரில் மடிந்தவரெல்லாம் பகையை முடிப்பர் என்றோ, பின் எஞ்சியிருப்பவர் வென்று திரும்புவர் என்றோ, நீ அவரை வென்று தருவாய் என்றோ நான் கருதவில்லை. என்னையே நோக்கியிருக்கிறேன்' என்கிறான்.

முன்னையோர் இறந்தோரெல்லாம் இப்பகை
முடிப்பரென்றும்
பின்னையோர் நின்றோரெல்லாம் வென்றவர்ப்
பெயர்வரென்றும்
உன்னை யவரை வென்று தருதியென்றுணர்ந்தும் அன்றால்
என்னையே நோக்கி யான் இந்நெடும்பகை
தேடிக்கொண்டேன்.

பகை தேடிய விதத்தைச் சொல்லிவிட்டான். இனி, ஸீதையை விடுதல் பற்றிச் சொல்லுகிறான். 'நீ சிறியவன். ஆதலால் பேதைமை பேசிவிட்டாய். நீர்மேல் எழும் குமிழிபோன்ற உடலை விடுதலே அல்லாமல் சீதையை விடுவதுண்டோ? புகழுடன் கூடிய என் கதை நிலை பெறப் போகிறது' என்கிறான். 'உயிர்போனாலும் சீதையைவிடமாட்டேன்' என்பது கருத்து.

பேதைமை உரைத்தாய் பிள்ளாய், உலகெலாம்
பெயரப்பேராக்
காதை என் புகழினோடு நிலைபெற அமரர் காண
மீதெழுமொக்குள் அன்னயாக்கையை விடுவதல்லால்
சீதையை விடுவதுண்டோ இருபது திண்தோள் உண்டாய்

புகழுடன் கூடிய கதையை மேலும் விவரிக்கிறான். 'வெற்றி பெறாமல் போனாலும், ராமன் பெயர் உள்ளவரை என் பெயரும் நிலை

பெற்று நிற்குமல்லவா, வேதமுள்ள அளவும்? இறப்பது இயற்கை. அதைத் தவிர்க்க முடியுமோ? இன்றைக்கிருப்பார், நாளை மாள்வார். ஆனால் புகழுக்கு அழிவு உண்டோ?' என்கிறான்.

வென்றிலன் என்றபோதும் வேதமுள்ளளவும் யானும்
நின்றுளன் அன்றோ மற்றவ்விராமன்பேர் நிற்குமாயின்?
பொன்றுதல் ஒரு காலத்துத்தவிருமோ பொதுமைத்தன்றோ
இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கும் இறுதி உண்டோ?

பின்னர் நேரப்போகும் சரித்திரப் புகழை ராவணன் வாயிலாகவே அமைத்துக் கூறுகிறார் கம்பன். இதில் வீரவாதம் ஓரளவு இருப்பது தெளிவு. மேலும், வீரர்களுக்கு இறுதிக் காலத்தில் வரப் போகும் சம்பவங்கள் மனதில் தோற்றும் என்பது மரபு. அதைக் காவியங்களில் பயன்படுத்துவது கவிகளின் இயல்பு.

கடைசியாக, இந்த்ரஜித் கூறியது ஏன் பேதமை என்றும் எடுத்துரைக்கிறான் கருத்தில் தெளிமை குன்றாத மன்னன். 'சீதையை விட்டுவிட்டால் தேவர்கள் எல்லாம் ஒருங்கே வந்து கட்டிப் போடுவார்களேயன்றி என்னை நான் என நினைப்பாரோ? முன்னாள் பல திசைகளில் சென்று பெற்ற வெற்றியெல்லாம் என்ன ஆவது? மடிந்து போனாலும் எளிதில் மடியமாட்டேன்' என்கிறான்.

விட்டனன் சீதை தன்னை யென்றலும் விண்ணோர் நண்ணிக்
கட்டுவதல்லால் என்னை யானெனக் கருதுவாரோ?
பட்டனன் என்றபோதும் எளிமையிற் படுகிலேன் யான்
எட்டினோடிரண்டுமான திசைகளை எறிந்துவென்றேன்.

இன்று இந்நிலையில் சீதையை விட்டால், ராவணன் பயந்து போய்விட்டான் எனக் கருதி இதுவரை பயந்துகிடந்த எதிரிகளெல்லாம் ஒன்றுகூடித் தாக்குவார்கள். ஆதலால் விடுதல் பேதைமை.

'சரி, நீ போய்க் களைப்பாறு. நான் போருக்குச் செல்லுகிறேன்' என்றுகூறித் தேரை வரவழைக்கிறான் ராவணன். இடைமறித்துத் தானே செல்லுகிறான் புதல்வன். போகும்போது கடைக்கண்ணால் நோக்கி நோக்கிக் கண்ணீர் சொரியச் செல்லுகிறான் என்று முடிக்கிறார் கம்பன். இச்சம்பவத்தின் மூலம் இந்த்ரஜித்தை மேலும் ஒருபடி உயர்த்துகிறார் கவி. தனது இறுதிப்பொழுதை உணர்ந்தும் புகழையும் சீதையையும் விட மனமில்லாத ராவணனையும் உயர்த்துகிறார்.

தேரிலேறித் திரும்பி வரும் இந்த்ரஜித்தைக் கண்டு வியக்கிறார்கள் வானரர். தொடர்ந்து போர் நடக்கிறது. லக்ஷ்மணன் கடுஞ் சினத்தோடு இந்த்ராஸ்திரம் தொடுக்க முனைகிறான். (முன்பு தானவர்களை வெல்ல இந்த்ரன் உபயோகித்த அஸ்திரம்). அதை வில்லில்

தொடுத்து, ராமன் மேல் ஆணையிடுகிறான். 'தருமமும், உண்மையும் ராமன் இடைவிடாது போற்றி வருவது உண்மையானால், வீரத்தில் அவனுக்கிணை எவருமில்லையென்பது மெய்யானால், இந்த்ரஜித்தைக் கொல்லுவாயாக' என்று கூறிக் காதுவரை நாணையிழுத்து அம்பை ஏவுகிறான்.

> தர்மாத்மா ஸத்யஸந்தஸ்ச ராமோ தாசரதிர்யதி
> பௌருஷே ச அப்ரதித்வந்த : சர ஏனம் ஜஹி ராவணிம் 15

இதற்கிடையில் களைப்பின்றிப் போர் செய்யும் இந்த்ரஜித்தை மெச்சுகிறான் லக்ஷ்மணன் என்கிறார் கம்பன். 'ஆண்மையும் ஆற்றலும் இவனுடன் ஒழிந்துவிடும்' என்று கூறி வியக்கிறானும். ராவணனிடம் லக்ஷ்மணனைப் புகழ்ந்து பேசிய வீரனுக்கு பதில் மரியாதை அளிக்கிறார் கவி.

இந்த்ரஜித்தின் தலையைக் கொண்டு வருகிறார்கள் ராமனிடம். விரைந்து வந்து மகிழ்ச்சியோடு சேதி சொல்பவன் விபீஷணன் என்கிறார் வால்மீகி!

> ந்யவேதயத ராமாய ததா ஹ்ருஷ்டோ விபீஷண : 16

புகழ்ச்சியுரையைக் கேட்டு வெட்கித்து நிற்கும் லக்ஷ்மணனை அருகில் அழைத்து அணைத்து மடியிலிருத்தி உச்சி முகர்ந்து பாராட்டுகிறான் ராமன். நீ தலைமையில் நின்றதால் இந்த்ரஜித் ஒழிந்தான். இனி ஸீதையும் நாடும் கைக்கெட்டுவது அரிதல்ல' என்கிறான்.

இந்நிலையில் 'தம்பியுடையான் பகைக்கு அஞ்சான்' என்ற பழமொழியை நிலைநாட்டிய பெருமையை லக்ஷ்மணனுக்கு அளிக்கிறார் கம்பன். மேலும் ராமன் சொல்லுகிறானும் : 'இவ்வெற்றி உன்னாலன்று, தெய்வத்தின் சிறப்பும் அன்று, வீபீஷணன் தந்த வெற்றி.' அவன் உளவு சொல்லி அழைத்துச் சென்றதே முக்கிய காரணம் என்பதை வற்புறுத்திக் கூறுகிறார்.

ராவணனிடம் சென்று துயரச் செய்தி தெரிவிப்போரும் 'விபீஷணன் உதவியால்தான் உன் மகன் மாண்டு போனான்' என்று சொல்லுகிறார்கள். புலம்புகின்ற ராவணன் 'இந்த்ரஜித் ஒருவனின்றி இவ்வுலகமே சூன்யமாயிருக்கிறதே' என வருந்துகிறான்.

பிரலாபித்துக் கொண்டேயிருக்கும்போது பெருங் கோபம் வந்துவிடுகிறது. கண்ணில் தீப்பொறி பறக்கிறது. ஸீதையைக் கொல்லக் கருதுகிறான்! 'மாயையால் ஸீதையின் தலையைக் காட்டினான் என் மகன். அதை உண்மையாக்குகிறேன். அவளைத் துலைத்துவிடுகிறேன்' என்று கூறிக் கையில் வாளை ஏந்தி விரைந்து செல்லுகிறான் அசோக வனத்துக்கு.

தொலேவிலேயே பார்த்துவிடுகிருள் ஸீதை. பலரும் தடுக்க, அவர்களைத் தள்ளித் தன்னை நோக்கி வரும் அரக்கனைப் பார்த்த வுடன் நடுங்குகிருள். 'நான் இணங்குவேனென்ற நம்பிக்கை யிழந்து என்னைக் கொல்ல வருகிருனே? அல்லது அவர்களை கொன்றபின் என்னையும் கொல்ல வருகிருனே? அல்லது மகனிறந்த துயரத்தில் அவர்களைக் கொல்ல முடியாமல் என்னை முடிக்கப் பார்க் கிருனே?' என்றெல்லாம் நினைக்கிருள். 'ஹனுமான் பேச்சைக் கேட் காமல் போய்விட்டேனே! இன்று கணவனுடன் கவலையற்றிருந்திருப் பேனே' என்கிருள். சதி செய்த கூனி, மந்தரையையும் சபிக்கிருள்! (துயரத்துக்கெல்லாம் ஆதி காரணம் அவள்தானே?)

திகஸ்து குப்ஜாம் அஸதீம் மந்தராம் பாபநிஸ்சயாம் 17

ஹனுமானுடன் தப்பியோடி இருக்கலாம் என்ற ஏக்கம் நொடிப் பொழுதில் தோன்றி மறைவதை நாடக இயல்போடு அமைக்கிருர் வால்மீகி. உயிருக்கே ஆபத்து வரும்போது 'செய்த செயல்களும் கடைப்பிடித்த கொள்கையும் வீண் போயினவே' என்ற எண்ணம் இயற்கையல்லவா? யாருக்கு? பதிவிரதைக்கா ——?

ஸுபார்ச்வன் என்ற மந்திரி ஒருவனே துணிவாக இடைமறிக் கிருன். தாய்மாமன் என்ற முறை வேறு.

'ராவணு! ஸாக்ஷாத் குபேரனின் தம்பி நீ. கோப வெறியில் தருமத்தைக் கைவிட்டு ஸீதையைக் கொல்ல நினைக்கிருயே? உனது கோபத்தை ராமனிடம் காட்டு. இந்த அழகி உனக்குக் கிடைப் பாளென்று எதிர்பார், வீரனே' என்கிருன்.

கதம் நாம தசக்ரீவ ஸாக்ஷாத் வைச்ரவணுனுஜ
த்வமேவது ஸஹாஸ்மாபீ ராகவே க்ரோதம் உத்ஸ்ருஜ. 18

நீதியை ஏற்றுக்கொண்டு, வாளை எறிந்துவிட்டுத் தன் இருப் பிடம் செல்லுகிருன் இந்த்ரஜித்தைப் பெற்ற பெருவீரன். மகனிறந்த துயரத்திலும் தரும நீதியைச் செவியில் ஏற்ற பெருமை இணையற் றது. 'உனக்கொரு நாளும் தீங்கிழைக்க மாட்டேன்' என்று ஸீதைக் குக் கொடுத்த வாக்கையும் கடைசிவரை காப்பாற்றிவிட்டான்.

ராவணன் ஏன் ஸீதையைக் கொல்ல நினைத்தான்? மகுடம் தரையில் தொடும்படி இறைஞ்சி வேண்டியும், செல்வம் அனைத்தை யும் அவளது காலடியில் வைத்தும் தன்னை உதாசீனம் செய்யும் ஒரு பெண் மாபெரும் வீரனுன மகனின் முடிவுக்குக் காரணமாயிருக் கிருள் என்பது மனதைத் துளைக்கிறது போலும். காதலில் தோல்வி யும் போரில் மகனையிழந்த துயரமும் மனதில் குழப்பத்தை உண் டாக்கியிருக்கலாம். செய்வதற்கு இனி வேறு ஒன்றும் இல்லை என்ற ஆத்திரமும் இருக்கலாம்.

இந்திரஜித்தின் மரணத்தை நினைத்துப் புலம்புகிறாள் மண்டோதரி. அவள் பேச்சிலே ஒரு கருத்து வெளிப்படுகிறது. அதுவே காரணமாகவும் இருக்கலாம். 'சீதையென்ற அமுதம் கலந்த நஞ்சினால் நாளைக்கு இலங்கை வேந்தனும் இவ்விதம் ஆகிவிடுவானே என்று அஞ்சுகிறேன்' என்கிறாள்.

**அஞ்சினேன் அஞ்சினேன் அச்சீதையென்று அமிழ்தில்**
**தோய்ந்த**
**நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித் தகைய னன்றே.**

'நஞ்சுதோய் அமுதம் உண்பான் நச்சினேன்' என்று ராவணனே சொன்னானல்லவா? அதன் எதிரொலி.

இப்படித் தனது முடிவுக்கே காரணமாகப் போகிற சீதையைக் கொன்று விடலாம் என நினைத்தான் போலும். அவனைத் தடுத்து அறிவு கூறும் பெருமையை மகோதரனுக்கு அளிக்கிறார் கம்பன். 'வெற்றிகள் பல கண்டறிந்த இவ்வாள் நாணத்தால் குன்றிப் போகுமேயன்றி பெண்ணின் உயிரைப் போக்குமோ?' என்கிறானும். 'புலஸ்திய வம்சத்தில் தோன்றிப் புண்ணியம் பெற்ற நீ மாளாப் பழியைத் தாங்கும் அளவுக்கு மனம் குழம்பிவிட்டாயோ?' என்கிறான்.

அரக்கர் இயல்பும் அந்தணர் மரபும் மாறி மாறி வதைக்க, தன்னிலை தடுமாறித் தவிக்கிறான் ராவணன். ஸீதையும், வெற்றியும் தனக்குக் கிடைப்பதரிது என்ற உண்மையே மனதைத் துளைக்கிறது.

37

# அரக்கரின் இந்திரன் வீழ்ந்தான்

மகன் இறந்த துயரத்தால் வெகுண்ட ராவணன் 'ராமனைச் சூழ்ந்துகொண்டு கொல்லுங்கள்' என உத்தரவிடுகிறான். வாளும் வில்லும் பலவித ஆயுதங்களும் ஏந்திச் செல்லுகின்றனர் அரக்கர்.

வானரர்களும் அரக்கரும் போரில் ஈடுபட்டிருக்கும் சமயம் வில் லேந்திய ராமன் வருகிறான். எதிரிகளின் நடுவே புகுந்து அம்புகளை மழையெனப் பொழிகிறான். அரக்கர்கள் ராமனது வலிமையையும் அதன் விளைவாக உண்டான சேதத்தையும் உணருகிறார்களே ஒழிய, ராமனைப் பார்க்க முடியவில்லை. இன்பமளிக்கும் பொருள்களையனுப விப்பவர் அப்பொருள்களில் உள்ள பரம்பொருளை உணராததுபோல் என்கிறார் வால்மீகி. விளைவு தெரிகிறது. காரணம் தெரியவில்லை.

இந்த்ரியார்த்தேஷு திஷ்டந்தம் பூதாத்மான மிவ ப்ரஜா : 1

பரம்பொருள் என்ற கருத்தை வற்புறுத்தி 'முன்னே உளன், பின்னே உளன், முகத்தே உளன், அகத்தின் தன்னே உளன்' என் கிறார் கம்பன். அரக்கருக்கு புறத்தே தோன்றிய தோடல்லாமல் உள் ளேயும் புகுந்து நின்றான் என்று விவரிக்கிறார்.

உள்ளன்றியும் புறத்தேயும் உற்றுளனும் என உற்றான்

அரக்கரின் ப்ரமை அதிகரிக்கிறது. ஒருவரையொருவர் அடித்து மடியும் அளவுக்கு ப்ரமை உண்டாக்குகிறது காந்தர்வாஸ்திரம். எங்கு பார்த்தாலும் ராமன். ஆனால் ராமன் ஒருவனே கண்ணில் தோன்றுகிறான். 'ஸஹஸ்ர சிர்ஷாபுருஷ :' என்ற கருத்தை விவரித்து 'ஆயிரம் கையும்கூடி இரண்டு கை ஆனது' என்கிறார் கம்பன்.

மடிந்தவர் போக எஞ்சியிருப்போர் லங்கைக்குள் ஓடிச் செல்லு கின்றனர். ஊரில் எங்கும் ஓலம். 'ஐயோ என் மகன் என் கணவன் என் தமையன்' என்று பலவாறு புலம்புகின்றனர் பெண்கள். ஒவ் வொரு வீட்டிலும் எழும் கூக்குரல் ராவணன் காதில் விழுகிறது.

பொங்கி எழும் கோபத்தோடு வீரவாதம் செய்கிருன். 'ராமனை இன்றே யமனிடம் அனுப்புகிறேன். கணவனையிழந்தோர், மகனை யிழந்தோர், தமையனையிழந்தோரின் துயரைப் போக்கி அவர்களின் கண்ணீரைத் துடைக்கிறேன்' என்று ஆணையிடுகிருன்.

ஹதோ பர்த்தா ஹதோ ப்ராதா யாஸாம்ச தனயா ஹதா :
வதேனுத்ய ரிபோஸ்தாஸாம் கரோம்யாஸ்ர ப்ரமார்ஜனம் 2

எட்டு குதிரைகள் பூட்டிய தேரில் ஏறி கம்பீரமாக வெளிக் கிளம்புகிருன் ராவணன். 'வருக தேர்! என, வந்தது' என்று நாடக முறையில் வர்ணிக்கிருர் கம்பன்.

தேரில் ஏறுவதற்கு முன் சிவனைத் துதித்து, இம்மைக்கும் மறு மைக்கும் ஏற்றபடி பூசை செய்து, மறைகள் சொல்லியபடி தானம் எல்லாம் செய்து, விரும்பியவர்க்கெல்லாம் விரும்பிய பொருளைக் கொடுத்துப் போருக்குக் கிளம்புகிருன்.

**ஈசனை இமையா முக்கண் இறைவனை இருமைக் கேற்ற**
**பூசனை முறையில் செய்து திருமறை புகன்ற தானம்**
**வீசினன் இயற்றி மற்றும் வெட்டென வேட்டோர்க் கெல்லாம்**
**ஆசறநல்கி ஒல்காப் போர்த்தொழிற்கு அமைவது ஆனன்.**

ராமனைக் கண்டு அரக்கர் ப்ரமையடைந்தது போலவே அரக் கரின் மூலபலத்தைக் கண்டு வானரரும் கலங்கினர் என்கிருர் கம்பன். 'கும்பகர்ணன் செய்த கடும்போர் இன்னும் நினைவிருக்கிறது. இப் போது வந்திருக்கும் தலைவனுக்குத் தலை பத்து! நம் ஹனுமானும் சுக்ரீவனும், வில்வீரர் இருவரும் ஒருங்கே சேர்ந்து காத்தபோதிலும், அது தம்முயிரைக் காக்கவே போதாது. ஊரைப் பார்க்கப் போக லாம். நிறைய கனியும் காய்களும் உண்டு. தங்க இடமும் (குகைகள்) உண்டு. மனிதர் ஆண்டால் என்ன, அரக்கர் ஆண்டால் என்ன?' என்று அங்கதனிடம் கூறுகிருனும் ஒரு சேனுதிபதி.

**அனுமன் ஆற்றலும் அரசனதாற்றலும் இருவர்**
**தனுவினுற்றலும் தம்முயிர் தாங்கவும் சாலா**
**கனியும் காய்களும் உணவுள, முழையுள கரக்க**
**மனிதராளின் என் இராக்கதன் ஆளின் என் வையம்?**

(பாடலின் கடைசி அடியே 'ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன' என்ற பழமொழிக்கு ஆதாரம் என்று கூறுவர்)

பயந்து ஓடும் வானரர்களை நிறுத்தி உற்சாகம் ஊட்டுகிறான் அங்கதன். 'எத்தனை அரக்கர்கள் இருந்தால் என்ன? அவர்கள் பக்ஷம் தருமம் இல்லை. அறத்தைப் பாவம் வெல்லும் என்று கேட்டிருக்கிறீர்களா?' என்கிறான்.

**எத்தனை அரக்கரேனும் தருமம் ஆண்டில்லை அன்றே**
**அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்றறிந்ததுண்டோ?**

தேரிலேறி வரும் ராவணன் கம்பீரமாக வந்தான் என்கிறார் வால்மீகி. அக்கருத்தை வளர்க்கிறார் கம்பன். பல தலைகளும் தோள்களும் தோன்றுகின்றனவாம். கிரீடங்கள் விளங்க நிமிர்ந்து நிற்கும் ராவணன் முன்னாள் பரந்த கடலையும், சூழ்ந்த நிலத்தையும் சேர்த்து உலகளந்தவன் வளர்ந்துவிட்டதுபோல் தோன்றுகிறான்!

**விலகளந்தரு கடல்தரை விசும்பொடு வியப்ப**
**உலகளந்தவன் வளர்ந்தனனும் என உயர்ந்தான்.**

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பது திருமாலின் அடைமொழி. அதை இங்கு ராவணனுக்குத் தந்து, 'உலகளந்தவன் வளர்ந்தது போல்' என்று கூறியது அற்புதம் காட்ட முற்படும் கவியின் துணிவைக் குறிக்கும்.

இதற்குள் மகோதரன், மகாபார்ச்வன் என்ற இரு வீரர்களும் மடிந்துவிட்டார்கள் என்ற செய்தி வருகிறது. மிகுந்த கோபத்தோடு தோன்றுகிறான் ராவணன். 'இத்துயரையெல்லாம் போக்குகிறேன். சுக்ரீவன் முதலியோரைக் கிளையெனக் கொண்ட மரத்தை வெட்டி வீழ்த்துகிறேன். ராமனென்ற மரத்திலேயல்லவா ஸீதையென்ற பழம் இருக்கிறது?' என்கிறான்.

ராமவ்ருக்ஷம் ரணே ஹன்மி ஸீதாபுஷ்ப பலப்ரதம்
ப்ரசாகா யஸ்ய ஸுக்ரீவோ ஜாம்பவான்குமுதோ நல: 3

இங்கு வீரம் ததும்பும் சூளுரை ஒன்று அமைக்கிறார் கம்பன். சீதை தனது மலர்க் கையால் வயிறு பிசைந்து அரற்றித் துயர்க் கடலில் மூழ்க வேண்டும். அல்லது அந்நிலை மயன்மகளாகிய மண்டோதரிக்கு நேர வேண்டும். இந்த இரண்டிலொன்று இன்று நிகழ வைப்பேன்' என்கிறான். 'ராமன் மடிய வேண்டும், அல்லது நான்' என்ற நிலை வந்துவிட்டது.

மன்றல் அம்குழல்சனகி தன் மலர்க்கையால் வயிறு
கொன்று அலம் தலைக்கொடு நெடுந்துயரிடைக் குளித்தல்
அன்றிது என்றின் மயன் மகள் அத்தொழில் உறுதல்
இன்றிரண்டினுென்று ஆக்குவென் தலைப்படின் என்றான்.

சினங்கொண்டு விரைந்து வரும் ராவணன் வழியிலே நிற்கும் வானரரை விரட்டி ராமன் முன் வந்து நிற்கிறான். தோல்வியே கண்டறியாத ராமன்! அருகிலே லக்ஷ்மணன். விஷ்ணுவோடு கூடி நிற்கும் இந்த்ரனைப்போல் தோன்றினான் ராமன் என்கிறார் வால்மீகி.

ஸ ததர்ச ததோ ராமம் திஷ்டந்தம் அபராஜிதம்
லக்ஷ்மணேன ஸஹ ப்ராத்ரா விஷ்ணுநா வாஸவம்யதா 4

ராமனை அடிக்கடி இந்த்ரனுக்கு ஒப்பிடுகிறார் கவி. இன்று லக்ஷ்மணன் விஷ்ணுபோல் தோன்றுகிறான்.*

போர் நடக்கிறது. இடையே விபீஷணனைத் தாக்க முற்படுகிறான் ராவணன். லக்ஷ்மணன் அதைத் தடுக்க முனையவே அவன் மேல் கோபத்தைக் காட்டுகிறான் அரக்கன்.

இதைக்கண்ட ராமன் வானரரை லக்ஷ்மணனுக்குத் துணையாகச் சூழ்ந்து நிற்கச் சொல்லி, ராவணனை எதிர்க்கிறான். வீராவேசத்தில் ஆணையிடுகிறான் : 'இன்று உலகம் ராவணனோ அல்லது ராமனோ அற்றுப்போகப் போகிறது. நாடிழந்து, காடு வாழ்ந்து, மனைவியிழந்த துயரத்துக்கு இன்றே நிவர்த்தி தேடிக்கொள்ளப் போகிறேன். கடல் கடந்த பயனும் இன்று காண்பீர்' என்கிறான்.

அராவணம் அராமம்வா ஜகத் த்ரக்ஷ்யத வானரா :
ராஜ்யநாசம் வனே வாஸம் தண்டகே பரிதாவனம் 5

கடைசியாக ஒரு சொல்லிலே உயர்நிலையை எட்டிவிடுகிறார் வால்மீகி. 'இன்று ராமனுடைய ராமத்வம் போரிலே காண்பீர்' என்கிறான் ராமன்.

அத்ய ராமஸ்ய ராமத்வம் பச்யந்து மம ஸம்யுகே. 6

'ராமத்வம்' என்ற சொல் புதிய கற்பனை. 'பும்ஸத்வம்,' 'வீரத்வம்' என்பதுபோல் 'ராமத்வம்' என்ற சொல்லைப் படைத்து ராமனுடைய தனித்துவத்தைக் குறிக்கும் அழகு இணையற்றது.

ராவணனது சக்தியாயுதத்தால் அடிபட்டு மூர்ச்சித்துக் கிடக்கிறான் லக்ஷ்மணன். அதைக்கண்டவுடன் ராமனுக்கு வீரமெல்லாம்

---

*பண்டைய காலத்தில் ஆசிரியர் இந்த்ரனையே பெருந் தெய்வமாகக் கொண்டாடினர். விஷ்ணுவுக்கு முதலிடம் கிடைத்தது பின்னாட்களில்தான்.

மாயமாய் மறைந்துபோய் உடன்பிறந்த பாசமே ஓங்கி நிற்கிறது. 'இனிப் போர் செய்து என்ன பயன்? உயிர்தரித்து என்ன பயன்? ஸீதை கிடைத்தால்தான் என்ன? ராஜ்யம் கிடைத்தாலென்ன? ஊரூராகச் சென்று பார்த்தால் மனைவிகள் கிடைப்பர், உறவினர் கிடைப்பர். ஆனால் உடன் பிறந்த சகோதரன் எங்கு கிடைப்பான்?' என்று புலம்புகிறான்.

நஹி யுத்தேனமே கார்யம் நைவ ப்ராணைர் நஸீதயா
ப்ராதரம் நிஹதம்த்ருஷ்ட்வா லக்ஷ்மணம் ரணபாம்ஸுஷு
அத்ய ஸர்வம் அஹம் த்யக்ஷ்யே நிஹத்வா ராவணம் ரணே
தேசே தேசே களத்ராணி தேசேதேசே ச பாந்தவா:
தம்து தேசம்ந பச்யாமி யத்ர ப்ராதா ஸஹோதர: 7

ஸுஷேணன் என்ற வானரன், 'லக்ஷ்மணன் இறந்துவிடவில்லை' யென்று ஆறுதல் கூறி மூலிகைகள் கொண்டுவருமாறு ஹனுமானை ஏவுகிறான். விசல்யகரிணியென்ற மூலிகையைத் தேடப் போன ஹனுமான் குழப்பத்தில் பெயர் மறந்து, அந்தச் சிறு குன்றையே பெயர்த்தெடுத்து வருகின்றான். லக்ஷ்மணன் மூர்ச்சை தெளிந்து எழுந்து நிற்கிறான். அவனை அணைத்து 'மீண்டும் உயிர் பெற்றுவிட்டாய்' என வாழ்த்துகிறான் ராமன்.

உணர்ச்சி மேலிட்டு, 'நீ மாண்டால் வெற்றி பெற்று என்ன பயன்?' என்று ராமன் கேட்க, அதற்கு லக்ஷ்மணன் பதில் கூறுகிறான்: 'செய்த ஆணையைக் காப்பாற்று. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். விபீஷணனுக்கரசு செய்ய நீ ராவணனை வென்றுதான் ஆக வேண்டும்' என்று நினைவுறுத்துகிறான்.

நைராச்யம் உபகந்தும்தே ததலம் மத்க்ருதே அனக
வதேன ராவணஸ்யாத்ய ப்ரதிஞாம் அனுபாலய. 8

வில்லையெடுத்துப் போருக்குச் செல்லுகிறான் ராமன். எதிரே தேரிலேறி நின்று அம்புகளை வீசுகிறான் ராவணன். 'இது சமமான போர் அல்ல' என்று நிச்சயித்த தேவர்கள் இந்த்ரனிடம் கூற, இந்த்ரன் தனது தேரை அனுப்பிக் கொடுக்கிறான். மாதலியென்ற சாரதி இந்த்ரனின் பெருவில்லையும் கவசத்தையும் கொடிய அம்புகளையும் எடுத்து வருகிறான்.

தேரில் ஏறி ஒளிபெற்று விளங்குகிறான் ராமன். கடும் போர் தொடங்குகிறது. தேவர்களும் அரக்கரும் கூடிக் குழுமி நிற்கின்றனர். தத்தம் இனத்து வீரர் வெற்றி பெற வேண்டுமெனத் துதிக்கின்றனர்.

சூலம் ஒன்றையெடுத்துச் சுழற்றி ராமன்மீது வீசுகிறான் ராவணன். 'இது ஒன்றைக் கொண்டே கொல்லுவேன் உன்னை'

யென்று சீறுகிருன். வில்லையெடுத்து இடைவிடாது அம்புதொடுத்து அந்த சூலத்தைத் தவிர்த்துவிடுகிருன் ராமன்.

இதைக் கண்டு வியக்கிருன் ராவணன். இப்பெருஞ் செயலை யாரால் செய்ய முடியும்? 'இவன் சிவன் அல்ல, பிரமனும் அல்ல, திருமாலும் அல்ல. நான் வரத்தால் பெற்றதையெல்லாம் துலைக்கின்ருன். தவத்தில் பெரியோனுகவும் இருக்க முடியாது. தவத்தைச் செய்துவிட்டு அதை இப்படி முடித்துவிடும் தன்மையுடையவனுக இல்லை. பின் யார்? இவன்தான் வேதங்களுக்கு முதற்காரணனுகிய பரம்பொருளோ?' என வியக்கிருன்.

**சிவனே அல்லன் நான்முகன் அல்லன் திருமாலாம்**
**அவனே அல்லன் மெய்வரமெல்லாம் அடுகின்ருன்**
**தவனே என்னின் செய்து முடிக்கும் தரன் அல்லன்**
**இவனேதான் அவ்வேத முதற் காரணன்? என்ருன்.**

'தம் மன்யே ராகவம் வீரம் நாராயணம் அனுமயம்' என்று முன்பு சொன்ன வாக்கின் எதிரொலி. யாவராலும் அடக்கமுடியாத வலிமை பயனற்றுப் போன நிலையில் ஆதி பரம்பொருளை நினைக்கிருன் சளைத்து நிற்கும் வீரன்.

பாணங்கள் உடலில் தைத்து ரத்தம் கசிய பூத்து நிற்கும் அசோகமரம் போல் தோன்றினுன் ராவணன் என்கிருர் வால்மீகி. 'புல்லாசோக இவாபபௌ.' (அசோக மரத்தை விடமாட்டார் கவி!)

ராமன்மீதும் பாணங்கள், காயங்கள், ரத்தம். ஆனுல் இருவரும் மெய்மறந்து போர் செய்கின்றனர். (இரண்டிலொன்று என்ற முடிவு இருவரும் செய்ததல்லவா?) அருகிலே நெருங்கியதும் ரோஷத்தோடு பேசுகிருன் ராமன். 'நான் இல்லாதபொழுது எளிய நிலையில் நின்ற ஸீதையை வலிமை கொண்டிழுத்து வந்து 'நானே சூரனென்று பேசுகிருய்! பிறர் மனையாளைத் தூக்கி வரும் சூரனே! அபலையை அபகரித்துப் பேடித்தனமான செயல் செய்துவிட்டு சூரனென்று சொல்லிக் கொள்கிருய்! திருடனைப்போல் ஸீதையைக் கொண்டு வந்தாயே, வெட்கமாயில்லை?' என்கிருன்.

மயாவிரஹிதாம் தீனும் வர்த்தமானும் மஹாவனே
வைதேஹீம் ப்ரஸபம் ஹ்ருத்வா சூரோஹம் இதிமன்யஸே
.................................. ...... ....... .... ......... . . ...
நைவ லஜ்ஜா அஸ்தி தே ஸீதாம் சோரவத் வ்யபகர்ஷத: 9

'அன்று என்னெதிரே ஸீதையைத் தீண்டியிருந்தால் உடனே உன் சகோதரன் கரனை (யமலோகத்தில்) சந்தித்திருப்பாய். இன்று என் அம்புகள் உன் தலையை வீழ்த்தும். நரிகளும் கழுகுகளும் உன் ரத்தத்தைக் குடிக்கும்' என வீரவாதம் செய்கிருன் ராமன். உன்

டான ரோஷத்தால் பலம் இரு மடங்காயிற்று என்கிறுர் கவி. உடனுகவே மகிழ்ச்சியும் தோன்ற, ராமனின் போர்த்திறன் பெருகு கிறது. நொடிப்பொழுதில் பல பாணங்கள். சரமாரி.

இதையெல்லாம் நன்கு கவனிக்கிறுன் ராவணனின் தேர்ப்பாகன். பதிலுக்கு ராவணன் எய்யும் அம்பிலே வேகம் இல்லே, விரைவு இல்லே என்று கண்டதும் மனதில் கவலே தோன்றுகிறது. தேரை வேறு திக்கிலே செலுத்திச் செல்லுகிறுன் தலேவனின் நிலேயைக் கண்டு கலங் கும் சாரதி.

கண்கள் சிவக்கச் சினங்கொண்டு அதட்டுகிறுன் ராவணன். 'என்னே வலிமையற்றவனெனக் கருதினுயா? பௌருஷம் இல்லேயா? ஒளியிழந்த பேடியென ஆக்கிவிட்டாயே? என் மாயையெல்லாம் எங்கு போயிற்று? என் பாணங்கள் தீரவில்லேயே! மதிகெட்டவனே! உன் சொந்த புத்தியால் இப்படிச் செய்துவிட்டாயே' என்று கதறுகிறுன்.

'பகைவன் கண்ணெதிரே என் தேரைத் திருப்பி, நான் நெடுநாட்களாய்த் தேடிப் போற்றிய கீர்த்தியையும், வீர்யத்தையும், தேஜஸ்ஸையும் இன்று நீ அழித்துவிட்டாய்' என்று புலம்புகிறுன் உடலெல்லாம் புண்பட்ட வீரன்:

த்வயா சத்ரோ: ஸமக்ஷம் மே ரதோயம் அபவாஹித:
த்வயா அத்யஹி மம அனுர்ய சிரகால ஸமார்ஜிதம்
யசோவீர்யம் ச தேஜஸ்ச ப்ரத்யயஸ்ச விஞசித: 10

'நீ எதிரியின் நன்மையைக் கோருபவன்' என்றும் ஏசுகிறுன். விநயமாகப் பேசுகிறுன் சாரதி. 'உனது களேப்பைக் கண்டேன். இக் குதிரைகளும் களேத்துவிட்டன. அதனுல்தான் திருப்பினேன்' என் கிறுன்.

மனம் குளிர்ந்துவிடுகிறது ராவணனுக்கு. 'திருப்பி விடு போர்க் களத்துக்கு. ராமன் முன்னே கொண்டுபோய் நிறுத்து. எதிரிகளேக் கொல்லாமல் ஒருநாளும் திரும்பமாட்டான் ராவணன்' என்கிறுன்.

ரதம் சீக்ரம் இமம் ஸூத ராகவாபிமுகம் குரு
நாஹத்வா ஸமரே சத்ருன் நிவர்த்திஷ்யதி ராவண: 11

'இவனே வேத முதற்காரணன்' என்று வியக்கும்படியானவன் எதிரிலே நிற்கிறுன். கை சளேத்து உடல் களேத்த நிலே. ஆயினும் குன்றுத வீரம்! புகழைப் போற்றும் பண்பு! இச்சிறு சம்பவத்தின் மூலம் ராவணனின் பெருமையைக் கடைசி முறையாக ஏற்றிக் காட்டு கிறுர் வால்மீகி.

இங்கு ராமனும் களேத்து நிற்கிறுன். மீண்டும் எதிரே வந்து நிற்கும் ராவணனேப் பார்த்துச் சிந்தையில் நிற்கிறுன் ராமன் என் கிறுர் கவி.

ததோ யுத்த பரிச்ராந்தம் ஸமரே சிந்தயாஸ்திதம். 12

இந்நிலையில் அகஸ்திய முனிவர் அருகே வந்து 'ஆதித்ய ஹ்ருதயம்' என்ற மந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கிறார். 'எவ்வித எதிரியையும் வெல்லும்' என்கிறார். சூரியனைத் துதிக்கும் இவ் வத்தியாயம் கதிரவனின் பெருமைகளைப் பாடும் பாடலென அமைந் துள்ளது. இடையே ஓரிரு பெருங்கருத்துகளும் தோன்றுகின்றன. 'உலகிலே உயிருள்ள பொருள்கள் அனைத்தையும் அழிப்பதும் அவனே, ஆக்குவதும் அவனே. தனது கிரணங்களால் காக்கிறான், பொசுக்கு கிறான், நீர் பெற்றுத் தழைக்கச் செய்கிறான்.'

நாசயத்யேஷவை பூதம் ததேவ ஸ்ருஜதி ப்ரபு:
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத்யேஷ கபஸ்திபி: 13

வில்லையெடுத்து மனம் தேர்ந்து கிளம்புகிறான் ராமன். மீண்டும் போர். எப்படிப்பட்ட போர்? 'கடலுக்குக் கடல்தான் உவமை. வானத்துக்குவமை வானம். அதேபோல் ராம ராவணயுத்தத்துக்கு அதுவே உவமை' என்று வர்ணிக்கிறார் கவி.

ககனம் ககனாகாரம் ஸாகர: ஸாகரோபம:
ராம ராவணயோர் யுத்தம் ராம ராவணயோ ரிவ. 14

இரவு பகல் இடைவிடாது நடக்கிறது போர். 'பிரும்மாஸ் திரத்தை ஏவி விடு. இவனுக்கு அழிவு காலம் நெருங்கிவிட்டது' என்றுகூறித் தூண்டுகிறான் மாதலி. மந்திரம் சொல்லி அம்பு தொடுக் கிறான் ராமன். அது நேராகச் சென்று ராவணன் மார்பைப் பிளக் கிறது. பயங்கரமான வலிமை பெற்றவன், அரக்கரின் இந்திரன் தேரிலிருந்து தரையில் விழுந்தான் என்கிறார் கவி. முன்பு இந்திரனின் வஜ்ராயுதத்தால் அடிபட்டு விழுந்த வ்ருத்ராசுரனைப்போல் என்றும் சொல்லுகிறார்.

கதாஸுர் பீமவேகஸ்து நைர்ருதேந்த்ரோ மஹாத்யுதி:
பபாத ஸ்யந்தனாத் பூமௌ வ்ருத்ரோ வஜ்ரஹதோ யதா 15

ராமனை இந்திரனுக்கொப்பாகச் சொன்னதோடல்லாமல், மடிந்து கிடக்கும் வீரனுக்கு 'அரக்கரின் இந்திரன்' என்ற பட்டமும் சூட்டுகிறார் வால்மீகி.

விழுந்து கிடக்கும் ராவணனைப் பார்க்கிறான் விபீஷணன். சோகம் பீறிட்டுக்கொண்டு வருகிறது. ('சோகவேகபரீதாத்மா' என்று குறிப்பிடுகிறார் கவி.) அறிவுகொண்டு நியாயம் சொன்ன போதிலும் பாசமே ஓங்கி நிற்கும் நிலை. 'வீரனே' என்று ஆரம்பிக் கிறான், தமையனைப் புகழ்கிறான். 'அடக்கம் நிறைந்தவனே! நீதியறிந் தவனே! தரையில் விழுந்து கிடக்கிறாயே?' என்று புலம்புகிறான்.

வீர விக்ராந்த விக்யாக விநீத நயகோவித 16

சொன்ன சொல்லையும் கேளாமல் தானும் உணராமல் மடிந்து விட்டான் என்கிறான். ஆனால், 'நல்லோருக்கெல்லாம் அணை போன்ற வன், தருமத்தின் வடிவம், பராக்ரமத்தின் இருப்பிடம், பாமரனைப் போல் அழிந்துவிட்டானே' என்றும் வருந்துகிறான்.

கத ; ஸேது : ஸுநீதானாம் கதோ தர்மஸ்ய விக்ரஹ :
கத : ஸத்வஸ்ய ஸங்க்ஷேப : ப்ரஸ்தாவானாம் கதிர்கத : 17

விபீஷணனை விரட்டிய பின் ராவணனுக்கு அவன் பெருமை நன்கு தெரிந்ததல்லவா? அதேபோல் இந்நிலையில் ராவணனின் அருமை பெருமையெல்லாம் உணர்ச்சியோடு எடுத்துச் சொல்லு கிறான் தம்பி.

சீதையின்பால் கொண்ட காதலே கொன்றுவிட்டது என்று வர்ணிக்கிறார் கம்பன். ''உண்டாலொழிய உயிரைப் போக்காது நஞ்சு. ஆனால் கண்டாலே உயிரை வாங்கிவிட்டதே ஜானகியென்னும் நஞ்சு' என்கிறானும் விபீஷணன்.

**உண்ணாதே உயிர் உண்ணாது ஒரு நஞ்சு சனகியெனும்**
**பெருநஞ்சு உன்னைக்**
**கண்ணாலே நோக்கவே போக்கியதே உயிர், நீயும்**
**களப்பட்டாயே.**

(இப்பாடல்

**உண்டார் கண் அல்ல தடுநருக் காமம்போல்**
**கண்டார் மகிழ் செய்தல் இன்று.**

என்ற குறளை நினைவுறுத்துகிறது. கள் உண்டார்க்கு மயக்கம் தரும். காமம் கண்டார்க்கும் மயக்கம் தரும் என்பது பொருள்.)

'சீதையிடம் அவன் கொண்ட காதல் எனும் நோயும் நீ பூண்ட கடுஞ்சினமும் சேர்ந்து அவனைக் கொன்றுவிட்டன. இல்லையேல், அவனை எவரால் வெல்ல முடியும்?' என்கிறானும். ஏன்? ராவணன் 'அமரர் கூற்றம்' என்கிறான்.

விபீஷணனைத் தேற்றுகிறான் ராமன். 'இவன் எளிதில் மடிய வில்லை. போரில் வெகு சமர்த்தன். உயர்ந்த திறனையும் உற்சாகத்தை யும் காட்டினான். இப்படி இறந்தவரைக் குறித்துப் புலம்பலாகாது. அது க்ஷத்திரிய தர்மம் அல்ல' என்று தன் கையால் விழுந்த வீரனுக் குத் தக்கபடி மரியாதை செலுத்துகிறான் ராமன்.

நாயம் விநஷ்டோ நிஸ்சேஷ்ட: ஸமரே சண்ட விக்ரம:
அத்யுன்னத மஹோத் ஸாஹ: பதிதோயம் அசங்கித:
நைவம் வினஷ்டா: சோச்யந்தே க்ஷத்ர தர்மம் அவஸ்திதா: 18

'பட்டனன் என்றபோதும் எளிதில் படுகிலேன் யான்' என்று ராவணன் தன் மகனிடம் பெருமையோடு சொன்ன வாக்யம் நினைவுக்கு வருகிறது.

ராவணன் செய்த போர் வியக்கத்தக்கது. குற்றமற்றது. ஆதலால் அவனே க்ஷத்ரியன் என்ற அளவுக்கு ராமன் புகழ்கிறான். மேல் நடக்க வேண்டிய காரியங்களைச் செய்யச் சொல்லுகிறான். 'சாகும்வரையில்தான் விரோதம். நமது காரியம் முடிந்துவிட்டது. இனி இவனுக்கு ஈமக்கிரியைகள் செய்ய வேண்டும். இவன் உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும்' என்றுகூறி க்ஷத்ரியனுக்குரிய பெருந்தன்மையைக் காட்டுகிறான் ராமன். எதிரியாயினும் மாபெரும் வீரனைச் சகோதரனெனக் கொள்வதைவிடப் பெரிய செயல் என்ன? இருதரப்பிலும் கௌரவம் உயருகிறது.

மரணாந்தானி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜனம்
க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ. 19

38

# இரு உத்தமிகள்

ராவணன் இறந்த செய்தி லங்கையில் பரவியதும் அரண் மனையிலிருந்து அழுத கண்ணோடு வெளி வருகின்றனர் அரக்கியர். பிறர் தடுத்தும் கேளாமல் தரையில் புரண்டு தலைவிரித்து அழுகின்றனர். 'அரசனே!' என்றும் 'நாதா!' என்றும் கூக்குரல். மையைப் பரப்பியதுபோல் விழுந்து கிடக்கும் ராவணனது உடலைச் சுற்றிப் புரளும் மங்கையர் அறுபட்ட கொடிபோல் தோன்றினர் என்கிறார் வால்மீகி. (வெட்டுண்டபோதிலும் கொடிகள் மரத்தையே சுற்றிக் கொள்ளும் இயல்பு உவமையாகிறது.)

ராவணன் உடலை ஒருத்தி அணைத்துக்கொண்டழுகிறாள். மற்றொரு பெண் காலைத்தொட்டு அழுகிறாள். பலர் பலவிதமாய்ப் புலம்புகையில் ஒருத்தி மாண்டுபோன மன்னனின் மடியில் தலையை வைத்து அவன் முகத்தையே பார்த்த வண்ணம் அழுகிறாள்.

காசித் அங்கே சிர : க்ருத்வா ருரோத முகம் ஈக்ஷதீ' 1

துயரக் காட்சிகளையும் கூர்ந்து கவனித்து வர்ணிக்கும் திறனை இங்கு காண்கிறோம். கம்பனும் உணர்ச்சியோடு வர்ணிக்கிறார்.

பெண்கள் வரும்போது, காலில் அணிந்திருந்த நூபுரம் 'புலம்பிற்று,' சிலம்பு 'நொந்து அழுதது' என்கிறார். எங்கும் துயரம் சூழ்ந்திருக்கும் நிலையில் தள்ளாடிவரும் மங்கையரின் அணிகலன்களும் புலம்பும் ஒலியையே எழுப்புவதுபோல் தோன்றுமல்லவா?

ராவணனது பெருமைகளை யெல்லாம் நினைத்து நினைத்துப் புலம் புகிறார்கள். 'ஒருவர் பேச்சையும் கேளாமல் தன் வாழ்வை முடிப் பதற்கென்றே கொண்டுவந்தானே ஸீதையை' என்றும் வருந்துகிறார் கள்.

நடுவே மண்டோதரி நிற்கிறாள். 'உன் சினத்தைக்கண்டு இந் திரனும் நடுங்கினான். தேவ, கந்தர்வ, சாரணர்களெல்லாம் பல திசை யிலும் ஓடினர். இன்று ராமன் என்ற மனிதனுக்குத் தோற்றாயே?' என்கிறாள்.

'என்றைக்கு கரன் மாண்டானோ அன்றே தெரியும் இவன் மனிதனல்ல என்று. ஹனுமான் இங்கு அடியெடுத்து வைத்தபோதும் வானரர் வந்து அணைகட்டியபோதும் ராமன் மனிதருக்கு அப்பாற் பட்டவன் என்று என் உள்ளம் கூறிற்று. இன்று அவனே பரமாத்மா என்பது தெளிவாகிவிட்டது' என்கிறாள்.

யதை வச ஜனஸ்தானே ராக்ஷஸைர் பஹுபிர்வ்ருத:
வ்யக்தம் ஏஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதன: 2

வென்றவன் பரமாத்மா எனினும், ராவணன் மாண்டதற்கு வேறொரு காரணமும் கற்பிக்கிறாள் மனைவி. இளைஞனயிருக்கும்போது இந்திரியங்களுக்கு வசப்படுதல் இயல்பு 'அந்த நாட்களில் இந்திரியங்களை ஆட்கொண்டு மூவுலகங்களையும் வென்றாய் நீ. அவை யெல்லாம் வஞ்சம் தீர்த்துக்கொள்வனபோல் ஒருங்குகூடி உன்னை வென்றுவிட்டனவே' என்கிறாள்.

இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவனம் த்வயா
ஸ்மரத்பிரிவ தந்வைரம் தைரேவத்வம் நிர்ஜித: 3

வேந்தனின் பட்டமகிஷிக்குரிய அமரிக்கையும் பெருந்தன்மையும் பேச்சிலேயே வெளிப்படுகிறது. பிற மாதர் புலம்பியதற்கும் இதற்கும் வேற்றுமையைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

'எளிய நிலையில் நின்ற பெண்ணை வஞ்சனையால் தூக்கிவந்து அவளையடையும் இன்பத்தை அடையாமலே, அவ்வுத்தமியின் கற் பினாலே எரிந்துபோனாயே, என் பிரபுவே!' என்கிறாள்.

ஆனயித்வாதுதாம் தீனாம் சத்மனாத்ம ஸ்வதூஷணா
அப்ராப்ய சைவதம் காமம் மைதிலீஸங்கமே க்ருதம்
பதிவ்ரதாயாஸ் தபஸா நூனம் தக்தோஸி மேப்ரபோ 4

'எனக்கு நீ பிரபு. ஆனால் வேறொருத்தியின் ஆசையில் மடிந் தாய்' என்பது தொக்கி நிற்கிறது. ஸீதையின்பால் அனுதாபமும் மதிப்பும் வெளிப்படுகிறது.

ஆயினும் பெண்மைக்கே உரித்தான கருத்து தோன்ருமலில்லை. 'ஸிதை என்னைவிட எவ்விதத்தில் உயர்ந்தவள்? அழகிலோ, குலத்திலோ, குணத்திலோ எனக்கு அவள் ஈடில்லை. ஆனுல் காமம் உன் அறிவை மறைத்தது' என்கிருள்.

ந குலேன ந ரூபேண ந தாக்ஷிண்யேன மைதிலீ
மயா அதிகா வா துல்யா வா த்வம்து மோஹான்ன புத்யஸே 5

தன்னிலையை நினைத்து வருந்துகிருள் பட்ட மகிஷி. 'கடைசியில் இப்படி விதவையாகி நிற்பேனென்று ஒருநாளும் நினைக்கவில்லையே' என்கிருள். 'ஆனுல் நான் அளவிலாத கர்வம் கொண்டிருந்தேன்' என்று நொந்து கொள்ளுகிருள். ஏன்? தந்தை தானவர்களுக்கெல்லாம் அரசன். மணந்த புருஷனே அரக்கரின் வேந்தன். பெற்ற மகனே இந்திரனை வென்றவன். இதெல்லாம் ஒருங்கேயமைந்து கர்வம் உண்டாக்கிவிட்டதாம்!

பிதா தானவ ராஜோமே பர்த்தா மே ராக்ஷஸேச்வர:
புத்ரோ ரசக்ஸ்ய நிர்ஜேதா இத்யேவம் கர்விதா ப்ருசம் 6

விழுந்து கிடக்கும் வீரனைப் பார்க்கிருள். இறந்துவிட்டானென்பது கனவுபோலிருந்தது. இப்போது உண்மைதான் என்று தெளிவாகிறது. 'காலனுக்குக் காலன் என நின்ற நீ இன்று காலமாகிவிட்டாயே' என்கிருள்.

ஹாஸ்வப்ன: ஸத்யமேவ இதம் த்வம் ராமேண கதம் ஹத:
த்வம் ம்ருத்யோரபி ம்ருத்யு: ஸ்யா: கதம் ம்ருத்யுவசம் கத: 7

எல்லாப்பெருமைகளும் ஒன்ருயமைந்த கணவனை இழந்தும் உடல் சுமந்து நிற்கிறேனே' என்று புலம்புகிருள். 'நீ செய்த நன்மை தீமையெல்லாம் உடன்கொண்டு சென்றுவிட்டாய் நீ. உன்னைப் பிரிந்து சோகத்திலிருக்கும் என்னைப் பற்றித்தான் இப்போது கவலைப்படுகிறேன்' என்றும் இடையே சொல்லிவிடுகிருள்.

ஸுக்ருதம் துஷ்க்ருதம் ச த்வம் க்ருஹீத்வா ஸ்வாம் கதிம் கத:
ஆத்மானம் அனுசோசாமி த்வத் வியோகேன து:கிதா 8

ஸீதையின்பால் கொண்ட காதலே கொன்றுவிட்டது என்ற கருத்தைக் கம்பனும் வற்புறுத்துகிருர். புலம்பி நிற்கும் மண்டோதரி கணவனின் மேனியைப் பார்க்கிருள். முன்பு கைலாசமலையைத் தூக்கிப் புகழ் பெற்ற திருமேனி. அதை இன்று எள் விழ இடமின்றி மேலும் கீழும் அம்புகள் துளைத்துவிட்டன. 'ஜானகியை மனச் சிறையில் ஒளித்து வைத்த காதல் அந்த உடலில் எங்கு இருக்கிறதென்று துருவிப் பார்த்துத் தேடிற்ரே ராமபாணம்?' என்கிருள்.

வெள்ளெருக்கம் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி உயிர் இருக்கும் இடம் நாடி
இழைத்த வாறோ?
கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் சானகியைமனச் சிறையில்
கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல் புகுந்து தடவியதோ
ஒருவன் வாளி.

ராமனது வில்திறன், ராவணனின் ஆழ்ந்த காதல், மண்டோதரியின் மென்மையான இதயம் எல்லாம் ஒருங்கே வெளிப்படுகின்றன. சிறையில் வைத்தவளை விடுவிக்க, சிறையை உடைத்துத்தானே ஆக வேண்டும்? அதற்கென வீசிய அம்பு 'எங்கே அந்தக் காதல்?' என்று கேட்பதுபோல் உடலெல்லாம் புகுந்து தேடிற்று என்று சித்தரிக்கிறார். கடைசீயில் 'ஒருவன் வாளி' என்று முடிக்கிறார் கவி. தேவர்களைப் போல் குழுமி நின்று போர் செய்யாமல் ஒருவனாய் நின்று கொன்ற வில் வீரனுக்குரிய மரியாதை. 'வேத முதற் காரணன்' என்ற முறையில் ஒருவன் என்றும் கொள்ளலாம்.

இன்னொரு கருத்து. ராவணனின் ஆற்றலுக்கு அழிவில்லையென்று கருதினாளாம் மண்டோதரி. ஏன்? அது அளவற்றது. தவத்தால் பெற்ற வரமோ பாற்கடல் போன்றது. 'தவப்பயனின் பெருமையைப் பார்த்தேனே ஒழிய அக்கடலை சீதையென்னும் பிரையிட்டு அழிப்பதை அறியாமல் போனேனே' என்று வருந்துகிறாள்.

திரை கடையிட்டளப்பரிய வரம் என்னும் பாற்கடலைச்
சீதை என்னும்
பிரைகடையிட்டழிப்பதனை அறிந்தேனோ தவப்பயனின்
பெருமை பார்ப்பேன்

'பானைப் பாலில் துளி மோர்' என்பதுபோல் ஸீதையாகிய பிரை கடல்போன்ற வர பலத்தை உடைத்துவிட்டது! (பால் 'உடைந்து போயிற்று' என்ற சொல்லில் எவ்வளவு அர்த்தம் இருக்கிறது!) திருமாலுக்கு உரித்தான பாற்கடலை ராவணனுக்குத் தந்து பெருமைப்படுத்தியது கவியின் துணிவு. லங்கையில் வானமே பாற்கடல் போலிருந்தது என்றார் வால்மீகி. கம்பனோ, ராவணன் வரத்தால் பெற்ற பலமே பாற்கடல் என்ற கற்பனை செய்கிறார். வெண் மேகங்கள் மறைவது போலவே, இதுவும் அழிந்துவிட்டதே!

கடைசியில் எழுந்து நின்று உரக்கக் கூவிப் பெருமூச்சுவிட்டு உயிர்விட்டாள் என்று முடிக்கிறார் கம்பன். 'இனியும் உடல் சுமந்து வாழ்கிறேனே' என்று ஏங்குவதோடல்லாமல் உயிர் நீத்துவிடுவதே

உத்தமிக்கு அழகு என்று கருதினர் போலும் கவி. பிற்காலத்தில் பஞ்ச கன்னிகைகளில் ஒருத்தியாக இடம் பெற்ற மண்டோதரிக்கு ஏற்பட்ட உயர்வோ?*

ராமன் விபீஷணனிடம் ஈமக்கிரியைகளை ஆரம்பிக்கச் சொல்லு கிறான். 'பெண்களையெல்லாம் அப்புறப்படுத்து' என்கிறான். ராமன் மண்டோதரிக்கு ஆறுதல் சொல்ல முற்படவில்லை. முன்பு வாலி மாண்டபொழுதில் தாரைக்கு ஆறுதல் சொன்னான். அன்று நிரபராதி யைக் கொன்ற நிலை; இன்று பழிக்குப்பழி வாங்கிய வெற்றிநிலை. பச்சாத்தாபத்துக்கு இடமில்லை.

ராமனது கருத்தை ஊர்ஜிதமாகத் தெரிந்துகொள்ள நினைத்துப் பேசுகிறான் விபீஷணன். 'உடன்பிறந்த உருவத்தோன். ஆயினும் இவன் என் பகைவன். தீமையைப் பேணுபவன். இவனுக்கு முறைப்படி கருமம் செய்தால் உலகம் என்னை நிந்திக்குமல்லவா?' என்கிறான். முதலில் இயற்கையான சுபாவம் நெஞ்சை வாட்டியது. இப்போது அறிவு பேசுகிறது. ராஜ விசுவாசம் ஓங்கி நிற்கிறது!

ராமன் புன்சிரிப்போடு பேசுகிறான். சொல்லில் திறமைகொண்ட விபீஷணனின் சொல்லைப் புரிந்துகொண்டு பேசுகிறான் என்கிறார் வால்மீகி. (வாக்யஞ : வாக்யகோவிதம்) 'உன்னை மெச்சுகிறேன். உன்னால்தான் என் காரியம் வெற்றிகரமாய் முடிந்தது. ஆகையால் நான் சொல்வதைக் கேட்க வேண்டும். அவன் அதர்மத்தை நாடிய வன் ஆயினும் போரில் வீரன். வலிமையும் தேஜஸ்ஸும் உள்ளவன். தேவர்களும் போற்றும் வலிமை கொண்ட மகான்' என்று புகழ்ந்து 'அவன் உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும்' என்று மீண்டும் கூறுகிறான். அயோத்தியர் கோமகன் அரக்கர் கோமகனுக்குச் செலுத் தும் மரியாதை. (கடைசி அடி முன்பே சொன்னதுதான்.)

**தவாபி மே ப்ரியம் கார்யம் த்வத் ப்ரபாவாச்ச மேஜிதம்**
**அவச்யம் து க்ஷமம் வாச்யோ மயாத்வம் ராக்ஷஸேச்வர**
**அதர்மான்ருதஸம்யுக்த : காமம்து ஏஷநிசாசர**
**தேஜஸ்வீ பலவான் சூர : ஸம்யுகேஷு ச நித்யச :**
**சதக்ரது முகைர் தேவை : ச்ரூயதே ந பராஜித :**
**மஹாத்மா பலஸம்பன்ன : ராவணோ லோக ராவண :**
**க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்காரோ மாமாப்யேஷ யதா தவ** 9

ராவணன் உடலைத் தீயிலிட்டு வணங்கி, அந்தப்புரப் பெண்களை யெல்லாம் ஊருக்குள் அனுப்பிவிட்டு ராமனுக்கருகே வந்து விநய மாய் நிற்கிறான் விபீஷணன். மனமகிழ்ந்தநிலையில் ராமன் லக்ஷ் மணனை யழைத்து விபீஷணனுக்கு முடிசூட்டி இலங்கை வேந்தனென ஆக்கும்படி சொல்லுகிறான். 'இதுவே எனது முதல் விருப்பம்' என் கிறான். லக்ஷ்மணனும் அவ்வாறே செய்ய, விபீஷணனுக்குப் பட்டாபி

---

* **பஞ்சகன்யா ஸ்மரேன் நித்யம் மஹாபாதக நாசனம்**
**அஹல்யா த்ரௌபதீசைவ தாரா ஸீதா மண்டோதரீ**

ஷேகம் நடக்கிறது (முன்பு கட்டாந்தரையில் நிற்க வைத்துத் தலையிலே நீர் ஊற்றிச் செய்த சடங்கை இன்று பயன்படச்செய்கிறான்). ஊருக்குள் சென்று மக்களுடன் பேசி ஆறுதல் அளித்துத் திரும்புகிறான் விபீஷணன். தனக்குக் கிடைத்த பரிசுப் பண்டங்களைப் பெருமையோடு ராமனுக்குக் காட்டுகிறான்.

ராமன் ஹனுமானை அருகில் அழைத்துச் சொல்லுகிறான், 'நானும் லக்ஷ்மணனும் சுக்ரீவனும் க்ஷேமமாயிருக்கிறோம் என்று ஸீதையிடம் சொல். ராவணனை நான் கொன்றேன் என்றும் சொல். அவள் கூறும் மறு மொழியை என்னிடம் வந்து சொல்'.

ஹனுமானைக் கண்டதும் ஸீதைக்குப் பழையனவெல்லாம் நினைவுக்கு வருகிறது. தூதன், 'நமக்கு வெற்றி கிடைத்துவிட்டது. இனித் துயரம் இல்லை' என்கிறான்.

ராமனின் புகழைப் பல பெயர்களால் பாடிக்கொண்டே வருகிறான் என்று வர்ணிக்கிறார் கம்பன். பலமுறை குப்புற விழுந்து குதித்துத் தாண்டவம் செய்கிறான். கைகளைக் குவித்து எதிரே நிற்கிறான். 'சோபனம்' என்கிறான் நற்செய்தி கொண்டுவந்த தூதன். 'கருங் கடல் போன்ற அரக்கனை ராமனென்ற யானை துகைத்துவிட்டதே சோபனம்' என்கிறான்.

**ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்**
**வாழி சோபனம் மங்கல சோபனம்**
**ஆழியான அரக்கனை ஆரியச்**
**சூழி யானை துகைத்தது சோபனம்**

அடுத்த பாடலில், 'அரக்கனை ராமனென்ற சிங்கம் சிதைத்து விட்டது' என்கிறான்.

ஸீதை ஒன்றும் பேசாமல் நிற்கிறாள். 'என்ன யோசிக்கிறாய் தேவி! ஏன் பேசவில்லை?' என்கிறான்.

மனக்களிப்பு தொண்டையை அடைக்கிறது. 'நற்செய்தி கேட்டேன் பேச்சற்று நிற்கிறேன். உனக்கேற்ற வெகுமதியளிக்க என்னிடம் ஒன்றும் இல்லையே என்றுதான் யோசிக்கிறேன். வெள்ளியும் பொன்னும் ஈடாகுமா? இவ்வுலகிலேயே தக்க பொருள் ஒன்றும் இல்லை' என்கிறாள் ஸீதை.

நஹி பச்யாமி ஸத்ருசம் சிந்தயந்தீ ப்லவங்கம
ஸத்ருசம் மத் ப்ரியாக்யானே தவ தாதும் பவேத் ஸமம்
..........................................................................................
ராஜ்யம் வா த்ரிஷு லோகேஷு நைத தர்ஹதி பாஷிதும் 10

'அன்புடன் இந்த வார்த்தை சொன்னுயே இதுவே பொன்னுக்கு மேல். இந்திரன் மௌலிக்கு மேல். கணவனின் பெருமையையும் வெற்றியையும் கோரி நின்ற உன்னையல்லால் யார் இவ்விதம் சொல்லுவர்?' என்கிருன் ஹனுமான்

ஆனுல் ஒரு வரம் கேட்கிருன். சுற்றி நிற்கும் அரக்கியரை ஒழித்துவிட அனுமதி வேண்டுகிருன். ஏன்? 'துயரத்தில் இருந்த உன்னை விரட்டி மிரட்டிய கொடியவர்கள் அல்லவா?' என்கிருன். 'அவர்கள் வாயால் சொன்ன கொடுமையைச் செய்கையில் காட்டு கிறேன்' என்கிருன்.

'பிறர் ஏவலில் நிற்கும் வேலைக்காரர்கள்மீது கோபம் கொள் ளலாமா, அதுவும் அரசனையண்டிப் பிழைப்பவரிடம்?' என்கிருள் ஸீதை. 'ராவணன் கட்டளைப்படி என்னை மிரட்டினுர்கள். அவன் இறந்தபின் இனிச் செய்யமாட்டார்கள்' என்று கூறி ஒரு பழங் கதையை உவமை காட்டுகிருள்.

ஒரு நாள் வேடன் ஒருவன், துரத்திவரும் புலிக்கு அஞ்சி ஒரு மரத்தின்மேல் ஏறிக்கொண்டான். அங்கு, மேல் கிளையில் ஒரு கரடி. மரத்தடியில் நின்ற புலி கரடியை பார்த்து 'இவனைக் கீழே தள்ளு. இயற்கையில் விலங்குகளின் சத்ரு' என்றது. கரடி 'என் இருப்பிடம் தேடிவந்து புகுந்தவனை நான் தள்ளமாட்டேன்' என்றது. சிறிது நேரம் கழித்து கரடி தூங்கி விட்டது, அப்போது மனிதனைப் பார்த்துப் புலி 'உன்னை ஒன்றும் செய்யமாட்டேன். கரடியைக் கீழே தள்ளு' என்று சொன்னதும் மனிதன் அப்படியே செய்தான். மரங்களில் வாழ்ந்து பழக்கப்பட்ட கரடி சமாளித்துக்கொண்டு வேறு கிளைக்குப் போய் உட்கார்ந்தது. 'உனக்குத் தீங்கு செய்த மனிதனை இப்போதாவது தள்ளிவிடு' என்று புலி மீண்டும் வேண்ட, அப்போது கரடி சொன்ன வாக்யம் நினைவுக்கு வருகிறது என்கிருள் ஸீதை.

'பிறருக்காகவும் கூட பாப காரியம் செய்ய இசையமாட்டார் மேலோர். கொள்கையைக் காப்பதுதான் முக்யம். நன்னடக்கையைப் போற்றுபவரே நல்லோர்'.

> நபர : பாபம் ஆதத்தே பரேஷாம் பாபகர்மணும்
> ஸமயோ ரக்ஷிதவ்யஸ்து ஸந்தஸ் சாரித்ர பூஷணு : 11

கடைசியில் 'குற்றமற்றவர் உலகிலில்லை மேலோருக்குரிய குணம் கருணை' என்று அழகாகச் சொல்லி முடிக்கிருள் ஸீதை.

> கார்யம் கருணம் ஆர்யேண ந கஸ்சின் ந அபராத்யதி 12

ஆழ்ந்த துயரத்தில் மூழ்கியும் அவசியமற்ற கொடுமைகளுக்குள் ளான பின்பும் பெருந் தன்மை குன்றுத மனப்பான்மை பளிங்குபோல் விளங்குகிறது. வஞ்சமும் பழியும் பலனற்றவை யென்றுணர்ந்து அமைதியோடிருக்கும் அளவுக்கு மனம் பக்குவமடைந்து விட்டது. இவளே உத்தமி யென்றுணர்ந்த மண்டோதரியும் நம் மதிப்புக்குரிய வளாகி விட்டாள்.

# 'உத்தமனே நீ உணர்ந்திலை'

'ஸூரி, நான் ராமனிடம் போகிறேன். எனக்குச் சேதி சொல்லு' என்கிறான் ஹனுமான். 'என் கணவனைப் பார்க்க வேண்டும்' என்று பதில் சொல்லுகிறாள் ஸீதை.

அப்ரவீத் த்ரஷ்டும் இச்சாமி பர்த்தாரம் வானரோத்ம 1

சொல்லிலே சிக்கனம்! ராமன் சொல்லியனுப்பிய சுருக்கமான சேதிக்குத் தக்க பதில். இத்தகைய சிக்கனத்தைக் கையாண்டு அதன் மூலம் வாசகரின் பரபரப்பைத் தூண்டுகிறார் கவி.

ராமனிடம் சென்று சொல்லும்போது 'வெற்றியைக் கேட்டு மனமகிழ்ந்தாள்' என்கிறான் ஹனுமான். வெற்றியைப் பற்றித்தானே சொல்லச் சொன்னான் ராமன்? பிறகு 'உன்னைப் பார்க்க வேண்டுமென்று சொன்னாள்' என்கிறான்! இதைக் கேட்டதும் நீண்டதோர் பெருமூச்சு விடுகிறான் ராமன். நெடுநாள் பிரிந்திருந்த மனைவியைக் காணப்போகும் நிலையில் உணர்ச்சிப் பெருக்கு ஏற்படுகிறதோ? இல்லை; சிந்தையில் ஈடுபட்டு நிற்கிறான் ராமன். கண்ணில் சிறிது நீரும் தோன்றுகிறது. தரையில் வைத்த பார்வையை எடுக்காமலே விபீஷணனிடம் சொல்லுகிறான், 'ஸீதையை ஸ்நானம் செய்வித்துப் புதிய உடையும் அலங்காரமும் செய்வித்து விரைவில் அழைத்துவா.'

திவ்யாங்க ராகாம் வைதேஹீம் திவ்யாபரண பூஷிதாம்
இஹ ஸீதாம் சிர : ஸ்நாதாம் உபஸ்தாபய மாசிரம். 2

விபீஷணன் ஸீதையிடம் சென்று அப்படியே சொல்லுகிறான். அவளோ 'இக்கோலத்திலேயே கணவனைக் காண விரும்புகிறேன்' என வேண்டுகிறாள்.

அஸ்நாதா த்ர்ஷ்டும் இச்சாமி பர்த்தாரம் ராக்ஷஸாதிப 3

ராமன் சிந்தையில் ஆழ்ந்தது எதற்கு? ஸீதையின் நிலையை நினைத்துச் சிந்தை செய்திருக்கலாம். பலர் முன்னிலையில் மனைவியைச்

சந்திக்கப்போகும் காட்சியை நினைத்திருக்கலாம். ஆனால் நீராட்டி அழைத்து வரவேண்டுமென்றது ராவணன் தீண்டிய மாசு துடைக்கக் கருதிய கணவனின் பேச்சோ? அல்லது வெற்றி நிலையில் நிற்கும் வீரன் மனையாளைக் கோலத்தில் காண விரும்புகிறானோ?

'அஸ்நாதா த்ரஷ்டும் இச்சாமி' என்பதில் ஆர்வம் ஒலிக்கிறது. பெருமிதம் பொங்குகிறது.

அழுக்கடைந்த மேனியும் துறவிக்குரிய ஆடையும் கண்டவருக்கல்லவா தெரியும் அவள்பட்ட துன்பமெல்லாம்? அலங்காரம் செய்துகொண்டு லங்கையிலிருந்து வெளிவந்தால் ஒன்றுமில்லையென்றாகிவிடுமல்லவா? மேலும், விடுதலை தந்து மானம் காத்த வீரனை உடனே காணத் துடிக்குமல்லவா உள்ளம்?

இதை விவரித்துக் கூறுகிறார் கம்பன். 'தேவர்களும் ராமனும் முனிவர்களும் கற்புடைய மாதரும் நான் இங்கு இருந்த நிலையைப் பார்த்தாலே பெருமை. அலங்காரம் செய்து கொள்ளுவது தகுதி அல்ல' என்கிறாளாம்.

**யான் இவண் இருந்த தன்மை இமையவர் குழுவும் எங்கள்**
**கோனும் அம்முனிவர் தங்கள் கூட்டமும் குலத்துக் கேற்ற**
**வான் உயர் கற்பின் மாதர் ஈட்டமும் காண்டல் மாட்சி**
**மேனியை கோலம் கோடல் விழுமியதன்று வீர.**

'கணவன் கட்டளைப்படியே செய்யவேண்டும்' என்று விபீஷணன் வற்புறுத்த ஸீதை 'சரி' யென்கிறாள்.

பல பெண்கள் பணிசெய்ய, ஸீதைக்கு அலங்காரம் நடக்கிறது. பல்லக்கில் ஏற்றிக்கொண்டு வருகிறார்கள். அவள் வந்துவிட்டாள் என்றறிந்ததும் ராமன் மனதில் 'அவள் நெடுநாள் அரக்கர் மனையில் இருந்தவளாயிற்றே' என்ற எண்ணம் தோன்றுகிறது. மகிழ்ச்சி, கருணை, ரோஷம் ஆகிய மூன்றும் மனதில் ஒருங்கே குடிகொள்ளுகின்றன.

தாம் ஆகதாம் உபச்ருத்ய ரக்ஷோக்ருஹ சிரோஷிதாம்
ஹர்ஷோ தைன்யம் ச ரோஷஸ் ச த்ரயம் ராகவம் ஆவிசத் 4

'ஸீதை விரைவிலே என்னருகில் வரட்டும்' என்கிறான் ராமன். விபீஷணன் வானரரை ஏவுகிறான். கூட்டத்தை விலக்கப் பிரம்பாலடிக்கின்றனர் காவலர். ஸீதையைக் காணவிரும்பும் மக்கள் கூக்குரலிடுகின்றனர்.

இதைக் கவனிக்கிறான் ராமன். 'ஜனங்களைத் தடுக்காதே. அவர்கள் என்னைச் சேர்ந்தவர். வீடும், ஆடையும், சுவர்களும் பெண்களுக்

குப் பாதுகாப்பு அளிக்காது. பெண்களுக்கு அவர்கள் நடத்தையே காப்பு' என்கிறான்.

ந க்ருஹாணி ந வஸ்த்ராணி ந ப்ராகாராஸ் திரஸ்க்ரியா :
நேத்ருசா ராஜஸத்காரா வ்ருத்தம் ஆவரணம் ஸ்த்ரியா : 5

'ஆபத்திலும், போர்க்களத்திலும், விவாகத்திலும் பெண்களை யாரும் பார்க்கலாம்' என்றுகூறி, 'என்னை வந்து பார்க்கட்டும். நண்பர் புடைசூழ நிற்கிறேன்' என்கிறான்.

ராமனின் பேச்சும் குரலும் நிலைமைக்கு ஏற்றதாயில்லையென்று விபீஷணன் உணருகிறான். எனினும் வணக்கமாக, சொன்னபடி செய்கிறான். லக்ஷ்மணன், சுக்ரீவன், ஹனுமான் மூவரும் மனம் கலங்கி நிற்கின்றனர். 'மனைவியைப் புறக்கணிக்கும் வகையில் கெட்ட அறிகுறிகள் தோன்றுகின்றனவே, ஒருவேளை ஸீதையின்பால் அதிருப் தியோ?' என்று தங்களுக்குள் விவாதிக்கின்றனர்.

களத்ர நிரபேக்ஷைஸ்ச இங்கிதைரஸ்ய தாருணை :
அப்ரீதமிவ ஸீதாயாம் தர்க்கயந்தி ஸ்ம ராகவம் 6

நெருங்கி வருகிறாள் ஸீதை. நாணத்தால் உடல் குன்றி, ஊரார் முன்னிலையில் கணவனைப் பார்க்க வருகிறாள். 'உத்தமனே' என்று ஆரம்பிக்கிறாள். மேலே பேச முடியாமல் அழுகை வந்தடைக்கிறது. அன்பும் வியப்பும் களிப்பும் மேலிட்டு, கணவனின் முகத்தையே பார்த்தவண்ணம் நிற்கிறாள். அவள் முகத்திலே எழில் ததும்புகிறது.

ருரோத ஆஸாத்ய பர்த்தாரம் ஆர்யபுத்ரே தி பாஷிணி
விஸ்மயாச்ச ப்ரஹர்ஷாச்ச ஸ்நேஹாச்ச பதிதேவதா
உதைக்ஷத முகம் பர்த்து: ஸௌம்யம் ஸௌம்யத ரானனு 7

அரக்கர் மனையில் நெடுநாள் இருந்தாள்' என்ற எண்ணமே ஓங்கி நிற்கும் ராமன், 'புழுதியடைந்த என் மேனியை ராமன் காண வேண்டும்' எனக்கருதி அக்கருத்திலே திளைத்துச் சிறையிருந்த ஸீதை. இவ்விருவரையும் எதிருக்கெதிரே நிறுத்தி நம் உள்ளத்தைக் கலக்குகிறார் வால்மீகி.

'உத்தமனே' என்று சொல்லி மேலே பேச இயலாமல் நிற்கிறாள். தலை குனிந்து நிற்கும் மனைவியைப் பார்த்துக் கோபம் பொங்கி வருகிறது ராமனுக்கு. அதையடக்கி நிதானமாகப் பேசுகிறான்.

தாம் து பார்ச்வஸ்திதாம் ப்ரஹ்வாம் ராம : ஸம்ப்ரேக்ஷ்ய மைதிலீம்
ஹ்ருதயாந்தர்கதக்ரோதோ வ்யாஹர்தும் உபசக்ரமே 8

பிரிந்த மனைவியை மீண்டும் பார்க்கிறவனுக்கு கோபம் வருவானேன்? அவளை மீட்ட பெருமையைவிடத் தனக்கு நேர்ந்த அவ

மானம் பெரிதாய்த் தோன்றுகிறது. இன்று போரில் அடைந்த வெற்றியைவிட முன்பு மனைவியைத் தோற்றதே மனதில் நிற்கிறது. கேவலமான நிலையை உண்டாக்கிய பகைவன் மடிந்துவிட்டான். இனி கோபத்தை யாரிடம் காட்ட முடியும்? அந்த அவமானத்தால் நேரடியாக பாதிக்கப்பட்டு நிற்கும் அவள் மேல்தான்!

வணங்கி மயில்போல நிற்கும் கற்பின் உருவை படம் விரித்தாடும் பாம்புபோல் சீறிக் கண்கொட்டாமல் பார்க்கிறான் ராமன் என்று வர்ணிக்கிறார் கம்பன்.

**வணங்கியல் மயிலினைக் கற்பின் வாழ்வினைப்**
**பணங்கிளர் அரவு என எழுந்து பார்ப்புறா**

(எழிலுக்கும் எளிமைக்கும் மயில் உவமை. பகைமைக்கும் சினத்துக்கும் பாம்பு உவமை).

ஸீதையைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்: 'பகைவனை வென்றேன். இது உனக்கும் வெற்றி. உன்னை மீட்டேன். ஆண்மையுள்ளவன் செய்யத் தக்கதைச் செய்துவிட்டேன். தீமைக்குப் பழி வாங்கினேன். அவமானத்தையும், பகைவனையும் ஒரே அடியில் போக்கினேன். என் வீரத்தை இன்று கண்டனர் உலகோர். முயற்சி வீண் போகவில்லை. என் ஆணையை நிறைவேற்றி அமைதி கண்டேன். தெய்வாதீனமாய் நேர்ந்த குற்றத்தை மனிதனாகிய நான் போக்கிவிட்டேன். தனக்கு நேர்ந்த அவமானத்தை வீர்யத்தால் நிவர்த்தி செய்யாதவன் வாழ்க்கையில் வீணன்.

கடல் கடந்து தூது சென்ற ஹனுமானின் பெருஞ்செயல் வெற்றி கண்டது. படையுடன் எனக்குதவிய சுக்ரீவனின் முயற்சி பயனளித்தது. தீய தமையனை விட்டு என்னை நாடிய விபீஷணனுடைய முயற்சியும் பலித்துவிட்டது'

ஏஷாஸி நிர்ஜிதா பத்ரே சத்ரும் ஜித்வா மயாரணே
.................................................................,.................
...................................................................................
விபீஷணஸ்ய பக்தஸ்ய ஸபலோ அத்ய பரிச்ரம : 9

'அம்மணீ' (பத்ரே) என்று தொடங்கி, பிறருக்கு நன்றி தெரிவிக்கும் மேடைப் பேச்சைப் போல அல்லவா இருக்கிறது? வீரம், அவமானம், வெற்றி என்ற சொற்கள் எழுகின்றனவே ஒழிய அன்பு, அனுதாபம், ஆனந்தம் ஒன்றுமே இல்லை. விலகிய மனப்பான்மை தெளிவாய்த் தெரிகிறது.

இதை எளிதில் உணருகிறாள் ஸீதை. மருண்டமானைப் போல் விழித்துப் பார்த்துக் கண்ணீர் சொரிகிறாள். ஊரார் முன்னிலையில் வேறென்ன செய்ய முடியும்?

ம்ருகீவோத்புல்ல நயனு பபூவ அச்ருபரிப்லுதா 10

அவளைப் பார்க்கப் பார்க்க ராமனுக்கு மேலும் கோபம் வருகிறது, தீயில் எண்ணெய்விட்டதுபோல்! புருவத்தை நெரித்து நாலு புறமும் பார்த்து, வானரரும் அரக்கரும் சூழ்ந்திருக்கும் கூட்டத்தில் கொடுமை பேசுகிறுன்.

ஸ பத்வா ப்ருகுடீம் வக்த்ரே திர்யக் ப்ரேக்ஷித லோசன :
அப்ரவீத் பருஷம் ஸீதாம் மத்யே வானர ரக்ஷஸாம். 11

'அவமானத்தைப் போக்க மனிதன் செய்ய வேண்டியதெல்லாம் செய்துவிட்டேன். இந்தப் போரின் பெரு முயற்சிகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பாய். நண்பர்களின் வலிமைகொண்டு சாதித்தேன். ஆனுல் உன் பொருட்டல்ல. எனது புகழைக் காத்து அபவாதத்தை நீக்கவே. முயற்சி எல்லாம் குலப் பெருமைக்கு நேர்ந்த இழுக்கை அகற்றவே.'

விதிதஸ்சாஸ்துதே பத்ரே யோஅயம் ரணபரிச்ரம :
ஸதீர்ண : ஸுஹ்ருதாம் வீர்யாத் ந த்வதர்த்தம் மயர்க்ருத :
ரக்ஷதா து மயா வ்ருத்தம் அபவாதம் ச ஸர்வச :
ப்ரக்யாதஸ்ய ஆத்மவம்சஸ்ய ந்யங்கம் ச பரிரக்ஷதா 12

'பகை தீர்த்துக் கொள்ளவில்லையென்ற பழியிலிருந்து என்னை மீட்டுக்கொள்ளவே இலங்கைக்கு வந்தேன்' என்று சொன்னதாகச் சித்தரிக்கிறுர் கம்பன். வந்ததே அதற்காகவாம்!

**உன்னை மீட்பான்பொருட்டு வரி தூர்த்தொளிர்**
**மின்னை மீட்டுறு படை அரக்கர் வேரறப்**
**பின்னை மீட்டுறு பகை கடந்திலேன் பிழை**
**என்னை மீட்பா ன்பொருட்டு இலங்கை எய்தினேன்.**

'உன் பொருட்டல்ல' என்பதை விளக்கிக் கூறுகிறுன் ராமன். உள்ளக் குமுறலை அடக்க முடியவில்லை. 'உன் நடத்தை சந்தேகத்துக்கிடமானதாக ஆகிவிட்டது. என்னெதிரே நிற்கிறுய். ஆனுல் கண்வலிக்காரன் விளக்கைக் கண்டதுபோல் பார்க்கவே பிடிக்கவில்லை' என்கிறுன்.

ப்ராப்த சாரித்ர ஸந்தேஹா மம ப்ரதிமுகே ஸ்திதா
தீபோ நேத்ராது ரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம் 13

ஸீதையை தீபத்துக்கு உவமையாகக் கூறியது தன்னையுமறியாமல் சொன்ன கருத்து. தீபம் எப்போதும்போல எரிகிறது. கண்வலிக்கல்லவா நிவர்த்தி தேட வேண்டும்?

ஆனால் திபத்தை அப்புறப்படுத்துவதுதான் இயற்கை, சுலபம். இது அடுத்தாற்போல் தெளிவாகிறது! 'நீ எங்கு வேண்டுமானாலும் போ, ஜனகன் மகளே! அனுமதி தருகிறேன். எட்டு திக்குகள், ஆகாயம், பாதாளம், ஆக பத்து, இனி உன்னால் எனக்கு ஆகவேண்டியதொன்றும் இல்லை அம்மணீ!' என்கிறான் ராமன்.

தத்கச்சஹி அப்யனுஞாதா யதேஷ்டம் ஜனகாத்மஜே
ஏதாதச திசோபத்ரே கார்யம் அஸ்திநமே த்வயா. 14

'ஜனகன் மகளே!' என்றழைத்தது 'பிறந்தவீட்டுக்குப் போகலாம்' என்பதை ஜாடையாகத் தெரிவிக்கவோ? 'அம்மணீ' என்ற சொல் விலகிய மனப்பான்மையை வற்புறுத்திக் காட்டுகிறது.

மனம் விலகியது ஏன்? அவள் பிறன் வீட்டில் இருந்தாளல்லவா? அதனால்தான். 'உயர்குலத்தில் பிறந்த மனிதன் எவனாவது பிறன் வீட்டில் தங்கியிருந்த மனைவியை அன்போடு ஏற்றுக்கொள்ள முடியுமா? இனியாளைக் காணும் துடிப்பு இருக்குமா மனதில்? உன்னை ராவணன் மடியில் வைத்துச் சென்றான். கெட்ட கண்ணோடு பார்த்தான். உன்னை நான் எப்படித் திருப்பியழைத்துக் கொள்வேன்? நான் உயர்குலத்தில் தோன்றியவனல்லவா? அக்குலப் பெருமையைக் காக்கவே போர் புரிந்தேன். எனக்கு உன்னிடத்தில் நாட்டம் இல்லை. எங்கிஷ்டமோ போகலாம்' என்கிறான்.

க : புமான்ஹி குலேஜாத : ஸ்த்ரியம் பரக்ருஹோஷிதாம்
............................................................................
............................................................................
நாஸ்திமே த்வய்யபிஷ்வங்கோ யதேஷ்டம் கம்யதாம் இத : 15

'போ' என்கிறான். சந்தேகத்துக்கிடமின்றி 'யோசித்தே இம் முடிவுக்கு வந்தேன்' என்கிறான். விரட்டியபின் உதைத்தனுப்புவது போல் கடைசியாக ஒரு வார்த்தை. 'இனி உன் மனதைத் திருப்பு. லக்ஷ்மணன், பரதன், ஸுக்ரீவன், விபீஷணன் எல்லாம் இருக்கிறார்கள். அவர்களில் யாருடன் வேண்டுமானாலும் இருக்கலாம். அல்லது, உன் இஷ்டம்' என்கிறான்.

'வீட்டிலேயே நெடுநாள் இருந்த உன்னை ராவணன் சும்மா விட்டிருப்பானா? நீ அழகியல்லவா?' என்று முடிக்கிறான்.

நஹித்வாம் ராவணோ த்ருஷ்ட்வா திவ்யரூபாம் மனோரமாம்
மர்ஷயேத சிரம் ஸீதே ஸ்வக்ருஹே பரிவர்த்தினீம். 16

அவள் நெடுநாள் லங்கையில் இருந்தாள் என்பது நடந்த உண்மை. அவள் அழகியென்பது கண்ணெதிரே காணும் உண்மை. இவ்விரண்டையும் ஒன்றாய்ப் பிணைத்து அவளது உண்மையையே நிராகரிக்கத் தூண்டியது ராமனின் கற்பனை. சந்தேகத்தால் ஏற்படும்

லீனை. ஒருவேளை, ஸீதை விரும்பியபடி புழுதியடைந்த மேனியோடு கண்டிருந்தால்? அழகைக் கண்டு ஆத்திரம் தோன்ருமல் இருந்திருக்க லாம்!

ஸீதையின் நிலையை நேரில் கண்டு வந்து ஹனுமான் சொன்ன போது கண்ணீர் விட்ட ராமன், 'அவள் என்ன சொன்னுள்? என்ன சொன்னுள்?' என்று துருவிக் கேட்ட ராமன், 'அவளைக் காணுமல் உயிர் நிலைக்காது' என்று சொன்ன ராமன், இன்று அவளைப் பொதுக் கூட்டத்தில் நிற்கவைத்து 'நீ அழகியல்லவா?' என்று இடித்துக் காட்டும் அளவுக்கு ஆத்திரம் அடைவது எதனுல்? 'ராவணன் சும்மாவிட்டிருப்பானு?' என்ற கருத்தே காரணம். அறிந்ததும் தெரிந்ததும் மறந்து நிற்கும் அளவுக்குத் தலை தூக்கி நிற்கும் கருத்து இதுவே.

'உண்மையே அழிந்துவிட்டது நீ எனும் ஒருத்தி தோன்றிய தால்' என்று சொல்லுகிருன் என்கிருர் கம்பன். அது மட்டுமல்ல. பெண்மையும், பெருமையும், கற்பும், எல்லாம் போய்விட்டதாம்.

**பெண்மையும் பெருமையும் பிறப்பும் கற்பெனும்**
**திண்மையும் ஒழுக்கமும் தெளிவும் சீர்மையும்**
**உண்மையும் நீ எனும் ஒருத்தி தோன்றலால்**
**வண்மையில் மன்னவன் புகழின் மாய்ந்ததால்**

ஸீதை அழுதவண்ணம் நிற்கிருள். யானைத் துதிக்கையில் சிக்கிய கொடிபோல் துடிக்கிருள் என்கிருர் வால்மீகி. ஆதரவை நாடி வந்தாள்; அன்பு காட்ட வேண்டிய கணவன் கொடுமையான சொற்களை சொல்லக் கேட்டாள் என்கிருர் கவி.

தத: ப்ரியார்ஹச்ரவணு ததப்ரியம் ப்ரியாது பச்ருத்ய சிரஸ்யமைதிலி
முமோச பாஷ்பம் ஸுப்ருசம் ப்ரவேபிதா கஜேந்த்ர
ஹஸ்தாபிஹதேவ ஸல்லகீ 17

பலர் முன்னிலையில் கணவனின் பேச்சைக் கேட்டு வெட்கித் தலை குனிகிருள் ஸீதை. முன்பின் கேட்டிராத பேச்சு. அதனுல் உடல் குறுகி நிற்கிருள். சொற்கள் அம்புபோல் தைத்து நிற்கின்றன.

ஸா ததச்ருத பூர்வம்ஹி ஜனே மஹதி மைதிலி
ச்ருத்வா பர்த்ருவசோ ருக்ஷம் லஜ்ஜயா வ்ரீடிதாஅபவத்
ப்ரவிசந்தீவ காத்ராணி ஸ்வான்யேவ ஜனகாத்மஜா
வாக்சல்யைஸ்தை: ஸசல்யேவ ப்ருசம் அச்ருண்ய வர்தயத் 18

இன்மொழியை நாடிக் கணவன் முகத்தை நோக்கும் மனைவிக்கு அவன் அரசகுமாரன் என்பதா நினைவிலிருக்கும்? அரக்கர் வேந்தனைத் துரும்பெனக் கருதிப் பேசினுள் கணவனின் பெருமையை நம்பிய

பெண். இன்று அவளைத் துரும்பெனக் கருதிப் பேசுகிறான் உண்மைக்கே சான்று கேட்கும் கணவன். இனி யாரை நம்புவது?

கண்ணீர் வழிந்த முகத்தைத் துடைத்துக் கொண்டு, குரல் தழதழக்க மெள்ளப் பேசுகிறாள். 'வீரனே! எப்படி தகாத வார்த்தையெல்லாம் பேசுகிறீர்? காதால் கேட்க முடியவில்லை. பாமரன் தன் மனைவியிடம் பேசுவது போலிருக்கிறதே' என்கிறாள். ?

கிம் மாம் அஸத்ருசம் வாக்யம் ஈத்ருசம் ச்ரோத்ர தாருணம்
ரூக்ஷம் ச்ராவயஸே வீர ப்ராக்ருத : ப்ராக்ருதாம் இவ 19

வீரனுக்குத் தகாத பேச்சு. நிலைமைக்குத் தகாத பேச்சு. இதை எடுத்துச் சொல்லி கௌரவத்தை நிலைநாட்ட நினைக்கிறாள். பாமரன் போல் பேசக்கூடாது என்று சொல்வதும் அதற்காகவே. அடுத்தபடி 'உன் சந்தேகம் வீண்' என்று உடைத்துச் சொல்லுகிறாள். 'நீர் நினைப்பதுபோல் நான் அப்படி அல்ல. எனது சுபாவத்தை நினைத்துப் பார்த்து உறுதி காணுங்கள். நான் ஆணையிடுகிறேன்' என்கிறாள்.

ந ததாஸ்மி மஹாபாஹோ யதாத்வம் அவகச்சஸி
ப்ரத்யயம் கச்சமேயேன சாரித்ரேணைவ தே சபே 20

'நான் அப்படி அல்ல' என்று மறைமுகமாகப் பேசியது உள்ளத்தின் உயர்வையும் பண்பையும் குறிக்கும்.

சொல் ஏறவில்லை போலும். மேலே பேசுகிறாள். 'கீழான பெண்களின் நடத்தையைக் கண்டு பெண்ணினத்தையே நீர் சந்தேகிக்கிறீர். ஒருவேளை என்னை சோதனை செய்யும் நோக்கத்தோடு பேசியிருந்தால்கூட, இந்த சந்தேகத்தை அறவே அகற்றிவிடுங்கள். கேட்டுக் கொள்ளுகிறேன்.'

ப்ருதக் ஸ்த்ரீணாம் ப்ரசாரேண ஜாதிம் தாம் பரிசங்கஸே
பரித்யஜேமாம் சங்காம்து யதி தே அஹம் பரீக்ஷிதா 21

''என்னைப் பிறன் தீண்டினான் என்றால் அது தெய்வத்தின் குற்றம். சுயேச்சையின்றி அடிமைப்பட்ட நிலை. திக்கற்று உதவி புரிவாரின்றி நின்ற நிலை. நான் என்ன செய்வேன்? உடலைப் பிறன் அடைத்து வைக்கினும் உள்ளம் உம்மிடமே' என்கிறாள்.

யத்யஹம் காத்ர ஸம்ஸ்பர்சம் கதாஸ்மி விவசாப்ரபோ
காமகாரோ ந மே தத்ர தைவம் தத்ர அபராத்யதி
மததீனம் யத்தத் மே ஹ்ருதயம் த்வயி வர்த்ததே
பராதீனேஷு காத்ரேஷு கிம் கரிஷ்யாமி அனீச்வரா 22

சினங்கொண்ட ராமன் இதைப் பொருட்படுத்தவில்லைபோலும். தெய்வத்தின் குற்றம் என்கிறாள். ராமன் சொன்னதையே நினைவுறுத்

துகிருள். (தெய்வம் செய்த குற்றத்தை மனிதன் நான் போக்கிவிட்டேன் என்ருனல்லவா?) உள்ளத்தைக் காலடியில் அர்ப்பணம் செய்கிருள் மனைவி. 'உடலை ஏன் காக்கவில்லை?' என்கிருன் கணவன்.

உயர்வையும் உணர்ச்சியையும் தூண்ட முனைந்தாள் ஸீதை. பயனில்லை. 'ஒன்ருய் வாழ்ந்தோம். கூடியிருந்தோம். ஆயினும் நீர் என்னைப் புரிந்துகொள்ளவில்லை. இதுவே எனக்கு சாவு' என்கிருள். மூடிவைத்த மனக்கடுப்பு பீறிட்டுக்கொண்டு வருகிறது.

ஸஹ ஸம்வ்ருத்த பாவாத்ச ஸம்ஸர்க்கேண ச மானத
யத்யஹம் தே ந விஞாதா ஹதா தேனஸ்மி சாச்வதம் 23

புரிந்துகொள்ளவில்லையென்ற கருத்தைக் கம்பனும் எடுத்துக்காட்டுகிருர். 'தவம் இருந்தால் என்ன? எவ்வளவு நேர்மை இருந்தால் என்ன? நான் இத்தனை காலம் உழண்டு தவித்தேன். அதெல்லாம் பைத்தியக்காரச் செயலாக ஆகிவிட்டதே! உத்தமனே! நீ மனதில் உணர்ந்து கொள்ளாததால் அறமே பிழை செய்ததுபோல் ஆயிற்று' என்கிருளாம்.

**எத்தவம் எந்நலம் எந்தன் கற்பு நான்**
**இத்தனை காலமும் உழந்த ஈதெலாம்**
**பித்தெனலாய் அறம் பிழைத்ததால் அன்றே**
**உத்தம நீ மனத்து உணர்ந்திலாமையால்**

அபத்தம் 'உத்தம' என்பது 'ஆர்யபுத்ர' என்ற சொல்லின் மொழிபெயர்ப்பு. 'தர்மாத்மா'வெனப் பெயர் வாங்கிய ராமன் புரிந்துகொள்ளாததால் அறமே பிழைசெய்துவிட்டது என்கிருர். ஆனல் புரிந்துகொள்வது மனதார இருக்க வேண்டுமென்பது கடைசி அடியில் ஓங்கி நிற்கிறது. சில விஷயங்களை அறிந்தால் போதாது. உணர வேண்டும். ('விஞா' என்ற வினைச்சொல்லுக்கு நன்ருகப் புரிந்துகொள்ளல் என்று அர்த்தம்.)

இனி, அறிவு காட்டி வாதாடுகிருள். 'என்னைத் தேடிவரும்படி ஹனுமானை அனுப்பினீரே, அப்போதே நான் லங்கையில் இருந்தேன் என்று தெரியுமல்லவா? அன்றே ஏன் விட்டொழிக்கவில்லை? உமது கருத்தை அவன் நேரிலே சொல்லக் கேட்டிருப்பேன், உடனே உயிரை விட்டிருப்பேன். வீணுக நீர் முயற்சியும் செய்திருக்க வேண்டாம். உமது நண்பர்களும் அனுவசியமாக சிரமப்பட்டிருக்கமாட்டார்கள்' என்கிருள்.

ப்ரேஷிதஸ்தே யதா வீரோ ஹனுமான் அவலோகக:
லங்காஸ்தா அஹம் த்வயா வீரகிம் ததா ந விஸர்ஜிதா 24

பிறன் மனையில் இருந்தாள் என்பது இன்றுதானா தெரியும்? இதைப் பிறர் முன்னிலையில் கூறத் துணியும் கணவனைக் கண்டித்துப் பேசுகிருள். ஏளனம் ஒலிக்கிறது.

ராமன் பேசியதற்கெல்லாம் ஒரு காரணம் கண்டுபிடிக்கிருள் ஸீதை. கோபம்! 'அது வளர வளர இப்படி பேசுகிறீர். எளிதிலே பெண்மையையே புறக்கணித்துவிட்டார் ஒரு ஆண் மகன்' என்கிருள்.

த்வயா து நரசார்தூல க்ரோதமேவ அனுவர்த்ததா
லகுனேவ மனுஷ்யேண ஸ்த்ரீத்வமேவ புரஸ்க்ருதம் 25

'யோசித்தே இம்முடிவுக்கு வந்தேன்' என்று ராமன் சொன்னதைப் பொருட்படுத்தாமல் அவன் மனநிலையை உணர்ந்து ஆராய்ந்து, கோபமே காரணம் என்று அறிவு கூறுகிருள். அதையும் அவன் ஏற்கவில்லை. அவ்வளவு கோபம்! ஸீதையோ பெண்ணினத்துக்காக வாதாடுகிருள்.

ஹனுமான் வந்து பார்த்த சம்பவத்தைக் கம்பனும் நினைவுறுத்துகிருர். 'மாருதி வந்து கண்டான். விரைவில் நீ வந்து என்னை மீட்பாய் என்று ஆறுதல் சொன்னுன். இங்கு நான் சோர்ந்து கிடந்த நிலையை அவன் உனக்குச் சொல்லவில்லையா? அல்லது அவன் உன் தூதன் இல்லையோ?' என்கிருளாம்.

மாருதி வந்து எனைக் கண்டு வள்ளல் நீ
சாருதி ஈண்டு எனச் சமையச் சொல்லினுன்
யாரினும் மேன்மையான் இசைத்ததில்லையோ
சோரும் என்னிலை அவன் தூதும் அல்லனே?

'ஹனுமான் நான் அனுப்பிய தூதனல்ல' என்று சொல்லும் நிலைகூட வரலாம்! கடைசியில் தன்னைப்பற்றிச் சொல்லுகிருள். சொல்ல வேண்டிய நிலை வந்துவிட்டது. 'பெயரளவில் ஜனகன் மகள். ஆனுல் மண்ணில் தோன்றியவள் நான். எனது பக்தி, ஒழுக்கம், எல்லாவற்றையும் புறக்கணித்துவிட்டீர். என்னைப்பற்றி அறிந்ததையெல்லாம் மறந்தீர், பால்ய வயதில் பிடித்த இக்கையை ஆணைப்படி போற்றத் தவறிவிட்டீர்' என்கிருள். நெஞ்சைத் துளைக்கும் குற்றச் சாட்டு.

அபதேசேன ஜனகாத் நோத்பத்திர் வஸுதாதலாத்
மம வ்ருத்தம் ச வ்ருத்தஞ பஹுதேன புரஸ்க்ருதம்
ந ப்ரமாணீக்ருத: பாணிர் பால்யே பாலேன பீடித:
மம பக்திஸ்ச சீலம் ச ஸர்வம் தே ப்ருஷ்டத: க்ருதம் 26

முதலடி. 'ஜனகன் மகளே! எங்கிஷ்டமோ போகலாம்' என்று சொன்னதற்குப் பதில்.

உணவும் உடையும் தந்து காக்கவேண்டிய கடமையைக் குறிப்பிடவில்லை ஸீதை. தீயை வலம் வந்து சொன்ன அப்புனித மந்திரத்தை நினைவுறுத்துகிருள் உத்தமி.*

'நிழல் போலத் தொடருவாள் என் மகள்' என்று சொன்னுர் ஜனகன். அதை நினைவுறுத்துகிருள். பதிவ்ரதை, குணவதி என்றெல்லாம் வர்ணித்தார். அவர் சொன்ன சொற்களை நிலைநாட்ட இவள் பக்தியோடிருந்தாள். ஆனுல் இதுவரை காட்டிய சீலத்தை ராமன் லக்ஷியம் செய்யாமலே பேசுகிருன். இதுவே ஏமாற்றம். 'மேலோருக்குரிய குணம் கருணை'யென்று ஹனுமானுக்கு எடுத்துச் சொன்னுள், அரக்கியருக்குப் பரிந்து பேசிய சமயம். இன்று தன் பொருட்டே பரிவுக்கு ஏங்கி நிற்கிருள். ஆயினும் இறைஞ்சிக்கேட்க முடியுமா?

விவாகத்தின்போது எழுந்த நம்பிக்கையையும் இன்று புறக்கணிக்கப்பட்டு நிற்கும் நிலையையும் ஒரே வரியில் ஒப்பிட்டுச் சொல்லி விடுகிருள். நெஞ்சையடைக்கிறது கண்ணீர். அருகில் செயலற்றுச் சிந்தையில் ஆழ்ந்து நிற்கும் லக்ஷ்மணனைப் பார்க்கிருள். அவனை உதவி கேட்கிருள். என்ன உதவி? 'தீயை வளர்ப்பாய், லக்ஷ்மணு! அதுவே இத்துயருக்கு மருந்து. வீணுன பழி சுமந்து நான் வாழமாட்டேன். எனது சீலம் என் கணவருக்குத் திருப்தியானதாக இல்லை. எல்லோர் முன்னிலையிலும் 'போ' என்று சொல்லிவிட்டார். எனக்கு இனிப் புகலிடம் தீ. அக்னியில் விழப்போகிறேன்' என்கிருள்.

> சிதாம் குருமே ஸௌமித்ரே வ்யஸனன்ய அஸ்ய பேஷஜம்
> மித்யோபகாதோபஹதா ந அஹம் ஜீவிதும் உத்ஸஹே
> அப்ரீதஸ்ய குணைர்பர்த்து: த்யக்தாயா ஜனஸம்ஸதி
> யா க்ஷமா மே கதிர்கந்தும் ப்ரவேக்ஷ்யே ஹவ்யவாஹனம் 27

உயர் குணத்தை நம்பி, அன்பை நாடி, உணர்ச்சியைத் தூண்டி, உறுதிகளை நினைவுறுத்தி, எவ்வளவோ செய்தும் பயனில்லை என்றவுடன் நேர்மையைக் காட்டித் தன்புகழை நிலைநாட்டத் துணிகிருள் ஸீதை. (அவளுக்கு மட்டும் குலப்பெருமை இருக்காதா?) அதற்கு வழி இதுதான். உயிரைவிட்டால்தான் புகழ் நிலைக்கும் என்ற நிலைமை சில சமயம் வருவதுண்டு. முன்பு தசரதனுக்கு நேரவில்லையா?

லக்ஷ்மணனுக்குத் தாங்க முடியவில்லை. ஆனுல் ஒன்றும் சொல்லாமல் ராமன் முகத்தைப் பார்க்கிருன். 'சரி'யென்ற சொல் முகத்திலே தெரிகிறது. அதையுணர்ந்து தீயை வளர்க்கிருன் இளையவன்.

> ஸ விஞாய ததஸ் சந்தம் ராமஸ்ய ஆகாரஸூசிதம் 28

---

*விவாகத்தின்போது கை பிடித்தல் விசேஷமான பொருள் கொண்டது. மணமகன் கை பிடித்து அழைத்து மணமகளோடு தீயை வலம் வருகிருன். அப்போது ,வானமே நான், இப்புவியே நீ. மனமும், சொல்லும் நானும் நீயும், துணைவியே, ஏழடியும் வைத்து நீ தோழியென வருவாய்' என்கிருன். இது இன்றியமையாத சடங்கு. 'சப்தபதீ' யென்ற இம்மந்திரம் சொன்னலன்றி விவாகம் முழுமையடையாது.

இந்நிலையை வர்ணிக்கும் கம்பன் 'தீ இடு' என்று அவள் வாயால் கூறினாள். ராமன் கண்ணினால் கூறினான். இடையே மனம் நொந்து நிற்கிறான் லக்ஷ்மணன்' என்கிறார்.

**இளையவன் தனை அழைத்து இடுதி தீ யென**
**வளையொலி முன்கையாள் வாயிற் கூறினாள்**
**உளைவுறு மனத்தவன் உலகம் யாவுக்கும்**
**களைகணைத் தொழ அவன் கண்ணிற் கூறினான்**

ஸீதை ராமனை வலம் வருகிறாள். (விடைபெற்றுக் கொள்ளும் சடங்கு). அவன் தலைகுனிந்து நிற்கிறான். தீயை அணுகி நின்று தெய்வங்களை வணங்கியபின் வாய்விட்டுச் சொல்லுகிறாள், 'என் உள்ளம் ஒரு நாளும் ராமனைவிட்டகலாது நிற்பது உண்மையானால் உலகோருக்கு சாக்ஷியாக என்னை இத்தீ காக்கட்டும். களங்கமற்ற என்னைக் கெட்டவள் என்று ராமன் கருதுவதால் உலகோருக்கு சாக்ஷியாக என்னை இத்தீ காக்கட்டும். சொல்லிலே, மனதிலே, செயலிலே நான் எல்லா தருமங்களுமறிந்த ராமனை விட்டு விலகாதது உண்மையானால் இத்தீ என்னைக் காக்கட்டும்.'

யதாமே ஹ்ருதயம் நித்யம் ந அபஸர்ப்பதி ராகவாத்
ததா லோகஸ்ய ஸாக்ஷீ மாம் ஸர்வத: பாது பாவக:
யதா மாம் சுத்த சாரித்ராம் துஷ்டாம் ஜானாதி ராகவ:
ததா லோகஸ்ய ஸாக்ஷீமாம் ஸர்வத: பாது பாவக:
கர்மணா மனஸா வாசா யதா ந அதி சராம்யஹம்
ராகவம் ஸர்வ தர்மஜ்ஞம் ததா மாம் பாது பாவக: 29

ராமன் பேரிலேயே ஆணையிடுகிறாள்! மனிதனென்ற ராமன் சந்தேகித்தாலும் கணவனென்ற முறையில் பெருமை குறையவில்லை யென்பது பொருள். 'எல்லா தருமங்களும் அறிந்தவன்' என்கிறாள். 'உன் பெருமையை நீயே உணரவில்லை'யென்று ஸூக்ஷ்மமாய்ச் சொல்லுகிறாள் போலும்.

கடைசி சுலோகத்தைத் தமிழாக்குகிறார் கம்பன்

தர்மஜ்ஞ என்னவாயிற்று?

**மனத்தினால் வாக்கினால் மறுவுற்றேன் எனின்**
**சினத்தினால் சுடுதியால் தீச்செல்வா என்றாள்**

தவறு செய்திருந்தால் தீச்செல்வனாகிய அக்னிதேவனுக்குச் சினம் வந்துவிடுமாம்!

தீ கொழுந்துவிட்டெரிகிறது. உயிரிலே பற்றில்லாமல் தீயிலே இறங்கினாள் என்கிறார் வால்மீகி. மலர் மேல் நடப்பதுபோல் அச்சமின்றிக் குதித்தாள் என்கிறார் கம்பன்.

கூடிநிற்கும் பெண்களெல்லாம் கதறுகிறார்கள். அரக்கரும் வானரரும் 'ஹாஹா' என்று சொல்ல, எங்கும் ஓலம்.

தேவர்கள், கந்தர்வர்கள், தெய்வங்களெல்லாம் வந்து கூடுகிறார்கள். இந்திரனும், பிரமனும் சிவனும்கூட வந்து பார்க்கிறார்கள் ஸீதை செய்யும் விந்தையை. சிறிது நேரம் கவலைதோய்ந்த முகத்துடன் இருக்கிறான் ராமன். வானோரைக் கண்டபின் வணங்கி நிற்கிறான்.

அவர்கள் 'தேவர்களின் தலைவன் நீ. உலகம் படைத்த பெருமகன். உலகின் ஆதியும் அந்தமும் கண்டவன். ஸீதையைப் பாமரன் போல நிராகரிக்கிறாயே?' என்கிறார்கள்.

> கர்த்தா ஸர்வஸ்ய லோகஸ்ய ச்ரேஷ்டோ ஞானவதாம்வர:
> உபேக்ஷஸே ச வைதேஹீம் மானுஷ: ப்ராக்ருதோ யதா 30

'உத்தமனே! இப்படிச் செய்யலாமா?' என்றாள் ஸீதை. அது போதவில்லை. 'நீயே உலகம் படைத்தவன்' என்று கூறிப் பொறுப்பை உணர்த்துகிறார்கள். 'பாமரன் போலிருக்காதே' என்பதும் ஸீதை சொன்னதுதான்.

'நான் மனிதன், தசரதன் மகன். நான் யார் என்பதை நீங்களே சொல்லவேண்டும்' என்று கேட்டுக் கொள்ளுகிறான் ராமன்.

> ஆத்மானம் மானுஷம் மன்யே ராமம் தசரதாத்மஜம் 31

'நீயே பரம்பொருள். நாராயணன்' என்று கூறிப் புகழ்கிறார் பிரமன். 'இவனோ வேதமுதற் காரணன்?' என்று ராவணனே சந்தேகித்தானல்லவா?

இதற்குள் ஸீதையைத் தாங்கி வெளிக்கிளம்புகிறான் அக்னி தேவன் (தீச்செல்வன்'). உலகோருக்கு சாக்ஷியாகக் காத்ததோடல்லாமல் 'இவள் குற்றமற்றவள்' என்கிறான். 'சொல்லிலும் மனதிலும் செயலிலும் உன்னை மீறவில்லை. கண்ணால்கூடத் தவறு செய்யாதவள்' என்றுறுதி கூறுகிறான்.

> நைவ வாசா நமனஸா ந அநுத்யாணத் ந சக்ஷுஷா
> ஸுவ்ருத்தா வ்ருத்த சௌண்டீர்ய நத்வாம் அதிசசாரஹ 32

ஸீதை லங்கையில் உறுதியுடன் இருந்து தவம் கிடந்ததை எடுத்துரைத்து 'இவளை ஏற்றுக்கொள். நான் கட்டளையிடுகிறேன்' என்கிறான். (ஆக்ஞாயாபயாமி')

ராமனுக்கு அறிவுகாட்டும் அக்னிதேவன் 'ஏன் தருமத்தைக் கைவிட்டாய்?' என்று கேட்டான் என்கிறார் கம்பன். மேலும், 'இவள்

மட்டும் கோபம் கொண்டு சாபம் இட்டால் மலர் மேல் இருக்கும் பிரமனும் மாய்ந்துவிடுவான் மழைதான் பெய்யுமா? பூமி பிளக்குமேயன்றி பொறுத்துக் கொண்டிருக்குமா? தருமம் நேர்வழியில் செல்லுமா? உலகம் நிலைக்குமா? ' என்கிறானும்.

பெய்யுமே மழை புவிபிளப்பதன்றியே
செய்யுமே பொறை அறம் நெறியில் செல்லுமே
உய்யுமே உலகு இவள் உணர்வு சீறினால்
வையுமேல் மலர்மிசை அயனும் மாயுமே

ஸீதையை உலகின் தாய் (ஜகன்மாதா) எனக் கருதும் கவியின் குரல் கேட்கிறது.

ராமன் மனதில் திருப்தி உண்டாகிறது. பிரமனைப் பார்த்து, 'மூவுலகிலும் எங்கிருப்பினும் ஸீதையைக் குற்றம் சொல்ல முடியாது' என்கிறான்.

அவச்யம் த்ரிஷு லோகேஷு ந ஸீதா பாபம் அர்ஹதி 33

தான் செய்த கொடுமைக்கொரு சமாதானமும் கூறுகிறான். 'நெடுநாள் ராவணன் மனையில் இருந்தாள் எனினும் ராமன் காமம் மேலிட்ட அசடு, ஏற்றான் என்று நல்லோர் சொல்லுவர். அதற்காகவே சோதனை' என்கிறான்.

பாலிச: கலுகாமா த்மா ராமோ தசரதாத்மஜ:
இதி வக்ஷ்யந்தி மாம் ஸந்தோ ஜானகீம் அவிசோத்யஹி 34

பிறன்மனையில் இருந்தாள் என்ற எண்ணம் மீண்டும் வெளிப்படுகிறது. 'நல்லோர் குறைகூறுவர்' என்று சொன்னபோதிலும் அது அவனது கருத்துதான் என்பதும் தெளிவு.

'என்னையன்றி ஒன்றுமறியாத உள்ளமும் பக்தியும் கொண்டவள். எங்கள் இருவர் இதயமே ஒன்றுக்கொன்று மாறி இடம் பெற்றிருக்கிறது என்பதெல்லாம் நான் அறிவேன். ஆனால் உலகோருக்குச் சான்று காட்டவே தீயில் இறங்கும்போதுகூடத் தடுக்காமல் நின்றேன்' என்கிறான்.

கடைசியில் ஒரு வார்த்தை. 'இவள் தனது கற்பைக் கொண்டே தன்னைக் காத்து நின்றாள். அதனால் ராவணன் நெருங்க முடியவில்லை, கடல் எவ்வளவு மோதியும் கரையை உடைக்க முடியாததுபோல்' என்கிறான்.

இமாம் அபி விசாலாக்ஷீம் ரக்ஷிதாம்ஸ்வேன தே ஜஸா
ராவணோ ந அதிவர்த்தேத வெலாமிவ மஹோததி : 35

அக்னி தேவன் சொன்னதைத் திருப்பிச் சொல்லுகிறான், நேரில் கண்டவன்போல். முன்பு ஹனுமான் சொன்னதைவிட விவரமாய், உருக்கமாய் யார் சொல்ல முடியும்? அதையெல்லாம் மறந்து நின்ற நிலையில் புதியதோர் வாக்குமூலம் அவசியமாகிறது.

'சூரியனையும் கிரணங்களையும் பிரிக்க முடியுமா? மனிதனையும் அவன் புகழையும் பிரிக்க முடியுமா? அதுபோலவே' என்கிறான். முடிக்குமுன், 'நீங்களெல்லாம் சொல்லும் நன்மொழியை ஏற்றுக் கொண்டு அதன்படியே செய்கிறேன்' என்கிறான்.

அவச்யம் து மயா கார்யம் ஸர்வேஷாம் வோ வச : சுபம் 36

மேலோருக்குச் செலுத்தும் மரியாதையாயிருக்கலாம். ஆனால், பிறர் சொல்லை ஏற்கும்போது மனம் உள்ளூர மாறவில்லையென்பது தொக்கி நிற்கிறதே! 'தூயவள் என்று நான் அறிவேன்' என்ற சொற்களின் எளிமையையும், ஸீதையை நிராகரித்த வசை மொழிகளின் வலிமையையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

நல்லோரும் உலகோரும் நிந்திப்பார்கள் என்ற சிந்தனை ஓங்கி நின்ற நிலையை நாடகம் போல் காட்டிவிட்டார் வால்மீகி. அதற்குப் பரிகாரமாக விண்ணோர் வந்து சான்று சொல்ல வேண்டியிருக்கிறது.

ராமன் மனதில் என்ன நடந்தது? உலகோருக்கெல்லாம் கருணை காட்டும் உத்தமன் மனைவியின்பால் கொடுமையாய் நடந்து கொண்டதை நினைத்தால் வாலி கேட்டதுபோல் 'இரக்கம் எங்கு உகுத்தாய்' என்று நாமும் கேட்கலாம் போல் இருக்கிறதல்லவா?

காரணத்தை விவரித்துக் கூறவில்லை கவி. ஆனால், பேச்சையும் செயலையும் கொண்டு நாம் ஊகிக்கலாம். முதலாவதாக, ராவணனைக் கொன்று வெற்றி கண்ட நிலையில் வீரராகவனாக நிற்கிறான். தன் வலிமையும் குலப்பெருமையும் மனதில் ஓங்கி நிற்கிறது. விபீஷணனுக்கு மகுடம் சூட்டி, ஸீதையை மீட்டு அயோத்திக்குச் செல்ல வேண்டும். இந்நிலையில் 'இவளோடு திரும்பிச் சென்று ஊராரிடம் தலைநிமிர்ந்து நின்று பேச முடியுமா?' என்று நினைக்கிறான் போலும். 'உயர்குலத்தில் பிறந்தோன்' என்று தன்னையும், 'பிறன் மனையில் இருந்தவள்' என்று ஸீதையையும் குறிப்பிட்டது இதன் விளைவு.

இன்னொரு விஷயம். கற்பனை செய்து பார்க்கும் உருவமும் நேரில் கண்ட உருவமும் வேறுபட்டால் அறிவும் உணர்ச்சியும் வேறு திக்கில் இழுத்துச் செல்லும். ராமன் கற்பனையில் நின்ற ஸீதை தண்டகாரண்யத்தில் உடன் வசித்துத் தவவேடத்தில் இன்பமூட்டிய துணைவி. லங்கையில் நேரில் கண்ட ஸீதை நெடுநாள் பிரிந்திருந்து அலங்காரக்

கோலத்தில் காட்சியளிக்கும் பெண். இந்த வேறுபாட்டின் காரண மாகவும் ஆத்திரம் மூளுகிறது. 'நீ அழகியல்லவா?' என்று இடித்துக் கூறவும் முற்படுகிறுன்.

மனைவி அழகாயிருந்தால் மனதில் சஞ்சலம் ஏற்படக்கூடும். அதன் விளைவாக மனிதன் மனதிலே தோன்றும் பகைமையைக் குறிக் கும் பழமொழியே 'பார்யா ரூபவதீ சத்ரு.'

40

# புனைந்தான் மௌலி

விண்ணோர் எல்லாம் கூடிநின்று ஸீதையை ஏற்றுக் கொள்ளச் சொன்னபின் ராமன் சரியென்கிறான். பரமசிவனும் வந்து பாராட்டி ஆசி கூறுகிறார். மும்மூர்த்திகளில் ஒருவர் என்பதோடு ராவணனுக்கு வரம் தந்த கடவுள் அல்லவா சிவன்? அவர் மெச்சுகிறார் வீரனை. மேலுலகத்திலிருந்து தசரதனை யும் வரவழைத்து நிறுத்துகிறார்.

இறந்து வான் சென்ற தசரதன் மகனைக் கண்டு மகிழ்ந்து அணைத்துக் கொள்ளுகிறான். 'உன்னைப் பிரிந்து எனக்கு ஸ்வர்க்கமே வேண்டாம்' என்கிறான் தந்தை. 'கைகேயி சொன்ன கொடுஞ் சொல் எல்லாம் நெஞ்சிலே தைத்து நின்றன. இன்று உன்னைப் பார்த்தபின் தான் நெஞ்சு நிலையாயிற்று. இனித் திரும்பிப்போய் ராஜ்யத்தை ஏற்றுக்கொண்டு சுகமாய் வாழ்வாய்' என்று ஆசி கூறுகிறான்.

கைகேய்யா யானி சோக்தானி வாக்யானி வததாம்வர
தவ ப்ரவ் ராஜனார்த்தானி ஸ்திதானி ஹ்ருதயே மம

.........................................................................................

ப்ராத்ருபிஸ்ஸஹ ராஜ்யஸ்தோ தீர்க்கம் ஆயுரவாப்னுஹி 1

கைகேயி செய்த வினையால்தான் நேர்ந்த துன்பமெல்லாம் என்பதை தசரதன் வாயிலாகக் குறிப்பிடுகிறார் கவி. இதை அப்படியே தமிழாக்குகிறார் கம்பன். கைகேயி 'கொண்ட வரம் வேல்போலத் தைத்து நின்றது. உயிர்போன பின்னும் அது அகலவில்லை. இன்று உன்னை அணைத்தபின் அகன்றது' என்கிறானும் தசரதன்.

அன்று கேகயன் மகள் கொண்ட வரம்என்னும் அயில்வேல்
இன்று காறும் என் இதயத்தினிடை நின்றது என்னைக்
கொன்று நீங்கலது இப்பொழுது அகன்றது.

இதைக் கேட்ட ராமன் 'கைகேயியையும் பரதனையும் துறந்து அவர்களுக்கிட்ட சாபம் நீங்கிட அருள வேண்டும்' என்கிறான். தசரதன் சம்மதிக்கிறான்.

தீயன் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக எனத்தாழ்ந்தான்.

லக்ஷ்மணனுக்கு ஆசிகூறி ஸீதையிடம் வருகிறான் தசரதன். 'உன்னை நிராகரித்தான் என்று ராமன்மேல் கோபம் கொள்ளாதே. உன் நலத்தைக் கோரி உன்னைப் புனிதமாக்கவே இதைச் செய்தான்' என்று சொல்லி சமாதானம் செய்துவிட்டுப் போகிறான்.

கர்த்தவ்யோ நதுவைதேஹீ மன்யுஸ் த்யாகம் இமம்ப்ரதி
ராமேண த்வத் விசுத்யர்த்தம் க்ருதம் ஏதத் ஹிதைஷிணா 2

இதைக்கூற ஓர் உவமை காட்டுகிறார் கம்பர். 'பொன்னைப் புடம் போடுவது தூய்மையைக் காட்டவே. அதுபோல, உன்னைக் கற்புக்கரசியெனக் காட்டவே நினைத்தான் ராமன்' என்கிறான்.

பொன்னைத் தீயிடைப் பெய்வதப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென்றுலகில்
பின்னைக் காட்டுவதரிய தென்றெண்ணிப் பெரியோன்.

தசரதன் வானுலகிலிருந்து வருவது சாத்தியமா? தேவர்களும் பரமனும் சிவனும் வந்தபோது அவனும் வந்திருக்கலாம். பழம் பெருங்காவியத்தில் இது சகஜம். இக்காட்சியின் உட்பொருள் என்ன வென்று பார்ப்பதுதான் முக்கியம்.

கைகேயி செய்த வினையே முதல் குற்றம் என்று கூறி எல்லோர் மனதையும் வேறு திக்கில் மாற்றினான் தசரதன். ராமன் மேல் கோபம் கொள்ளவேண்டாம் என்று ஸீதைக்கு சமாதானம் சொன்னான். இவ்விரண்டையும் கூடியிருப்போர் யாரும் (லக்ஷ்மணனைத் தவிர) சொல்லியிருக்க முடியாது. அதற்காக தசரதனை மீண்டும் வரவழைக் கிறார்போலும் கவி. மேலும், ஸீதைக்கு தசரதனிடம் நன்மதிப்பு அதிகம். (ராவணனை முதலில் பார்த்தபோது 'தசரதன் மருமகள் நான்' என்று பெருமையோடு சொன்னாள் அல்லவா?)

இன்னொரு பொருள். கைகேயியை நிந்தித்தான் தசரதன். அவளுக்குப் பரிந்து பேசினான் ராமன். ஏன்? சிற்றன்னைமீது இரக்கமா? ஆனால் சற்று முன் மனைவியிடம் இரக்கமற்று நடந்து கொண்டானே, அவளும் பெண்ணல்லவா? இதுதான் முரண்பாடு. அன்புக்குரிய

ஸீதையைக் கடிந்து, நிந்தனைக்குரிய கைகேயிக்குப் பரிந்து பேசும் ராமனின் மனக்குழப்பத்தைக் காட்டுகிறார் கவி.

ராமன் ஸீதையிடம் கடுஞ்சொற்கள் பேசியபோது ஒவ்வொரு நிமிடமும் 'அகலிகைக்கு கிருபை செய்த பெருமகனா பேசுகிறான்?' என்ற ஏக்கம் நம் மனதில் தோன்றிற்று. இப்போது கைகேயிக்குப் பரிந்து பேசி நம் ஏக்கத்தைப் பெரிதாக்குகிறான். இந்த உள்ளம் எங்கே, 'ராவணன் சும்மா விட்டிருப்பானா?' என்று கேட்ட உள்ளம் எங்கே?

கைகேயியும் அகலிகையும் பிறர் மனைவிகள். அனுதாபம் காட்டுவது எளிது. தன் மனைவியிடம் 'தான்' என்ற உணர்ச்சியில்லாமல் பேச முடியுமா? பிறருக்குச் சொல்வதை நாமே செய்வது கடினம். இதை வற்புறுத்திக் காட்டவே இக்காட்சியைப் படைத்தார் வால்மீகி என்பது எனது கருத்து.

கூடி நின்றவர் வந்தவழியே திரும்பிச் செல்லுகின்றனர். விண்ணோர் ராமனிடம் 'நீயும் அயோத்திக்குப் போ. வானரருக்கு விடை கொடுத்தனுப்பு. ஸீதையை சாந்தப்படுத்து' என்று கூறிச் செல்லுகின்றனர்.

மறு நாள் விபீஷணன் ஆடையாபரணங்களையெடுத்து வந்து, நீராடிக் கோடி உடுக்கும்படி வேண்டுகிறான். ராமன் மறுக்கிறான். 'என்னை நோக்கி ஒரு தம்பி ஏங்கியிருக்கிறான். பரதனைப் பார்க்கும் வரை எனக்கு எவ்வித அலங்காரமும் வேண்டாம்' என்கிறான்.

> தம் வினா கேகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம்
> ந மே ஸ்நானம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணானி ச 3

'கைகேயி புத்ரன்' என்று குறிப்பிடுகிறான். தகப்பனிடம் கைகேயிக்குப் பரிந்து பேசியது மனதிலேயே நிற்கிறது போலும்.

'விரைந்து செல்ல என் புஷ்பக விமானம் இருக்கிறது. ஒரே நாளில் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்' என்றுகூறி உபசரிக்கிறான் விபீஷணன். ஆனால் ஒரு நாள் தங்கிப் போகலாம் என்கிறான். 'அபிமானத்தால் வேண்டுகிறேன்' என்கிறான்.

ராமனோ 'பரதனைக் காணத் துடிக்கிறது என் உள்ளம். சித்ரகூட மலையிலே வந்து காலைத் தொட்டு வணங்கினான். அயோத்திக்குத் திரும்பி வரும்படி கெஞ்சினான். அவனைப் பார்க்க வேண்டும். என் தாய்மார்களையும் பெரியோரையும் உறவினரையும் ஊராரையும் காணவேண்டும்' என்கிறான்.

தம் து ப்ராதரம் த்ரஷ்டும் பரதம் த்வரதே மன:
மாம் நிவர்த்தயிதும் யோ அஸௌ சித்ரகூடம் உபாகத: 4

ராவணனைக் கொன்றது முதல் ஊர் நினைவு வளர்ந்துகொண்டே வருகிறது.

புஷ்பக விமானம் வந்து நிற்கிறது. விடைபெற்றுக்கொண்டு கிளம்பும் ராமன் விபீஷணனைத் தனியே அழைத்து வானரர்களுக்கு சன்மானம் செய்யும்படி சொல்லுகிறான். 'இவர்களால்தான் வெற்றி கிடைத்தது. உனக்கு அரசும் கிடைத்தது. இவர்களை கௌரவித்துப் பொருள் வழங்கு' என்கிறான். அப்படியே நடக்கிறது.

ஸீதையை மடியில் இருத்தித் தேரில் ஏறுகிறான் ராமன். பின்னே லக்ஷ்மணன். ஸீதையின் முகத்தில் நாணம் தோற்றுகிறது. 'போய் வருகிறேன். நண்பனுக்குரிய செயலைச்செய்துவிட்டாய், சுக்ரீவனே! சுகமாய்ப் போய்க் கிஷ்கிந்தையில் அரசுபுரி. விபீஷணா! நான் தந்த அரசை ஆள்வாயாக. இனி உன்னை தேவர்களும் அசைக்க முடியாது' என்கிறான்.

வானரரும் விபீஷணனும் 'நாங்களும் அயோத்திக்கு வருகிறோம்' என்று கேட்க, 'அது எனக்கு மகிழ்ச்சி தரும்' என்று சொல்லி எல்லோரையும் உடன் அழைத்துச் செல்லுகிறான்.

விமானம் உயரக் கிளம்புகிறது. மேலே இருந்தவண்ணம் எல்லாவற்றையும் ஸீதைக்குக் காட்டுகிறான். 'த்ரிகூட மலையின்மீது அமைந்த லங்கையைப் பார். இங்குதான் ராவணன் வீழ்ந்தான். வரம் பெற்ற கொடியவனைக் கொன்றேன் உன் பொருட்டு' என்கிறான்.

அத்ர தத்தவர: சேதே ப்ரமாதீ ராக்ஷஸேச்வர:
தவஹேதோர் விசாலாக்ஷீ ராவணோ நிஹதோ மயா 5

அன்போடணைத்து அருகிலே இருத்திப் பேசுகையில் 'உன் பொருட்டுக் கொன்றேன்' என்ற குழைந்த சொல் வருகிறது. கடுஞ் சினம் ஓங்கி நின்ற நிலையில் 'உனக்காகப் போர் தொடுக்கவில்லை. குலப் பெருமையைக் காக்கவே' என்றான். அதற்குப் பரிகாரம்!

'இங்குதான் இந்த்ரஜித்தை லக்ஷ்மணன் கொன்றான். இங்குதான் மண்டோதரி விழுந்து புலம்பினாள். இங்குதான் அணைகட்டிக் கடல் கடந்தோம். இங்குதான் விபீஷணன் என்னைக் கண்டு நட்புக் கொண்டான். இங்குதான் கிஷ்கிந்தை, சுக்ரீவனின் ஊர்' என்கிறான். விமானம் விரைந்து செல்லுகிறது! ஆகாயத்திலிருந்து சொற்சித்திரம் வரைவதுபோல் அமைக்கிறார் சுலோகங்களை.

கிஷ்கிந்தையில் வானரப் பெண்களையும் ஏற்றிக்கொண்டு செல்லுகிறது விமானம். 'இங்குதான் சுக்ரீவன் என்னை வந்தடைந்தான். உன்னைப் பிரிந்து நான் மிகவும் வாடிய இடம் இதுவே. இங்கு நான் சபரியைக் கண்டேன். இதுதான் ஜனஸ்தானம். அதோ அந்தக் குடிசை, ராவணன் உன்னைத் தூக்கிச் சென்றானே அந்த இடம். அதோ சித்ரகூடம். பரதன் வந்து வணங்கிய இடம். அங்கு தெரிவது பரத்வாஜ முனிவர் ஆச்ரமம். அதோ கங்கை. அதோ ஸரயூ நதி . . . அதோ அயோத்தி வந்துவிட்டோம். ஊரைக் கும்பிடு' என்கிறான்.

ஐம்பது சுலோகங்களில் நடந்ததனைத்தையும் வாசகருக்கு நினைவூட்டிவிட்டார் கவி. கையாண்ட முறையோ நவீனம் : விரைந்து செல்லும் விமானத்திலிருந்து கூறும் காட்சி விளக்கம்!

'புஷ்பக விமானம் பறந்ததா?' என்ற பிரச்னை அனாவசியம். அத்தகைய விமானத்தைக் கற்பனை செய்து, அதில் பறந்து சென்றால் கீழே என்னவெல்லாம் தெரியும் என்பதையும் விவரித்துக் கூறிய ஆதிகவிக்கு நமது அஞ்சலி உரியது.

வழியில் பரத்வாஜ ஆச்ரமத்தில் இறங்கி முனிவரை வணங்குகிறான் ராமன். 'ஊரிலே நன்மை தீமைகளைப் பற்றி என்ன கேள்விப் படுகிறீர்? பரதன் எப்படி இருக்கிறான்? தாய்மார் உயிரோடிருக்கின்றனரா?' என்று கேட்கிறான் நெடுநாள் கழித்து ஊருக்கு திரும்புபவன் அருகிலுள்ள பெரியவரிடம் நிலையறிய விரும்புகிறான்.

இவன் கேள்விகளில் முக்யமானதை மட்டும் அறிந்து 'பரதன் உன்னையே எதிர்பார்த்துச் சடை தரித்துப் புழுதி படிந்த மேனியனாய் நிற்கிறான். உன் பாதுகையைப் போற்றி வருகிறான். மற்றபடி எல்லாம் நலமே' என்கிறார் முனிவர்.

> பங்க திக்தஸ்து பரதோ ஜடிலஸ்த்வாம் ப்ரதீக்ஷதே
> பாதுகேதே புரஸ்க்ருத்ய ஸர்வம்ச குசலம்க்ருஹே 6

மேலும் 'நீ முன்பு மரவுரியுடுத்தி மனையாளோடும் இளையானோடும் கானகம் சென்றபோது வருந்தினேன். பின்னர் நடந்ததெல்லாம் தெரியும். வெற்றியோடு வந்தது பற்றி மனம் களிக்கிறேன்' என்கிறார் முனிவர்.

பரதன் நிலையை வர்ணிக்கிறார் கம்பன். 'பார்த்தால் தென் திசையைப் பார்க்கிறான். வேறெங்கும் பார்ப்பதில்லை. ஏங்கி ஏங்கி, ரவிகுலத்து மகன் வாக்குத் தவறமாட்டான், வருவான் வருவான் என்று எண்ணி உயிர் போய்த் திரும்பும் நிலையில் இருக்கிறான்' என்கிறார்.

> **நோக்கிற் தென் திசையல்லது நோக்குறான்**
> **ஏக்குற்று ஏக்குற்று இரவிகுலத்துளான்**
> **வாக்கிற் பொய்யான் வரும் வரும் என்னுயிர்**
> **போக்கிப் போக்கி உழக்கும் பொருமலான்.**

அயோத்தியைத் தொலைவில் கண்டதும் சிந்தையில் இறங்குகிறான் ராமன். ஹனுமானை அருகில் அழைத்து தூது அனுப்புகிறான். ''ச்ரிங்கி பேரபுரம் சென்று குகனிடம் நான் வந்துவிட்டேனென்று சொல். அவன் மகிழ்வான். அவனை வழிகாட்டச் சொல்லி அவனுடன் அயோத்திக்குப் போ. பரதனைப் பற்றி அவன் சொல்லுவான்.

''நீ பரதனைச் சந்தித்து நான் வெற்றியோடு திரும்பி வந்துவிட்டேன், க்ஷேமமாயிருக்கிறேன் என்பதைச் சொல். ஸீதையை ராவணன் கவர்ந்ததும் அவளை நீ தேடியதும் பின்னர் ராவணனை நான் கொன்றதும் விண்ணோர் வந்து என்னை வாழ்த்தியதும் எல்லாவற்றையும் சொல்.

''இதைக் கேட்டு பரதன் என்ன செய்கிறான், முகத்தில் என்ன தெரிகிறது, என்பால் என்ன உணர்ச்சி கொண்டிருக்கிறான் என்பதை கவனித்து அறிந்து வருவாய்'' என்கிறான் ராமன்.

ஏதத்ச்ருத்வா யமாகாரம் பஜதே பரதஸ்ததா
ஸ ச வேதிதவ்ய ஸ்யாத் ஸர்வம் யச்சாபி மாம்ப்ரதி 7

ஆனால் மறுபடி 'பகைவரை வென்ற ராமன், பார் புகழ் கொண்ட ராமன், வெற்றியும் வலிமை கொண்ட தோழரும் சூழ வருகிறான் என்று சொல்' என்கிறான்.

உபயாதி ஸம்ருத்தார்த்த: ஸஹமித்ரைர் மஹாபலை: 8

சடை தரித்துத் துறவு பூண்ட ராமனைத் தனிமையில் கண்டான் பரதன் சித்ரகூடத்தில். இன்று வரும் ராமன் வீரராகவன். வெற்றியும் புகழும் கைக்கொண்டு வருகிறான். வலிமை கொண்ட தோழரும் வருகின்றனர். பதினான்கு வருடங்கள் கழிந்து எளிய நிலையில் வந்து நின்று ராஜ்யத்தை வேண்டிக் கேட்கும் தனி மனிதனல்ல என்பதை விளக்குகிறான் போலும்.

'இதைக் கூறியபின் பரதன் முகத்தை கவனி' என்கிறான். 'முகத்திலே களை குறைகிறதா? பார்வை எப்படி? என்ன சொல்லுகிறான்? எல்லாம் கவனி.'

எல்லாம் எதற்காக? வாய்விட்டுக் கூறுகிறான் ராமன். 'யானையும் தேரும் செல்வமும் பரம்பரையாய் வந்த ராஜ்யமும் எவன் மனதை இழுக்காது? ஒருவேளை தானே அரசாள வேண்டுமென்று பரதன் விரும்பினால், அவன் இந்த உலகையே ஆளட்டுமே! அவன் மனதையும் கருத்தையும் அறிந்து சீக்கிரம் வா. நாங்கள் நெடுந்தூரம் வருவதற்குள் திரும்பி வந்து சொல்' என்று கூறியனுப்புகிறான்.

ஜ்ஞேயாஸ்ச ஸர்வே வ்ருத்தாந்தா பரதஸ்ய இங்கிதானிச
யாவத் ந தூரம் யாதா : ஸ்ம க்ஷிப்ரம் ஆகந்தும் அர்ஹஸி 9

ராமன் ஏன் இப்படிப் பேசுகிருன்? அயோத்திக்கு விரைந்து சென்று பரதனேயும் தாய்மாரையும் காணத் துடித்தானே? பலர் முன்னிலேயில் பலமுறை பரதனேப் புகழ்ந்தானே?

தொலேவில் தோன்றும் நினேவுகள் கரைந்துபோய் அருகிலே வர வர வேறு எண்ணங்கள் ஓங்கி வருவது இயல்பு. மேலும், சமீபத்தில் லங்கையில் நடந்த சம்பவம் வெளிப்படுத்திய உண்மை என்னவென்ருல் ராமனின் ஐயம்கொண்ட மனப்பான்மை. ஸீதையை சந்தேகித்தது போலவே, பரதனேயும் சந்தேகிக்கிருன், அவனேயும் பரீக்ஷை செய்கிருன், தூதன் மூலம். (பரதனின் பெருமையைப் பிறருக்குக் காட்டவே இப்படிச் செய்தான் என்று சொல்லுவோரும் உண்டு. ஆனுல், அது பின்வருவதை முன்னமேயறிந்து சொல்லும் விளக்கம்.)

பரதன் புழுதியடைந்த மேனியன், தவம் கிடக்கிருன் என்று பரத்வாஜ முனிவர் சொல்லியும் பொருட்படுத்தாமல் தானே சோதிக்கும் அளவுக்கு மனதிலே சந்தேகம். சஞ்சலம்! தான் வெற்றியோடு வருவதைக்கூறி 'வலிமை கொண்ட தோழர் என்னுடன் இருக்கின்றனர்' என்று இடையே அறிவித்தது விந்தை. பரதன் போர் தொடுக்கத் துணிவான் என்று கருதினுனே ராமன்? அல்லது அவசியமிருப்பின் அதற்கும் தயார் என்ற உணர்ச்சி நொடியிலே தோன்றி மறைந்ததோ வீரராகவனுக்கு?

அயோத்திக்கு ஒரு கோசம் (சுமார் 1¼ மைல்) தாண்டியிருக்கும் நந்திக்கிராமத்தை அடைகிருன் ஹனுமான். மரவுரி தரித்து மெலிந்து, துறவிபோல் வாழும் பரதனேப் பார்க்கிருன். ராமன் பாதுகையை வைத்து வணங்கியபின் செயலில் ஈடுபடுவதையும் கவனிக்கிருன். அருகில் சென்று 'நீ எப்போதும் நினேத்திருக்கும் ராமன் உன்னே க்ஷேமம் விசாரித்தார். இனித் துயரம் வேண்டாம். விரைவில் நீ ராமனேக் காண்பாய்' என்கிருன். 'ராவணனேக் கொன்று, ஸீதையை மீட்டு வெற்றிகொண்டு வருகிருர், என்று சொல்லி, 'வலிமைகொண்ட தோழரை'யும் குறிப்பிடுகிருன். அதே வார்த்தை!

> நிஹத்ய ராவணம் ராம: ப்ரதிலப்ய ச மைதிலீம்
> உபயாதி ஸம்ருத்தார்த்த ஸஹமித்ரைர் மஹாபலே: 10

பரதன் ஆனந்தக் கண்ணீர் விடுகிருன். 'நீ மனிதனே தேவனே தெரியாது. கருணே கொண்டு இங்கு வந்தாய். நற்செய்தி சொன்னுய். உனக்கு என்ன வேண்டும்? ஆயிரம் பசுக்களும் நூறு கிராமங்களும் பதினுறு கன்னிகைகளும் தருவேன். எத்தனே வருடங்கள் கழித்து என் தலேவனின் பெயரைக் கேட்கிறேன்!' என்கிருன். ராமன் கற்பனேயில் தோன்றிய பரதனுக்கும் இவனுக்கும் எவ்வளவு வேறுபாடு!

‘ராமனுக்கும் வானரருக்கும் நட்பு ஏற்பட்டது எப்படி?’ என்று பரதன் கேட்க நடந்ததெல்லாம் சுருக்கமாய்ச் சொல்லுகிறான் ஹனுமான். ‘பரத்வாஜ ஆச்ரமத்தில் தங்கியிருக்கிறார். நாளை புஷ்ய நக்ஷத்திரம் கூடிய தினம். நிச்சயம் வருவார்’ என்கிறான்.*

இங்கு ஒரு காட்சியைக் கற்பனை செய்கிறார் கம்பன். பரதன் கணக்குப்படி ராமன் வரவேண்டிய நாள் கடந்துவிட்டதால். அவன் வரவில்லையாதலால் தீயில் விழுவேன் என்கிறான் பரதன் (முன்பு சித்ரகூடத்தில் சொன்னபடி). ‘ஆகையால் இந்த அரசை நீ ஏற்றுக்கொள்’ என்று சத்ருக்னனை வேண்டுகிறானும்!

அதற்கு அவன் என்ன சொல்லுகிறான்? ‘நன்றாயிருக்கிறது நம் அரசாட்சி. ராஜ்யத்தைத் துறந்து காட்டுக்குப் போனான் ஒருவன். போனவனைப் பின்தொடர்ந்து போனவனும் ஒரு தம்பி, அவன் திரும்பி வரும் நாள் தாண்டிப் போனதென்று உயிர்விடத் துணிபவனும் ஒரு தம்பி, சிறிதும் நாணமின்றி அவ்வரசை நானா ஏற்றுக் கொள்வது?’ கடைசி அடியில் ஏளனம் ததும்புகிறது.

**கானாள நிலமகளைக் கைவிட்டுப் போனவனைக் காத்துப் பின்பு**
**போனானும் ஒரு தம்பி, போனவன்தான் வரும் அவதி போயிற்று என்னா**
**ஆனாத உயிர்விட என்றமைவானும் ஒரு தம்பி, அயலே நாணாது**
**யானும் இவ்வரசு ஆள்வென் என்னே இவ்வரசாட்சி இனிதேயம்மா**

தம்பிகள் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக்கொண்டு தியாகமும் உயர்வும் காட்டும்போது, அரசு ஏற்பது என்ற எண்ணமே வெட்கப்படத் தக்கதாக இருக்கிறது. ‘நான் எவ்விதத்தில் தாழ்ந்தவன்?’ என்று கேட்காமல் கேட்டுவிடுகிறான் தசரதனின் நான்காவது மகன்.

பிறகு கோசலை வந்து தடுக்கிறாள். அதையும் பொருட்படுத்தாது தீயை வளர்க்கிறான் பரதன். ‘தாய் தந்தையர் சொல்வதைக் கேட்பது ராமனுக்குத்தான் கடமை. நான் எனது குற்றமற்ற தன்மையைக் காட்டுவேன்’ என்கிறானும் பரதன்!

இந்நிலையில் ஹனுமான் வருகிறான். ‘ஐயன் வந்தனன், ஆரியன் வந்தனன்’ என்று சொல்லிக்கொண்டே வருகிறான். ‘மெய்யே உருவான நீ உயிர்விட்டால் ராமன் பிழைத்திருப்பானா?’ என்று கூறித் தீயை அணைத்துக் கரியாக்குகிறான்.

---

* முன்பு இதே புஷ்ய நக்ஷத்திரம் கூடிய தினத்தில்தான் முடிசூட்ட நாள் குறித்தான் தசரதன்.

அய்யன் வந்தனன் ஆரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின் உயிர் வீடினுல்
உய்யுமே அவன் என்றுரைத்து உள்புகாக்
கையினுல் எரியை கரி ஆக்கினுன்.

ஹனுமான் ராமனின் மோதிரத்தைக் காட்டுகிருன். விஷம் உண்டு இறக்கும் தறுவாயில் அமுதம் உண்டதுபோல் புத்துணர்வு பெற்று நிற்கிருன் பரதன்.

அவனது மகிழ்ச்சியையும் மனநிலையையும் சித்திரிக்கும் இரு பாடல்களில் கவிதை நயமும் சொல் நயமும் அமைந்திருக்கின்றன. 'ஆடுங்கள், உரக்கப் பாடுங்கள், ராமனை நோக்கி ஓடுங்கள். சேதி சொன்ன இத் தூதனின் பாதங்களைத் தொட்டுத் தலையில் சூடுங்கள்' என்று பலவிதமாய்க் கூடியிருக்கும் மக்களை, ஊக்குவிக்கிருன் பரதன். அவர்களை 'பாவிகாள்' என்றழைக்கிருன். இதுவரை ராமனைப் பிரிந்திருக்கப் பாவம் செய்தவர்கள் என்பது குறிப்பு.

ஆடுமின் ஆடுமின் என்னும் ஐயன்பால்
ஓடுமின் ஓடுமின் என்னும் ஓங்கிசை
பாடுமின் பாடுமின் என்னும் பாவிகாள்
சூடுமின் சூடுமின் தூதன்தாள் எனும்.

ஒவ்வொரு வினைச்சொல்லும் ஒவ்வொரு அடியிலும் இருமுறை வருவது உற்சாகத்தையும் பதட்டத்தையும் காட்டும்.

பரதனே நிலைகொள்ளாமல் துடிக்கிருன். சுற்றி நிற்கும் வேதியரைத் தொழுவான், வேந்தரைத் தொழுவான். தாதிமாரைத் தொழுவான். தன்னையே தொழுதுகொள்வான். உணர்வற்று நிற்பான். இப்படியெல்லாம் செய்வது ராமன்பால் உள்ள காதலால். ஆயினும் செய்கையெல்லாம் கள் உண்ட நிலையைப்போலிருக்கிறது!

வேதியர் தம்மைத்தொழும் வேந்தரைத் தொழும்
தாதியர் தம்மைத் தொழும் தன்னைத்தான் தொழும்
ஏதுமொன்றுணர்குருது இருக்கும் நிற்கும்ஆல்
காதலென்றதும் ஓர் கள்ளின் தோற்றமே.

பாகுபாடின்றி தாதியரைத் தொழுதலும் பிறர் நகைக்கும்படி தன்னையே தொழுதலும் கட்டுக்கடங்காத மகிழ்ச்சியின் சேஷ்டைகள். போதை மயக்கத்துக்கும் இதற்கும் வெளித்தோற்றத்தில் வித்யாசம் இல்லையென்கிருர் கம்பன்.

பரதன் தீயிலே விழத்துணிவதும் ஹனுமான் மோதிரம் காட்டிச் சேதி சொல்லுவதும் கம்பனின் கற்பனை. வால்மீகியின் கதையில் இல்லாத அம்சங்கள். மோதிரம் காட்டித் தூது சொல்வது, தீக்குளித்து மெய்ம்மை காட்டுவது ஆகிய இரண்டும் லங்கையில் நடந்த சம்பவங்களின் லேசான எதிரொலி.

நாளை வருவான் ராமன் என்றதும் ஊரெங்கும் விழாக் கொண்டாடும்படி உத்தரவிடுகிறான் பரதன். தெருவெல்லாம் நீர்தெளித்து வீடுதோறும் பூக்களும் தோரணங்களும் நிறைந்திருக்கட்டும் என்கிறான்.

யானையும் குதிரையும் வரிசை வரிசையாய் வர, அயோத்தி மக்கள் நந்திக்ராமத்தில் வந்து கூடுகின்றனர். கௌஸல்யை முன்னே செல்ல, தசரதன் மனைவியரும் வருகின்றனர். வெண்குடையும் சாமரமும் ஏந்தி நிற்கிறான் எளிய பரதன். கண்ணுக்கெட்டியவரை பார்க்கிறான். ராமனைக் காணோம். 'ஏன் வரவில்லை? உனக்கு ஏன் இந்த அசட்டுத்தனம்?' என்று ஹனுமானைக் கடிந்து கேட்கிறான்.

'பரத்வாஜ முனிவர் செய்த உபசாரம்!' என்று பதில் கூறுகிறான் ஹனுமான். இதற்குள் தொலைவில் ஆரவாரம். 'அதோ, வானரர் கோமதி நதியைக் கடக்கின்றனர் போலிருக்கிறது. அதோ, புஷ்பக விமானம்!' என்று அடிவானத்தைக் காட்டுகிறான்.

ராமன் வந்துவிட்டான். 'இதோ ராமன்' என்று சிறுவரும், பெண்களும், கிழவரும் எழுப்பிய கோஷம் வானத்தைத் தொடுகிறது.

ததோ ஹர்ஷஸமுத்பூதோ நிஸ்வனோ திவம் அஸ்ப்ருசத்
ஸ்த்ரீ பாலயுவ வ்ருத்தானாம் ராமோ அயம் இதிகீர்த்திதே 11

'சப்தம் வானத்தைத் தொடுகிறது.' என்ன சொல் நயம்!

ராமன் தேரிலிருக்கும்போதே அவனை வணங்கி வரவேற்புக்குரிய பூஜையெல்லாம் செய்கிறான் பரதன். அருகில் வந்ததும் நெடுநாள் காணாத பரதனை மடியில் இருத்தி மகிழ்வோடு அணைக்கிறான் ராமன்.

வந்தவரெல்லாம் அறிமுகம் ஆகின்றனர். சுக்ரீவன் செய்த உதவியைக் கேட்ட பரதன் 'எங்கள் நால்வரோடு நீயும் சேர்ந்து ஐவர் ஆனோம். அன்பினால்தான் உறவு. கேடு இழைப்பவர் பகைவர்' என்கிறான்.

த்வம் அஸ்மாகம் சதுர்ணாம்து ப்ராதா ஸுக்ரீவ பஞ்சம:
ஸௌஹார்தாத் ஜாயதே மித்ரம் அபகாரோ அரிலக்ஷணம் 12

(நண்பனை சகோதரன் என்று குறிப்பிடுவது இங்குதான். இதை குகனுக்கும் விபீஷணனுக்கும் பரிசாக வழங்கிவிட்டார் கம்பன்)

ராமன் தாயை வணங்குகிறான். இதுவரை சோகத்திலிருந் தவளை மனம் குளிரச் செய்கிறான். அதைக்கண்ட ஜனங்கள் 'கோசலைக்கு மகிழ்ச்சி தரும் பெருமகனே, வருக' என்றுகூறி வரவேற் கின்றனர். அவர்களது கூப்பிய கரங்கள் ஆயிரக்கணக்கான தாமரை போலிருந்தனவாம்.

ராமனது பாதுகையை எடுக்கிறான் பரதன். அவன் பாதங்களில் சேர்க்கிறான். 'அரசே! உன் ராஜ்யத்தை இதுவரை காத்திருந்தேன். இதோ தந்தேன். என் விருப்பம் நிறைவேறிவிட்டது. ஜன்மம் பலனடைந்துவிட்டது' என்கிறான்.

ஏதத் தே ரக்ஷிதம் ராஜன் ராஜ்யம் நிர்யாதிதம் மயா
அத்ய ஜன்ம க்ருதார்த்தம் மே ஸம்வ்ருத்தஸ்ச மனோரத 13

'அரசே' யென்று குறிப்பிட்டு நிலை மாற்றத்தைக் காட்டும் அழகு கவனிக்கத்தக்கது. பாதுகை பாதத்தில் சேர்ந்தவுடன் மாறிவிட் டது நிலை.

'ஊருக்குள் வந்து செல்வ நிலையையும் படை வலிமையையும் பாருங்கள். தங்கள் பெருமையால் இவை மும்மடங்கு பெருகியிருக் கின்றன' என்கிறான்.

அவேக்ஷதாம் பவான்கோசம் கோஷ்டாகாரம் புரம் பலம்
பவதஸ் தேஜஸா ஸர்வம் க்ருதம் த்ரிகுணம் மயா 14

'தாங்கள்' ('பவான்') என்றழைக்கிறான் தமையனை. தன்னை யறியாமல் செலுத்தும் மரியாதை. அறிந்தே பேசும் திறன் என்றும் கொள்ளலாம்.

இதையெல்லாம் கண்டு வானரரும் விபீஷணனும் கண்ணீர் விடுகின்றனர். சகோதரர் உறவாடும் விந்தையைக் கண்டதில்லையல் லவா?

தலைவணங்கி கையுயர்த்திக் கரம் குவித்துப் பேசுகிறான் பரதன். 'முன்பு எனக்கரசு தந்து என் தாயைப் போற்றினாய். அதை அப் படியே இன்று உனக்குத் தருகிறேன்' என்கிறான்.

பூஜிதா மாமிகா மாதா தத்தம் ராஜ்யம் இதம் மம
தத் ததாமி புனஸ் துப்யம் யதாத்வம் அததா மம 15

('என் தாய் எனக்காகத் தீமை செய்தாள். அதில் எனக்குப் பங்கு இல்லை' என்று முன்பு அரண்மனையில் பலர் முன்னிலையில்

ஆணையிட்டுக் கூறியதை இன்று மக்களுக்கு நினைவுறுத்துகிறான் போலும்.)

'ஒரு காளை சுமக்கும் பாரத்தைக் கன்று சுமக்குமா? கழுதை குதிரை ஆகுமா? காகம் அன்னம் ஆகுமா? நான் அரசு ஏற்கத் தகுதி யற்றவன்' என்கிறான். 'விரைவில் நீ ஆட்சி ஏற்றுக் கொள்வாயாக' என்று சொல்லுகிறான்.

முதலில் பரதனை சடைமுடி களைந்து நீராடச் சொல்லுகிறான் ராமன். (அவன்தானே அனாவசியமாகத் தவவேடம் பூண்டவன்?) அடுத்தபடி லக்ஷ்மணன். பிறகு சுக்ரீவன், விபீஷணன் ஆகியோருக் கும் உபசரணை செய்து தானும் தயாராகி வருகிறான் ராமன்.

ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் மலர் மாலை சூட்டி அலங்காரம் நடக்கிறது. தசரதனின் மனைவியர்அனைவரும் கூடி ஸீதைக்கு அலங் காரம் செய்து தாங்களும் தயாராகின்றனர். வந்திருக்கும் வானரப் பெண்களுக்கும் சிரமப்பட்டு அழகு செய்கிறாள் கௌஸல்யை. ஏன்? மகன் மீதுள்ள பாசம் என்கிறார் கவி. (அவர்களின் ஆடவர்தானே மகனுக்குதவினார்கள்?)

**ததோ வானர பத்னீனாம் ஸர்வாஸாமேவ சோபனம்**
**சகாரா யத்னாத் கௌஸல்யா ப்ரஹ்ருஷ்டா புத்ரலாலஸா** 16

'யத்னாத்' (சிரமப்பட்டு) என்ற ஒரு சொல்லில் வேறுபட்ட நாகரீகம், நடை, உடை எல்லாவற்றையும் குறிக்கிறார் வால்மீகி.

வேதியரும் மங்கையரும் புடைசூழ அயோத்தியில் பவனி வரு கிறான். உடன் வரும் மந்திரிகளுக்கு சுக்ரீவனுடன் கொண்ட நட்பு, ஹனுமானின் பெருமை, விபீஷணன் தன்னுடன் வந்து சேர்ந்தது ஆகிய விவரமெல்லாம் சொல்லுகிறான் ராமன். அவர்கள் வியந்து கேட்கின்றனர். அரண்மனையருகில் வந்ததும் பரதனையழைத்து 'முன்பு நான் வசித்த மாளிகையை சுக்ரீவனுக்குக் கொடு' என்று உத்தரவிடுகிறான். பட்டம் ஏற்கும் முன்னரே உதவிக்கு நன்றி செலுத்துகிறான்.

சுக்ரீவன் கட்டளைப்படி வானரர் விரைந்து சென்று புனித நீர் கொண்டு வருகின்றனர். வயதில் பெரிய முனிவர் வஸிஷ்டர் வருகிறார். ராமனையும் ஸீதையையும் ரத்னமிழைத்த ஆசனத்தில் ஒன்றாய் அமர்த்தி அபிஷேகம் செய்கிறார்.

**ராமம் ரத்னமயே பீடே ஸஹஸீதம் ந்யவேசயத்** 17

தொடர்ந்து வேதியரும் அந்தணரும் கன்னியரும் புனித நீர் தெளிக்கின்றனர்.

சத்ருக்னன் வெண்குடை பிடிக்க சுக்ரீவனும் விபீஷணனும் வெண்சாமரம் வீசுகின்றனர். தேவர்களும் உவகைகொண்டு

ஆடுகிருர்கள். இந்திரன் வெகுமதியாக ஒரு பொன் மாலேயனுப்புகிருன்.

ராமன் முறைப்படி தானங்கள் செய்கிருன். சுக்ரீவனுக்குப் பொன் மாலேயும் அங்கதனுக்கு வைடூர்யமிழைத்த வங்கியும் அளிக்கிருன். பார்த்துக் கொண்டிருந்த ஸீதை உயர்ந்த ஆடையும் ஆபரணமும் அளிக்கிருள் ஹனுமானுக்கு.

தன் கழுத்திலிருந்து ஒரு ஹாரத்தை எடுக்கிருள். சுற்றியிருக்கும் வானரரையும் கணவனேயும் மாறி மாறிப் பார்க்கிருள். இங்கிதம் உணர்ந்த ராமன் 'உனக்குப் பிடித்தவருக்கு ஹாரத்தைக் கொடு. அறிவும் ஆற்றலும் ஆண்மையும் மிகுந்தவருக்குக் கொடுக்கலாம்' என்கிருன்.

ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பாமினி
பௌருஷம் விக்ரமோ புத்திர்யஸ்மின் ஏதானி ஸர்வச: 18

உடனே ஸீதை அந்த மாலேயை ஹனுமானுக்குக் கொடுக்கிருள்! அதையணிந்து அழகாய் விளங்குகிருன் வீரன்.

ததௌ ஸா வாயுபுத்ராய தம் ஹாரம் அஸிதேக்ஷணு
ஹனுமான் ஸ் தேன ஹாரேண சுசுபே வானரர்ஷப: 19

துயரத்தில் நின்றபோது இன்மொழி சொல்லி உணர்வை உருக்கி, உயிர் தந்த உத்தமனே கௌரவிக்கிருள். 'நீ அறிவிற் சிறந்தவன். சமர்த்தன்' என்று முன்பு புகழ்ந்து கூறியதை இன்று செயலில் காட்டுகிருள்.

ராமனுக்கு மகுடம் சூட்டிய காட்சியை வர்ணிக்கிருர் கம்பன். சிம்மாசனத்தைத் தாங்கி நிற்கிருன் ஹனுமான். அங்கதன் வாள் ஏந்த, பரதன் வெண்குடை தாங்க, மற்ற இரு சகோதரர் சாமரம் வீச, சிதையின் உவகை ஓங்க, வஸிஷ்டர் மகுடம் சூட்டுகிருர். அதை வஸிஷ்டருக்கு எடுத்துக் கொடுப்பவர் சடையப்ப வள்ளலின் முன்னேர் என்கிருர் கவி.

அரியணே அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரிவீச
விரைசெறி குழலி ஓங்கி வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனேந்தான் மௌலி

பட்டாபிஷேகக் காட்சியை ஒரே பாடலில் பாடியதோடன்றி, தன்னேஆதரித்த சடையப்ப வள்ளலேயும் போற்றிவிட்டார் கம்பன்.

(திருவெண்ணெய் நல்லூர் சடையப்பன் என்பவர் கம்பனை ஆதரித்த செல்வந்தர் என்பது சரித்திரம். அவரது முன்னோர்கள் ராம பட்டாபிஷேகத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்க வேண்டும்; 'இல்லாவிட்டால் ராம கதை சொல்லும் கம்பனை ஆதரிக்கத் தோன்றுமா?' என்பது கருத்து.)

ராமன் ரவிகுலத்துக்கேற்ப முறைப்படி அரசு செய்தான், மக்கள் சுகமும் இன்பமும் நிறைந்து வாழ்ந்தனர் என்று முடிக்கிறார் வால்மீகி.

ராமன் கதையைச் சொன்னாலும் கேட்டாலும் நன்மையென்கிறார் கவி. கவிதையின்பமும் சொல் நயமும் நாடக இயலும் ஆங்காங்கு மிளிரும் வண்ணம் அமைத்துவிட்டனர் வால்மீகியும் கம்பனும். கதையும் கருத்தும் ஒன்று, ஆனால் மொழி வேறு; சொல்லும் திறன் வேறு, சொற்களின் எழில் தனி. ஆனால் கவிகள் மனித உள்ளத்தில் தோன்றும் எண்ண அலைகளும் வாழ்க்கைச் சம்பவங்களின் சுக துக்கமும் நம் கண்ணெதிரே தோன்றும்படி செய்துவிட்டனர். இதைவிட வேறு நன்மை வேண்டுமோ?

ராவணனைக் கொன்று வெற்றி வீரனாய் அயோத்திக்குத் திரும்பிவந்து முடிசூடியதோடு ராமன் கதை முடிகிறது என்பது ஐதிகம். ஆனால் தொடர்ந்து கதை சொல்லுகிறார் வால்மீகி. கதை முடியவில்லை!

உத்தரகாண்டம் ராமாயணத்தின் தொடர்புதான். இடைச் செருகல் நிறைந்திருப்பினும் சில ரஸமான அம்சங்கள் அடங்கியது; கதைக்கு இன்றியமையாத அம்சங்கள்.

காளிதாஸனும் பவபூதியும் உத்தர ராமாயணத்தைப் போற்றியபோதிலும் கம்பன் காலத்துக்குள் ராமன் கதையை மங்களமாக முடிக்கவேண்டுமென்ற சம்பிரதாயம் நிலைத்துவிட்டது. ஆதலால் பட்டாபிஷேகத்தோடு வாசகரிடம் விடைபெற்றுக்கொள்கிறார் கம்பன்.

# 41

## ராவணன் யார்?

அயோத்தியர் வேந்தனென மகுடம் தாங்கி நிற்கும் ராமனைக் காண முனிவர்கள் வந்து கூடுகின்றனர். 'நீ வீரன். மூவுலகையும் வெல்ல வல்லவன். அதிர்ஷ்டவசத்தால் நீ ராவணனையும் வென்று விட்டாய்' என்று கூறி வாழ்த்துகிறார்கள்.

> ஸதனுஸ்த்வம்ஹி லோகான்ஸ்த்ரீன் விஜயேதா நஸம்சய:
> திஷ்ட்யா த்வயா ஹதோ ராம ராவணோ ராக்ஷஸேச்வர: 1

'அதைவிடப் பெருஞ்செயல் இந்த்ரஜித்தை வென்றது. மாயாவி, எவராலும் கொல்ல முடியாது என்று புகழ் படைத்தவனல்லவா?' என்கிறார்கள்.

ராமனுக்குச் சற்று வியப்பு உண்டாகிறது. 'ராவணனையும் கும்பகர்ணனையும் விட உயர்வாகப் புகழத்தக்க அந்த இந்த்ரஜித்தைப் பற்றிச் சொல்லுங்கள். தகப்பனுக்கு மீறிய வலிமை எப்படிக் கிடைத்தது?' என்று ராமன் கேட்க, அகஸ்தியர் அரக்கர் வரலாற்றை எடுத்துச் சொல்லுகிறார்.

'முன்னொரு காலத்தில் புலஸ்தியர் என்றொரு அந்தணர் இருந்தார். பெருந்தவம் செய்து பிரும்மாவுக்கு சமமாகப் பெருமையடைந்தவர். அவரது மேன்மை எடுத்துரைக்க இயலாது.

ஒரு சமயம் மேரு மலைச் சாரலில் த்ரிணபிந்து என்னும் ராஜரிஷியின் இருப்பிடத்தையடுத்துப் பர்ணசாலையமைத்துத் தவம் செய்து கொண்டிருந்தார் புலஸ்தியர். அருகேயுள்ள பெண்கள் ஆடிப்பாடிக் கூச்சலிட்டுத் தவத்தை கலைக்கவே, ஒருநாள் சினங்கொண்ட அந்தணர் 'என்னெதிரே எந்தப் பெண் வந்தாலும் அவளை கர்ப்பவதி

ஆக்கிவிடுவேன்' என்று எச்சரிக்கை செய்தார். இதைப் புறக்கணித்து அருகே சென்றவள் த்ரிணபிந்துவின் புதல்வி! பின்னர் அவளையே மணந்து விச்ரவஸ் என்னும் புதல்வனையடைந்தார் அந்தணர். இவரும் நாளடைவில் தவத்தோனாகி, பரத்வாஜ முனிவரின் புத்ரி யான தேவவர்ணினியை மணந்தார். இவரது மகன் வைச்ரவணன். தவமே பெரிதெனக் கருதி நீரையும் காற்றையும் உட்கொண்டு உணவின்றித் தவம் செய்தான். பிரும்மா நேரில் தோன்றி வரமளிக்க முன்வந்தார். 'பரமனே, எனக்கு அரசும் செல்வமும் வேண்டும்' என்று கேட்டுக் கொண்டான் தவத்தோன்!

பரமனும் உவந்து அளித்தார் வரம். 'யமன், இந்திரன், வருணன் ஆகியோரோடு நால்வனாகப் பதவி வகிப்பாய். செல்வமும் தந்தேன். எங்கும் நினைத்தபடி செல்ல உதவும் புஷ்பக விமானமும் உனதே' என்றார். அதன்படி குபேரன் ஆனான் வைச்ரவணன்.

வரம் பெற்ற இளைஞன் தந்தையிடம் சென்று 'அரசு பெற்றேன். ஆனால் ஆள ஒரு தேசம் வேண்டும். பிறர் இம்சையில்லாத நல்ல இடமாகப் பார்த்துச் சொல்லுங்கள்' என்றான். (அந்தண இயல்பு விடவில்லை போலும்). விச்ரவஸ் சற்று யோசித்து 'தெற்கே த்ரிகூட மலையுச்சியில் லங்கையென்றொரு பட்டணம் இருக்கிறது. அமராவதி போல் அழகிய பட்டணம். அரக்கர் அரசு செலுத்திய நகரம். இன்று பாழடைந்து கிடக்கிறது. அவர்கள் விஷ்ணுவுக்கு பயந்து ஓடிவிட்டனர். நீ கவலையற்று வாழலாம்' என்று சொல்லி அனுப்பினார்.

**லங்கா நாம புரீ ரம்யா நிர்மிதா விச்வகர்மணா**
**ராக்ஷஸானாம் நிவாஸார்த்தம் யதேந்த்ரஸ்யாமராவதீ**
**தத்ர த்வம் வஸ பத்ரம் தே லங்காயாம் நாத்ர ஸம்சய:**
**..................................................................................................**
**ராக்ஷஸை: ஸா பரித்யக்தா புரா விஷ்ணுபயார் திதை:** 2

'லங்கைக்குச் சென்று அரக்கரைக் கூட்டி அவர்களது தலைவனெனத் தன்னை இருத்திக் கொண்டான் குபேரன். அடிக்கடி புஷ்பக விமானத்திலேறி வந்து பெற்றோரைக் கண்டு செல்வான்' என்று முடிக்கிறார் அகஸ்தியர்.

'லங்கையின் கதை என்ன? அதை ஏன் விஷ்ணு தாக்கினார்?' என்று ராமன் கேட்கிறான்.

அகஸ்தியர் சொல்லுகிறார். 'முன்பு ஹேதி, ப்ரஹேதி என்று இரு அரக்கர் இருந்தனர். ஹேதியின் வழியில் தோன்றிய ஸுகேசன் பிறந்தவுடனே சிவனிடம் வரம் பெற்று விளங்கினான். நாளடைவில் அவனுக்கு மாலி, சுமாலி, மால்யவான் என மூன்று புதல்வர்கள் ஏற்பட்டனர். அவர்களும் தவம் செய்து, இனி வரப்போவதை அறியும் திறமையைப் பெற்றபின், விச்வகர்மா என்ற சிற்பியை அணுகி ஒரு

வசிப்பிடம் அமைக்குமாறு வேண்டினர். அவன் 'தெற்கே நீர்நிலைக் கரையிலே த்ரிகூட மலையுச்சியில் ஒரு நகரம் அமைத்திருக்கிறேன். எதிரே ஸுவேல மலை. எங்கும் நீர். நடுவே லங்கை. நாலுபுறமும் ஓங்கி நிற்கும் பாறைகள். உள்ளடங்கிய பட்டணம். அங்கு போய் வாழுங்கள். இந்திரனின் அமராவதிக்கொப்பான பட்டணம்' என்றான்.*

வரம் பெற்று நாடாளும் சகோதரர் நாளடைவில் ஊராரை இம்சிக்கத் தொடங்கினர்! 'நானே விஷ்ணு, நானே சிவன், நான் தான் இந்திரன்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு மக்களைத் துன் புறுத்தினராம்!

முனிவரும் தேவர்களும் சிவனிடம் சென்று முறையிட அவர் 'என்னாலாகாது. வரம் தந்தது நானே. ஆகையால் விஷ்ணுவிடம் போங்கள்' என்று சொன்னார். விஷ்ணு அவர்களது வேண்டுகோளுக் கிணங்கிப் போரில் இறங்கி மாலியைக் கொன்றார். ஸுமாலியும் மால்யவானும் தப்பியோடிவிட்டனர்.

இவ்விதம் சூன்யமாய்க் கிடந்த நகரத்தையே தனது தலைநகராக் கிக் கொண்டான் குபேரன். இவனது பெருமையையும், புஷ்பக விமானத்தின் மகிமையையும் ஒளிந்திருந்து கவனித்தான் மால்ய வான். 'நாம் முன்னேறும் வழி என்ன?' என்று யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். தமையன் மகள் கைகஸியை விச்ரவஸ்ஸிடம் சென்று புத்திரப்பேறு வேண்டுமாறு யுக்தி சொல்லியனுப்பினான். 'அப்போதுதான் நாமும் குபேரன் போன்ற அந்தஸ்தைப் பெற முடியும்' என்றான்.

அந்தணரை யணுகி நின்றாள் கைகஸி. 'நீ யார்? என்னவேண் டும்?' என்று முனிவர் வினவ, 'என் பெயர் கைகஸி. மற்றவை உமக்கே தெரியும்' என்றாள். புரிந்துக்கொண்டார் விச்ரவஸ். ஆனால் 'தவறான வேளையில் வந்து சேர்ந்தாய். ஆதலால் கொடிய பிள்ளை களைப் பெறுவாய்' என்றார். 'உம்மிடம் வந்தது கொடியவர்களைப் பெறவா? வேண்டாம். கருணை செய்யுங்கள்' என்று அவள் வேண்ட, 'கடைசி மகன் நல்லோனாய்ப் பிறப்பான்' என்று ஆசி தந்தார்.

முறைப்படி முனிவருக்கும் கைகஸிக்கும் பிறந்த மக்கள் ராவணன், கும்பகர்ணன், சூர்ப்பனகை, விபீஷணன். தத்தம் இயல் புக்கேற்றபடி வளர்ந்து வந்தனர். ஒரு நாள் குபேரன் தந்தையைக் காண வந்தான். அப்போது கைகஸி ராவணனை அருகிலழைத்து 'ஒளி திகழும் உனது தமையனைப் பார். நீயும்அவனைப்போல் ஆவதற்கு வழி தேடு' என்று தூண்டினாள்.

---

*ஜபல்பூர் ஜில்லாவில் த்ரிகூட மலையும் ஸுவேல மலையும் இன்றும் காண லாம் சுற்றி நின்ற நீர் நிலை வரண்டு விட்டது. ( அமராவதி நாஸிக்குக்கருகில் உள்ள பட்டணம். )

தாயின் சொல்லைக்கேட்டு 'நான் அவனுக்கொப்பாக மட்டுமல்ல அவனுக்கு மேலாகவே பெருமை தேடுவேன். நீ கவலைப்படாதே' என்று உறுதி கூறினன்.

**ஸத்யம் தே ப்ரதிஜாநமி ப்ராத்ருதுல்யோதிகோபிவா**
**பவிஷ்யாம் யோஜஸா சைவ ஸந்தாபம் த்யஜ ஹ்ருத்கதம்** 3

தந்தையின் முறையிலே தவம் செய்யக் கற்று, தாயின் உறுதியில் வலிமையும் பெற்று, பிரும்மாவே நேரில் வந்து வரமளிக்கும் அளவுக்கு அவரை மகிழ்வித்தான். 'என்ன வேண்டும்?' என்று கேட்டார். 'உலகிலே மரணத்தைப் போன்ற பகைவன் வேறில்லை. எனக்கு சாகாவரம் வேண்டும்' என்றான் ராவணன். 'அதைத் தவிர வேறு ஏதாவது கேள்' என்றார் பரமன். 'அப்படியானல், தைத்ய, தானவ, நாக, யக்ஷ தேவர்கள் ஆகியோரால் எனக்கு சாவு வரக்கூடாது. மனிதர்களைப்பற்றி எனக்கு கவலையில்லை. புல்லுக்குச் சமானம்' என்றான் அரக்கன். 'அப்படியே ஆகட்டும்' என்றுகூறி நினைத்தபடி உரு மாற்றிக்கொள்ளும் சக்தியையும் தந்தார் கடவுள்.

இளைஞர்கள் வரம்பெற்று வலிமையடைந்தனர் என்று கேள்வியுற்று ஸுமாலி ஒளிந்திருந்த இடத்தை விட்டு வெளியே வந்தான். ராவணனையணுகி ஆசி கூறி 'லங்கை நமக்குச் சொந்தம். குபேரன் அதை எடுத்துக்கொண்டுவிட்டான். அதை நாம் சமாதான முறைகளில் திரும்பக் கைப்பற்ற முடியும். பின் நீயே லங்கேச்வரன். அரக்கர் குலம் தழைக்கும்' என்றான். பாட்டன் சொல்லை ஏற்கவில்லை ராவணன். 'குபேரன் என் தமையன். நீ இப்படிச் சொல்வது அழகல்ல' என்றான்.

வித்தேசோ குருரஸ்மாகம் நார்ஹஸே வக்துமீத்ருசம் 4

சில நாள் கழித்து ப்ரஹஸ்தன் மறுபடி தூண்டினான். 'வீரர்களுக்கு சகோதர வாஞ்சை கிடையாது' என்று சொல்லி மனதை மாற்றினான். பிறகு ராவணன் த்ரிகூட மலைக்குச் சென்று தங்கி, ப்ரஹஸ்தனையே தூதனுப்பினான்.

'குபேரனிடம் சென்று மரியாதையோடு இச்சேதியைத் தெரிவி. இந்த லங்கை அரக்கருக்குச் சொந்தம். நீ வந்து ஆட்கொண்டது சரியல்ல. நீயாகத் திரும்பித் தந்தால் நாங்கள் மனம் குளிர்வோம். அதுவே முறை' என்று சொல்லியனுப்பினான்.

குபேரன் 'இதை எனக்குத் தந்தை அளித்தார். ஆயினும் நகரமும் அரசும் உனதே ஆகும் என்று ராவணனிடம் தெரிவி' என்று சொல்லித் தந்தையிடம் விரைந்து சென்றான். 'இனி நான் செய்வதென்ன?' என்று கேட்டான். விச்ரவஸ் 'மகனே, வரம் பெற்று மனம் தடுமாறி நிற்கிறான் ராவணன். மதிப்புக்குரியவரை மதிக்கத்

தவறிஞன் கொடிய இயல்புடையவன். அவனேடு வைரம் கொள்ளுதல் உனக்கு நல்லதல்ல. பல வரங்கள் பெற்றிருக்கிறன். ஆகையால் நீ கைலாஸ மலையை நோக்கிச் சென்று மந்தாகினி நதிக் கரையில் இருப்பிடம் அமைத்துக்கொள்' என்று கூறி அனுப்பினர்.

'நகரம் காலியாகிவிட்டது' என்று அறிவித்தான் ப்ரஹஸ்தன். நண்பரும் உறவினரும் புடைசூழ லங்கையில் புகுந்து அரக்கர் வேந்தனென முடிசூடினன் ராவணன்.

சில காலம் சென்றபின் சகோதரி சூர்ப்பனகையை தானவகுலத்துத் தலைவனுகிய வித்யுத்ஜிஹ்வா என்பவனுக்கு மணம் செய்து கொடுத்தான். பிறகு ஒருநாள் மயன் என்ற சிற்றரசனைச் சந்தித்தான். 'நீர் யார்? இப் பெண் யார்?' என்று கேட்க, மயன் தன் வரலாற்றைச் சொன்னன். 'இவள் என் மகள். மண்டோதரியென்று பெயர். ஹேமா என்ற அப்ஸரப் பெண்ணை மணந்து இனிமையாய் வாழ்ந்தேன். அவள் எனக்களித்துச் சென்ற செல்வமே இவள். இரு மகனும் உண்டு. மாயாவி, துந்துபியென்று பெயர்* நீர் யார்?' என்ருன்.'

'நான் விச்ரவஸ் என்ற முனிவரின் புதல்வன். பரமனுக்கு ஒப்பான புலஸ்திய வம்சத்தில் தோன்றியவன்' என்று ராவணன் சொல்ல, மயன் தன் மகளை அவனுக்கு மணம் செய்து கொடுக்க விரும்பினன். ராவணனும் மனமுவந்து அப்ஸரஸின் பெண்ணான மண்டோதரியை மணந்தான். பிறகு கும்பகர்ணன் வஜ்ரஜ்வாலா என்ற பெண்ணையும் விபீஷணன் ஸரமா என்பவளையும் மணந்தார்கள். நாளடைவில் மண்டோதரிக்கு மேகநாதன் என்ற மகன் பிறந்தான். (குழந்தை அழுத சப்தம் இடி இடிப்பது போலிருந்ததால் அப்பெயர்) இவனே பின்னர் இந்த்ரஜித் என்ற பட்டம் பெற்ருன்.

கைலாஸத்தில் வசித்துவந்த குபேரன் ஒரு நாள் தூதனுப்பினன். தூதன் ராவணன் சபையில் நின்று சேதி சொன்னன் : 'நீ தேவர்களை எதிர்த்துப் போராடுவதும் ரிஷிகளைத் துன்புறுத்துவதும் சரியல்ல. உனது அழிவுக்கு ஏதுவாகும். நான் தவம் செய்து சிவன் அருள் பெற்றிருக்கிறேன். என்னுடன் நட்புகொண்டு உறவாடுவாயாக.' சினங்கொண்ட ராவணன் 'நீ தூதனும் அல்ல, அவன் என் தமையனும் அல்ல' என்றுகூறி அவனை வாளால் வெட்டிவிட்டான். பிறகு தேரில் ஏறிக் குபேரனைத் தேடிச் சென்ருன்.

கைலாஸ மலையில் வசிக்கும் யக்ஷர்கள் நடுங்கிப்போனர்கள். ஆனல் குபேரன் அவர்களின் தலைவனை மாணிபத்ரனையனுகி ராவணனைக் கொல்லும்படி தூண்டினன். போரில் ப்ரஹஸ்தனும்

---

*மாயாவி, துந்துபி இருவரையும் வாலி போரில் வென்றது கிஷ்கிந்தா காண்ட வரலாறு.

மகோதரனும் திறமை காட்டினர். கடைசியில் குபேரனையும் வென்று அவனது புஷ்பக விமானத்தைப் பறித்துச் சென்றான் ராவணன். பிறகு சிவனைத் துதித்து சந்த்ரஹாஸம் என்ற வாளைப் பெற்றான்.

மூவுலகையும் வென்றுவிட்டதாகப் பெருமிதம் கொண்ட ராவணன் ஒருநாள் மலைச்சாரலில் நடந்து கொண்டிருந்தபோது ஒரு பெண்ணைப் பார்த்தான். மான் தோல் உடுத்திச் சடைமுடியாய் நின்ற அழகியின் ஒளி கண்ணைப் பறித்தது. காமம் தலைக்கேறிற்று. 'நீ ஏன் இப்படி இருக்கிறாய்? இளமைக் கழகல்ல. உன் அழகுக்கும் இத்தவத்துக்கும் பொருத்தமில்லை. நீ யார்? எவனுடைய மனைவி? உன்னை அணைக்கும் மனிதன் புண்ணியவான்' என்றான்.

கிம்இதம் வர்த்தஸே பத்ரே விருத்தம் யௌவனஸ்யதே
நஹி யுக்தா தவைதஸ்ய ரூபஸ்ய தபஸ: க்ரியா
ரூபம் தே அனுபமம் பீரு காமோன்மாதகரம் ந்ருணாம்
ந யுக்தம் தபஸி ஸ்தாதும் நிர்கதோ ஹி ஏஷ நிர்ணய:
கஸ்யாஸி கிமிதம் பத்ரே கஸ்ச பர்த்தா வரானனே
யேன ஸம்புஜ்யஸே பீரு ஸ நர: புன்யபாக் புவி 5

(தண்டகாரண்யத்தில் ஸீதையிடம் பேசிய சொற்கள் ஒலிக்கின்றன).

அவள் முறைப்படி அவனுக்கு மரியாதை செய்து தன் வரலாற்றைக் கூறினாள். 'குசத்வஜர் என்ற தவத்தில் மிக்க முனிவரின் புத்ரி நான். வேதவதியென்று பெயர். தேவகந்தர்வர்களெல்லாம் என்னை மணக்க விரும்பினார்கள். ஆனால் தந்தை இசையவில்லை. ஏனென்றால் விஷ்ணுவுக்கே பெண்ணைக் கொடுப்பதென்று உறுதி செய்துவிட்டார். இதைக்கண்டு மனம் சகிக்காமல் தம்பு என்ற தைத்யகுல அரசன் என் தந்தையைக் கொன்றுவிட்டான். தாயும் உடன்கட்டை ஏறிவிட்டாள். ஆனால் பெற்றோரின் விருப்பப்படி நடக்கத் தீர்மானித்துவிட்டேன். நாராயணனே என் கணவன். அவனையடையவே தவம் செய்கிறேன்' என்றாள்.

அப்படியே நின்றுவிட்டான் ராவணன். 'எல்லாம் பொருந்திய சுந்தரி! நீ இப்படிச் சொல்வது சரியல்ல. உனது யௌவனம் வீணாகிறதே. நான் லங்கைக்கதிபன். என்னை மணந்துஉன் இஷ்டம் போல் சுகமாய் வாழ்வாயாக. விஷ்ணுவென்று நீ சொல்பவன் யார்? தவத்திலும் வீர்யத்திலும் செல்வத்திலும் எனக்கீடாக மாட்டான்' என்றான். 'வேண்டாம், வேண்டாம்' என்று அவனைத் தடுத்து 'உலகோர் எல்லாம் மூவுலகுக்கதிபன் என வணங்கும் விஷ்ணுவை உன்னையன்றி யார் இப்படி அவமதிப்பர்?' என்றாள்.

அவள் பேச்சைப் புறக்கணித்து அவளது கூந்தலை விரலால் தடவ ஆரம்பித்தான். ரோஷம் கொண்டு எரித்துவிடுவதுபோல்

வெருண்டாள். 'நீ என்னைத் தீண்டியபின் உயிர் வாழமாட்டேன். ஆனால் நீ செய்த குற்றத்துக்கு தண்டனையாக உன்னையழிக்கும் பொருட்டு மீண்டும் பிறந்து வருவேன்' என்று கூறித் தீயில் மூழ்கினாள்.

யஸ்மாத்து தர்ஷிதா சாஹம் த்வயா பாபாத்மனா வனே
தஸ்மாத் தவ வதார்த்தம் ஹி ஸமுத்பத்ஸ்யே ஹி அஹம் புன: 6

'அந்த வேதவதியே ஜனகன் மகளாகிய ஸீதை' என்று இடையே கூறுகிறார் அகஸ்தியர்.

'இப்படிப் பல பெண்களைத் துன்புறுத்தி அவர்களது மனக் கசப்பையும் வசையையும் பெற்றான் ராவணன்.' ஒரு பெண்ணாலேயே உனக்கு அழிவு உண்டாகும்' என்று சாபம் இட்டனர் சிலர். ஒரு சமயம் கைலாஸ மலையில் தங்கியிருந்தான் ராவணன். சுற்றிலும் பூக்கள், அருகில் மந்தாகினி நதி. வானத்தில் நிலவு தோன்றியதும் காமத்தில் ஈடுபட்டது மனம். பெருமூச்சுவிட்டான். நிலவைப் பார்த்தான்.

அந்த வேளையில் அவ்வழியே வந்தாள் ரம்பை. மந்தாரப் பூக்களைத் தலையிலணிந்து உடலை அலங்கரித்துச் செல்லும் அழகியைப் பார்த்தான். அவளை நிறுத்தினான். வெட்கித்து நிற்பவளின் கையைப் பிடித்துப் புன்சிரிப்போடு சொன்னான் 'உன் முகத்தின் எழிலைப் பருகப் போகும் அதிர்ஷ்டசாலி யார்? நீ என்னைத் தாண்டிச் செல்வது சரியல்ல. இங்கு இப்பாறையின்மீது உட்கார். மூவுலகிலும் என்னை விட மேம்பட்டவர் யாருமில்லை. ஆயினும் ராவணன் உன்னைக் கும்பிட்டு வேண்டுகிறான். நீ எனக்கின்பம் தருவாய்' என்றான். ரம்பை நடுங்கினாள். 'நீர் எனக்கு முறைப்படி மாமனார். குபேரனின் மகனான நளகூபரனின் மனைவி நான். அவன் என்னை நாடிக் காத்திருக்கிறான். என்னைக் காக்கவேண்டிய பொறுப்பையுடைய நீர் என்னைத் தாக்கலாகாது. விடுங்கள்' என்றாள். 'அப்ஸரப் பெண்களுக்குக் கணவன் ஏது?' என்று கூறி அவளைக் கட்டாயமாய் அடைந்தான்.

கணவனிடம் சென்று நடந்ததைக் கூறினாள் ரம்பை. சினம் கொண்ட நளகூபரன் 'இணங்காத பெண்ணை இனி அவன் தொட்டால் ராவணன் தலை ஏழாக வெடிக்கட்டும்' என்று சாபம் இட்டு நீரைத் தெளித்தான். கணவனைப் பேணும் பெண்களெல்லாம் இதைக் கேட்டு மகிழ்ந்தனர்.

கைலாஸத்தைக் கடந்து இந்த்ரலோகத்தை அடைந்தான் ராவணன். அங்கு தேவர்களுக்கும் அரக்கர்களுக்கும் நடந்த போரில் ஸுமாலி மடிந்தான். பிறகு சீறியெழுந்த மேகநாதன் தனது மாய சக்தியால் இந்திரனைக் கட்டிக் கைதியாக்கிவிட்டான். 'இனிக்கவலை

யின்றி மூவுலகையும் ஆளுவாயாக' என்று தந்தையிடம் கூறி லங்கைக்குச் சென்றான்.

பிரும்மாவைத் துணைக்கழைத்துக்கொண்டு தேவர்கள் எல்லாம் லங்கைக்குச் சென்றார்கள். ராவணனிடம் போய் பிரும்மா சொன்னார், 'உன் மகனின் தீரத்தை மெச்சினேன். இனி உலகில் இந்த்ரஜித் எனப் புகழ்பெற்று விளங்குவான். ஆனால் இந்திரனை விடுவிக்க தேவர்கள் என்ன தரவேண்டும்?' உடனே இந்த்ரஜித் 'எனக்கு இறவா வரம் வேண்டும்' என்று கேட்டான். 'அது முடியாது. பிறந்தவர்க்குச் சாவு வந்தே தீரும்' என்று நான்முகன் சொல்ல, வேறொரு வரம் கேட்டான் மேகநாதன். 'மந்திரம் சொல்லித் தீ வளர்த்துப் போரில் இறங்கினால் என்னை ஒருவராலும் கொல்ல முடியாமலிருக்க வேண்டும். ஒரு வேளை, வேள்வி முற்றுப்பெறாமலிருக்கையில் போர் செய்ய நேர்ந்தால் எனக்கு முடிவு வரட்டும். இவ்வாறு வரம் கொடுப்பீராக' என்றான். சரியென்று பிரும்மா சொன்னதும் இந்திரன் விடுதலை பெற்றான். இவ்விதம் இந்த்ரஜித் என்ற பெயரும் வலிமையும் பெற்றான் ராவணன் மகன்' என்று கூறிக் கதையை முடிக்கிறார் அகஸ்தியர்.

வியந்து கேட்ட ராமனும் லக்ஷ்மணனும் ஏனையோரும் 'என்ன ஆச்சர்யம்!' என்கிறார்கள். 'ஆனால் இக்கொடிய அரக்கனை அடக்கும் திறன் எவருக்குமே இல்லாமல் போய்விட்டதா?' என்று கேட்கிறான் ராமன். புன்சிரிப்போடு விவரம் கூறுகிறார் அகஸ்தியர். கார்த்தவீர்யார்ஜுனனை எதிர்த்து அவனிடம் தோல்வியுற்றுக் கடைசியில் பாட்டனாகிய புலஸ்தியரின் சிபாரிசின் பேரில் விடுதலையடைந்தான் ராவணன். இதேபோல் வாலியிடம் வம்புச் சண்டைக்குப் போய் அவன் ராவணனை இடுக்கிப்பிடித்து ஊரெல்லாம் சுற்றிக் கிஷ்கிந்தைக்கு இழுத்துவந்த கதையையும் கூறுகிறார். வாலியின் வலிமையைப் போற்றி ராவணனுடன் நட்பு கொண்ட விவரத்தையும் சொல்லுகிறார்.

பிறகு, பட்டாபிஷேகத்துக்கு வந்திருந்தோர் எல்லோர்க்கும் விடை கொடுத்தனுப்புகிறான் ராமன். தக்கபடி வெகுமதிகளும் தருகிறான். விபீஷணனும் சுக்ரீவனும் விசேஷ மரியாதை பெறுகின்றனர். ஹனுமான் புறப்படுமுன் 'எனக்கு எப்போதும் உமது அன்பு வேண்டும்' என்கிறான். ராமன் எழுந்து அவனை அணைத்துக் கொள்ளுகிறான். 'நீ செய்த ஒவ்வொரு உபகாரத்துக்கும் எனதுயிரையே கொடுக்கலாம். மிகுதியுள்ளவைகளுக்காக நான் என்றென்றும் கடன்பட்டிருப்பேன். ஆனால் நீ பிரதி உபகாரம் எதிர்பார்க்கக் கூடாது. ஏனெனில் அப்படி எதிர்பார்ப்பவன் தானும் அத்தகைய ஆபத்தான நிலையில் இருக்க விரும்புவோனாக ஆவான்' என்கிறான்.

ஏகைகஸ்ய உபகாரஸ்ய ப்ராணான் தாஸ்யாமிதே கபே
சேஷஸ்ய இஹ உபகாரஸ்ய பவாம ரிணிநோவயம்
நர: ப்ரத்யுபகாரார்த்தீ ஆபத்ஸ்வாயாதி பாத்ரதாம் 7

ஒரு வைடூர்ய மாலையை ஹனுமானுக்கணிவிக்கிறான் ராமன். பிரியாவிடைபெற்றுச் செல்லுகின்றனர் நண்பர்.

ஒரு குறிப்பு : மனித அனுபவத்துக்கப்பாற்பட்ட சில அம்சங்கள் பெரிதாய் நிற்பது இவ்வத்தியாயங்களின் குறைபாடு. இது இடைச் செருகல்களின் விளைவாக இருக்கலாம். ஆயினும் ராவணனது இயல்பை எடுத்துக்காட்டும் வகையில் உள்ள விவரங்கள் சில நமக்குக் கிடைக்கின்றன என்பதால் இவை இங்கு இடம் பெறுகின்றன.

மனித வாழ்க்கையில் புகுந்து போர்களில் கலந்துகொள்ளும் தெய்வங்களை எல்லாம் பண்டைய நூல்களிலும் காணலாம். இங்கு நாம் குறிப்பாக உணரவேண்டிய விவரம் ராவணனின் சிவபக்தியும் அதன் விளைவாகவே விஷ்ணுவிடம் அவனுக்கு உண்டான பகைமையும், இறுதியில் ராமனது போர்த் திறனைக் கண்டு 'இவனோ நாரணன்?' என்று வியந்த நிலையில் மட்டும் ராவணன் விஷ்ணுவின் மேன்மையை மதித்தான்.*

இன்னொரு பொருள் ராவணனுக்குள்ள பெண்ணாசை. எவளையும் கெடுக்கக் கூசாதவன் என்பதற்குப் பல சம்பவங்கள் சான்று. ஆயினும் மனம் நொந்த மங்கையரின் சாபத்தை நினைத்து அஞ்சும் இயல்புடையவன். அஞ்சியே ஸீதையைத் திறன்கொண்டு வசமாக்கப் பார்த்தான்; வன்முறைகளைத் தவிர்த்தான்.

*நம் நாட்டின் பழந்தெய்வம் சிவன். விஷ்ணுவை ஆரியர் மேம்படுத்தினர். ஆனால் சிவனிடம் வரம்பெற்று விஷ்ணுவை எதிர்த்தவர் யாரும் வெற்றி கண்டதில்லை என்பது புராணம்.

42

# 'கஷ்டப்படவே பிறவி எடுத்தேன்'

அயோத்திக்கு வந்தவரையெல்லாம் விடை கொடுத்தனுப்பித் தனிமையிலிருக்கும் ராமன் தனது பூந்தோட்டத்தில் உல்லாசமாயிருக்கிறுன். எங்கும் புஷ்பம் நிறைந்த இடத்தில் உட்கார்ந்து களிக்கிறுன். அருகில் ஸீதை. அவளுக்கும் பலவித மதுபானங்களைத் தன் கையாலே கொடுத்து மகிழ்விக்கிறுன். இந்திரனும் சசியும்போல் விளங்குகின்றனர் தம்பதிகள்.

ஸீதாம் ஆதாய ஹஸ்தேன மது மைரேயிகம் சுசி
பாயயாமாஸ காகுத்ஸ்த: சசீமிவ புரந்தர: 1

கீதமும் நடனமும் சேர்ந்து மன்னனை மகிழ்விக்கின்றன. இப்படிப் பல நாட்கள் இனிமையாய்க் கழிந்த பின், ஒரு நாள் ராமன் ஸீதையைக் கூர்ந்து கவனிக்கிறுன். உவகை பொங்கி வருகிறது. 'ஸீதை, எனக்கு மகன் பிறக்கப் போகிறுன். நன்மை உண்டாகட்டும். உனக்கு என்ன வேண்டுமோ கேள்' என்கிறுன். புன்னகை செய்கிறுள் வைதேஹி. 'தவத்தோர் இருக்கும் வனத்தைக் காண விரும்புகிறேன். புண்ணிய நதிகளையும் அங்கு நின்று தவம் செய்யும் மகான்களையும் பார்க்க வேண்டும். காய்கனி உண்டு வாழும் அவர்களது சூழ்நிலையில் ஒரு நாளாவது தங்கவேண்டும். இதுவே எனது விருப்பம்' என்கிறுள்.

தபோவனனி புண்யானி த்ரஷ்டும் இச்சாமி ராகவ
ஏஷமே பரம : காமோ யன்முல பல போஜினம்
அப்யேக ராத்ரம் காகுத்ஸ்த நிவஸேயம் தபோவனே 2

ஆகட்டும் என்றுகூறி 'நாளைக்கே நடக்கும்' என்று உறுதி சொல்லுகிறுன் ராமன். சிறிது நேரம் சென்றபின் நண்பர்கள் புடை

சூழ வேறிடத்துக்குச் சென்று அமர்ந்து உரையாடுகிறான். அவர்கள் நகைச்சுவையோடு பேசிப் பல குட்டிக்கதைகள் சொல்லி ராமனை மகிழ்விக்கின்றனர். ஊரில் நடக்கும் விவகாரங்களையும் தெரிவிக்கின் றனர் மன்னனுக்கு. இடையே ராமன் 'என்னைப்பற்றி என்ன சொல்லு கிறார்கள் மக்கள்? ஸீதை, பரதன், லக்ஷ்மணன் எல்லோரையும் பற்றி ஏதாவது சொல்லுகிறார்களா?' என்று கேட்கிறான்.

மாம்ஆச்ரிதானி கான்யாஹு: பௌர ஜானபதா ஜனா:
கிம்சஸீதாம் ஸமாச்ரித்ய பரதம் கிம்ச லக்ஷ்மணம் 3

பத்ரன் என்றொருவன்: 'ராவணனைக் கொன்று வெற்றி கண் டதையே திரும்பத் திரும்பச் சொல்லுகின்றனர்' என்கிறான். ராமனுக்குத் திருப்தியில்லை. 'எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்லு. நல்லது கெட்டது இரண்டும் தெரிய வேண்டும். பயப் படாதே. அவர்கள் என்ன சொல்லுகிறார்களோ அதைத் தானே சொல்லப் போகிறாய்?' என்கிறான்.

உடனே கைகட்டிப் பேசுகிறான் பத்ரன்: 'அரசே, கேளுங்கள். கடலிலே அணைகட்டியது அரிய செயல். வானரரை வசமாக்கித் துணைகொண்டு ராவணனை வென்றதும் அரிய செயல். ரோஷத்தை மனதிலடக்கி மனையாளைத் தன்னுடன் அழைத்து வந்தான் அயோத் திக்கு. ஆனால், அவளை அன்போடணைக்க அவன் மனம் எப்படி இடம் கொடுக்கிறது? முன்பு வலிய இழுத்து மடியிலிருத்தி ராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட பெண் அல்லவா அவள்? லங்கையிலும் இருந் திருக்கிறாள். ராமனுக்கு அருவருப்பாயில்லையா? அரசனே இப்படி யிருந்தால் நாமும் நம் மனைவிகள் எது செய்தாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் ஊரார் பேசுகின்றனர்.'

துஷ்கரம் க்ருதவான் ராமோ ஸமுத்ரே ஸேதுபந்தனம்
அச்ருதம் பூர்வகை : கைஸ்சித் தேவைரபி ஸதானவை:
..................................................................
கீத்ருசம் ஹ்ருதயே தஸ்ய ஸம்போகஜம் ஸுகம்
அங்கம் ஆரோப்ய து புரா ராவணேன பலாத் ஹ்ருதாம்
அஸ்மாகம் அபி தாரேஷு ஸஹனீயம் பவிஷ்யதி
யதாஹி குருதே ராஜா ப்ரஜா தம் அனுவர்த்ததே 4

பயந்து கொண்டே பேசிச் சிறிது சிறிதாய் உண்மையை வெளிப் படுத்தும் ஊழியனை நன்கு சித்தரிக்கிறார் கவி. முதலில் பெருமையைச் சொல்லிப் பின்னர் சிறுமையைக் குறிக்கிறான். அது தங்களையெல் லாம் பாதிக்கிறது என்று ஊரார் கருதுவதையும் தெரிவித்துவிட் டான்.

ராமன் மனம் கலங்கி நிற்கிறான். கம்மிய குரலில் 'நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?' என்று கேட்கிறான். அவர்கள் எல்லோரும்

தரையில் விழுந்து வணங்கி 'ஆம், அரசே' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்கள்.

அவர்களையனுப்பி விட்டுச் சிறிது நேரம் தனிமையில் நின்று ஏதோ முடிவுக்கு வந்தவன் போல் ஒரு காவலனையழைத்து 'லக்ஷ்மணனைக் கூப்பிடு. மற்ற இரு சகோதரரையும் வரச்சொல்லு' என்கிறான்.

மூவரும் வந்து வணங்கி நிற்கிறார்கள். ராமன் முகம் கிரகணம் பிடித்த சந்திரன் போலிருக்கிறது. அவர்கள் அருகில் வந்து காலைத் தொட்டு வணங்குகின்றனர். ராமனது கண்ணில் நீர் பெருக்குற்று ஓடுகிறது.

தம்பியரை அணைத்துப் பேசுகிறான் மன்னன். 'எனக்கு நீங்கள் தான் உயிர், நீங்களே எல்லாம். நான் சொல்வதை நன்றாய் ஆலோசிக்க வேண்டும்' என்கிறான். ராமன் என்ன சொல்லப் போகிறானோ என்று மனதில் கவலையோடு உட்கார்ந்து மேலே கேட்கத் தயாராகின்றனர் தம்பியர்.

அவர்கள் வாடிய முகத்தோடிருக்க, ராமன் உலர்ந்த நாவோடு பேசுகிறான். 'நான் ஸீதையிடம் நடந்துகொள்ளும் விதத்தைப்பற்றி ஊரார் என்ன சொல்லுகிறார்கள் என்று தெரியுமல்லவா? பழிச்சொல் மிகக் கொடிது. அதை நான் வெறுக்கிறேன். அதுவோ என்னை உட்சென்று வதைக்கிறது. நானோ உயர் குலத்தில் பிறந்தவன். ஸீதையும் ஜனகன் குலத்தில் தோன்றியவள்தான்' என்று முன்னுரையுடன் பேசுகிறான். குறிப்பாக லக்ஷ்மணனைப் பார்த்து, 'உனக்குத்தான் தெரியுமே, தனிமையிலிருந்த பொழுதில் ராவணன் அவளைக் கவர்ந்து சென்றதும், நான் அவனைக் கொன்றதும்; பிறகு உன் எதிரில் தானே தீக்குளித்தெழுந்து தன் தூய்மையைக் காட்டினாள்? முதலில் 'நெடு நாள் லங்கையிலிருந்த இவளையழைத்துக் கொண்டு எப்படி அயோத்திக்குத் திரும்புவேன்?' என்று நினைத்தேன். ஆனால் தீக்குளித்தாள். பின்னர் அக்னி தேவனும் வந்து தூயவள், பிழைப்பிலள் என்று சொல்லிப் போனான். இந்திரன் வந்து அவளை என் கையில் ஒப்படைத்துச் சென்றான். என் உள்ளம் உணர்ந்தது.

ஆனால் இங்கு ஊர்ப்பழி பெரிதாயிருக்கிறதே? என் மனதை வாட்டுகிறது. உலகிலே கீர்த்திதான் பெரிது. அகீர்த்தி அவமானத்துக்குரியது. பெரியோரெல்லாம் கீர்த்திக்காகவே பணிகள் தொடங்குவர். அபவாதத்துக்கு பயந்து என் உயிரையே விடுவேன், உங்களையும் துறப்பேன். ஸீதையைப் பற்றி என்ன கவலை? எனக்கு நேர்ந்த இத்துயரத்தைவிடக் கொடுமையானது ஒன்றுமில்லை. நீங்களே பாருங்கள்' என்கிறான்.

அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் யுஷ்மான்வா புருஷர்ஷபா:
அபவாத பயாத்பீத : கிம்புனர் ஜனகாத்மஜாம். 5

நடந்ததை யெல்லாம் நினைத்துப் பார்க்கிறான் ராமன். முக்ய விவரங்கள் சொல்லும்போது 'உனக்குத் தெரியுமே' என்று சேர்த்துக் கொள்வது சான்று காட்டுவதுபோல் அமைகிறது. ஊரார் பழிச் சொல்லை எதிர்பார்த்தே ராமன் லங்கையில் ஸீதையை ஏற்றுக் கொள்ளத் தயங்கினான் என்பது தெளிவாக அவன் வாயிலிருந்தே வருகிறது. ஆனால் அன்று அங்கு வந்து கூடிய பெரியோரின் வாக்கை யும் தீயின் தூய்மையையும் ஏற்றுக் கொண்டான். இன்று இங்கு கூடிப் பேசும் ஊராரின் சொல் ஏற்கத்தக்கதெனத் தோன்றுகிறது. காரணம்? அபவாதபயம். நேர்ந்த அபவாதத்தைக் கண்டு அஞ்சுவது சகஜம். ஆனால் அபவாதம் நேர்ந்துவிடுமோவென்றஞ்சுவது விபரீதம். இல்லாவிட்டால், 'ஊரார் என்ன சொல்லுகிறார்கள்?' என்று வலு விலே கேட்பானேன்?

? சான்றோ

தொடர்ந்து மேலே பேசுகிறான் ராமன் (சகோதரர் திகைத்து நிற்கின்றனர் போலும்) 'லக்ஷ்மணா, நாளை காலையில் சுமந்திரனை தேர் கொண்டுவரச் சொல். அதில் ஸீதையை ஏற்றிச் சென்று கண் காணாத இடத்தில் கொண்டுபோய்விடு. விட்டவுடன் விரைவில் வந்து சேர். நீ அவளுக்காகப் பரிந்து பேச வேண்டாம். பேச்சுக்கு இடமில்லை, போ' என்கிறான்.

?

> ச்வஸ்த்வம் ப்ரபாதே ஸௌமித்ரே ஸுமந்த்ராதிஷ்டிதம் ரதம்
> ஆருஹ்ய ஸீதாம் ஆரோப்ய விஷயாந்தே ஸமுத்ஸ்ருஜ
> ந சாஸ்மின் ப்ரதிவக்தவ்ய : ஸீதாம்ப்ரதி கதம்சன
> தஸ்மாத் த்வம் கச்ச ஸௌமித்ரே நாத்ர கார்யா விசாரணா 6

தம்பியர் திடுக்கிட்டு விழிக்கிறார்கள். 'என் சொல்லை மறுத் தால் மிகவும் வருத்தப்படுவேன். என்மீது ஆணை; செய்தே தீரவேண் டும். இன்றே கொண்டுபோய் விட்டுவிடு ஸீதையை' என்கிறான் ராமன். சிறிது நேரத்துக்கு முன் தானும் அவளும் பூந்தோட்டத்தில் இனிமையாய்ப் பொழுதுபோக்கியது மனதை உறுத்துகிறதுபோலும். அதையகற்றவே 'இன்றே கொண்டுபோ' என்கிறான். ஆனால் அவள் விரும்பிக் கேட்டபொருள் இதுவேயல்லவா? அதைக் காரணமாகச் சொல்லத் தூண்டுகிறது மனம். 'கங்கைக் கரையில் முனிவர் ஆச்ரமங் களைக் காண விரும்புகிறாளாம் ஸீதை; என்னிடம் சொன்னாள். அவள் இஷ்டம் நிறைவேறட்டும்' என்கிறான் ராமன்!

> பூர்வமுக்தோஹம் அனயா கங்காதீரே அஹம் ஆச்ரமான்
> பச்யேயம் இதிதஸ்யாஸ்ச காம: ஸர்வர்த்யதாம் அயம் 7

தம்பிகள் பிரிந்து செல்கின்றனர். ராமன் கண்ணிலே நீர்; மனதில் துயரம். பெருமூச்சு விடுகிறான்.

மறு நாள் ஸுமந்திரனையழைத்துத் தேர் கொண்டுவரச் சொல் கிறான் லக்ஷ்மணன். (ஊரை விட்டு வெளியேற எப்போதும் அவன் உதவி வேண்டும்!). ஸீதையிடம் சென்று 'மன்னர் கட்டளைப்படி

உன்னை முனிவர் வசிப்பிடம் அழைத்துச் செல்லப் போகிறேன். நீ விரும்பிக் கேட்ட வரம்' என்கிறான்.

த்வயாகில ஏஷந்ருபதி : வரம்வை யாசித : ப்ரபு:
ந்ருபேன ச ப்ரதிக்ஞாதம் ஆக்ஞப்தஸ்ச ஆச்ரமம்ப்ரதி 8

'மன்னர்' என்கிறான் 'கட்டளை' என்கிறான். விரும்பிக் கேட்ட மனைவிக்கு வரமளித்தால் இச் சொற்கள் எதற்கு? ராமன் அளிப்பது தண்டனை, வரம் அல்ல. இதைச் சொல்லக் கூசுகிறது உள்ளம். ஆனால் தன்னையறியாமல் 'கட்டளை'யென்ற சொல் வெளிவருகிறது.

ராமன் சொல்லிக் கொடுத்தபடி பேசுகிறான் லக்ஷ்மணன். அவளுக்கு வரம் தருவதுபோல் காட்டித் தண்டனையளிப்பது வஞ்சகம் என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் உண்மையை அவளிடம் சொல்ல முடியாமல் தடுப்பது நாணம் என்பதுதான் ரஸம். விண்ணோரின் சான்றை ஏற்று மனைவியை மாசற்றவள் என்று உலகறியச் சொன்னபின் ஊரார் பழிச்சொல்லுக்கு அஞ்சி வெளியேற்றத் துணிந்தாலும் அதை அவளிடம் சொல்லத் துணிச்சல் வருமா? ராமன் ஸீதையைப் பார்க்காமலே அனுப்புகிறான். லக்ஷ்மணன் அவளிடம் சொல்லாமலே அழைத்துச் செல்லுகிறான்.

ஒன்றுமறியாத பேதை சந்தோஷம் அடைகிறாள். கணவன்சொல் தவறாமல் நிறைவேற்றுகிறான் என்ற ஆனந்தம்! காட்டில் ரிஷிபத்னிகளுக்குக் கொடுப்பதற்கென உயர்ந்த ஆடை ஆபரணங்களை யெடுத்துக்கொண்டு கிளம்புகிறாள். தேர் கிளம்பிவிட்டது.

வழியிலே ஸீதைக்கு வலக்கண் துடிக்கிறது; மனதில் ஏதோ வேதனை. இதை லக்ஷ்மணனிடம் சொல்லி, 'எல்லாரும் க்ஷேமமாயிருக்க வேண்டும். உன் தமையனுக்கு ஒரு தீங்கும் வராதிருக்க வேண்டும்' என்கிறாள். தனக்கு வரப்போகும் தீங்கு புலப்படவில்லை.

கோமதி நதிக்கரையில் இரவு தங்கி மறுநாள் கங்கை நதியோடு செல்லும் பாதையில் போகிறார்கள். மத்யானத்துக்குமேல் லக்ஷ்மணன் வாய்விட்டு அழ ஆரம்பிக்கிறான். ஸீதைக்கு ஒன்றும் புரியவில்லை. மனதுக்கு சாந்தியளிக்கும் கங்கைக்கரையில் அழுவானேன்? அருமை அண்ணனை விட்டுப் பிரிந்ததால்தான் என ஊகிக்கிறாள். 'ராமனைப் பிரிந்தால் எவருக்குமே இரண்டு நாளைக்குள் ஏக்கம் வந்துவிடும். ஆனால் நான் எப்படி இருக்கிறேன், பார். கங்கையைப் பார், முனிவர்களைப் பார் அவர்களை வணங்கி நாளையே திரும்பிப் போகலாம் ஊருக்கு' என்கிறாள்.

கச்சித் வினக்ருதஸ்தேன த்விராத்ரம் சோகமாகத:
..................................................................
..................................................................
தத்ர சைகாம் நிசாம் உஷ்ய யாஸ்யாம : தாம்புரீம்புன : 9

